# பதார்த்த விஞ்ஞானம்

( ஆயுர்வேதம் சார்ந்த இந்திய தத்துவ ஞான மரபு )

டாக்டர் **இல. மகாதேவன்,** BAMS, MD



இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறை
சென்னை - 600 106.

# பதார்த்த விஞ்ஞானம்

(ஆயுர்வேதம் சார்ந்த இந்திய தத்துவ ஞான மரபு)

டாக்டர் எல். மஹாதேவன், பி.ஏ.,எம்எஸ், எம்டி (ஆயுர்வேதம்)

இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை

சென்னை - 600 106

## நூலாக்கப் பணிக்குழு

பதிப்பாசிரியர்:

முனைவர் மருத்துவர் ஆனைவாரி இரா. ஆனந்தன், பி.எச்.டி

சிறப்பு அலுவலர் (மொழிபெயர்ப்புப் பரிவு)

மொழிபெயர்ப்பு–தொகுப்பாசிரியர்:

மரு.இல. மகாதேவன் எம்.டி (ஆயுர்)

சரிபார்த்தவர்கள்:

மரு. வரதராஜன்,

செ.இரா. பிரசன்னா,

தமிழ்ப்புலவர்,

ஆயுர்வேத பாடநூற்குழுவினர்

திருமதி தா.வே.இலக்குமி, தட்டச்சர்

க. மகேஸ்வரன், நகலர்

# நூலாக்க விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பதார்த்த விஞ்ஞானம் |
| பொருள் | : | ஆயுர்வேதம் சார்ந்த இந்தியப் பாரம்பரியத் தத்துவ ஞான மரபு |
| தொகுப்பாசிரியர் | : | **டாக்டர் எல். மகாதேவன்**<br>பி.ஏ., எம்.எஸ்., எம்.டி (ஆயுர்வேதம்) |
| வெளியிட்டோர் | : | இந்திய மருத்துவ மற்றும் ஓமியோபதித்துறை |
| பதிப்பு ஆண்டு | : | முதல் பதிப்பு 2009<br>மறு அச்சு 2016 |
| பதிப்புரிமை | : | தமிழக அரசு |
| பக்கங்கள் | : | XXIV + 368 = 392 |
| அச்சுத்தாள் | : | 70 GSM Maplitho White |
| விலை | : | ரூ.220.00 |

**மோகன் பியாரே,** இ.ஆ.ப.,
கூடுதல் தலைமை செயலர்/ஆணையர்,
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதித்துறை,
சென்னை - 600 106.

# பதிப்புரை

**ந**மது பாரதத் திருநாட்டில் நிலவி வரும் பாரம்பரிய மருத்துவ முறைகளான சித்த மருத்துவம், ஆயுர்வேத மருத்துவம் மற்றும் யுனானி மருத்துவம் ஆகியவற்றுள் ஆயுர்வேத மருத்துவம் சித்த மருத்துவத்தைப் போன்று மிகவும் பழமையானதாகும். சித்த மருத்துவம் தமிழகத்திற்கு உரியதென்றால் ஆயுர்வேத மருத்துவம் வடநாட்டிற்கு உரியதென்றே சொல்லலாம். என்றாலும் படிப்படியாக இந்திய நாடு முழுவதுமாக ஆயுர்வேத மருத்துவம் பரவலாக மக்களால் கையாளப்பட்டு வருகிறது.

ஆயுர்வேத மருத்துவத்தின் அடிப்படைத் தத்துவங்கள் அபூர்வமான சில விஷயங்களைக் கொண்டவை. அவற்றைத் தமிழ் மருத்துவ உலகிற்கு அறிமுகப்படுத்துவது ஓர் அரிய செயலாகும். அவ்வகையில் 'பதார்த்த விஞ்ஞானம்' என்னும் இந்நூல் நமது நாட்டில் நிலவும் பாரம்பரியமான ஞான மரபு சார்ந்த தத்தவார்த்த விஷயங்களை அறிமுகப்படுத்தும் ஒரு

சிறப்பு நூலாகும். இத்துறையில் இயங்கிவரும் மொழி பெயர்ப்பு பிரிவின் மொழி பெயர்ப்பாளர் மரு.இல. மகாதேவன் அவர்கள் இந்நூலில் தரிசனாங்கள், பிரமாணங்கள், திரவிய விஞ்ஞானம், குண விஞ்ஞானம், கர்ம விஞ்ஞானம், சிருஷ்டி உற்பத்தி, காரிய-காரண சித்தாந்தம், தந்திரயுக்தி முதலிய தலைப்புகளில் ஆயுர்வேத மருத்துவத்தை அடிப்படையாக வைத்து விரிவாகத் தொகுத்து எழுதியுள்ளார். இந்நூலுக்கு உழைப்பூதியம் மற்றும் உரிமத் தொகை ஆகிய எதுவும் கோராமல் எழுதித் தர முன்வந்திருப்பதற்காக அவருக்கு இத்துறையின் சார்பில் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இந்நூலாக்கப் பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் எனது அன்பான பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைப் போல மேலும் பல நூல்கள் தமிழில் வெளிவர வேண்டும். அதற்கான ஆக்கபூர்வமான செயல்முறைகளில் மொழி பெயர்ப்புப் பிரிவு தொடர்ந்து ஈடுபடும் என நம்புகிறேன்.

**நாள் : 12.02.2016**

**மோகன் பியாரே**
**கூடுதல் தலைமை செயலர்/**
**ஆணையர்**

# முன்னுரை

முதலாமாண்டு ஆயுர்வேத இளநிலை மாணவர்களுக்கு பதார்த்த விஞ்ஞானம் குறித்து புத்தகம் எழுதும் வாய்ப்பு இறைவன் திருவருளால் எனக்குக் கிடைத்தது. பதார்த்த விஞ்ஞானம் மிகவும் கடினமான விஷயங்களை உள்ளடக்கியது. இயற்பியல், வேதியியல், கணிதம் போன்றவற்றை படித்து வருகின்ற ஒரு மாணவனுக்கு இவற்றுக்கு அப்பாற்பட்டு இந்திய தத்துவ ஞான மரபையும், தத்துவார்த்த விஷயங்களையும் அறிமுகப்படுத்தும் ஒரு தொகுப்பு புத்தகமாக இது விளங்குகிறது. ஆனால் மற்ற மருத்துவ முறை களிலிருந்து குறிப்பாக மேனாட்டு மருத்துவ முறைகளிலிருந்து பாரம்பரிய இந்திய மருத்துவம் எவ்வாறு மாறுபட்டது என்பதை யும், அதன் தனித்தன்மை என்ன என்பதையும் இது விளக்கிக் கூறுகிறது. எல்லா தத்துவங்களுக்கும் பிறப்பிடமாக முன்நோக்கி வரும் நம் பாரத திருநாட்டில் ரிஷிகளாலும், முனிவர்களாலும், பலவிதமான தத்துவ கண்ணோட்டங்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

பிறப்பின் லட்சியம் என்ன? வாழ்க்கையின் தத்துவம் என்ன? இறப்புக்கு பின் என்ன ஏற்படுகிறது? வாழ்கின்ற காலத்தில் என்ன நடைபெறுகிறது போன்றவை அன்று முதல் இன்று வரை ஒரு முக்கிய கேள்வியாகவே இருந்து வருகிறது. இதற்கு பல தத்துவ ஞானிகள் இயற்கையை நாம் உணர்ந்த விதத்தில் உண்மையை வெளிப்படுத்தும்படி பல தரிசனங்களைத் தொகுத்தளித்தார்கள். தரிசனம் என்ற சொல்லுக்கு காண்பது அல்லது அறிவது என்று பொருள். இதனை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் புலன்களால்

குறிப்பிடுகின்ற அறிவைக் குறிப்பிட்டாலும் தன்னை தான் உணரும் முயற்சிக்காக பதிவு செய்யப்பட்ட விஷயங்களாகவே விளங்குகின்றன. இந்திய பாரம்பரிய ஞான மரபையும் ஆயுர்வேத தத்துவங்களையும் பிரிக்க இயலாது. இவ்வளவு ஏன்? வாத பித்த கபங்கள் கூட தத்துவ மரபு உற்பத்தியைச் சார்ந்ததுதான். இவை உணர்வு சார்ந்த விஷயங்களாக இருக்கின்றன. ஆயுர்வேதமே ஒரு தரிசனம். அதுவும் வீடு பேறு என்னும் லட்சியத்தைக் கொண்டது. ஆரோக்கியமான உடல்நிலையே அறம், பொருள், இன்பம், வீடு போன்றவற்றுக்கு இன்றியமையாததாகிறது என்பதை ஆயுர்வேதம் வற்புறுத்துகிறது. ஆயுர்வேதத்தில் கூறப்படும் ஆரோக்கியம், உடல் வலிமையையும், உள்ளத் தெளிவையும் ஆன்மீக மெய்ஞான அறிவையும் உள்ளடக்கியதாகும். இந்த ஆரோக்கியத்தை ஸ்வஸ்தம் என்று குறிப்பிடுவதுண்டு. ஸ்வஸ்தா என்ற சொல்லுக்கு தன்னை அறிந்து நிலைத்திருப்பது என்று பொருள். மற்ற தரிசனங்கள் கூறும் ஆத்ம விசாரமும் இதற்கு அப்பாற்பட்டதல்ல. ஆறு தரிசனங்களின் தாக்கமும் ஆயுர்வேதத்தில் இருக்கிறது. நியாயம், வைசேக்ஷிகம், ஸாங்க்யம், யோகம், மீமாம்ஸம், வேதாந்தம், புத்தம், சமணம், நாஸ்திகம் இவற்றின் கருத்துக்களெல்லாம் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டி ருக்கின்றன.

சிறு வய்திலேயே தத்துவார்த்த எண்ணங்களில் சிந்தனை உடைய நான் தர்க்க ஸங்க்ரஹம், ஸாங்கிய தரிசனம், பகவத்கீதை, உபநிடதங்கள் போன்றவற்றிலிருந்து ஆயுர்வேதத்துக்கு தொடர்புடைய விஷயங்களை மஹாத்மாக்களிடமிருந்தும் கற்றுக் கொள்ளும் வாய்ப்பு கிட்டியது அவற்றைக் கொண்டும் பல புத்தகங்களை படித்ததன் மூலமும், என் உள் உணர்வின் மூலமும் மாணவர்களுக்கு எளிதாகப் புரிந்து கொள்ளும் படியும் அதே நேரத்தில் தேர்வில் வெற்றி பெறும் படியும் இந்த புத்தகம் எழுதப்பட்டுள்ளது.

இந்த நல்ல நேரத்தில் ஆயுர்வேதத்தைக் கோடிட்டு காட்டி எனது ஆயுர்வேத வாழ்க்கைக்கு வித்திட்ட என் குருநாதர் வைத்தியநாதன்

அவர்களையும், கிராமத்தில் நோயாளிகளைப் பார்த்து எனது பிழைப்பை நடத்துவதற்கு அடித்தளம் அமைத்துத் தந்த எனது தாத்தா மஹாதேவ ஐயர் அவர்களையும் நினைவு கூர்கிறேன்.

மொழிபெயர்ப்பிற்கு உதவி ஆக்கமும் ஊக்கமும் அளித்து என்னை உற்சாகப்படுத்திய இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறையின் முன்னாள் ஆணையர் திரு.விஜயகுமார், இ.ஆ.ப. அவர்களுக்கும், தற்போதைய ஆணையர் திரு. ராஜ்குமார், இ.ஆ.ப அவர்களுக்கும், இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறையின் செயலாளர் அவர் களுக்கும், நற்கருத்துக்களை எடுத்துக் கூறி வரலாற்று விளக்கங்களைப் புரிய வைத்த மதிப்பிற்குரிய திரு. ஆணைவாரி ஆனந்தன் அவர்களுக் கும் என்னுடைய மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை பிழை திருத்தம் செய்து சரிபார்த்துத் தந்த மருத்துவ குழுவினர் டாக்டர். இராமகிருஷ்ணமாச்சார்யா, முதல்வர், அரசு ஆயுர்வேத மருத்துவக்கல்லூரி, கோட்டார், நாகர்கோவில், டாக்டர். இரவிச்செல்வன், டாக்டர். பிரகாஷ், டாக்டர். வரதராஜன் ஆகியோருக்கு எனது மனப் பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை தொகுத்து எழுதி தரும் பொறுப்பை இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித்துறை என்னிடம் ஒப்படைத்தபொழுது மனமுவந்து ஏற்றுக் கொண்ட யான், இந்நூலுக்கு அரசினர் தரக்கூடிய சன்மானம் எதையும் ஏற்றுக் கொள்ளாமல் இலவசமாகவே எழுதித்தருகிறேன் என்பதை முழு மனநிறைவுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இந்த நூலை எழுதுவதில் எனக்கு உதவிய டாக்டர். கே. சிதம்பரம், டாக்டர். கே. ஷேக் பரீத், டாக்டர். எ. செல்வகுமார், டாக்டர். ராஜ சுரேஷ் குமார், டாக்டர். எஸ் .சி. ஜெய மூகாம்பிகை, டாக்டர். ஜி. ஹரிணி ரம்யா, டாக்டர். சி. முத்துநகை அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். அத்துடன் திரு.எம். சிவசுப்ரமணியன் (எம்.எஸ்), ஆர்.எ. ஸஜு இருவருக்கும் எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலைப் படிக்கும் மாணவர்கள் கபிலர், வியாஸர், பதஞ்சலி, சரகர், ஸுச்ருதர், தன்வந்தரி, அகத்தியர், யோகானந்தர், தயானந்தர் போன்றவர்களின் அருளைப் பெற்று இந்தியத் தத்துவ மரபு சார்ந்த அறிவையும், ஆயுர்வேத மெய்ஞானத் தெளிவையும் பெற்று சதாயு புருஷர்களாக வாழ பரமேச்வரனிடம் பிராத்திக்கிறேன்.

**Dr.L.மஹாதேவன்**

## பதார்த்த விஞ்ஞானம்

BAMS - பாடத் திட்டம்

முதல் தாள் (100 மதிப்பெண்கள்)

**பகுதி 1 அ (50 விழுக்காடுகள்)**

1. **தரிசனங்கள்**

   தரிசனம் மற்றும் அதன் இலட்சியம் – தொடக்கம் – பிரிவுகள் – ஆறு தரிசனங்கள் – இந்திய பாரம்பரிய ஆறு தரிசனங்கள், அதைப் பற்றிய விவரங்கள் – ஆயுர்வேத மருத்துவத்தில் தரிசனத்தின் தாக்கம் – ஆயுர்வேதம் தொடர்புடைய தரிசனங்கள் – ஆயுர்வேதம் எனும் தரிசனம், ஆயுர்வேதத்தில் பதார்த்த விஞ்ஞானத்தின் பயன்கள் – பதார்த்தம் பற்றிய விளக்கம் – பதார்த்தத்தின் பிரிவுகள், பதார்த்தத்தின் எண்ணிக்கை, பாவபதார்த்தம், அபாவபதார்த்தம் பற்றிய குறிப்புகள்

2. **திரவ்ய விஞ்ஞானம்**

   திரவ்யத்தின் தன்மைகள் – திரவ்யங்களின் எண்ணிக்கை திரவ்யத்தின் பிரிவு – பூமி என்னும் பிருத்வி மஹாபூதத்தின் குணாதிசயங்கள் மற்றும் பிரிவுகள் – ஜல மஹாபூதத்தின் குணாதிசயங்கள் மற்றும் பிரிவுகள் – தேஜோ மஹாபூதத்தின் குணாதிசயங்கள் மற்றும் பிரிவுகள் – வாயு மஹாபூதத்தின் குணாதிசயங்கள் மற்றும் பிரிவுகள் – ஆகாச மஹாபூதத்தின் குணாதிச்யங்கள் மற்றும் பிரிவுகள் – வாயு ஆகாச பூதங்களைப் பற்றியுள்ள அறிவு

3. **பஞ்ச மஹாபூத விவரணம்**

   பஞ்சமஹாபூதங்களுக்கும் ஸத்வ, ரஜோ, தமோ குணங்களுக்கும் உள்ள தொடர்பு – பஞ்சமஹாபூத உற்பத்தி – பரஸ்பர அனுப்ரவேசம், (பஞ்சீகரண பிரக்ரியை) – ஒவ்வொரு பூதங்களுக்கும் இடையே

காணப்படும் பிரிக்க முடியா தொடர்புகள் – கால வர்ணனை, பொருள் – காலத்தின் லக்ஷணம் – ஆயுர்வேதத்தில் காலத்தைப் பற்றிய விளக்கம் – திசை – ஆத்ம விவரணம் – ஆயுர்வேதத்தில் ஆத்மாவைப் பற்றி காணக்கிடைக்கும் குறிப்புகள் – பரமாத்மா – சூட்சும சரீர விவரணம் – ராசி புருஷன், ஸ்தூல சரீரம் – சிகிச்சா புருஷன் – கர்ம புருஷன் – ஸம்யோக புருஷன் – ஷட்தாத்வாத்மக புருஷன் – ஆத்ம குணாதி சயங்கள் – ஆத்ம விஞ்ஞானம் – மனோ விவரணம் – மனோ குணங் கள் – மனதின் கர்மங்கள் – மனதின் இருப்பிடம் – தமம் ஒரு திரவ்யம் இல்லை என்பதற்கான ஆதாரங்கள் – திரவ்யங்களைப் படிப்பதால் ஆயுர்வேதத்தில் ஏற்படும் பலன்கள்.

## பகுதி – ஆ (50 மதிப்பெண்கள்)

### 3. குண விஞ்ஞானம்

குணத்தின் தன்மைகள் – குணத்தின் எண்ணிக்கை – வைசேக்ஷிக குணங்கள் – கர்ம ஸாமான்ய குணங்கள் – அத்யாத்மிக குணங்ள் – ஸாமான்ய குணங்கள் என்ற பராதி குணங்கள் – குண விவரணம் – வைசேக்ஷிக குணங்களைப் பற்றிய விரிவான பார்வை – சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் எனும் இந்திரிய குணங்களைப் பற்றிய விவரணம் – கர்மங்களில் காணப்படும் அஸாமான்ய விவரணங்கள் – குரு – லகு, சீதம் – உஷ்ணம், ஸ்நிக்தம் – ரூட்சம், மந்தம் – தீட்சணம், ஸ்திரம் – ஸரம், மிருது – கடினம், பிச்சிலம் – விஸதம், ஸ்லட்சணம் – கரம், சூட்சுமம் – ஸ்தூலம், திரவம் – ஸாந்த்ரம் போன்ற குணங்களைப் பற்றிய விவரங்கள் – அத்யாத்மிக குணங்களாகிய புத்தி, இச்சை, துவேஷம், சுகம், துக்கம், பிரயத்னம் மற்றும் ஸாமான்ய குணங்களாகிய பராதி குணங்களுடைய விவரணம் – நியாய சாஸ்திரத்தில் காணப் படும் 24 குணங்கள் – குணங்களுக்கிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகள் – அவால்யமான மனக் குணம் – சரகரின் 41 குணங்கள் – நியாய சாஸ்திரத்தின் 24 குணங்கள்.

4. **கர்ம விஞ்ஞானம்**

கர்மம் பொதுப்பார்வை – கர்மத்தின் குணாதிசயங்கள் – பிரிவுகள் – லௌகிக கர்மங்கள் – நியாய தரிசனத்தின் கர்மங்கள் – ஆயுர்வேத மருத்துவத்தில் கர்மம் என்னும் தத்துவத்தின் தாக்கம்

5. **ஸாமான்ய விஞ்ஞானம்**

ஸாமான்யம் வர்ணனம் – பிரிவுகள் – ஆயுர்வேதத்தில் ஸாமான்யம் என்னும் தத்துவத்தின் தாக்கம்.

6. **விசேஷ விஞ்ஞானம்**

விசேஷம் விளக்கம், குணங்கள், பிரிவுகள் – ஸாமான்ய விசேஷ தத்துவங்களில் ஆயுர்வேதத்தின் தாக்கம்,

7. **ஸமவாயம்**

ஸமவாயம் விளக்கம் – ஆயுர்வேதத்தில் ஸமவாயத்தின் பங்கு

8. **அபாவம் என்னும் இல்லாமை மற்றும் அதன் பிரிவுகள் பற்றிய வர்ணனம்.**

## இரண்டாம் தாள்

பகுதி அ (50 மதிப்பெண்கள்)

1. **பிரமாண வர்ணனை**

பிரமாணம் விளக்கம் – பிரமாணத்தின் குணங்கள் – பிரமா, பிரமேயா, பிரமதா, பிரமாணா, அப்ரமா, ஸ்ம்ருதி, பிராந்தி வர்ணனை – பிரமாணத்தின் முக்கியத்துவம் – பிரமாணத்தின் பலன் –பிரமாணங்களின் எண்ணிக்கை – பிரமாணத்தைப் பற்றி ஆசிரியர்களின் கருத்து – அஷ்டவித பிரமாணங்கள் – திரிவித பிரமாணங்கள் – ஆயுர்வேதத்தில் காணப்படும் பிரமாணங்கள் – பரீட்சா என்னும் பதம் பிரமாணம் என்னும் தத்துவத்தின் கீழ் ஆயுர்வேதத்தில் பயன்படுத்துப்பட்டிருட் பதற்கான காரணங்கள் அதனுடைய தாக்கம்.

2. பிரத்யக்ஷ பிரமாணம்

பிரத்யக்ஷயத்தின் குணாதிசயங்கள் – பிரத்யக்ஷ ஞான உத்பத்திக்கான காரணம் – ஞான உத்பத்தியின் பிரிவுகள் – இந்திரிய வர்ணனம் – இந்திரியங்களின் எண்ணிக்கை – ஞானேந்திரிய கர்மேந்திரிய வர்ணனம் – இந்திரிய அர்த்தங்களின் வர்ணனம் – இந்திரியங்களுக்கும், பஞ்சமஹாபூதங்களுக்கும் உள்ள தொடர்பு – பஞ்ச பஞ்சகங்களைப் பற்றிய விளக்கம் – அந்தக் கரணங்கள் – அந்தக் கரணங்களில் ஏற்படும் விருத்திகள் – பிரத்யட்சத்தின் பிரிவுகள் – நிர்விகல்ப பிரத்யட்சம் – ஸவிகல்ப பிரத்யட்சம் – ஸன்னிகர்ஷம், அதன் பிரிவுகள் – ஸாமான்ய தத்துவ வர்ணனை – லட்சண பிரத்யாஸத்தி வர்ணனை – இந்திரிய ஸன்னிகர்ஷத்திற்கும், ஆயுர்வேதத்திற்கும் உள்ள தொடர்பு – வேதனா அதிஷ்டானங்கள் –வேதனா நாச ஹேதுக்கள் – இந்திரிய பிராப்யகாரிதம் – பலவித இந்திரியங்களினால் நமக்குக் கிடைக்கும் பிரத்யட்சம் பற்றிய வர்ணனை – பிரத்யட்சம் அல்லாமல் மற்ற பிரமாணங்களின் தேவை மற்றும் பலன்கள் – பிரத்யட்சத்தின் தடை, வரையறைகள் – ஆயுர்வேதத்தில் பிரத்யட்ச பிரமாணத்தின் பங்கு.

3. அனுமானப் பிரமாணம்

அனுமானப் பிரமாண வர்ணனை – குணாதிசயங்கள், பிரிவுகள் – சரகர் கூறும் அனுமானத்தைப் பற்றிய கருத்துக்கள், அதன் பிரிவுகள் – பல ஆச்சாரியர்கள் அனுமானத்தைப் பற்றிக் கூறும் கருத்துக்கள் – பஞ்ச அவயவ வாக்கியங்கள் – லிங்கபராமர்சம், அன்வய வ்யதிரேகி, கேவல அன்வயி – நியாய தரிசனத்தில் கூறப்படும் அனுமானங்கள் – ஹேதுவைப் பற்றிய வர்ணனை – அஹேது, ஸஹேது, ஹேத்வாபாஸ விளக்கம் – வியாப்தி, விமர்சம், திருஷ்டாந்தம், ஸ்வரூபம், தர்க்கம் போன்றவற்றின் வர்ணனை –தர்க்கத்தின் வர்ணனை, முக்கியத்துவம் – ஆயுர்வேதத்தில் அனுமானத்தின் பங்கு மற்றும் தாக்கம்.

4. ஆப்தோபதேச பிரமாணம்

ஆப்தோபதேசத்தின் முக்கியத்துவம் – ஆப்தோபதேசம் ஆயுர்வேதத்தில் முக்கியமாகக் கருதப்படுவதின் காரணங்கள் –ஆப்தோபதேசத்தின்

குணங்கள் – ஆகமப் பிரமாணம் – சாஸ்திர பிரமாணம் – இதிஹாஸ பிரமாணம் – நிகண்டு பிரமாணம் – சப்தப் பிரமாணம் – தர்க்க ஸங்க்ரஹத்தில் சப்தத்தைக் குறித்துக் காணப்படும் விஷயங்கள் – சரகர் கூறும் சப்தத்தை பற்றிய பிரிவுகள், குணங்கள் – சப்தார்த்தங்களின் விருத்தி – வாக்கியத்தின் குணங்கள் – வாக்கியத்தின் அமைப்பு – வாக்கிய அர்த்தத்தைப் பற்றிய அறிவு – ஆகாங்ட்சம், யோக்யதா, ஸன்னிதி, சக்தி கிரஹம், சக்தி கிராஹகன் போன்றவற்றைப் பற்றிய அறிவு.

**5. யுக்தி பிரமாணம்**

யுக்தி பிரமாணத்தை பற்றிய விளக்கம் – அறிவு, யுக்தி பிரமாணத்தின் தன்மைகள் – யுக்தி பிரமாணத்தின் விசேஷ குணங்கள் – ஆயுர்வேதத்தில் யுக்தி பிரமாணத்தின் பங்கு

**6. உபமானப் பிரமாணம்**

உபமானப் பிரமாணத்தின் தன்மைகள், பிரிவுகள் – ஆயுர்வேதத்தில் உபமானப் பிரமாணத்தின் பங்கு

**7. மற்ற பிரமாணங்கள்**

அர்த்தாபத்தி, அனுபலப்தி, அபாவ பிரமாணம், ஸம்பவ பிரமாணம், சேஷ்ட பிரமாணம், பரிசேஷ பிரமாணம், இதிஹாஸ பிரமாணம் போன்றவை.

## பகுதி – ஆ (50 மதிப்பெண்கள்)

**8. காரிய காரண ஸித்தாந்தம்**

காரிய காரண பாவம் – பலவித வாதங்கள் – காரணத்தின் பிரிவுகள் – ஸமவாயி காரணம் – அஸமவாயி காரணம் – நிமித்த காரணம் – ஆயுர்வேதத்தில் காரண பாவம் – ஸத்காரிய வாதம் – அஸத் காரிய வாதம் – பரமாணு வாதம் – பீலுபாக வாதம் – பிடரபாக வாதம் – அனேகாந்த வாதம் போன்றவை.

9. **சிருஷ்டி உற்பத்தி – உலக உற்பத்தி – ஜகத் உற்பத்தி**

சிருஷ்டி உற்பத்திக்ரமம் – உலகத்தின் சிருஷ்டி – ஸர்க்கம் என்னும் உற்பத்தி – பிரக்ருதி வர்ணனை – மஹத் தத்துவ வர்ணனை –அஹங்கார உற்பத்தி – இந்திரியங்களின் விளக்கம் – பஞ்ச தன்மாத்திரை விளக்கம் – பஞ்ச மஹாபூதங்கள் வர்ணனை – 24 தத்துவங்களைப் பற்றிய குறிப்புகள் – சிருஷ்டிக்ரமம் ஆயுர்வேதத்தில் கூறப்படும் விதம் – சரகத்தில் காணப்படும் 24 தத்துவங்கள், 8 பிரக்ருதி, 16 விகாரங்கள், வியக்தத்திற்கும் அவ்வியக்தத்திற்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் – க்ஷேத்ர வர்ணனை, க்ஷேத்ரக்ஞ வர்ணனை – பிரக்ருதி, புருஷனுக்கிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் – பிரக்ருதி புருஷ ஸம்யோக காரணம் – மூன்று குண ஆராய்ச்சிகள் – ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் –ஒவ்வொரு குணங் களுக்கும் உள்ள அன்யோன்யத் தன்மை –மறுபிறப்பைப் பற்றிய குறிப்புகள் – மறுப்பிறப்பை நான்கு பிரமாணங்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்தல் – மோட்ச வர்ணனை – அபுனர்னவம் – மறு பிறப்பு இல்லாமை குறித்து வர்ணனை – ஸர்க்கா – லயம் – அழிவைப் பற்றிய வர்ணனை போன்றவைகள்.

10. **தந்திரயுக்தி**

விவரணம், முக்கியத்துவம் – பலன்கள் – 17 வகை தந்திரயுக்தி – 7 கல்பனைகள் – 17 தத்சில்யாக்கள் – 21 அர்த்தாச்ரயங்கள் – தந்திரங் களின் குணங்கள் – 14 தந்திர தோஷங்கள், ஆயுர்வேதத்தில் இவற்றின் தொடர்புகள்

**மாணவர் கவனத்திற்கு**

இந்தப் பகுதியில் 100 விழுக்காட்டிற்கான 2 தேர்வுகளும் 50 விழுக்காட்டிற்கான நேர்காணலும் அடங்கும்.

# பொருளடக்கம்

## பாகம் 1

1. இந்திய பாரம்பரியத்தின் ஆறு தரிசனங்கள் 3

தத்துவத்தின் தேவை – தரிசனங்களின் அடிப்படை நோக்கம் – கடைபிடித்த வழிகள் – வேதங்களின் இடம் – தரிசனங்களின் வளர்ச்சி – பொதுத் தன்மைகள்

2. ஆஸ்திக தரிசனங்கள் 9

இலக்கியம் – பதினாறு பதார்த்தங்கள் – நியாயத்தின் அறிவுக் கோட்பாடு – பிரத்யட்சம் (நேரடிப் பார்வை) – அனுமானம் – உபமானம் (உவமை) – சப்தம் – பௌதிக உலகம் பற்றிய நியாயக் கொள்கை – கடவுள் – ஜீவன் (ஆத்மா)

3. வைசேஷிக தரிசனம் 20

ஏழு பதார்த்தங்கள் – கடவுளும் உலகமும்

4. ஸாங்கிய தரிசனம் 26

பெயர் சிறப்பு – பிரமாணங்கள் (அறிவின் வழிகள்) – பிரமேயங்கள் (அறிய வேண்டிய பொருட்கள்) – பேரண்டத்தின் தோற்றம் – பந்தமும் விடுதலையும் – ஸாங்கியம் கூறும் 25 தத்துவங்கள்.

5. யோக தரிசனம் 34

ஸாங்கிய யோக தரிசனங்கள் – யோகம் – ஆசிரியரும் காலமும் – யோக சாஸ்திரம் – யோகசூத்திரத்தின் தத்துவம் – சித்தவிருத்திநிரோதம்

– யோகத்துக்கு ஏற்படும் தடைகள் – உபயோகமான குறிப்புகள் – அஷ்டாங்கம் – யோகத்தின் வகைகள் –யோகசித்திகள்

6. மீமாம்ஸ தரிசனம் 46

அடிப்படை நூற்கள் – அறிவு விளக்கம் – உலகம், ஆன்மா, மனம் பற்றிய விளக்கம்

7. வேதாந்த தரிசனம் 53

சூத்திரங்கள் – வேதாந்த தரிசனம் – பிரஸ்தான–த்ரயம் – உபநிடதங்கள் – பிரம்மசூத்திரங்கள் – பாதராயணர் – முதல் அத்தியாயம் – இரண்டாம் அத்தியாயம் – மூன்றாம் அத்தியாயம் – நான்காவது அத்தியாயம் – பாதராயணரின் தத்துவம் – உரையாசிரியர்களும் நூற்களும் – சங்கரர் – சங்கரரின் வேதாந்தக் கருத்துக்கள் – பாஸ்கரர் – ராமானுவர் – சைவ சித்தாந்தம் – முப்பொருள் உண்மை – பதி – நாஸ்திக தரிசனம் – ஜைன தர்சனம் – புத்த தரிசனம் – மத்திம மார்த்தம் – சார்வாகர்கள் – ரஸேச்வர தரிசனம் – ஸாங்க்யமும் ஆயுர்வேதமும் – ஆயுர்வேதமும் வைசேக்ஷிக தரிசனமும் – நியாய தரிசனமும், ஆயுர்வேதமும் – யோக தரிசனமும் ஆயுர்வேதமும் – பூர்வ மீமாம்ஸமும் ஆயுர்வேதமும் – வேதாந்தமும் ஆயுர்வேதமும் – சமணமும், புத்தமும், ஆயுர்வேதமும் – நாத்திக தரிசனமும் ஆயுர்வேதமும் – பதார்த்தம் – பதார்த்த லட்சணம் – ஆயுர்வேதத்தில் தரிசனம் சரகத்தில் நியாய தர்சனத்தின் தாக்கமும், காரண காரிய சித்தாந்தமும் – ஆயுர்வேதமும் பதார்த்தமும்

8. திரவ்ய விஞ்ஞானம் 96

காரிய திரவ்யங்கள் – காரண திரவ்யங்கள் – பஞ்ச பூதங்கள் – பிருத்வி என்னும் பூமி – பிருத்வியின் குணங்கள் – ஜலம் என்னும் நீர் – ஜலத்தின் ஸாமான்ய குணங்கள் – அக்னி என்னும் நெருப்பு – வாயு பூதம் – ஆகாசம் என்னும் வெட்டவெளி – பஞ்சமகாபூதங்களின் பிரிவுகள் – பஞ்சமகா பூதங்களின் குணங்கள் – பஞ்சமஹாபூதங்களுக்கும் உடலின் உறுப்பு களுக்கும் உள்ள தொடர்பு – பஞ்ச பஞ்சீகரணம் – பஞ்சீகரண ப்ரக்ரியை – பரஸ்பர அனுப்ரவேசம் – பஞ்சபூத உற்பத்தி – பரஸ்பர அனுப்ரவேசம் – பஞ்சமஹாபூதங்களுக்கும், ஆயுர்வேதத்திற்கும் உள்ள தொடர்பு –

ஆத்மா – பரமாத்மா, ஜீவாத்மா வேறுபாடு – ஆத்ம சங்க்யா (எண்ணிக்கை) – ஆன்மாவை ஒப்புக் கொள்வதால் ஏற்படும் பலன் – புருஷன் – சதுர்விம்சதி புருஷன் – ஸம்யோக புருஷன் – துவிதாது புருஷன் (இரண்டு தாது புருஷன்) – திரிகண்ட புருஷன் – ஷட் தாது புருஷன் (ஆறு தாது புருஷன்) – சதுர்விம்சதி தத்வாத்மக புருஷன் – பஞ்ச விம்சதி தத்துவாத்மக புருஷன் – கர்ம புருஷன் – சிகிச்சா புருஷன் – சூட்சும புருஷன் – ஆத்மா சரீர கண்ணோட்டம் – பூத உடலின் கட்டமைப்பு – சூட்சும சரீரம் – காரண சரீரம் – ஜாக்ரதா என்ற விழிப்பு நிலை – ஸ்வப்ன நிலை – ஆழ்ந்த உறக்க நிலை – கோசங்கள் – அன்ன மய கோசம் – பிராணமய கோசம் – மனோமய கோசம் – விஞ்ஞான மய கோசம் – ஆனந்தமய கோசம் – சரகரின் கருத்துகள் – பற்றுதலுக்கும் விடுதலைக்கு மாகிய வழிகள் – மனம் – அணுத்வம் – சீகத்வம் –மனதைப் பற்றி சரகர் – மனோரோகங்களும் ஆயுர்வேத சிகிச்சையும் – காலம் – காலத்தின் வகைகள் – முன்பனிக்காலம் – வசந்த காலம் – வெயில் காலம் – மழைக்காலம் – இலையுதிர் காலம் – ஆயுர்வேதத்தில் காலத்தின் முக்கியத்துவம் – ஆதுர காலம் – வயது என்னும் காலம் – ரோக காலம் – ஔஷத காலம் – தோஷமும் காலமும் – ஆறு ருதுக்களும் ஒரு நாளும் – உணவு உட்கொள்வதற்கு உகந்த சமயம் – பெண்களின் ருது காலம் – திசை – ஆகாசத்திற்கும் திசைக்கும் உள்ள வேற்றுமைகள் - திசைக்கும் காலத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் – ஆயுர்வேதத்தில் திசையின் முக்கியத்துவம் – தமஸ் ஒரு திரவியமல்ல என்பதற்கான ஆதாரங்கள்

9. குண விஞ்ஞானம் 166

குணத்தின் லட்சணங்கள் – திரவ்யாச்ரயீ – அகுணவான் – குணத்தின் பிரிவுகள் – வைசேஷிக குணங்கள் – சப்த குணம் (செவியுணர்வு) – ஸ்பர்ச குணம் என்னும் தொடு உணர்வு – ரூப குணம் (காட்சியுணர்வு) – ரஸ குணம் (சுவையுணர்வு) – கந்த குணம் (நுகர்ச்சியுணர்வு) – அறு சுவைக்கும் பஞ்சமஹாபூதத்திற்கும் உள்ள தொடர்பு – பராதி குணங்கள் – பரம் – அபரம் – யுக்தி – ஸங்க்யம் – எண்ணிக்கை – ஸம்யோகம் – சேர்க்கை – விபாகம் – பிரிதல் – பிருதக்த்வம் – பரிமாணம் – ஸம்ஸ்காரம் –

அப்யாஸம் எனும் பயிற்சி – ஆத்ம குணங்கள் – புத்தி – யதார்த்த அனுபவம் – உபமிதி – சப்தம் – அயதார்த்த அனுபவம் – இச்சை – துவேஷம் – வெறுப்பு – சுகம் – துக்கம் – பிரயத்னம் – முயற்சி – குருவாதி குணங்கள் – குருகுணம் – லகு குணம் – சீத குணம் – உஷ்ண குணம் – ஸ்நிக்த குணம் – ரூட்ச குணம் – மந்த குணம் – தீட்சண குணம் – ஸ்திர குணம் – ஸர குணம் – மிருது குணம் – கடின குணம் – விசாத குணம் – பிச்சில குணம் – கர குணம் – ஸ்லக்ஷண குணம் – சூட்சும குணம் – ஸ்தூல குணம் – ஸாந்த்ர குணம் – திரவ குணம் – வைதர்ம்யம் (வேற்றுமை) – மூர்த்த குணம் (தன்னை வெளிப்படுத்தும் தன்மை யுடைய குணகங்ள்) – அமூர்த்த குணங்கள் – குணங்களின் முக்கியத் துவம் – நியாய வைசேக்ஷிகர்கள் கூறும் 24 குணங்களும், சரகர் கூறும் 41 குணங்களும் – திரவியங்களில் காணப்படும் குணங்களும் அதன் தன்மைகளும்

10. கர்ம விஞ்ஞானம் 190

கர்மத்தின் லட்சணம் – கர்மத்தின் பிரிவுகள் – பௌதிக கர்மங்கள் – பூர்த்த கர்மங்கள் – நித்ய கர்மங்கள் – நைமித்திய கர்மம் – காம்ய கர்மம் – பிராயசித்த கர்மம் – நியாய தரிசனத்தில் காணப்படும் கர்மத்தின் பிரிவுகள் – ஆயுர்வேதத்தில் கர்மத்தின் பங்கு

11. ஸாமான்யம் 194

திரவிய ஸாமான்யம் – குண ஸாமான்யம் (குணத்தில் பொதுத்தன்மை) – கர்ம ஸாமான்யம் (செயலில் பொதுத்தன்மை)

12. விசேஷம் 196

திரவிய விசேஷம் – குண விசேஷம் – கர்ம விசேஷம்

13. ஸமவாயம் 199

ஸமவாய லட்சணம்

14. அபாவம் 201

பிராக் அபாவம் – பிரத்வம்ஸாபாவம் – அத்யந்தா அபாவம் – அன்யோன்ய அபாவம் – ஸமாயிகாபாவம் – ஸம்ஸர்காபாவம்

## பாகம் 2


1. பிரமாணங்கள் 207

பிரமா – கரணம் – அப்ரமா – ஸம்சயம் – விபர்யயம், அல்லது பிராந்தி – தர்க்கம் – பிரமாணங்களின் முக்கியத்துவம் – பிரமாணத்தைப் பற்றி சரகரின் கருத்துக்கள்

2. பிரத்யட்ச பிரமாணம் 214

இந்திரியம் – அர்த்தம் – ஸன்னிகர்ஷம் – பிரத்யக்ஷ லட்சணம் – ஞான உற்பத்தி – ஞானோத்பத்தி ப்ரகரணம் – இந்திரிய ஸ்வரூபமும் லட்சணங்களும் – இந்திரிய அதிஷ்டானம் – இந்திரிய விஷயங்கள் – இந்திரிய பௌதீகரணம் – பஞ்சபஞ்சகம் – இந்திரிய விருத்தி – திரயோதச கரணங்கள் – பாஹ்ய கரணங்கள் – அந்தக் கரணங்கள் – அந்தக்கரணங்களின் முக்கியத்துவம் – அந்தக்கரண சதுஷ்டயம் – பிரத்யட்ச பேதம் – ஸவிகல்ப பிரத்யட்சம் – நிர்விகல்ப பிரத்யட்சம் – லௌகிகம் மற்றும் அலௌகிக பிரத்யட்சம் – ஸன்னிகர்ஷ ஸ்வரூபமும், பேதமும் – ஸம்யோகம் – ஸம்யுக்த ஸமவாயம் – ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம் – ஸமவாயம் – ஸமவேத ஸமவாயம் – விசேஷண விசேஷ்ய பாவம் – இந்திரியார்த்த ஸன்னிகர்ஷத்தின் முக்கியத்துவம் – லௌகிக பிரத்யட்சம் – அலௌகிக பிரத்யட்சம் – ஸாமான்ய லட்சண பிரத்யட்சம் – ஞான லட்சண பிரத்யட்சம் – யோகஜ பிரத்யட்சம் – அ) யுக்தஜம் – ஆ) யுஞ்சனம் – பிரத்யாஸத்தி யோஜனம் – வேதனா அதிஷ்டானம், ஹேது மற்றும் வேதனா நாச ஹேது – இந்திரிய பிராப்ய காரிதா – பிரத்யட்சம் – மற்ற பிரமாணங்களின் தேவை – அதிஸன்னிகர்ஷம் – அதிவிப்ரகர்ஷம் – ஆவரணம் – இந்திரிய தௌர்பல்யம் – மனோ அவஸ்தா – ஸமானவிஹாரம் – அதிபாவம் – சூட்சுமத்வம் – பிரத்யட்ச பிரமாணமும், ஆயுர்வேதமும்

3. அனுமான பிரமாணம் 235

பராமர்சம் – வியாப்தி – அனுமானத்தின் வகைகள் – ஸ்வார்த்த அனுமானம் – பரார்த்த அனுமானம் – அனுமானம் – வகை (சரக ஸம்ஹிதையின்படி) – நியாய தர்சனங்களின்படி அனுமானத்தின் வகைகள் – சரகரின் அனுமானக் கொள்கையும், நியாய தர்சனத்தின்

அனுமானக் கொள்கையும் – பஞ்ச அவயவங்கள் – லிங்க பராமர்சம் – கேவலான்வயி – கேவல வ்யதிரேகி – அன்வய வ்யதிரேகி – ஹேது – ஹேதுவாபாஸம் – ஸத்ஹேதுக்களின் குணங்கள் – வியாப்தி பேதங்கள் – திருஷ்டாந்தம் – தர்க்கம் – ஆயுர்வேதத்தில் அனுமானத்தின் பங்கு

4. ஆப்தோபதேசம் 252

ஆப்த வாக்கியம் – ஆப்த லட்சணங்கள் – ஆயுர்வேதத்தில் ஆப்தோ பதேசத்தின் முக்கியத்துவம் – ஆப்த வாக்கியத்தால் அறியக் கூடியவை – ஆகமப் பிரமாணம் – நிகண்டு பிரமாணம் – ஐதீக பிரமாணம் – சப்த பிரமாணம் – சப்த லட்சணங்கள் – சப்தார்த்த போதகவ்ருத்தி – விருத்தி வர்ணனம் (சப்தார்த்த போதக வர்ணனம்) வாக்கியம் – சப்தமும் சப்த உற்பத்தியும் – சக்தி – சக்தி க்ரஹம் – சக்தி க்ராஹகன்

5. யுக்தி 265

6. உபமானம் 269

ஸாதர்ம்ய உபமானம் – வைதர்ம்ய உபமானம் – தர்ம மாத்ரோ உபமானம்

7. அர்த்தாபத்தி 272

அனுபலப்தி அல்லது அபாவ பிரமாணம் – ஸம்பவ பிரமாணம் – சேஷ்ட பிரமாணம் – பரிசேஷ பிரமாணம் – இதிஹாஸ பிரமாணம்

8. காரிய காரண பாவங்கள் 275

காரணம் – பூர்வபாவம் – நித்யத்வம் – அனன்யாத ஸித்தி – காரண பேதங்கள் – ஸமவாயி காரணம் – அஸமவாயி காரணம் – நிமித்த காரணம் – ஸத்காரிய வாதம் – பரிணாம வாதம் – விவர்த்த வாதம் – அஸத்காரிய வாதம் – பரமாணு வாதம் – க்ஷணபங்குர வாதம் – பாகஜ குணம் – பீலுபாக வாதம் – பிடரபாக வாதம் – அனேகாந்த வாதம் – ஸ்வபாவ உபரம வாதம் – ஆயுர்வேதத்தில் காரண காரியத் தொடர்பு – பரிணாமம் (அணுக்களின் மாற்றங்கள்) – சரகர் கூறும் வாதங்கள்

9. சிருஷ்டி – உற்பத்தி நிரூபணம் 300

சிருஷ்டி உற்பத்தி (பிரபஞ்சத்தின் சிருஷ்டி) – பிரக்ருதி – பிரக்ருதியின் லக்ஷணங்கள் – மஹத் தத்துவம் – அஹங்காரம் – இந்திரியங்கள் – பஞ்ச தன்மாத்திரைகள் – பஞ்ச மகாபூதங்கள் – தத்வ வர்க்கீகரணம் –

ஆயுர்வேதம் ஏற்றுக் கொண்ட சிருஷ்டி – க்ரமம் – இந்திரிய வர்ணனம் – சிருஷ்டி கிரமம் – வியக்தம் அவ்யக்தம் – வியக்த தத்துவங்களின் இலக்கணம் – அவ்யக்த தத்துவத்தின் இலக்கணம் – பிரளயம் – பிரக்ருதிக்கும் புருஷனுக்கும் உள்ள வேறுபாடு – பிரக்ருதியும், புருஷனும் இணைவதற்கான காரணம் – திரிகுணங்கள் – உணவும் மனோ குணங்களும் – புனர் ஜென்மம் என்னும் மறுபிறவி – புனர்ஜென்மம் அல்லது மறுபிறப்புக்கு பிரமாணங்கள் – சரகரும் மறுபிறப்பும் – அபுனர்பவம் – மோட்சம் பற்றி சரகரின் கருத்து – அனுமானத்தால் மறுபிறப்பைத் தீர்மானிப்பது – துன்பங்களுக்குக் காரணம்

10. தந்திரயுக்தி 327

ஆயுர்வேத நூற்களில் தந்திரயுக்தி – தந்திரயுக்தியின் பலன்கள் – தந்திர யுக்தியின் தேவை – தந்திர யுக்தியின் மூன்று பகுதிகள் – தந்திர குணங்கள் (ஆராய்ச்சி பயன்கள்) – தந்திர தோஷங்கள் – தந்திர யுக்திகள் – தந்திரயுக்தியின் பயன் – தந்திரயுக்தி ஸங்க்யம் – தந்திர யுக்தி (சரக முறை) – தொல்காப்பியத்தில் தந்திரயுக்தி – வியாக்யானம் – ஆயுர்வேதத்தில் தக்ஷயல்யத்தின் பங்கு

11. கல்பனா 352

12. ஆச்ரயங்கள் 354

13. தாச்சில்யாக்கள் 359

ஆயுர்வேதத்தில் தாச்சில்யத்தின் பங்கு 363

பயன்படுத்தப்பட்ட நூல்கள் 364

சமஸ்கிருத சொல் – பொருள் விளக்கம் 366

# 1. இந்திய பாரம்பரியத்தின் ஆறு தரிசனங்கள்

## ஓர் அறிமுகம்

உலகம் உருவான காலந்தொட்டு தனக்கும் இயற்கையாகிய சுற்றுச் சூழலுக்கும் என்ன தொடர்பு என்பதை அறிந்துகொள்ள மனிதன் பேரார்வம் காட்டி வருகிறான். இம்மனிதனுக்கு புலன் களால் உலக அறிவு கிடைக்கிறது. புலன்களால் கிடைக்கின்ற அறிவு சிற்றறிவு ஆகும். தவத்தினாலும் மெய்யுணர்வினாலும் கிடைக்கும் அறிவனாதே என்றைக்கும் நிலையானது அல்லது மெய்யானது என்பதையும் அவன் அறிந்து வந்திருக்கிறான். ஆத்மாவைப் பற்றிய அறிவு, மனம் என்றால் என்ன, உலகத்தின் சிருஷ்டி என்பது எது, இறைவனுக்கும், நமக்கும் உள்ள தொடர்பு என்ன, மோக்ஷம் என்ற வீடுபேறு என்றால் என்ன, மறுபிறப்பு உண்டா, இல்லையா என்ற கேள்விகளுக்கு புலன்களிலிருந்து கிடைக்கின்ற அறிவானது பதிலைத் தருவதில்லை என்பதை அவன் ஒரு தருணத்தில் உணர்கிறான். இதற்கு விடைகாண மெய்யறிவைத் தருகின்ற சாத்திரங்களை அவன் நாடுகிறான். இந்த மெய்யறிவுக்கு காரணமாக இருக்கின்ற சாஸ்திரத்திற்குத் தரிசனங்கள் என்று பெயர். இதை வடமொழியில் " த்ருச்யதே அனேன இதி தர்சனம்" [1] என்று கூறுவார்கள்.

எதனால் பொருள் உணரப்படுகிறதோ அதற்கு தரிசனம் என்று பொருள். திருஷ்டி என்பதை கண்ணால் காண்பது என்று

பொருள் கூறலாம். ஆனால் இங்கு அந்த பதம் அறிவினால் கிடைக்கும் மெய்ஞானத்தை விளக்கும் சொல்லாகவே பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த தரிசனங்கள் உலகத்தைப் பற்றியும், ஆன்மாவைப் பற்றியும், உலகத்தின் சிருஷ்டி மற்றும் வீடுபேறு பற்றியும் அறிந்து கொள்ள உதவுகின்றன. இவற்றை தத்துவ சாஸ்திரங்கள் என்றும் குறிப்பிடலாம். உலகத்தைப் பற்றியுள்ள அறிவைத் தருவதற்கும் தரிசனங்கள் உதவுகின்றன.

இந்தத் தரிசனங்களை ஆஸ்திக தரிசனம் என்றும், நாஸ்திக தரிசனம் என்றும் இரண்டு விதமாகப் பிரிக்கலாம். இந்த ஆஸ்திகம், நாஸ்திகம் என்ற பிரிவு எவ்வாறு ஏற்பட்டது என்று பார்ப்போம்.

ஆஸ்திகம் என்ற சொல்லை அஸ்தி + இதி என்று பிரிக்கலாம். இதற்கு ஆத்மா இருக்கிறது, இறைவன் என்று ஒருவர் இருக்கிறார் என்று பொருள். ஆஸ்திக வாதிகள் வேதத்திலும், ஆத்மாவிலும், இறைவனிடத் திலும் நம்பிக்கை கோண்டவர்கள். இவர்களைச் சார்ந்து ஆஸ்திக தரிசனங்கள் உண்டாயின. மேற்கண்டவற்றில் நம்பிக்கை இல்லாதவர்கள் நாஸ்திகர்கள் என்றும் அவர்களுடைய கோட்பாடுகளுக்கு நாஸ்திக தரிசனம் என்றும் பெயர்.

இறைவன் இல்லை என்பதை நாஸ்திகர்கள் அவர்கள் புரிந்து கொண்ட விதத்தில் விளக்குகிறார்கள். இறைவன் இருக்கிறான் என்பதை ஆஸ்திகர்கள் அவர்கள் புரிந்து கொண்ட விதத்தில் விளக்குகிறார்கள்.

மொத்தமுள்ள 9 தரிசனங்களில் ஆறு ஆஸ்திக தரிசனங்களும், மூன்று நாஸ்திக தரிசனங்களும் உள்ளன[2]. அதில் ஆஸ்திக தரிசனங் களாவன

- நியாயம்
- வைசேஷியம்
- ஸாங்க்யம்
- மீமாம்ஸம்
- வேதாந்தம் முதலியவை.

நாஸ்திக தரிசனங்களாவன

- ஜைன தரிசனம்
- புத்த தரிசனம்
- சார்வாக தரிசனம் முதலியவை

இனி, தரிசனங்களைப் பற்றி நாம் விரிவாகப் பார்ப்போம்.

த்ரயீ ஸாங்க்யம் யோக பசுபதிமதம் வைஷ்ணவமிதி
ப்ரபின்னே ப்ரஸ்தானே பரமிதமத பத்யமிதி ச
ருசீநாம் வைசித்ரயாத்ருஜுகுடிலநாநாபதஜுஷாம்
ந்ருணாமேகோ கம்யஸ்த்வமஸி பயஸாமர்ணவ இவ

(சிவமஹிம்ன ஸ்தோத்ரம் 7)[3]

இறைவனை அடைய அல்லது இறைத் தன்மையை உணர வேதங்களிலும் ஸாங்க்ய, யோக, சைவ, வைணவ நூல்கள் ஒவ்வொன்றிலும் வெவ்வேறு வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றில் சிறந்ததென சிலர் ஒரு வழியையும், வேறு சிலர் இன்னொரு வழியையும் பின்பற்றுகின்றனர். தங்கள் மனோபாவத்திற்கேற்ப பக்தர்கள் இந்த வழிகளில் நேராகவோ, பல வழிகளில் சுற்றியோ செல்கின்றனர். ஆயினும் கருணைக் கடலான இறைவனே, மனிதர்கள் அனைவரும் உன்னை உணர்வதையே தங்கள் லட்சியமாகக் கொண்டிருக்கின்றனர் என்பதில் மாறுபாடில்லை.

## தத்துவத்தின் தேவை

அறிவுள்ள ஒரு மனிதன் வாழ்க்கையின் தினசரி போராட்டங்களைக் கடந்து வந்தபின், வாழ்க்கை என்றால் என்ன என்று தத்துவ ரீதியாக அறிந்துகொள்ள முயல்கிறான். தத்துவம் என்றால் அறிவின் மீது ஆர்வம் என்று பொருள்பட்டாலும், இந்திய மரபுகள் அறிவு என்பது மூளை சம்பந்தமான ஒரு பயிற்சி என்ற கொள்கைக்கும் அப்பால் எடுத்துச் சென்று விடுகிறது. இதனால் விளக்க முடியாத அனுபவத்தின் மூலம் உள்ளுணர்வின் பார்வையால் வாழ்வு என்பதன் தெளிவான பொருளை நாம் அறிந்து உணர முடிகிறது. இந்தத் தனித்தன்மையே 'தரிசனம்' (பார்த்தல் அல்லது அனுபவித்தல்) என்ற பெயரை அளிக்கிறது.

## தரிசனங்களின் அடிப்படை நோக்கம்

எவ்வளவுதான் நன்கு முயன்ற போதிலும் மனிதன் வாழ்க்கையின் துயரங்களிலிருந்து தப்பமுடியாது என்பதை பொதுவாக எல்லாத் தரிசனங்களும் கண்டுகொண்டன. இந்தத் துயரங்களிலிருந்து தப்புவது எப்படி? இன்றைக்கும் நாளைக்கும் மட்டுமல்ல, என்றென்றைக்குமான முயற்சிகளை அவை எடுத்துரைக்கின்றன.

## கடைபிடித்த வழிகள்

தன் உள்ளே இருந்து எழுந்த ஓர் இயல்பான தூண்டுதலால் (ஆன்மீக வளர்ச்சியால்) பிறந்த ஆறு தரிசனங்கள் காட்டிய விழிப்புணர்வால் இந்தியத் தத்துவவாதிகள் வாழ்க்கை பற்றி அறிந்துகொள்ள முயன்றனர். வெளி உலகைப் பாராமல் தங்களுக்கு உள்ளேயே பார்த்துக் கொள்வது தான் சிறந்த வழி என்று கண்டு கொண்டனர்.

வாழ்க்கையின் பிரச்சனைகளை ஆராய்ந்து அதற்குச் சரியான தீர்வு காண்பதைப் பற்றி அறிஞர்களும் முனிவர்களும் விவாதித்தனர். முடிவில் இதுபற்றி ஆழ்ந்து சிந்தித்தே தீர்வு காணவேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர் என்று ஸ்வேதாஸ்வதர உபநிடதம்[4] அழகாகக் கூறுகிறது. இதன் பிறகு இந்திய தத்துவவாதிகள் மூன்று சிறந்த வழிகளைக் கண்டுபிடித்தனர். தபஸ் (தூய்மையான வாழ்க்கை), ச்ரவணம் (ஞானிகளிடமிருந்து உண்மையைக் கவனமாகக் கவனமாகக் கேட்டறிதல்), மனனம் (அதைப் பற்றி சிந்தித்தல்) என்பவையே அவை.

## வேதங்களின் இடம்

பல்வேறு தரிசனங்களை ஒழுங்குபடுத்தி மக்களிடையே பரப்பிய முனிவர்கள் வெறும் வாதங்கள் மட்டும் போதாது என நினைத்தனர். அவற்றை மேலும் விளக்கிக் கொள்வதற்காக சுருதி (வேதங்கள்) பக்கம் திரும்பினர். தாங்கள் ஒதுக்கிவிட்ட விவாதத் திறமை சுதந்திரமான அறிவின் தேடலுக்கு உரிய வழி என்று உணர்ந்து வேதங்களைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள முயன்றனர்.

வேதங்களில் காணப்படும் சில வழிமுறைகளைக் கடைபிடிப்பதன் மூலம் கவலை, துன்பம் இவற்றிலிருந்து விடுதலை பெறலாம் என்பதை விரைவிலேயே அவர்கள் கண்டுகொண்டனர்.

ஆனால் வேதங்களை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் புரிந்துகொண்டனர். இதன் காரணமாக பல மரபுகள் தோன்றின. பின்னர் அவை ஆறு வ்கை என வகைப்படுத்தப்பட்டன.

## தரிசனங்களின் வளர்ச்சி

இந்திய பாரம்பரியத்தின்படி **நியாயம், வைசேஷிதம், ஸாங்க்யம், யோகம், மீமாம்ஸம், வேதாந்தம்** என்ற ஆறு தரிசனங்களும் பண்டைக் கால முனிவர்களால் தோற்றுவிக்கப்பட்டன. அவர்களின் பெயர்கள் வேதங்களில் மட்டுமின்றி புராணங்களிலும், இதிகாசங்களிலும் காணப் படுக்கின்றன. அவர்கள் தங்கள் சிந்தனைகளை பொருள் செறிந்த சுருக்கமான சூத்திரங்களாக இயற்றினர். அவை நினைவில் வைத்துக் கொள்ளவும் பிறருக்கு உபதேசிக்கவும் வசதியாயிருந்தன. எழுத்து முறை தோன்றிய பின், பல அறிஞர்களும் ஆசிரியர்களும் இவற்றுக்கு உரைகளும் விளக்கங்களும் எழுதினர். பாஷ்யங்கள், டீக்காக்கள், விருத்திகள், வார்த்திகாங்கள் (விளக்க உரைகளின் பொது பெயர்கள்) போன்றவை வசனமாகவும் கவிதைகளாகவும், தோன்றின. கருத்துக்கள் விரிவாக விளக்கப்பட்டன. பிற மரபுகளைச் சேர்ந்தவர்கள் இவர்களின் கருத்துக்களை மறுத்தபோது தங்களது நிலையைத் தீவிரமாக காத்துக் கொள்ள வேண்டியிருந்தது. இத்தகைய விவாத ரீதியான தாக்குதலும் மறு தாக்குதலும் பல இலக்கியங்கள் தோன்றக் காரணமாயின. அவை தமது கருத்துக்களை மேலும் ஆழமாக விவரிப்பதுடன் தர்க்க சாஸ்திர வளர்ச்சிக்கும் வழி வகுத்தன.

## பொதுத் தன்மைகள்

இந்த ஆறு தரிசனங்களிடையே கொள்கை, போதனை, குறித்து கடுமையான கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் அவற்றை கடைப்பிடிப்பது பற்றி ஒரு குறிப்பிடத்தக்க ஒற்றுமையும் இருந்தது.

மக்கள் படும் துன்பங்களை அறிந்து கொள்வதே அனைத்துத் தத்துவங் களின் ஆரம்ப வேலையானது, இதன் இறுதி லட்சியமாக விடுதலை என்னும் துன்பங்களிலிருந்து விடுபடும் நிலை இருந்தது இதனை சரியான அறிவு மூலமே அடைய முடியும் என்பதை தத்துவ ஞானிகள் உணர்த்தினர். சரியான அறிவு என்பது வெறும் கல்வி அறிவல்ல, உடல், மனம் என்ற

மனநிலையைத் தாண்டிச் செல்லும்போது ஒருவனுக்கு ஏற்படும் நேரடி உண்மை அனுபவம் என்பதாகும்.

இதற்கு நல்ல ஒழுக்கமும், நேர்மையான வாழ்க்கையும் அவசியம். இதற்கு பேராசை, பொறாமை போன்ற விரோதிகளை விலக்க வேண்டும். அத்துடன் தத்துவ விசாரணைகள் மூலம் கிடைத்த அறிவு நிலைக்கும் வரை தியானத்தில் ஈடுபட வேண்டும்.

இந்த ஆறு முறைகளும் கர்ம விதியை ஏற்றுக் கொள்கின்றன. நம்முடைய ஆத்மாவைப் படிப்படியாக வளப்படுத்தி, நமது பாத்திரத்தை சரிவர நடிப்பதற்காக அமைக்கப்பட்ட ஒரு மேடையே இந்த உலகம் என்றும் நம்புகின்றன.

இறுதியாக, இந்த தத்துவங்கள் சாதாரண உண்மையிலிருந்து மிக உயர்ந்த உண்மைக்கு படிப்படியாக உயர்வதை இந்திய தத்துவத்தின் மிகச் சிறந்ததும் அனைத்துத் தத்துவங்களுக்கும் மேலானதுமான வேதாந்தத்தில் பார்க்கலாம்.

# 2. ஆஸ்திக தரிசனங்கள்

## நியாய தரிசனம்

### முகவுரை

இந்தியத் தத்துவத்தின் ஆறு தரிசனங்களையும் இணைத்து ஒன்றாக ஆஸ்திக தரிசனங்கள் என்று அழைக்கின்றனர். வேதங் களே மிக உயர்ந்தவை என்று ஏற்றுக் கொள்பவை இவை.

இதில் முதலாவதாக வருவது **கௌதமரின் நியாய தரிசனம்** ஆகும். இதற்கு **அக்ஷபாதம்** என்ற பெயரும் உண்டு. சில சமயங் களில் வைசேக்ஷிக தரிசனத்துடன் இதை இணைத்து கூறுவதுண்டு. எனினும் இதற்கென்று சில குறிப்பிட்ட தன்மைகள் இருக்கின்றன. ஆகவே இதை ஒரு தனி தத்துவமாக எடுத்துக் கொள்ளலாம்.

இந்தியத் தத்துவத்தின் அனைத்து பிரிவுகளும் பொதுவாக இரண்டு விஷயங்களைப் பற்றியே கூறுகின்றன – பிரமாணங்கள் (ஞானம் பெறுவதற்கான வழிகள்), பிரமேயங்கள் (அந்த ஞானத் திலிருந்து பெற வேண்டிய விஷயங்கள்) என்பன அவை.

நியாய தரிசனம் பிரமாணங்களுக்கு முக்கியத்துவம் அளித்து, அவற்றை விரிவாக விளக்குகிறது. இந்திய தர்க்க சாஸ்திரத்துக்கு அஸ்திவாரமாக அது அமைகிறது. எனவே அதை நியாய வித்யா, தர்க்க சாஸ்திரம், ஆன்வீக்ஷிகி (தேடலின் அறிவியல்) என்றும் அழைக்கின்றனர்.

## இலக்கியம்

கௌதமரின் நியாய சூத்திரங்கள் இந்த தத்துவத்திற்கு அடிப்படை நூலாக அமைந்துள்ளது. இதில் ஐந்து அத்தியாயங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் இரண்டு பகுதிகளாக உள்ளன. இதில் மொத்தம் 528 சூத்திரங்கள் உள்ளன. இதற்கு **வாத்ஸ்யாயனர்** என்பவர் ஒரு உரை எழுதியிருக்கிறார். இந்த நியாய பாஷ்யத்திற்கும் விளக்க உரை (நியாய வார்த்திகம்) ஒன்றை உத்யோதரர் என்பர் எழுதியுள்ளார். வாசஸ்பதி இதை மேலும் எளிதாக்கி தமது **தாத்பர்ய டீகா** என்ற நூலை இயற்றினார். இந்த வரிசையில் கடைசியாக வந்த உரை உதயணரின் **தாத்பர்யடீகா பரிசுத்தி** என்பதாகும். இவர் **குஸுமாஞ்சலி** என்ற நூலையும் எழுதி யிருக்கிறார். இந்த சந்தர்ப்பத்தில் ஐயந்தரின் **நியாயமஞ்சரி**யையும் காங்கேசரின் **தத்துசிந்தாமணி**யையும் குறிப்பிட வேண்டும். **தத்வசிந்தா மணி** நவீன நியாய தத்துவத்துக்கு அடிகோலிட்டது. அது **நவ்ய நியாயம்** என்ற பெயரில் வங்காளத்தில் பிரபலமடைந்தது.

மேலும் குறிப்பிடப்பட வேண்டிய முக்கிய நூல்கள்: அன்னம் பட்டரின் **தர்க்க ஸங்க்ரஹம்**, விஸ்வநாதரின் **பாஷாபரிச்சேதம்**, மற்றும் இவற்றின் உரைகளான **தீபிகா** மற்றும் **ஸித்தாந்த முக்தாவலி** என்பன வாகும்.

### பதினாறு பதார்த்தங்கள்

நியாய தரிசனம் **பதினாறு பதார்த்தங்களை** (விஷயங்களை) விரிவாக விளக்குகிறது[5]. அதைப் பற்றி சுருக்கமாகப் பார்க்கலாம்.

இந்தப் பதினாறு பதார்த்தங்கள் வருமாறு:

1. பிரமாணங்கள் ( அறிவை அடையும் வழிமுறைகள்)
2. பிரமேயங்கள் ( அறிபடு பொருள்)
3. ஸம்சயம் (ஐயம்)
4. பிரயோஜனம் ( பயன், லட்சியம்)
5. திருஷ்டாந்தம் (உதாரணம்)
6. ஸித்தாந்தம் (கொள்கை)

7. அவயவம் ( தர்க்க சாஸ்திரத்தின் உறுப்பு)
8. தர்க்கம் (விவாதம்)
9. நிர்ணயம் ( இறுதி முடிவு)
10. வாதம் (உண்மையைக் காண்பதற்கான சர்ச்சை)
11. ஜல்பம் (ஜெயிப்பதற்காகவே விவாதம் செய்வது)
12. விதண்டம் (குதர்க்கமான விமர்சனம்)
13. ஹேத்வாபாஸம் ( பயனற்ற, இல்லாத காரணங்கள்)
14. சலம் (நியாயமற்ற பதில்கள்)
15. ஜாதி (போலித்தனம்)
16. நிக்ரஹ ஸ்தானம் (விவாதத்தில் தோல்விக்கான காரணம்)

நியாய தரிசனம் ஏற்றுக் கொண்ட பிரமாணங்கள் நான்கு:

1. பிரத்யக்ஷம் (நேரில் பார்ப்பது)
2. அனுமானம் (ஊகம்)
3. உபமானம் ( ஒப்பிடுதல்)
4. சப்தம் (வேத வாக்கியம் மற்றும் இறை ஞானிகளின் வார்த்தைகளால் ஏற்படும் முன்னறிவு)

பிரமேயங்கள் (13) பின்வருமாறு:

1. ஆத்மா
2. சரீரம் (உடல்)
3. ஞானேந்திரியம் (கண், காது, மூக்கு, நாக்கு, தோல் போன்ற ஐம்புலன்கள்)
4. விஷயம் (நிறம், சுவை போன்றவை)
5. புத்தி (ஞானம், அறிவு)
6. உபலப்தி ( கவலை, பயம்)
7. மனஸ் (மனம்)
8. பிரவ்ருத்தி (செயல்)
9. தோஷம் (ஆசை, வெறுப்பு போன்ற குணங்கள்)

10. பிரத்யபாவம் (மறு பிறவி)
11. பலம் (முயற்சியின் பலன், மகிழ்ச்சி அல்லது துயரம்)
12. துக்கம்
13. அபவர்கம் (துயரத்திலிருந்து முழு விடுதலை) என்பனவாகும்.

மனிதப் பிறவியின் இறுதி லட்சியம் அபவர்கம் என்ற மோட்ச நிலையை அடைவது. அப்போது அனைத்து துயரங்களும் மறைந்து விடுகின்றன. அபவர்க்கம் மற்றும் அதனை போன்ற பிற பிரமேயங்கள் பற்றிய உண்மை அறிவு (தத்துவ ஞானம்) பெற்ற பிறகே மோட்ச நிலை அடைய முடியும்.

வேதாந்த தரிசனம் போன்றவை மேலும் மூன்று படிகளைக் கூறுகின்றன. அவை:

1. ச்ரவணம் (மெய்யறிவை பற்றிய விஷயங்களை கேட்பது)
2. மனனம் (அவற்றைத் திரும்பத் திரும்ப சிந்திப்பது)
3. நிதித்யாஸனம் (இவ்விஷயத்தை எப்பொழுதும் தியானிப்பது)

பதினாறு பதார்த்தங்களில் இடம்பெறும் ஸம்சயம் (ஐயம்), திருஷ்டாந்தம் (உதாரணம்), தர்க்கம் (ஒழுங்கான விவாதம்), நிர்ணயம் (தீர்மானித்தல்), வாதம் (விவேகமுள்ள விவாதம்) ஆகியவை உண்மையை சரிவர உணர்ந்துகொள்ளும் முயற்சியில் உதவியாக இருக்கின்றன.

நியாய தரிசனம் விவரிக்கும் ஞானத்துக்கு இவை வழிகாட்டு கின்றன.

## நியாயத்தின் அறிவுக் கோட்பாடு

ஒரு பொருளின் உண்மையைக் கண்டறிய சரியான அறிவுபூர்வ மான வழியைக் கடைபிடிக்க வேண்டும். எனவே அந்த அறிவைப் பற்றி நாம் சரிவர புரிந்துகொண்டிருக்க வேண்டும்.

நியாய தரிசனம் குறிப்பிடும் அறிவுக் கோட்பாடு நான்கு பிரமாணங் களை ஏற்றுக் கொள்கிறது. பிரமாணம் என்பது உண்மையான அறிவுக் கான, தனியாக மேற்கொள்ளப்படும் தெளிவான வழிமுறைகள் ஆகும்.

- பிரத்யட்சம் (புலன்களுக்கு ஏற்படும் அறிவு)
- அனுமானம் (அனுமானித்தல் – ஊகம்)
- உபமானம் (ஒப்பிட்டு நோக்குதல்)
- சப்தம் (வேத வாக்கியம் மற்றும் இறை ஞானிகளின் வார்த்தை களினால் ஏற்படும் உண்மை அறிவு)

இந்த நான்கு பிரமாணங்களும் சரியாக கடைபிடிக்கப்பட்டால் பிரமா (சரியான அறிவு) கிடைக்கும். ஸம்சயம் (சந்தேகம்), பிரமை (தவறான பார்வை) போன்றோ, பதினாறு பதார்த்தங்களில் இடம் பெற்ற வேறு சிலவற்றைப் போலவே அப்பிரமம் (தவறான அறிவை) தராது.

சரியான அறிவு என்றால் என்ன? ஒரு பொருளின் இயற்கையான நிலையோடு ஒத்துப் போதல் அல்லது பொருளின் இயற்கை நிலையை உணர்தல் சரியான அறிவு எனப்படும்.

இந்த நான்கு பிரமாணங்களையும் ஒவ்வொன்றாகப் பார்க்கலாம்.

### 1. பிரத்யட்சம் (நேரடிப் பார்வை)

ஐம்பொறிகளில் ஒன்று நேரடியாக ஒரு பொருளோடு தொடர்பு கொள்ளும்போது – உதாரணமாக நமது கண் ஒரு மேஜையைப் பார்க்கும் போது – அந்தப் பொருளைப் பற்றிய தெளிவான அறிவு கிடைக்கிறது. இதுவே பிரத்யக்ஷம் அல்லது நேரடிப் பார்வையாகும். இதில் நிச்சய மற்ற, தெளிவற்ற, சந்தேகம் தரும் நிலை இராது. தூரத்தில் தெரியும் ஒரு தூண், மனிதனா அல்லது கம்பமா என்ற ஐயத்தைப் போலவோ, மங்கிய ஒளியில் ஒரு கயிற்றைக் கண்டு அது ஒரு பாம்பா என்று ஐயுறுதல் போலவோ இராது. இவை இரண்டும் நேரடியாகப் பார்க்கப்பட்டாலும் நம்பத்தகுந்தது அல்ல.

மகிழ்ச்சி, துயரம் போன்று மனதால் உணரப்படுபவையும் பிரத்யக்ஷம் வகையைச் சேர்ந்ததுதான்.

யோகிகளின் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு அதீத புலனுணர்வால் கடுமையான பயிற்சியின் பலனாகக் கிடைத்த அதீத சக்திமூலம் காணப்படுகிற பொருட்களையும் பிரத்யக்ஷம் வகையில் சேர்க்கலாம். இது யோகஜம் அல்லது யோகிஜ பிரத்யட்சம் என்று அழைக்கப்படுகிறது.

## அனுமானம்

அனுமானத்தின் சரியான பொருள் புரிந்து கொள்ளுதல் அல்லது அறிதல் ஆகும். இது வேறு ஒரு அறிவைத் தொடர்ந்து நிகழ்வது. (அனு – தொடர்ந்து, மானம் – புரிந்துகொள்ளுதல் ).

சாதாரணமாகக் கூறப்படும் ஓர் உதாரணத்தைப் பார்க்கலாம். தூரத்தில் ஒரு மலையில் இருந்து புகை வருவதைக் கண்டால், அங்கே நெருப்பு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்கிறோம். இதில் நெருப்பு இருப்பதை நேரடியாக நாம் பார்க்க முடிவதில்லை.

இது பற்றிய தர்க்க நியாயம் பின்வருமாறு:

தூரத்து மலையில் புகை தெரிவதால் அங்கே நெருப்பு இருக்கிறது. இதற்குமுன் வேறொரு இடத்தில் புகையைக் கண்டபோது அங்கே நெருப்பு இருந்ததைப் பார்த்திருக்கிறோம். (உதாரணம் – சமையல் அறை)

நியாய நூல்களில் இது குறித்து சில விளக்கங்கள் இருக்கின்றன.

1. நெருப்பு இருக்கிறது என்பதை முதலில் நிரூபிக்க வேண்டும். அது முக்கியமான விஷயம் (ஸாத்யம்) எனப்படுகிறது. அனுமானத்தின் போது நாம் கவனித்த மலை பக்ஷம் எனப்படும். இது சாதாரண விஷயம்.
2. நெருப்பு இருக்கிறது என்பதை உணர்த்தும் புகை, லிங்கம் அல்லது ஹேது எனப்படுகிறது. இது மத்திய விஷயம்.
3. இந்த மாதிரி அனுமானத்தின்போது நாம் கவனிக்க வேண்டிய முக்கிய அம்சங்களான லிங்கம், ஸாத்யம், இவற்றுக்கிடையே ஒரு தொடர்பான நிகழ்ச்சி (வியாப்தி) இடம் பெற்றிருக்க வேண்டும்.

அனுமானத்தின் அடிப்படையில் கிடைக்கப் பெற்ற அறிவை **அன்யம்** (பார்வையால் தீர்மானிப்பது), மற்றும் **வ்யதிரேகம்** (பாராமலே தீர் மானிப்பது) என்ற முறைகளால் மேலும் வலுப்படுத்தலாம். இந்த இரு முறைகளையும் (ஒரே உண்மையை இரு வேறுப்பட்ட விதத்தில் கூறுவது) பின்வருமாறு விளக்கலாம்.

புகையிருக்குமானால் அங்கே நெருப்பும் இருக்கும். நெருப்பு இல்லாவிட்டால் அங்கு புகை இராது என்ற உதாரணங்களைக் கூறலாம்.

அனுமானத்தைப் பற்றி விளக்கும் போது 'நியாய' த்தின் ஆசிரியர் கள் அதை ஸ்வார்த்தம், பரார்த்தம், பூர்வவத், சேஷவத் என்றெல்லாம் பலவிதமாகக் குறிப்பிடுகின்றனர். இதில் உள்ள சிறிய வேறுபாடுகள் **தினசரி** வாழ்வில் அதிகப் பயனுள்ளதாக இல்லாவிடினும் தத்துவ விவாதங் களில் அவை பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

### 3. **உபமானம்** (உவமை)

ஒரு குறிப்பிட்ட விளக்கத்தின் அடிப்படையில் ஒன்றை இன்னொன் றுடன் ஒப்பிட்டு அறியும் முறை உபமானம் எனப்படுகிறது. உதாரணமாக, மிளா என்றால் என்ன என்று தெரியாத ஒருவனுக்கு அது மான் போன்ற ஒரு மிருகம் என்று கூறி புரிய வைக்கலாம். பின்னர் ஒரு சமயம் காட்டில் அவன் ஒரு மிளாவைப் பார்க்கும் போது உடனேயே அது என்ன மிருகம் என்பதை உணர்ந்து கொள்கிறான். உபமானத்தால் இவ்வறிவு கிடைக் கிறது.

உபமானம் என்பது அறிவின் ஒரு தனி பிரிவு என்று சில தத்துவ வாதிகள் கருதுகிறார்கள். வேறு சிலர் அது அனுமானத்தின் வேறொரு வடிவம்தான் என்கின்றார்.

### சப்தம்

சப்தம் அல்லது முன்னறிவு என்பது நம்பிக்கைக்குரிய ஒருவன் கூறும் விஷயத்தை ஏற்றுக் கொள்ளுதல் ஆகும். இது பிரமாணங்களில் இறுதியானதாகும். சப்தம் என்பது திருஷ்டார்த்தம் (உணரக்கூடிய பொருள்), அதிருஷ்டார்த்தம் (உணரமுடியாத பொருள்) என்று இருவகைப் படும்.

கடவுள் பற்றி வேதங்கள் கூறுபவை. ஆத்மா, இறவாமை, போன்றவை அத்ருஷ்டார்த்த வகையில் உட்படும். எனவே வேதங்கள் சுருதி (சப்தம்) என்ற உயர்ந்த பெயரில் அழைக்கப்படுகின்றன.

'சப்தம்' வார்த்தைகளால் வெளிப்படுகிறது. நியாய தத்துவத்தில் வாக்கியத்தின் சரியான அமைப்பு பற்றி விரிவாக விவாதிக்கப்படுகிறது. பொருள் பொதிந்த ஒரு வாக்கியத்தின் அமைப்பு நான்கு நிபந்தனைகளுக்கு உட்பட்டிருக்க வேண்டும். அவை ஆகாங்க்ஷம் (எதிர்பார்ப்பு), யோக்யதை (பொருத்தம், மாறுபாடில்லாமை), ஸன்னிதி (ஒரு வாக்கியத்திலுள்ள சொற்களின் நெருக்கம்), தாத்பர்யம் (வெளிப்படவேண்டிய பொருள்) என்பனவாகும்.

## பௌதிக உலகம் பற்றிய நியாயக் கொள்கை

நியாய தரிசனம் சிருஷ்டி பற்றிய வைசேக்ஷிக தரிசனத்தின் கொள்கையையே முற்றிலுமாக பின்பற்றுகிறது. பௌதிக உலகம் என்பது பிருத்வி (பூமி), அப்(நீர்), தேஜஸ் (நெருப்பு) வாயு(காற்று) ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களையும், காலம், திசை என்ற பௌதிக மற்ற பொருட்களும் சிருஷ்டியோடு சம்பந்தப்பட்டவை என்று நியாய தரிசனம் கூறுகிறது.

ஒவ்வொரு ஆத்மாவின் கர்மத்தையும் (அதிருஷ்டா) மொத்தமாகக் கணித்து அதன் அடிப்படையில் ஸ்தூல மற்றும் ஸ்தூலமற்ற பொருட்களால் கடவுள் உலகைப் படைத்திருக்கிறார் என்று நியாய தரிசனம் கூறுகிறது.

## கடவுள்

கடவுள்தான் உலகத்தின் சிருஷ்டி (படைப்பு), ஸ்திதி (காத்தல்), பிரளயம் (அழித்தல்) என்பவற்றின் மூல காரணம். அவர் உலகை வெறுமையிலிருந்தோ, தன்னிடமிருந்தோ படைக்கவில்லை. அணுக்கள், வெளி, காலம், பூமி, மனம், ஆத்மா இவற்றைக் கொண்டு சிருஷ்டித்தார் என்கிறது.

கடவுளோடு இணைந்திருக்கும் நிரந்தரமான பொருட்களின் சரியான அமைப்பே சிருஷ்டி எனப்படும். இந்த உலகம், ஒவ்வொரு ஆத்மாவின் கர்மவினைக்கேற்ப சிருஷ்டிக்கப்பட்டது.

எனவே கடவுள்தான் முதல் திறமையான நிமித்த காரணர், பொருட்கள் காரணமல்ல. சிருஷ்டிக்குப் பின்னர் உலகை பாதுகாப்பதும் கடவுளே. அவர்தான் அதன் நீதியை நிலைநிறுத்துபவர் (கர்ம பலாதாதர்). அவரே நல்லவர்களுக்கு நன்மையும், தீயவர்களுக்கு தண்டனையும் அளிக்கிறார்.

குறிப்பிட்ட ஒரு சுற்று முடிந்ததும் உலகை அழிப்பவரும் அவரே. நீதியின் கட்டாயத்திற்கேற்ப இது நடைபெறுகிறது. அழிவின் சக்திகளை ஏவி கடவுள் இதை மேற்கொள்கிறார்.

எல்லாம்.அறிந்தவர் அவரே. அனைத்து நிகழ்வுகள் பற்றியும், அனைத்து பொருட்களைப் பற்றியும் அறிந்தவர் அவரே.

அவரது மாற்ற முடியாத இயல்பு நிரந்தர பிரக்ஞையே (மாற்றமில்லா மெய்யறிவு). (அத்வைத வேதாந்தத்தில் குறிப்பிட்டபடி பிரக்ஞை அவரது ஸாரம் அல்ல என்கிறது நியாயம்.) அவர்

1. ஞானம்
2. ஐஸ்வர்யம்
3. யசஸ் (புகழ்)
4. ஸ்ரீ (செல்வம், அழகு)

போன்றவற்றைக் கொண்டவர்.

கடவுள் இருக்கிறார் என்பதற்கு நியாய மற்றும் வைசேக்ஷிக மரபுகள் சில காரணங்களைத் தருகின்றன. பெரும்பாலான பொருட்கள் அசைவற்று இருக்கும்படியும், ஆத்மாவை ஞானமும், ஆற்றலும் கொண்டவையாகப் படைக்கவும் தன்னிகரில்லா அறிவு கொண்ட ஒரு சக்தியால் தான் முடியும். உலக வாழ்வு பற்றி அற்புதமாக ஆதாரபூர்வமாகக் கூறும் வேதங்களும் இதையே வலியுறுத்துகின்றன என்பது போன்ற கருத்துக்களைக் கூறி, கடவுளைப் பற்றி நியாய தரிசனம் கூறுகிறது.

**ஜீவன்** (ஆத்மா)

நியாய தரிசனத்தின்படி ஜீவன்களின் எண்ணிக்கை அளவற்றது. அவை நிரந்தரமானவை. அழிவற்றவை. இயற்கையாக அதற்கு பிரக்ஞை

(அறிவு) கிடையாது. பிரக்ஞை (அறிவு) என்பது ஜீவன் மனதோடு இணைந்ததால் ஏற்பட்ட குணம் ஆகும். ஜீவன்கள் எங்கும் நிறைந்தவை (விபு) ஆகும்.

ஜீவனின் மனம் வெளி உலகோடு தனது ஐம்பொறிகளால் தொடர்பு கொண்டு அனுபவங்களைப் பெறுகிறது.

மற்ற தத்துவங்களைப் போலவே மறுபிறவியின்றி (அபவர்கம்) மோட்சத்தை அடைவதே வாழ்க்கையின் முக்கிய குறிக்கோள் என்கிறது நியாயம். ஆனால் மற்ற தத்துவவாதிகளைப் போலன்றி நியாயவாதிகள் மோட்சம் என்பது ஒரு நல்ல, இடைவிடாத, தொடரும் இன்ப வாழ்வு என்பதை ஏற்றுக் கொள்வதில்லை. ஒரு மாறுபட்ட, எல்லா துயரங்கள் மற்றும் கவலைகளிலிருந்தும் விடுபட்ட ஒரு நிரந்தர நிலையே மோட்சம் (வீடுபேறு) என்கிறது. இந்திரியங்களுடனும் பொருட்களுடனும் மனம் இணைந்துள்ளதால் வாழ்க்கையில் துன்பமும் இன்பமும் எப்போதுமே இருந்து கொண்டேயிருக்கும். கலப்படமற்ற மகிழ்ச்சியோ சுகமோ ஒருபோதும் கிடையாது. கஷ்டம் இல்லாமல் இன்பம் இல்லை என்பதே நியாயம் கூறும் தத்துவமாகும்.

மனதிலிருந்தும் உடலிலிருந்தும் புலன்களிலிருந்தும் முற்றிலும் வேறுப்பட்ட ஓர் ஆத்மாவே, தான் என்கிற உணர்வு வரும்போதுதான் ஒருவன் விடுதலை அடைகிறான். இதை அடைய அவன் மூன்றுவித சாதனைகளை மேற்கொள்ள வேண்டும். ச்ரவணம் (ஆத்மா பற்றிய விளக்கங்களைக் கேட்டறிதல்), மனனம் ( அந்த அறிவை மனதில் இருத்தி அதைப் பற்றியே சிந்தித்தல்), நிதித்யாஸனம் (முதல் இரண்டு சாதனை களின் அடிப்படையில் ஆத்மாவைக் குறித்த தியானம்). இதை மேற் கொண்டால் நாளடைவில் மித்யாஞானம் (பொய் அறிவு) மறைந்து விடும். அதன் பிறகு அவன் உடலையும் மனதையும் வருத்தும் கவலை, துன்பம் போன்றவற்றிலிருந்து விடுதலை பெறுவான்.

முடிவுரை

இந்திய தத்துவத்தைப் பற்றி, குறிப்பாக ஆறு தரிசனங்களைப் பற்றி, கூறப்படும் ஒரு குறை என்னவெனில் அது வேதங்களை அடிப்படை

யாகக் கொண்டது, சிந்தனை பூர்வமான ஆராய்ச்சிகளைப் பின்பற்ற வில்லை என்பதே. ஆனால் நியாய தரிசனம் தனது தர்க்க ரீதியான விட்டுக்கொடுக்காத வழிகள் மூலம் மேற்படி குற்றச்சாட்டை நிவிர்த்தி செய்துவிடுகிறது.

பிற்காலத்தில் தோன்றிய வேதாந்தம் போன்றவை பற்றி எழுதிய வர்கள் தர்க்க ரீதியாக தங்கள் கருத்துக்களை எழுதினார்கள். அதற்கு இது உறுதியான அடித்தளத்தை ஏற்படுத்திவிட்டது.

## 3. வைசேஷிக தரிசனம்

**வை**சேஷிக தரிசனத்தின் மூலகுரு கணாதர். இவருக்கு உலுக்கர் என்ற பெயரும் உண்டு. கணாதர் என்பது ஒரு காரணப் பெயராக இருக்கலாம். வயல்களிலிருந்து கணா என்ற தானியத்தைப் பொறுக்கி உண்டு வந்ததால் இந்த பெயர் ஏற்பட்டிருக்கலாம். (கணா – தானியம், அத் – உண்பது).

கணாதரின் நூல் வைசேஷிக சூத்திரங்கள் எனப்படும். இது பத்து அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அத்தியாயத் திற்கும் இரண்டு பிரிவுகள் உள்ளன. இதில் மொத்தம் 374 சூத்திரங்கள் உள்ளன. இதற்கு **பதார்த்த தர்ம ஸங்க்ரஹம்** என்ற மிகப் பழைய விளக்க நூல் ஒன்று உண்டு. அதை எழுதியவர் பிரசஸ்தபாதர். இது பாஷ்யம் என்று கூறப்பட்டாலும் மூல நூலின் ஒவ்வொரு சூத்திரத்துக்கும் எழுதப்பட்ட உரை அல்ல. மூல நூலின் கருத்துக்களை எடுத்துக் கூறிவிட்டு அதற்கு விரிவான விளக்கங் களும் இதில் காணப்படுகின்றன. வைசேஷிக சூத்திரத்திற்கு வேறு சிலரும் உரை எழுதியுள்ளனர். ஸ்ரீதரர் எழுதிய நியாய கண்டலி, வியோமசிவர் எழுதிய வியோமவதி, உதயணர் எழுதிய கிரணாவலி ஆகியவை இதில் முக்கியமானவை. வல்லபாச்சார்யாவின் நியாய லீலாவதி மற்றும் உதயணரின் லக்ஷணாவலி என்ற இரண்டு உரைகளும் குறிப்பிடத் தக்கவை.

காலப்போக்கில் பலர் வைசேஷிக தத்துவத்தையும் நியாய தத்துவத்தையும் ஒன்றாகவே கருதி உரைகள் எழுதத் தொடங்கினர். இதில் குறிப்பிடத் தக்கவை சிவாதித்யாவின் ‘ஸப்தபதார்த்தி’,

விஸ்வநாதரின் 'பாஷாபரிச்சேதாம்' மற்றும் அதற்கு அவர் எழுதிய உரையான 'ஸித்தாந்த முக்தாவலி' முதலியவை ஆகும்.

## ஏழு பதார்த்தங்கள்

வைசேஷிக தத்துவம் ஏழு பதார்த்தங்களைக் குறிப்பிடுகிறது. பதார்த்தம் (பத அர்த்தம்) என்பதை 'ஒரு சொல்லின் பொருள்', 'அறிவுக்கான விஷயம்' (கருதுகோள்) என்று கொள்ளலாம். இந்த விஷயங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். பாவம் (இருப்பது), அபாவம் (இல்லாதிருப்பது). தற்போது இருப்பவற்றைக் குறிப்பிடுவது பாவம். அதன் எதிர்ச் சொல் அபாவம். (இல்லாதவற்றைக் குறிப்பிடுவது). (வைசேஷித சூத்திரம், 1.1.14)

ஏழு பதார்த்தங்களாவன: திரவியம் (பொருள்), குணம் (இயல்பு), கர்மம் (செயல்), ஸாமான்யம் (பொதுத் தன்மை), விசேஷம் (சிறப்புத் தன்மை), ஸமவாயம் (இணைவுத் தன்மை), அபாவம் (இல்லாமை) என்பனவாகும். இவற்றை ஒவ்வொன்றாகப் பார்க்கலாம்.

- திரவியம் (பொருள்) என்பது குணம் (தன்மை), கர்மம் (செயல்) இரண்டும் இணைந்த ஒன்றாகும்.
- மொத்தம் ஒன்பது வகை திரவியங்கள் உண்டு. அவை பூமி, நீர், ஒளி, காற்று, ஆகாயம், காலம், திசை, ஆத்மா, மனம் என்பன வாகும். இவை நிரந்தரமானவை.
- பூமி, நீர், ஒளி, காற்று என்ற நான்கு பூதங்களும் பரமாணுக்கள் ஆகும். சிருஷ்டிக்கு முன்பே இருப்பவை.
- ஆகாயம், காலம், திசை, ஆத்மா என்ற நான்கும், எங்கும் நிறைந்தவை.
- மனம் அணு போன்றது.

வைசேஷிக தத்துவம், ஆத்மாவை ஜீவாத்மா, பரமாத்மா என்று இரண்டு விதமாக ஏற்றுக் கொள்கிறது. பரமாத்மாவை ஈஸ்வரன் அல்லது மஹேஸ்வரன் என்றும் அழைக்கிறது. ஜீவாத்மா அளப்பரிய எண்ணிக் கையில் இருக்கிறது, ஆனால் பரமாத்மா ஒன்றே ஒன்றுதான் என்றும் கூறுகிறது.

- குணம் (தன்மை) தன் இருப்புக்கோ மாற்றத்துக்கோ ஏதாவது ஒரு பொருளைச் சார்ந்தே இருக்கும். இது ஒரு பொருளோடு (திரவியம்) மட்டுமே தொடர்புடையது.

வைசேஷிக தத்துவம், குணங்களை 24 என்று வகைப்படுத்துகிறது. தற்போதைய நிலையிலிருந்து மேலும் பிரிக்க முடியாதவை என்பதால் அவை 24 என்று நிர்ணயிக்கப்பட்டன.

- **கர்மம்** (செயல்): ஒரு பொருளோடு இணைந்தது. இயற்கை யாகவே சக்தி வாய்ந்தது. உத்க்ஷேபனம் (மேலெழும்புவது), ஆகுஞ்சனம் (சுருங்குதல்) போன்ற இயல்புகளைக் கொண்டது. பார்வை, உணர்ச்சி, போன்றவற்றால் இவற்றை அறிந்து கொள்ளலாம். மனதுக்கும் அசைவு உண்டு. ஆனால் அதைப் பார்க்க இயலாது.

- **ஸாமான்யம்** (பொதுத் தன்மை): இதை ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு அவசியமானது பொதுவானது என்றும் கூறலாம். இந்தப் பொதுத்தன்மை நிரந்தரமானது. தனி மனிதனிடம் இயற்கையாக தோன்றுவது. உதாரணமாக கோத்வம் (பசுத் தன்மை, சாந்தம்), கடிதவம் (கடினத் தன்மை) போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவை முறையே பசுவிடமும் பானையிலும் அமைந்துள்ளன. பசு இறக்கும்போதோ, பாண்டம் உடையும் போதோ அதன் பொதுத் தன்மை அழிந்துபோவதில்லை.

- **விசேஷம்** (தனித் தன்மை): ஸாமான்யத்துக்கு நேர் மாறானது. இது ஒரு பொருளின் நிரந்தரமான அழியாத அதீத தன்மை யாகும். உதாரணமாக, பூமியில் காணப்படும் ஒரு பரமாணு இன்னொரு பரமாணுவினின்றும் வேறுபட்டது. ஏதோ ஒன்று அவற்றைப் பிரித்துக் காட்டுகிறது. அதுதான் 'விசேஷம்'. இவற்றை நாம் பின்வரும் பகுதிகளில் விரிவாகப் பார்ப்போம்.

- **ஸமவாயம்** (இணைவுத் தன்மை): வைசேஷிக தத்துவத்தில் காணப்படும் ஒரு தனிக் கொள்கை ஆகும். இரண்டு பொருட்

களிடையே காணப்படும் தொடர்பை (ஸம்யோகம்) விருப்பம் போல் ஏற்படுத்த முடியும், பிரிக்கவும் (விபாகம்) முடியும். இரு பொருட்களிடையே உள்ள இந்த தொடர்பு தற்காலிகமானதே. ஆனால் ஸமவாயம் என்ற உறவு அவற்றுடன் இயற்கையாகவே அமைந்தது. இது பிரிக்க முடியாத ஒன்றிணைந்த தன்மை யுடையது. இது நிரந்தரமானது. ஒரு முழுமையான பொருளுக் கும் அதன் பகுதிகளுக்கும் இடையே உள்ள தொடர்பு ஆகும். ஒரு துணிக்கும் நூலுக்கும் தொடர்பு உள்ளது போல, சிவப்பு ரோஜாவுக்கும் சிவப்பு நிறத்துக்கும் உள்ள தொடர்பு போல, வீசப்பட்ட பந்துக்கும் அசைவுக்கும் உள்ள தொடர்பு போல இது உள்ளது. இது ஸமவாயம் எனப்படும்.

- **அபாவம்** ( இல்லாமை): இது மட்டுமே எதிர்மறை இனமாகும். இரவில் ஆகாயத்தைப் பார்க்கையில் நிலாவும் நட்சத்திரங்களும் அங்கு இருக்கும்போது சூரியன் அங்கு இல்லை என்பதை அறிகிறோம்.

பொதுவாக அபாவத்தை – ஸம்ஸர்காபாவம், அன்யோன்யாபாவம் என இருவகையாகப் பிரிக்கலாம்.

ஸம்ஸர்காபாவம் என்பது ஒரு பொருளில் இன்னொரு பொருள் இல்லாமல் இருப்பது (மேஜை மேல் டம்ளர் இல்லை).

அன்யோன்யாபாவம் என்பது ஒரு பொருள் இன்னொரு பொருளில் அடங்காமல் இருப்பது (ஒரு குதிரைக்குள் ஒரு எருது இல்லை) என்பதாகும்.

ஸம்ஸர்காபாவம் மூன்று வகைப்படும்.

1. பிராக்பாவம் (இதற்குமுன் இவ்வாறு நிகழ்ந்ததில்லை). வீடு கட்டப்படுவதற்கு முன் செங்கலில் வீடு இல்லை என்பது பிராக்பாவம்.

2. பிரத்வம்ஸாபாவம் அல்லது த்வம்ஸாபாவம் (அழிக்கப்பட்ட பின் இல்லாமலாவது). உடைந்துபோன மண் கூஜாவில் கூஜா காணப்படவில்லை என்பது பிரத்வம்ஸாபாவம்.

3. அத்யந்தாபாவம் (முற்றிலும் இல்லாதது). காற்றில் நிறமோ வடிவமோ இல்லை என்பது அத்யந்தாபாவம்.

## கடவுளும் உலகமும்

வைசேஷிக தரிசனம் கடவுள் இருக்கிறார் என்பதை ஏற்றுக் கொள் கிறது. இந்த உலகைப் படைத்து, ரட்சித்து, அழிப்பது அந்த சர்வ வல்லமை படைத்த கடவுள்தான் என்கிறது.

பல பொருட்களாலும் உயிர்களாலும் ஆனதே இந்த உலகம். அவை ஒன்றோடொன்று இணைந்து வாழ்கின்றன. ஒவ்வொரு தனிப் பட்ட ஆத்மாவின் வாழ்வையும் வழியையும் கட்டுப்படுத்தும் அறம் பற்றிய அமைப்பே உலகை வழிநடத்திச் செல்கிறது.

சிருஷ்டியின் தொடக்கமும் அதைத் தொடர்ந்து வரும் காத்தலும், அழித்தலும் கடவுளின் விருப்பத்தைப் பொறுத்தது. பிரம்மத்துக்கு ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம் முதலிய குணங்கள் உண்டு. இந்த பிரம்மமே சிருஷ்டி கர்த்தா. பரமாணுக்களை இயக்கி ஒன்றோடொன்று இணையச் செய்து, ஒவ்வொரு ஆத்மாவின் குணநலன்களுக்கேற்ப சிருஷ்டியை மேற்கொண்டு, இவ்வுலகத்தைப் படைத்தது பிரம்மம்.

அழித்தல் என்பது இதற்கு நேர்மாறானது. மஹேஸ்வரன் அழிவுத் தொழிலை மேற்கொண்டு பிரளயத்தை ஏற்படுத்துகிறார். உலகம் முற்றிலும் அழிந்து ஏழு பதார்த்தங்கள் என்ற பழைய நிலையை அடைகிறது.

## முடிவுரை

நியாய தரிசனத்தைப் போலவே வைசேஷிக தரிசனமும் பன்மை வாதத்தையும் தெய்வீகத்தையும் இணைக்கும் ஒரு யதார்த்த தத்துவம் ஆகும். சிருஷ்டி என்பது தற்செயலாக நிகழ்வதல்ல. மாறாக சிருஷ்டி என்பது ஒவ்வொரு ஆத்மாவின் கர்மங்களுக்கு ஏற்ப அவர்களுக்கேற்ற நீதியை அடைவதற்காக கடவுளால் திட்டமிட்டு செயல்படுவது ஆகும்.

நீதி மற்றும் வாழ்வின் அறிவியலுடன் அந்த கொள்கைகளை இணைத்து, உலகை சிருஷ்டி செய்பவர், நியமத்தைக் காப்பவர் என்று

கடவுளை ஏற்றுக் கொள்வதன் மூலம் வைசேஷிக தரிசனம் வேதாந்தத் துக்கு மிக அருகில் செல்கிறது. இது இந்திய தத்துவத்தின் சிகரமாகக் கருதப்படுகிறது.

# 4. ஸாங்கிய தரிசனம்

## முகவுரை

உபநிடதங்களிலிருந்து தகுந்த மேற்கோள்களைக் காட்டிய படி பாதராயணர் தமது பிரம்மசூத்திரத்தில் தம் கருத்தையும் விவாதத்தையும் குறிப்பிட்டு விட்டு, பிற தத்துவங்களின் மேல் தமக்குள்ள மறுப்புகளை ஸாங்கிய தத்துவத்தில் (2.2.1) இருந்து தொடங்குகிறார்.

சங்கரர் 1.4.28 சூத்திரத்தை எடுத்துக் காட்டி ஸாங்கிய தரிசனம் ஏன் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்டது என்பதற்கு அவர் குறிக்கும் சொல் 'ப்ரதான மல்ல நிவாரண ந்யாயேன' (முதன்மை மல்யுத்த வீரனை வெற்றி கொள்ளும் முறை போல) என்பதாகும். இது மிக முக்கியமானது. எதிர் தரப்பிலுள்ள மிகப் பலசாலியான ஒரு மல்யுத்த வீரனை முதலிலேயே தோற்கடித்துவிட்டால் போரிடாமலே மற்றவர்களையும் தோற்கடித்துவிட்டது போல் தான். ஸாங்க்ய தரிசனம் எவ்வளவு முக்கியமானது என்பதை இது குறிக்கிறது.

கபில முனிவரே ஸாங்கிய தரிசனத்தின் ஆதிகுரு என்று பழைய கதைகள் கூறுகின்றன (பாகவதம் 3.25.33). அவருடைய நூல் என்று நமக்குக் கிடைக்கப் பெறுவது 'ஸாங்க்ய சூத்திரங்கள்' என்ற நூல் ஆகும். இது பிற்காலத்தில் எழுதப்பட்டது என்பது தெளிவு. மொத்தம் ஆறு அத்தியாயங்கள், 526 சூத்திரங்களை இந்த நூல் கொண்டிருக்கிறது. இதற்கு விஞ்ஞான பிக்ஷு என்பவர் 'ஸாங்க்ய ப்ரவசன பாஷ்யம்' என்ற உரை எழுதியிருக்கிறார்.

ஸாங்க்ய தத்துவம் கபிலரின் சிஷ்யரான ஆஸுரி மற்றும் அவரது சிஷ்யர் பஞ்சசிகர் என்பவர்களால் பரப்பப்பட்டது. பதஞ்சலியின் யோக சூத்திரத்தின் உரையான 'வியாஸ பாஷ்ய'த்தில் பஞ்சசிகரின் சூத்திரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. நூலின் முழு வடிவம் இதுவரை கிடைக்கவில்லை.

இதுவரை கிடைத்தவற்றில் மிகப் பழைய (நம்பத் தகுந்த) ஸாங்கிய நூல் ஈச்வரகிருஷ்ணர் எழுதிய 'ஸாங்கிய காரிகை' ஆகும். ஆர்ய செய்யுள் நடையில் 70 சூத்திரங்கள் கொண்ட இது 'ஸாங்க்ய சப்ததி' என்றும் அழைக்கப்படுகிறது. சுருக்கமான, ஆனால் மிகச் சிறப்பான, விளக்கங்கள் இதில் இடம்பெற்றுள்ளன. இதற்கு இரண்டு சிறந்த உரைகள் உள்ளன. அவை கௌடபாதர் எழுதிய 'ஸாங்கிய காரிக பாஷ்யம்' மற்றும் வாசஸ்பதி எழுதிய 'ஸாங்கியதத்வ கௌமுதி' போன்றவை.

வேறு இரண்டு குறிப்பிடத்தக்க நூல்கள் விஞ்ஞான பிக்ஷுவின் 'ஸாங்கியஸாரம்' மற்றும் அனிருத்தரின் 'ஸாங்கிய ப்ரவசன ஸூத்ர விருத்தி' என்பனவாகும்.

## பெயர் சிறப்பு.

'ஸாங்க்ய' என்ற பெயரின் மூலம் எதுவெனத் தெரியவில்லை. சிலர் ஸங்க்ய (எண்ணிக்கை) என்பதிலிருந்து வந்திருக்கலாம் என்கின்றனர். சிருஷ்டியின் இறுதி கொள்கைகள் 25 என்பது அவர்கள் கூறும் காரணம் ஆகும். விடுதலைக்கான ஒரு வழி ஞானம். ஸாங்க்ய என்றால் ஞானம் (ஸம்யக் க்யாயதே – நன்றாக அறிந்து கொள்ளுதல்) என்று பொருள்படுவதால் அது இந்தத் தத்துவத்துக்குப் பொருத்தமானது என்கின்றார் வேறு சிலர்.

## பிரமாணங்கள் (அறிவின் வழிகள்)

மற்ற சில அமைப்புகள் போல் அல்லாமல் ஸாங்க்யம் மூன்று பிரமாணங்களை ஏற்றுக் கொள்கிறது. அவை பிரத்யட்சம் (நேரடி பார்வை), அனுமானம் (**தீர்மானித்**தல்), சப்தம் (சாட்சி) என்பனவாகும்.

- பிரத்யட்சம் என்பது ஐம்பொறிகளில் ஒன்றின் மூலமாக ஒரு பொருளை நேரடியாக அறிந்து கொள்வதாகும். ஒரு மேஜையைக்

கண்ணால் பார்ப்பது, அல்லது ஒரு பறவை கீச்சிடுவதை காதால் கேட்பது முதலியவற்றை இதற்கு உதாரணங்களாகக் கூறலாம். முதல் தொடர்பு ஒரு பொதுவான அறிவைத் தருகிறது. இது 'நிர்விகல்பம்' (நிச்சயமற்ற தன்மை) எனப்படும். மேலும் நெருங்கிப் பார்த்து யோசிக்கும் போது தெளிவான அறிவை இது தரும். இது 'ஸவிகல்பம்' (நிச்சயமான தன்மை) எனப்படும். ஒரு மேஜையை முதலில் பார்க்கும்போது 'நான் ஒரு பொருளைப் பார்க்கிறேன்' என்ற நிலை. பின்னர் ஏற்படுவது ஒரு தெளிவான கருத்து. இது மரத்தால் செய்யப்பட்ட ஒரு மேஜை. அதன்மேல் ஒரு சிவப்பு துணி விரிக்கப்பட்டிருக்கிறது போன்ற துல்லிய அறிவு பின்பு கிடைக்கிறது. முதலில் தோன்றியது 'நிர்விகல்ப பிரத்யட்சம்' இரண்டாவது கிடைக்கப்பெறுவது 'ஸவிகல்ப பிரத்யட்சம்'.

- அனுமானித்தல் அறிவு தேடலின் இரண்டாவது வழி. இது முதலில் சில அடையாளங்களைக் கண்டுகொண்டு அதன் பின்னாலுள்ள உண்மையைத் தெரிந்து கொள்ளுதல் ஆகும். இதற்கு உதாரணமாக, பொதுவாக எல்லா தத்துவவாதிகளும் கூறும் உதாரணம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். தூரத்து மலையில் புகை எழுமானால் அங்கே நெருப்பும் இருக்கிறது என்று ஊகிப்பது. இதற்கு முன்னால் நாம் நேரடியாக பார்த்த முன் அனுபவம். அதைச் சார்ந்து எங்கெல்லாம் புகை இருக் கிறதோ அங்கே நெருப்பும் இருக்கும் என்பது அறிவு. அது போல் இங்கேயும் நாம் நேரடியாகப் பார்க்காவிட்டாலும் புகை இருப்பதால் நெருப்பும் இருக்கிறது என்று முடிவு செய்கிறோம். ஒரே சமயத்தில் நடைபெறும் நிகழ்ச்சியிலிருந்து கண்ணால் பார்க்கும் பொருட்களை வைத்துக் காணமுடியாத பொருளை அனுமானித்துக் கொள்வது அனுமானம்.

- சப்தம் பிரமாணங்களில் மூன்றாவதும் கடைசியுமாகும். நம்பத் தக்க ஒருவரின் சாட்சியம் இது. இதை லௌகிக சப்தம் அல்லது ஆப்த வாக்யம் என்றும் கூறுவர். இது நம்பத்தக்க மனிதரின்

நேரடிப் பார்வையையும் அனுமானத்தையையும் சார்ந்திருப்ப தால் ஸாங்கியம் இதை ஒரு தனி பிரமாணம் என்று ஏற்றுக் கொள்ளவில்லை. வேதங்களின் சாட்சியத்தையே ஸாங்கிய தத்துவம் சுதந்திரமான கடைசி பிரமாணமாகக் கருதுகிறது. பிரத்யட்சம் மற்றும் அனுமானத்தால் அறிய முடியாத அதீத புலன்கள் சம்பந்தப்பட்ட உண்மைகளை வேதங்கள் நமக்குத் தருகின்றன. மெய்யறிவு பெற்ற முனிவர்களின் உள்ளுணர்வு களை அவை தம்முள் கொண்டிருக்கின்றன.

**பிரமேயங்கள்** (அறியவேண்டிய பொருட்கள்)

'தெரிந்ததிலிருந்து தெரியாதவை பற்றி' அல்லது 'பார்த்ததிலிருந்து பார்க்காதது பற்றி' என்ற கோட்பாட்டைக் கடைபிடித்து மெய்விளக்க நூலான ஸாங்கியம் நமது அனுபவத்திலிருக்கும் உண்மைகளை இரு அடிப்படை வஸ்துக்களாகப் பிரிக்கிறது. அவை பிரக்ருதி (பிரதானம், அவ்யக்தம், உயிரற்ற உணர்வற்ற பொருட்களின் கோசம்), புருஷன் (உணர்வு பூர்வ ஆத்மா).

இந்த முடிவின் பின்னாலிருக்கும் அடிப்படை விவாதம் 'ஸத்கார்ய வாதம்' என்று அழைக்கப்படுகிறது. உருவாவதற்கு முன்பே முடிவு இருந்துகொண்டிருக்கிறது. உதாரணமாக, களிமண்ணிலிருந்து ஒரு பானை செய்யப்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்போது பானை அந்தக் களிமண்ணில் கண்ணுக்குப் புலப்படாத வகையில் மறைந்திருக்கிறது. இதன் பின்னாலுள்ள தர்க்கம், இல்லாத ஒன்றிலிருந்து எதையும் சிருஷ்டித்துவிட முடியாது என்பதாகும். இதற்கு ஸத்கார்ய வாதம் என்று பெயர்.

ஒவ்வொரு பொருளுக்கும் மூன்று குணங்கள் உண்டு. ஸாங்கிய தர்க்கத்தோடு இணைத்துப் பார்க்கும்போது இந்த மூன்று குணங்களும் மூன்று அடிப்படை விஷயங்களிலிருந்து பிறந்திருக்கும் என்று உணரலாம். அவை ஸத்வ குணம் ஸத்யபாவமானது (மகிழ்ச்சி அளிப்பது), ரஜோ குணம் செயல்பட வைப்பது (வலியைத் தருவது), தமோ குணம் அறியாமை வடிவமானது (எதையும் தராதது) எனப்படும்

இந்த மூன்று குணங்களும் உடம்போடு சம்பந்தப்பட்ட நிலையை உணர்த்துகின்றன. ஸத்வம் தூய்மையையும் ஞானத்தையும் குறிக்கிறது. ரஜோ குணம் எப்போதும் சுறுசுறுப்பாக வைப்பது. ஆர்வத்துக்கும் ஆசைக்கும் காரணமானது. ஒருவன் உழைக்க வேண்டும் என்ற உணர்வை தூண்டுகிறது. தமஸ் மந்தமான தன்மை கொண்டது. தூக்கமும் சோம்பலுமே அதன் இயல்புகள்.

இந்த மூன்று குணங்களும் ஒன்றாகவே இணைந்திருக்கும். இவை பிரிவதில்லை. எப்போதும் இயக்கத்திலிருக்கும் இவை மூன்றும் ஒன்றோடொன்று குறுக்கிடாமல் (சம நிலையில் அமைந்து) தங்களுக்குள் இயங்கிக் கொண்டிருக்கும் போது பிரக்ருதியாக (பிரதானமாக) மாறுகிறது. அதாவது இம் மூன்றும் சமநிலையில் அமைந்த ஒழுங்கான நிலையே பிரக்ருதியாகும்.

இந்த அடிப்படைப் பொருளான பிரக்ருதியிலிருந்தே பிரபஞ்சம் வெளிப்பட்டது. இது ஜடம். உணர்வற்றது

ஆனால் ஆத்மா (புருஷன்) முற்றிலும் உணர்வு கொண்டது. உணர்வின் வடிவமே அது. நிரந்தரமானது, என்றும் புனிதமானது. தனித்திருப்பது, எங்கும் நிறைந்தது. வாழும் உயிரினங்கள் எத்தனையோ அத்தனை ஆத்மாக்கள் இருக்கின்றன என்கிறது.

## பேரண்டத்தின் தோற்றம்

புருஷன், பிரக்ருதி இவ்விரண்டின் இணைப்பிலிருந்தே உலகம் தோன்றியது. புருஷனின் மொத்த கர்மாக்களும் பிரக்ருதியின் குணங்களின் அமைப்பைக் கலைத்து விடுகின்றன. அப்போது படைப்பு உண்டாகிறது.

பிரக்ருதி உயிரற்ற ஜடம். உணர்ச்சியற்றது. புருஷன் பற்றற்றது. பின் எப்படி அவை இரண்டும் படைப்புத் தொழிலுக்காக இணைந்து செயல்பட முடியும்? ஒரு குருடனும் ஒரு நொண்டியும் காட்டில் வழி தவறாமல் நடந்து சென்ற கதை உங்களுக்குத் தெரியுமா? குருடன் நொண்டியை தன் தோள்மேல் ஏற்றிக் கொண்டான். நொண்டி போகும் வழியை சரியாகச் சொல்லிக் கொண்டே வந்தான். அவர்கள் இருவரும் சேர்ந்து ஊர் போய்ச் சேர்ந்தார்கள்.

ஸாங்கியம் வேறொரு உதாரணம் சொல்கிறது. கன்று அருகில் இருக்கும்போது பசுவின் மடியிலிருந்து பால் தானாகவே சுரக்கிறது அல்லவா? அதுபோல பிரக்ருதியும் புருஷனும் என்கிறது.

குணங்கள் ஒன்றோடொன்று இணைந்ததும் பிரக்ருதியிலிருந்து முதலில் தோன்றியது மஹத் (பிரபஞ்ச புத்தி). அதிலிருந்து அஹங்காரம் (கர்வம், தனித்தன்மை) தோன்றியது. அஹங்காரத்தின் ஸாத்விக ரஜோ குணத்திலிருந்து பிறந்தவை மனம், ஐந்து ஞானேந்திரியங்கள் (கண், காது, போன்ற அறிவு சார்ந்த உறுப்புகள்) மற்றும் ஐந்து கர்மேந்திரியங்கள் (கால், கை போன்ற செயல் உறுப்புகள்) ஆகும்.

அஹங்காரத்தின் தாமஸ ரஜோ பகுதியிலிருந்து தோன்றியவை ஐந்து தன்மாத்திரைகள் (பூமி, நீர் போன்றவற்றின் நுண் அம்சங்கள்). அவற்றிலிருந்து பிறந்தவை ஐந்து மஹா பூதங்கள் (நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம்). பிரக்ருதியிலிருந்து படைப்பு இவ்வாறே நடை பெற்றது.

பிரக்ருதியையும் சேர்த்து மொத்தம் 24 பிரபஞ்ச மூலங்கள். இவற்றின் இணைப்பில் மீதமுள்ளவை பிறந்தன. ஒவ்வொரு 'புருஷ'னுக் கும் தன் கர்ம வினைப்படியான மனமும் சரீரமும் கொண்ட உடம்பு கிடைத்தது. புருஷன் 25 வது தத்துவமாக கருதப்படுகிறது.

### பந்தமும் விடுதலையும்

ஸாங்கிய மரபுப்படி உலகின் பிரக்ருதியில் பரிணாமம் (மாற்றம்) ஏற்படுவது புருஷனுக்கு விடுதலைக்கான ஒரு சந்தர்ப்பம் அளிப்பதற் காகவே. ஆனால் அதே பிரக்ருதியும் அதன் பிரணாமமும் அவனை இந்த உலகோடு பந்தப்படுத்தியபடியே வைத்திருக்கின்றன.

புருஷன் பந்தப்படுவதற்கும் உலகில் கஷ்டங்களை அனுபவிப் பதற்கும் முக்கிய காரணம், உணர்வுள்ள புருஷனுக்கும், ஜடமான உணர்வற்ற பிரக்ருதிக்கும் இடையே காணப்படும் அவிவேகம்தான். இந்த அறிவின்மையே அதை பிறப்பிலிருந்து இறப்பு வரைக்கும் ஒரு பிறவியிலிருந்து எண்ணிலடங்கா பிறவிகளுக்கும் இட்டுச் செல்கிறது.

புருஷன் எப்படி எப்போது இந்தச் சிக்கலில் மாட்டிக் கொண்டது என்பது விடை அளிக்கமுடியாத ஒரு கேள்வி. ஆனால் அது அனாதி (தொடக்கமற்றது) என்றும் ஆனால் ஏதோ ஒரு முடிவு உண்டு என்றும் கூறலாம்.

இந்த பந்தத்திற்கு காரணம் அவிவேகம் அல்லது அறியாமை என்பதால், கைவல்யம் (விடுதலை), விவேகக்யாதி (சரியான அறிவு) மூலமே வர முடியும். கியாதி என்றால் அறிவு (நேரடி அனுபவம்). விவேகம் (புரிதல்) என்றால் உணர்வற்ற பிரக்ருதியிலிருந்து உணர்வுள்ள புருஷனாகத் தன்னை விடுவித்துக் கொள்ளுதல். யோகத்தின் எட்டு வழிகளையும் பின் பற்றி இதை அடையலாம். இங்கே புருஷன் அல்லது ஆத்மா தியானத்தின் குறிக்கோளாகிறது.

ஸாங்கிய தரிசனம் இரண்டுவித விடுதலையைக் குறிப்பிடுகிறது – ஜீவன் முக்தி, விதேஹ முக்தி. உயிரோடு இருக்கும்போதே விடுதலை அடைவது ஜீவன் முக்தியாகும். வாழ்வு தொடங்குவதற்குக் காரணமான பிராரப்த கர்மம் முடிவது வரை உடல் மேலும் சில காலம் தொடர்ந்து வாழ்கிறது. இந்நிலையில் அவன் முழு மனிதனாக உலகோடு ஒட்டி வாழாவிட்டாலும் உலகத்தில் வாழ்கிறான்.

இறுதி விடுதலை உடலைவிட்டு உயிர் பிரிந்தபின் நிகழ்கிறது. இது வீடுபேறு எனும் விதேஹ முக்தி. அதன் பிறகு அவன் மீண்டும் இந்த உலகில் பிறக்க மாட்டான். துயரமோ வலியோ இல்லாத நிலைக்கு சென்றுவிடுவான். ஆனால் அங்கே அவன் பேரானந்தம் அனுபவிப்பான். அவனிடம் சைதன்யம் இருப்பதால் அவன் அந்த நிலையிலேயே தொடர்ந்து இருப்பான் என்று ஸாங்கியம் விடுதலைப் பற்றி தன் கருத்தைக் கூறுகின்றது.

**ஸாங்கியம் கூறும் 25 தத்துவங்கள்[6]**

- மூலப்பிரக்ருதி (1)
- மஹத் எனும் புத்தி தத்துவம் (1)
- அஹங்காரம் (தான் எனும் உணர்வு) (1)

- ஸத்வம், ரஜஸ் ஆகிய குணச் சேர்க்கையால் உண்டாகும்
- பஞ்ச ஞானேந்திரியம் (5)
- பஞ்ச கர்மேந்திரியம் (5)
- மனது (1)
- ரஜஸ், தமஸ் ஆகிய குணச் சேர்க்கையால் உண்டாகும்
- பஞ்ச தன்மாத்திரைகள் (5)
- பஞ்சமஹா பூதங்கள்(5)
- புருஷன் (1)

24 தத்துவங்களும் அசேதனம் அல்லது செயற்கையற்ற தன்மை யுடையதாகும். புருஷனின் சேர்க்கையால் செயலற்ற 24 தத்துவங்களும் செயலுடையதாகின்றன.

# 5. யோக தரிசனம்

நியாயம், வைசேஷிகம், ஸாங்கியம், யோகம், மீமாம்சம், வேதாந்தம் – இவை பொதுவாக நான்கு விஷயங்களைப் பற்றிக் கூறுகின்றன.

பிரம்மம் (கடவுள்), ஜீவன் (ஆத்மா), உலகின் சிருஷ்டி (படைப்பு), மோட்சம் (விடுதலை) என்பன அவை.

## ஸாங்கிய யோக தரிசனங்கள்

'ஸாங்கிய' என்ற சொல்லிலிருந்து வந்தது 'ஸாங்க்யம்.' இதன் பொருள் ஞானம் அல்லது அறிவு என்பதாகும். மோட்சத்தை (கைவல்யம்) அடைவதற்குள்ள வழி ஞானம் என்கிறார் கபிலர். எனவே இது 'ஸாங்கிய தரிசனம்' எனும் பெயர் பெற்றது. ஸாங்கியம் என்றால் எண்ணிக்கை என்ற பொருளும் உண்டு. 25 (24+1) என்ற எண்ணை பிரபஞ்சத்தின் அடிப்படை எண்ணாகக் கொண்டிருப்பதால் இந்த பெயரும் பொருத்தமாகவே உள்ளது.

ஸாங்கிய மரபு தனி ஆத்மாவையும் (புருஷனை) பிரக்ருதி (பிரதான) என்ற இயற்கையையும் அடிப்படை உண்மையாகக் கருதுகிறது. ஈஸ்வரன் என்ற கடவுளை ஏற்றுக் கொள்வதில்லை. எனவே இது 'நிரீஸ்வர ஸாங்கியம்' (கடவுள் இல்லாத ஸாங்கியம்) என்றும் அழைக்கப்படுகிறது. ஸாங்கிய மரபின் கொள்கைகள் அனைத்தையும் ஏற்றுக் கொள்வதுடன் கடவுளையும் ஏற்றுக் கொள்ளும் யோக தரிசனத்துக்கு 'ஸாஈஸ்வர ஸாங்கியம்' (கடவுளை ஏற்றுக் கொள்ளும் ஸாங்கியம்) என்று பெயர்.

ஸாங்கிய தரிசனத்தில் தத்துவ ஞானம் (உண்மையைத் தேடுதல்) மிக முக்கியமானது. ஆனால் யோக தரிசனம் சாதனைகளையும் ஞான முறைகளையும் கடைப்பிடிக்கிறது. எனவே யோக தரிசனத்தின் அடிப் படை நூலான பதஞ்சலியின் யோக சூத்திரம், 'அதாயோகானுசாசனம்' (இதோ யோகத்தின் கல்வி தொடங்குகிறது) என்று சொல்லியே ஆரம் பிக்கிறது.

## யோகம்

யோகம் 'யுஜ்' என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டது. யுஜ் என்றால் நுகத்தடி என்றும், ஆழ்ந்து ஈடுபடுதல் என்றும் பொருள்படும். எனவே யோகம் என்றால் ஆத்மா அல்லது ஜீவனை ஈஸ்வரனுடன் ஈடுபடுத்தி இறுதியில் அதனுடன் இணையச் செய்வது ஆகும்.

'யோகம்' என்ற சொல் ரிக் வேதத்திலும் கடோபநிடதம் போன்ற வற்றிலும் ஸ்வேதாஸ்வரத்திலும் பல்வேறு பொருட்களில் இடம் பெற்றி ருக்கிறது. யோக சூத்திரம் கூறும் பல கருத்துக்களை பகவத் கீதையில் காணலாம். யோகத்தைப் பற்றி ஹிரண்யகர்பர் இயற்றிய மிகப் பழைய நூல் ஒன்று இருந்ததாகவும் பின்னர் வந்தவை அதிலிருந்து நிறைய விஷயங்களை எடுத்துக் கொண்டதாகவும் நம்பப்படுகிறது.

## ஆசிரியரும் காலமும்

யோக சாஸ்திரத்தின் முதல் ஆசிரியராக ஹிரண்யகர்பரைக் கூறலாம். இவர் ஈஸ்வரனின் அவதாரம் என்பர். ஸனத்குமாரர், ஜெய்கிஷவ்யர் இருவரும் யோகம் பற்றி எழுதியிருப்பதாக ஒரு கருத்து உண்டு. ஆனால் அந்த நூல்கள் கிடைக்கவில்லை.

யோகம் குறித்து தற்போது கிடைக்கும் நூல்களில் மிகப் பழையது பதஞ்சலியின் 'யோக சூத்திரங்கள்' ஆகும். பாணினியின் சூத்திரங்களுக்கு உரை எழுதியவரும் இவரும் ஒருவரா என்று தெரியவில்லை. இவர் எழுதியதாகக் கூறப்படும் ஆயுர்வேதம் பற்றிய நூலும் கிடைக்கவில்லை.

பதஞ்சலி கிமு 200ல் வாழ்ந்திருக்கலாம் என்கின்றனர் ஆராய்ச்சி யாளர்கள்.

## யோக சாஸ்திரம்

ஆறு தரிசனங்களைப் பற்றிய நூல்களைப் போலவே பதஞ்சலியின் உரையும் சூத்திரங்கள் வடிவிலேயே உள்ளது. சூத்திரம் என்பது மிகக் குறைவான சொற்களில் விரிவான பொருளைத் தருவது என்பதாகும்.

யோக ஸூத்திரங்கள், 195 சூத்திரங்களும், 4 பாதங்களும் (அத்தியாயங்கள்) கொண்டது. அவை: ஸமாதிபாதம் (51 சூத்திரங்கள்), சாதனாபாதம் (55), விபூதிபாதம் (55), கைவல்யபாதம் (34) என்று பிரிக்கப் பட்டுள்ளன.

சூத்திரங்கள் பொதுவாக மறைபொருட்களைக் கொண்டிருக்கும். எளிதில் விளக்கிக்கொள்ள இயலாது. எனவே அவற்றைத் தெளிவு படுத்த உரைகள் எழுதப்பட்டன. நல்லவேளையாக, யோகசூத்திரத்துக்கு பல அறிஞர்கள் சிறந்த உரைகள் எழுதியிருக்கின்றனர். அந்த உரை களுக்கு தெளிவான விளக்கங்களும் எழுதப்பட்டிருக்கின்றன.

வியாஸர் எழுதிய பாஷ்யம் பல அறிஞர்களாலும் பாராட்டப் படுகின்றது. இவர் பாரதம் எழுதிய வேத வியாஸர் அல்ல. இவரது காலம் கிபி 400.

வியாஸ பாஷ்யத்துக்கு கீழ்கண்ட விளக்க உரைகள் உள்ளன:

- தத்வ வைசாரதி (வாசஸ்பதி மிஸ்ரா – கிபி 850)
- யோகவார்த்திகம் (விஞ்ஞான பிக்ஷு – 16 ம் நூ.)
- பாஸ்வதீ (ஹரிஹரானந்த ஆரண்யர் – 19 ம் நூ.)

சங்கரர் எழுதியதாக 'யோக பாஷ்ய பிவர்த்தனம்' என்ற ஒரு நூலும் இருக்கிறது. இவரது காலம் கிபி 788–820 ஆகும். அத்வைத வேதாந் தத்தின் ஆதிசங்கரரும் இவரும் ஒருவரா என்பது பற்றி அறிஞர்கள் இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை. ஆதிசங்கரர் ஒரு யோகியும் கூட என்பதாலும் இதன் நடையும் எழுத்தும் அவருடையது போல இருப் பதாலும் அவர்தான் இந்த நூலை இயற்றியிருப்பார் என்று நம்ப இடமிருக் கிறது.

யோக சூத்திரத்துக்கு நேரடி உரைகளாக ஆறு நூல்கள் உள்ளன அவை:

- ராஜமார்த்தாண்டவிருத்தி (போஜதேவர் – 11 ம் நூ.)
- யோகஸூத்ர பிரதீபிகை (பாவாகனேசர்)
- யோகஸூத்ர விருத்தி (நாகோஜிபட்டர்)
- யோகமணிப்ரபா (ராமானந்த யதி)
- யோகஸித்தாந்த சந்திரிகை(நாராயண தீர்த்தர்)
- யோகஸுதாகரம் (சதாசிவ பிரம்மேந்திரர் – 18 ம் நூ.)

## யோகசூத்திரத்தின் தத்துவம்

பதஞ்சலியின் யோகசூத்திரம், ஸாதனை (ஆத்மீக செயல்பாடு) பற்றியதாயினும் அதன் ஸாங்கிய பின்னணி பற்றிய அறிவு இந்த நூலை புரிந்து கொள்ளத் தேவைப்படுகிறது.

யோகசாதனை மூன்று அடிட்படை விஷயங்களை ஒப்புக் கொள்கிறது. அவை ஈஸ்வரன், புருஷன், பிரதான அல்லது பிரக்ருதி.

‘புருஷன்’ என்பது தனிப்பட்ட ஆத்மா. அது சித்ரூபம் (இயற்கை யான உணர்வு) உடையது. புருஷர்களின் எண்ணிக்கை அளப்பரியது.

‘புருஷ விசேஷம்’ என்ற ஈஸ்வரன் இருப்பதை வேதங்கள் மூலமாக அறிந்துகொள்ள முடியும். அவர் ஸர்வக்ஞர் (எல்லாம் வல்லவர்). பிரக்ருதியின் தளையில் சிக்காததால் அவர் எப்போதும் சுதந்திரமானவர் ஆவார். ஆதிகுரு ஆவார். ஓம் என்ற பிரணவத்தால் குறிப்பிடப்படுபவர். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுடன் புருஷன் (ஆத்மா) தனது கர்மாக்களுக்காக பிரபஞ்சத்தில் நிலைப்பது அவருடைய கட்டளைப்படியே. பிரக்ருதியின் பிரபஞ்சத்தை இயங்கச் செய்வது ஸாங்கிய முறையைப் போலவே மஹத் (பிரபஞ்ச அறிவு), அஹங்காரம் (அகந்தை), மனஸ் (பிரபஞ்ச மனம்), தன் மாத்திரை (நுண் மூலங்கள்) முதலியனவாகும்.

புருஷன் (ஆத்மா) தன் அறியாமையால் தனது உண்மை நிலையையும் சுத்தமான அறிவையும் மறந்து பிரக்ருதியின் சுழற்சியில் சிக்கி, பிறப்பு,

மரணம், மறுபிறப்பு போன்ற துயரங்களில் மாட்டிக் கொள்கிறது. ஆனால் அது யோகத்தின் எட்டுப் படிகளை அஷ்டாங்க சாதனை புரியும்போது தனது இயல்பை உணர்ந்து ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிக்கப்படுகிறது. இந்த நிலையே கைவல்யம் (விடுதலை) எனப்படுகிறது.

## சித்தவிருத்திநிரோதம்

யோகத்தை 'சித்தவிருத்திநிரோதம்'[7] என்கிறார் பதஞ்சலி. மனதின் அனைத்து விருத்திகளும் (எண்ண அலைகளின் தொகுப்பு அல்லது மாற்றம்) கட்டுப்படுத்தப்பட்டு அடக்கப்படும்போது ஆத்மாவின் உண்மை நிலை வெளிப்படுகிறது. சித்தம் என்பது எண்ண அலைகள், அந்தகரணம் என்ற பெயர்களால் அழைக்கப்படுகிறது. கண், காது போன்ற பொறிகள் மூலமாக பொருட்கள் மனதில் ஏற்படுத்தும் நினைவு, உணர்ச்சி முதலிய வற்றை சித்தவிருத்தி என்கிறோம். இந்த சித்த விருத்திகள் எண்ணிக்கை யில் அதிகமாகத் தோன்றினாலும் அவற்றை ஐந்து வகையாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை

- பிரமாணம் (சரியான அறிவு)
- விபர்யயம் (தவறான அறிவு)
- விகல்பம் (காதால் ஒன்றைக் கேட்கும்போது மனதில் தோன்றும் உருவம்)
- நித்திரை (தூக்கம்)
- ஸ்ம்ருதி (நினைவு)

என்பனவாகும்.

- நல்ல அறிவை அளிப்பதே பிரமாணம். பிரமாணங்கள் மூன்று வகைப்படும். அவை பிரத்யக்ஷம் (நேரடி காட்சி), அனுமானம் (ஊகித்தல்), ஆகமம் (வேதநூல்கள் அல்லது சான்றோர் மொழிகள்) என்பனவாகும்.
- இருட்டில் கயிற்றைப் பார்த்து பாம்பு என நினைக்கும் தவறான புரிதலை விபர்யயம் என்கிறோம்.

- 'ராகு' என்று கேட்டவுடன் மனதில் உடலற்ற ஒரு பாம்பின் தலை மட்டும் தோன்றுகிறதல்லவா? இதை 'விகல்பம்' என்று சொல்கிறோம்.
- நித்திரை என்பது தமஸினால் மனம் குழப்பப்படும் நிலை.
- ஸ்ம்ருதி என்பது பழைய அனுபவங்களின் நினைவு.

அவித்யா (அறியாமை), அஸ்மிதா (அகந்தை) காரணமாக இந்த சித்த விருத்திகள் மனதில் கிலேசத்தை ஏற்படுத்தும்போது அதை க்லிஷ்டம் என்கிறோம். அவற்றிலிருந்து புருஷன் விடுபடும்போது அந்த நிலை அக்லிஷ்டம் எனப்படுகிறது.

சித்தம் ஐந்து தன்மைகள் கொண்டது. அவை 'சித்த பூமிகா' என்றும் அழைக்கப்படுகிறது அவையாவன.

- க்ஷிப்தம் (முன்யோசனையற்ற, அவசரம்)
- மூடம் (மழுங்கல்)
- விக்ஷிப்தம் (சிதறும் எண்ணங்கள்)
- ஏகாக்ரம் (ஒரே முனைப்பு)
- நிருத்தம் (தடுத்தல்) என்பனவாகும்.

முதல் மூன்று நிலைகளில் யோகம் சாத்தியமில்லை. ஏனெனில் மனம் அப்போது ரஜஸ் மற்றும் தமோ குணங்களில் சூழப்பட்டு இருக்கும். ஸத்வ குணம் மேலோங்கும்போது மனம் ஒரு நிலைப்பட்டு ஸம்பிரக்ஞாத ஸமாதி நிலையை அடையும். அந்நிலையில் மனம் ஒன்றையே நோக்கியிருக்கும். பொருளைப் பற்றி நல்ல புரிதல் இருக்கும். கடைசியான நிருத்த நிலையில் எல்லாம் அடக்கப்பட்டு 'அஸம்ப்ரக்ஞாத ஸமாதி' என்ற எச்சூழலிலும் மாறுபடாத தூய உணர்வினால் ஸயித்த தன்னை உணரும் நிலையை அடையும். அப்போது சாதகன் பிரக்ருதியின் அனைத்து பிடியிலிருந்தும் விடுதலை பெற்று முக்தன் (விடுதலை பெற்றவன்) ஆகிறான்.

## யோகத்துக்கு ஏற்படும் தடைகள்

யோகத்தின் போது ஏற்படும் தடைகளை அந்தராயங்கள் (குறுக் கீடுகள்) என்கிறார் பதஞ்சலி. அவை ஒன்பது வகைப்படும்.

- வியாதி (நோய்)
- ஸ்த்யானம் (அக்கறையின்மை)
- ஸம்சயம் (சந்தேகம்)
- பிரமாதம் (கவனமின்மை)
- ஆலஸ்யம் (சோம்பல்)
- அவிரதி (மறுப்பு)
- பிராந்திதரிசனம் (தவறான கருத்து)
- அலப்தபூமிகத்வம் (யோக நிலையை எய்த முடியாமை)
- அனவஏகத்வம் (ஒரே நிலையில் இருக்க இயலாமை)

என்பன அந்த ஒன்பது வகைகள் ஆகும்.

வியாதியை மருந்து மூலம் குணப்படுத்தலாம். அக்கறையின்மையை மன ஊக்கத்தால் மாற்றலாம். சந்தேக நிலையை குருவிடமும் வேதங் களிலும் நம்பிக்கை கொண்டு அகற்றலாம். முழு முயற்சியால் கவன மின்மையை நீக்கலாம். ஆரோக்கியமான உழைப்பின் மூலம் சோம்பலை அகற்றலாம். 'அவிரதி' என்ற மறுப்புக் கொள்கையை விவேகம், வைராக் கியம் மூலம் மாற்றலாம். இறுதி மூன்றையும் தக்க குருவை அணுகி அவரது உபதேசத்தைக் கேட்பதன் மூலம் தவிர்த்து விடலாம்.

மேலும் ஐந்து தடைகளை பதஞ்சலி குறிப்பிடுகிறார். அவை:

- யோகத்தின்போது மனதை அலைக்கழிக்கும் துக்கம் (வலி – மனம், உடல் – நோய்)
- தௌர்மனஸ்யம் (பலகீனமான மனம்)
- அங்கமேஜயத்வம் (கை கால் போன்றவற்றில் அமைதியின்மை)
- ச்வாஸம் (மூச்சை இழுப்பது)
- பிரச்வாஸம் (மூச்சை வெளிவிடுவது)

ஆகிய இவற்றில் ஒழுங்கின்மை போன்றவை முறைப்படி தவிர்க்க வேண்டிவை ஆகும்.

## உபயோகமான குறிப்புகள்

யோகத்தின் போது ஏற்படும் சில குறுக்கீடுகளை அகற்றி அதில் முழுதாக ஈடுபட்டு ஸமாதி எனும் அற்புத நிலையை அடைய விரும்பும் ஒருவனுக்கு பதஞ்சலி சில அறிவுரைகள் வழங்குகிறார். அதில் வைராக்கியம், அப்யாசம் ஆகிய இரண்டும் முதலாவது இடம் பெறுகின்றன. மனதை சிதறவைக்கும் விஷயங்களிலிருந்து தப்புவதற்கு வைராக்கியம் உதவு கிறது. அப்யாசம் எனும் இறைவனை நோக்கி இழுத்துச் செல்ல உதவு கிறது.

இவை தவிர, மகிழ்ச்சியாயிருப்பவர்களைப் பார்த்துப் பொறாமைப் படாமல் மகிழ்ச்சிக் கொள்ளுதல், கஷ்டப்படுபவர்களிடம் கருணை காட்டுதல், மூச்சுப் பயிற்சி (பிராணாயாமம்), உள்ளத்தில் ஓர் ஒளியை நிலைநிறுத்தி தியானம் செய்தல், ஆன்மீகப் பெரியோர் பற்றி சிந்தித்தல், உயர்வதற்கான கனவுகளை வளர்த்தல், கடவுள் உருவங்களை நினைத்துக் கொள்ளுதல் போன்றவற்றையும் பதஞ்சலி குறிப்பிடுகிறார்.

இவற்றைப் பயிற்சி செய்யும் ஒருவனுக்கு மன அமைதி கிடைக்கும். உள்ளமும் அவனுடைய கட்டுப்பாட்டில் இருக்கும்.

## அஷ்டாங்கம்

உடம்பு, மனம் இரண்டிலும் அதிகப் பற்றுதல் கொள்ளும் ஒருவன் எப்போதும் பந்தத்தில் கட்டுப்பட்டிருக்கிறான். பிரக்ருதியின் செயல் இது. யோகத்தின் நோக்கமே ஆத்மாவை பிரக்ருதியின் பிடியிலிருந்து விடு விப்பதுதான். ஆத்மாவும் பிரக்ருதியும் ஒன்றிலிருந்து ஒன்று மாறுபட்டது என்ற விவேகக்யாதி (பகுத்து அறியும் அறிவு) வரும்போது இது ஏற்படுகிறது. (க்யாதி – அறிவு, விவேகம் – பகுத்தறிதல்)

யோகத்தின் எட்டுப் படிகளான அஷ்டாங்கம் பற்றி யோக ஸூத்திரம் விளக்குகிறது.[8] அவை

1. யமம் (கட்டுப்பாடு)
2. நியமம் (அனுஷ்டானம்)
3. ஆஸனம் (உடம்பை நிலையாக வைத்திருத்தல்)
4 . பிராணாயாமம் (மூச்சுப் பயிற்சி)
5. பிரத்யாஹாரம் (பற்றிற்றிருத்தல்)
6. தாரணை (மனதை ஒருமுகப்படுத்தல்)
7. தியானம்
8. சமாதி (தன்னிலை உணர்ந்து அதில் நிலை பெறுதல்)

என்பனவாகும்.

இந்த எட்டுப் படிகளில் முதல் ஐந்தும் பஹிரங்கம் (வெளிப்படை) என்றும் மீதி உள்ளவை அந்தரங்கம் (உள்ளிருந்து உதவுபவை) என்றும் கூறப்படுகிறது.

யமம் என்பது அஹிம்சை (பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாமை), சத்தியம் (வாய்மை), அஸ்தேயம் (திருடாமை), பிரம்மச்சர்யம், அபரி கிரஹம் (லஞ்சம் வாங்காமை, பிறர் பொருட்களின் மீது பற்றின்மை) என்பனவாகும்.

நியமத்தில் அடங்கியவை சுத்தம், திருப்தி, தபஸ் (மனம் வாக்கு உடம்பில் சுத்தமாக இருத்தல்), ஸ்வாத்யாயம் (மந்திரங்கள் ஜெபித்தல், நல்ல நூல்களைக் கற்றல்), ஈஸ்வரப்ரணிதானம் (பக்தி) என்பனவாகும். முதலில் கூறியவை சமுதாயத்தில் ஓர் இணக்கத்தையும் பின்னர் உள்ளவை தன்னை சுத்திகரித்துக் கொள்ளவும் உதவும். தபஸ், ஸ்வாத்யாயம், ஈஸ்வரப்ரணிதானம் இம்மூன்றையும் இணைத்து 'கிரியாயோகம்' என்கிறார் பதஞ்சலி. பரமஹம்ஸ யோகாநந்தரை கிரியா யோகத்தின் தந்தை என்று குறிப்பிடலாம்.

ஆஸனம் என்பது ஒருவன் நேராக வசதியாக அமர்ந்து தியானிக்க உதவுகிறது. சீராக சுவாசிப்பதன் மூலம் உடம்பின் முக்கிய உறுப்புகளை கட்டுப்படுத்துகிறது. பிராணாயாமம். இதனால் உணர்ச்சி உறுப்புகள் தங்கள் செயல்பாட்டிலிருந்து விலகும்போது அவை மனதோடு ஒன்றிணை கின்றன. இது பிரத்யாஹாரம் எனப்படும்.

அடுத்து வரும் தாரணை, த்யானம், சமாதி மூன்றும் தொடர்ந்து செயல்படவேண்டியவை. தாரணையில் மனம் ஒரே விஷயத்தில் முனைப்பாகிவிடுகிறது. இந்த முனைப்பு சிதறாது. ஒரு பாத்திரத்திலுள்ள எண்ணெயை இன்னொரு பாத்திரத்தில் ஊற்றும்போது சிதறாமல் இருப்பது போல சிந்தனை சிதறாமல் நேர்முகப்படுத்தப்படும் போது அது தியானமாகிறது. தியானம் தீவிரவாகி ஒரு பொருளின்மீது முற்றாக ஆழ்ந்துவிடும்போது ஒருவன் தன்னையே முற்றிலும் மறந்துவிடுகிறான். அந்த நிலையை ஸமாதி என்கிறோம். கடவுள் பக்தி (ஈஸ்வரப்ரணிதானம்) மூலமும் சமாதி நிலையை அடைய முடியும்.

பதஞ்சலி இந்த மூன்று படிகளையும் இணைத்து ஸம்யமம் என்கிறார். எப்போதும் இந்த ஸம்யமம் ஒரே பொருளின்மீது தான் இருக்க வேண்டும் என்கிறார்.

## யோகத்தின் வகைகள்

மக்களின் தேவைக்கேற்ப யோகம் பல வழிகளில் கடைபிடிக்கப்படுகின்றது. அது நான்கு வகைப்படும். சுவாமி விவேகானந்தர் அவற்றை வேலை, துதி, தத்துவம், மனக்கட்டுப்பாடு என்கின்றார்.

- **கர்ம யோகம்** – தன் பணிகளைத் திறமையாகச் செய்து முடிப்பது. மகிழ்ச்சியோடு சிரமமின்றி செய்வது. அதன் வெற்றி தோல்வி மனதை சிறிதும் பாதிக்காமல் இருப்பது. மருத்துவ உதவி, கல்விக் கூடங்கள் அமைத்தல் போன்றவை இதில் அடங்கும். அன்னை தெரஸா போன்றவர்களை சிறந்த கர்ம யோகிகள் எனக் குறிப்பிடலாம்.

- **பக்தி யோகம்** – வழிபாடு. மனதை ஒருமுகப்படுத்தி இறைவனை வழிபடுதல். இது நமது உணர்ச்சிகளை சமப்படுத்தி அதைத் தெளிவாக்குகின்றது. ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்றோர் பக்தி யோகிகள் ஆவர்.

- **ஞான யோகம்** – தத்துவப் பயிற்சி. மனதை ஒருமுகப்படுத்துவதன் மூலம் வாழ்வின் உண்மைகளை உணர்ந்துகொள்வது.

நமது மனதிலிருந்து அறியாமை விலகுகின்றது. அதனால் மனம் அமைதி அடைகின்றது. ஸ்வாமி தயானந்தர் போன்றோரை சிறந்த ஞானயோகிகளாகக் குறிப்பிடலாம்.

- **ராஜ யோகம்** – மனதை அடக்கும் நிலை. பதஞ்சலியின் அஷ்டாங்க யோகத்தைப் பின்பற்றியது. பரமஹம்ஸ யோகானந்தர் போன்றோர் சிறந்த ராஜயோகி ஆவார்.

## யோகசித்திகள்

தவம் செய்வதாலும் கடவுள் அருளாலும் ஒருவன் அற்புத சக்திகளை பெற முடியும் என்ற நம்பிக்கை நீண்ட காலமாகவே இருந்து வருகிறது. இதைப்பற்றி பதஞ்சலி தமது நூலின் இரண்டாவது மற்றும் மூன்றாவது அத்தியாயங்களில் விவரிக்கிறார். மக்கள் மனதில் இதன் மூலம் நம்பிக்கை விதையை விதைக்கிறார். உதாரணமாக, அஹிம்சையை தீவிரமாகக் கடைபிடிக்கிற ஒருவனால் வளர்க்கப்படும் புலியும் பசுவும் அமைதியுடனும் நட்புடனும் வாழும் என்கிறார். சத்தியம் தவறாத மனிதன் தவறுகள் இழைக்க மாட்டான் என்கிறார். அபரிகிரஹம் அனுசரிக்கும் ஒருவனுக்கு முற்பிறவியை பற்றியும் அடுத்த மறுபிறப்பைப் பற்றியும் அறிந்து கொள்ளும் சக்தி கிடைக்கும் என்கிறார்.

ஸம்யமம் என்ற மூன்று நிலைகளையும், பல பொருட்களிலும் காட்டுபவருக்கு அஷ்டமா சித்திகளும் வேறு சில சக்திகளும் கிடைக்கும் என்று பதஞ்சலி கூறுகிறார். அவை, வேறொருவர் மனதில் நினைப்பதை அறிந்து கொள்ளுதல், பிறர் பார்வையிலிருந்து மறைந்து போதல், அளப்பரிய உடல் வலிமை பெறுதல், மிருகங்கள் மற்றும் பிராணிகள் பேசும் மொழியை அறிந்து கொள்ளுதல் போன்றவை ஆகும்.

மக்களின் உள்ளத்தை நன்கு புரிந்துகொண்ட பதஞ்சலி இந்த சக்திகளைப் பற்றி விவரித்தாலும், அதைப் பெற அதிக ஆவல் கொள்ள வேண்டாம் என்றும் எச்சரிக்கிறார். அவை கிடைக்கப் பெற்றால் ஒருவனுக்கு வாழ்க்கையின் குறிக்கோளான கைவல்யத்திலிருந்து விலகிச் செல்ல வேண்டிவரும். ஆனால் கைவல்யம் (மோட்சம் என்ற வீடுபேறு)

சித்திக்கப்பெற்ற பிறகு பிராரப்த கர்மத்தின் காரணமாக மேலும் சில ஆண்டுகள் வாழ நேரிடும்போது, அவன் இந்த சக்திகளை கைவசப்படுத்தி அதன் மூலம் மக்களுக்கு நன்மைகள் செய்யலாம் என்கிறார்.

## முடிவுரை

யோக தரிசனம் மிகப் பழமையானது மட்டுமல்ல, நடைமுறைக்கு பயன்படக்கூடியதுமாகும். வேதாந்தம் இதன் சாதனைகளை ஏற்றுக் கொள்கிறது. நவீன மனோதத்துவவாதிகளும் இதன் பயனை உணர்ந் திருக்கின்றனர். மனவலிமையை காப்பாற்றிக் கொள்ளவும், இழந்து போனதைத் திரும்பப் பெறவும் இதை பயன்படுத்துகின்றனர். உலகம் முழுதும் தற்போது யோக முறைகள் பரவிக்கொண்டு வருகின்றன. யமம், நியமம் என்ற இரு முறைகளும் தனி மனிதன் மற்றும் சமுதாயத்தின் நன்மைக்காக பயன்படும். யோகாசனங்கள் ஒருவனின் உடல் நலத்தை காக்கும். இவ்வாறு யோக முறை உலகம் முழுதும் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகிறது.

# 6. மீமாம்ஸ தரிசனம்

## முகவுரை

இந்து தத்துவத்தில், மீமாம்ஸம் என்ற கொள்கை அதை தொகுத்த ஆசிரியரைவிட அதிக புகழ்பெற்றுவிட்டது. பூர்வ மீமாம்சம் என்று அழைக்கப்படும் இந்த தத்துவம் வேத முறைப்படி நடத்தப்படும் சடங்குகளுக்கு சரியான விளக்கம் அளித்து அதைப் புரிந்துகொள்ளச் செய்கிறது.

வேத சடங்குகளின் அடிப்படைக் கொள்கைகள்:

1. உடம்பு அழிந்த பின்பும் ஆத்மா உயிரோடிருந்து மேலுலகில் அந்தச் சடங்குகளின் பலனை அனுபவித்துக் கொண் டிருக்கும்.
2. சடங்குகள் நடத்தப்படும்போது அதன் விளைவுகளை ஒரு சக்தி காத்து வருகிறது.
3. வேதங்கள் தவறுவதில்லை.
4. உலகம் உண்மையானது.
5. நமது வாழ்வும் நாம் ஆற்றும் செயல்களும் உண்மையே, கற்பனை அல்ல.

என்பனவாகும்.

## அடிப்படை நூல்கள்

ஜைமினியின் மீமாம்ஸ சூத்திரங்கள் இந்தத் தத்துவத்துக்கு அடிப்படை நூலாகும். மொத்தம் 2500 சூத்திரங்கள், 12 அத்தி யாயங்கள் மற்றும் 60 சிறு பிரிவுகள் கொண்ட பெரியநூல் ஆகும்.

இந்த சூத்திரங்களுக்கு சபர ஸ்வாமிகள் நல்லதொரு உரை எழுதியிருக்கிறார். சபரரின் பாஷ்யத்துக்கு இரண்டு விளக்க உரைகள் இருக்கின்றன. பிரபாகரன் எழுதிய 'பிரஹதி' கையெழுத்துப் பிரதியிலே இருக்கிறது. இன்னொன்று குமாரில பட்டர் எழுதியது.

பிரபாகரரின் சீடரான சாலிகணாதர் எழுதிய 'பிரகரணபஞ்சிகை', பார்த்தசாரதியின் 'சாஸ்திர தீபிகை', மாதவ வித்யாரண்யரின் 'நியாய மாலாவிஸ்தாரம்', லௌகாக்ஷி பாஸ்கரனின் 'அர்த்த ஸங்க்ரஹம்' போன்றவை மீமாம்சம் பற்றி எழுதப்பட்ட வேறு சில நூல்களாகும்.

## அறிவு விளக்கம்

வேதங்களின் ஆளுமை பற்றி விளக்குவதற்கா கமீமாம்ஸ தரிசனம் விரிவான அறிவின் தோற்றம், எல்லை பற்றிய ஆராய்ச்சி முறையை உருவாக்கியிருக்கிறது. இதை குறிப்பாக வேதாந்த தரிசனம் உட்பட மற்ற பிரிவுகளும் அங்கீகரித்திருக்கின்றன.

சரியான அறிவு எது என்பதை அறிய மூன்று வழிகள் உள்ளன.

1. இதற்குமுன் அறியாத புதிய செய்திகளை அது தர வேண்டும்.
2. பிற அறிவுகளுக்கும் இதற்கும் முரண்பாடு இருக்கக் கூடாது.
3. எது அந்த அறிவைத் தருகிறதோ அது குறைவற்றதாக இருக்க வேண்டும்.

என்பன அவை.

மீமாம்ஸம் இரண்டுவித அறிவுகளை ஏற்றுக் கொள்கிறது – பிரத்யட்சம் (நேரடி அறிவு), பரோட்சம் (மாற்று வழி அறிவு).

பரோட்சம் ஐந்து வகைப்படும்.

1. அனுமானம் (யூகித்தல்)
2. உபமானம் (ஒப்பிடல்)
3. சப்தம் அல்லது ஆப்தவாக்யம் (நம்பத்தக்க வார்த்தைகள்)
4. அர்த்தாபத்தி (ஒன்றை கூறி மற்றொன்றை புரிய வைப்பது)
5. அனுபலப்தி (அறியும் திறன் இல்லாமை)

இவற்றைப் பற்றி சற்று விரிவாகப் பார்க்கலாம்.

- **பிரத்யட்சம்** (நேரடியாக உடனே புரிந்துகொள்ளுதல்): இது இரண்டுவித பார்வை கொண்டது. ஒரு பொருளை சம்பந்தப் பட்ட அவயவங்கள் தொடர்பு கொள்ளும்போது ஒரு பொருள் இருக்கிறதென்ற கருத்து உதயமாகிறது. இது ‘நிர்விகல்பக பிரத்யட்சம்’ எனப்பெயர். அடுத்தபடியாக அந்தப் பொருளைப் பற்றிய முழு விவரங்களும் முன்பு கண்ட அனுபவத்தின் அடிப்படையில் கிடைக்கிறது. இதற்கு ஸவிகல்ப பிரத்யட்சம் என்று பெயர்.

- **அனுமானம்**: மூலப் பொருளோடு சம்பந்தப்பட்ட ஒரு அடை யாளத்தை நாம் பார்க்கும்போது, அந்தப் பொருளைப் பற்றி மறைமுகமாக ஒரு புரிதலைத் தருகிறது. தூரத்து மலையில் புகை வருவதைப் பார்த்ததும் அங்கே நெருப்பு இருப்பதை உணர் கிறோம். நாம் நேரடியாக அதைப் பார்க்காவிட்டாலும் முந்தைய அனுபவத்தின்படி, புகை நெருப்போடு சம்பந்தப்பட்டது என்பது நமக்குத் தெரியும். இதற்கு அனுமானம் என்று பெயர்.

- **உபமானம்**: அறிவுக்கான இன்னொரு வழி. ஒரு எலியைப் பார்த்ததும் அது இதற்கு முன்னால் எப்போதோ பார்த்த ஒரு சுண்டெலி போல் இருப்பதாக நினைவுக்கு வருகிறது. நினைவில் இருக்கும் சுண்டெலியும் இப்போது பார்க்கும் எலியும் ஒன்று போல் இருப்பது புரிகிறது. இந்த அறிவு உபமானத்தின் மூலம் கிடைக்கிறது.

- **சப்தம்** (ஒலி சாட்சியம்): மீமாம்ஸ தரிசனம் இதற்கு அதிக முக்கியத்துவம் தருகிறது. ஏனெனில் வேதத்தின் குறைகூற முடியாத அதிகாரத்தை நியாயப்படுத்த உதவுகிறது இது. நம்பிக்கைக்குரிய ஒருவரின் வார்த்தைகளை நாம் உண்மை என ஏற்றுக் கொள்கிறோம். இது ஆப்தவாக்யம் எனப்படும்.

வாய்மொழி இருவகைப்படும் – பௌருஷேயம் (ஆப்தவாக்யம் மாதிரி சொந்தமானது), அபௌருஷேயம் (யாரையும் குறிக்காதது). வேதங்கள் இரண்டாவது வகையைச் சேர்ந்தது. ஏனெனில் அவை

மனிதரால் எழுதப்பட்டவை அல்ல. கண்ணால் காணமுடியாதவை பற்றியும் அறியமுடியாத உண்மைகள் பற்றியும் அவை கூறுகின்றன. வழிபாடு முறைகளைப் பற்றி கூறுவதில் அவை முன்னிலை வகிக்கின்றன.

அச்சுப் புத்தகங்கள் போல் அன்றி வேதங்கள் நிரந்தரமானவை. மந்திரங்களில் அடங்கியுள்ள போதனை போல் நிரந்தரமானவை. இந்தப் போதனைகள் ஒவ்வொரு காலகட்டத்திலும் ரிஷிகளால் அளிக்கப் பட்டவை.

வேதங்களில்பெரும்பாலும் யாகங்கள் பற்றியும், பிற சடங்குகள், கட்டளைகள் (விதி) பற்றியும் வாக்கியங்கள் இருக்கின்றன. அந்த வாக்கியங்களை நாம் கட்டளையாக எடுத்துக் கொள்ள வேண்டும். பிறவற்றை அதற்கு அனுசரணையாகக் கொள்ள வேண்டும். 'ஸ்வர்க்கா மோயஜேத'[9] என்ற பதத்தில் மோட்சம் அடைய விரும்பும் ஒருவன் யாகம் செய்ய வேண்டும் என்ற கருத்து உள்ளது. இந்த வினைச் சொற்கள் கேட்பவரின் மனதில் ஆழப் பதிந்து அதன்படிச் செயல்பட வற்புறுத்து கின்றன. இது 'பாவனா' எனப்படும். கட்டளை தொனிக்கும் வேத சொற்கள் 'சாப்தீபாவனா' எனப்படும். அதைக் கேட்கும் ஒருவன் அதில் கூறியுள்ள கடமையைச் செய்ய விழைகிறான். இரண்டாவது உணர்வு 'ஆர்த்தீபாவனா' எனப்படும். (ஆர்த்தி – பலன், பயனுள்ள செயல்).

இவை யாவும் வேதங்களைச் சரிவர புரிந்து கொள்வதாலும், உணர்ந்து கொள்வதாலும் மட்டுமே சாத்தியமாகும். இதற்காக மீமாம்ஸம் பின்வரும் வழிகளைக் குறிப்பிடுகிறது:

1. உபக்ரமம் (தொடக்கம்)
2. உபஸம்ஹாரம் (முடிவு)
3. அப்யாசம் (நன்றாக பதிவதற்காக திரும்பத் திரும்பக் கூறல்)
4. அபூர்வதா (இதற்கு முன்னால் ஒருபோதும் அறியாதது)
5. பலன் (பிரயோஜனம்)
6. அர்த்தவாதம் (புகழ்தல்)
7. உபபத்தி (காரணம், விளக்கம்)

இவ்வாறு சரியான பொருளை உணர்ந்து கொண்டதும் வேதங்களின் கட்டளையை செயல்படுத்தலாம்.

- **அர்த்தாபத்தி** (ஒன்றன் மூலம் மற்றொன்றை புரிந்து கொள்வது): நேரில் பாராத ஒன்றின் விளக்கமுடியாத காரணத்தை, காரணம் இதுவாகத்தான் இருக்கும் என்று புரிந்து அறிதல். உதாரணமாக, ஒருவன் பகலில் உணவு எதுவும் உண்ணாதிருந்தும் நலமாகவும், உடல் பருத்தும் இருந்தால், அவன் ரகசியமாக இரவில் நிறைய உண்கிறான் என்பதை ஊகிக்கலாம். அர்த்தாபத்தியில் இருந்து கிடைக்கும் அறிவு தீர்மானமானது. ஏனெனில் அது வேறு வகையில் அடைய முடியாதது.
- **அனுபலப்தி** (கண்ணால் பாராதவை): இதுவும் அறிவுக்கான ஒருவழி என்றே கொள்ளப்படுகிறது. கண்ணால் காண இயலாத ஒரு பொருள் இப்போது இல்லை என உணர்வது. மேஜைமேல் வைக்கப்பட்டிருந்த கூஜா இப்போது காணப்படாவிட்டால் அது இல்லை என உணர்ந்து கொள்வது.

நமக்குக் கிடைக்கும் அறிவுதான் நாம் செயல் புரிய நம் வாழ்க்கைக்கு முக்கிய தேவை என்பதால் மீமாம்ஸம் சம்பந்தமான நூல்களில் இது விரிவாக விளக்கப்படுகிறது.

இத்தருணத்தில், தவறுகள் எவ்வாறு நுழைந்து விடுகின்றன என்பது உதாரணங்களுடன் விளக்கப்படுகிறது. இதில் இரண்டு பிரிவுகள் உண்டு.

### உலகம், ஆன்மா, மனம் பற்றிய விளக்கம்

- **உலகம்**: அத்வைதம் போன்ற வேறு சில தத்துவங்களைப் போல அல்லாமல் மீமாம்ஸம் கோடிக்கணக்கான பொருள்கள் கொண்ட உலகத்தை உண்மை என நம்புகிறது. இந்த உலகம் பல்வேறு உணர்ச்சி இந்திரியங்கள் உடைய உயிரினங்களைக் கொண்டிருக்கிறது. அதில் ஆத்மா தற்காலிகமாக வசிக்கிறது. உயிர்களின் கர்மா – நல்லதோ கெட்டதோ அதை அனுசரித்து பலன்களை அனுபவிக்கிறது. உலகில் பல்வேறு பொருட்களும் துன்பம்

அல்லது மகிழ்ச்சி அளிப்பதற்காகவே பயன்படுபவை என்று மீமாம்ஸம் கூறுகிறது.

- **ஆத்மா**: ஆத்மாக்கள் கணக்கற்றவை, ஆனால் நிரந்தரமானவை. தாங்கள் அவ்வப்போது தங்கிவரும் உடலுக்கு சொந்தமானவர் கள் புரியும் கர்மங்களுக்கேற்ப அடிக்கடி இடம் மாறுபவை என்றும் கூறலாம்.

ஆத்மா தனக்கென்று ஓர் உணர்வு இல்லாதது. மனதோடும் உணர்ச்சி இந்திரியங்களுடனும் அதோடு சம்பந்தப்பட்ட பொருட்களுடனும் தொடர்பு கொள்ளும்போது அதற்கு உணர்வு பிறக்கிறது. ஆழ்ந்த உறக்கத்தின்போது நினைவு இருப்பதில்லை என்பது இதை நிரூபிக்கும்.

மேலுலகம் செல்வதற்காக ஒருவன் ஜ்யோதிஷ்டோமா போன்ற வேதங்கள் குறிப்பிடும் யாகங்கள் செய்யும்போது அதில் மறைந்துள்ள ஆற்றல் அவன் ஆத்மாவில், சிறிய அளவில் தங்கிவிடுகிறது. இறந்தவுடன் அதன் பலனை அவனுக்கு அளிக்கிறது.

வேதங்கள் அனைத்தும் மனிதர்களிடம் கர்மங்களை (வேத சடங்கு களை) செய்யும்படி வற்புறுத்துகின்றன. வேதங்களின் கட்டளை என்பதற்காக ஒருவன் அதைச் செய்தே தீரவேண்டும். அவ்வாறு செய்யாமலிருக்க, அல்லது வேறு விதத்தில் செய்ய, யாருக்கும் அதிகாரம் இல்லை என்றும் கூறுகிறது.

இந்தக் கடமைகள் இரண்டு பிரிவாக வகுப்பப்பட்டுள்ளன – நித்ய கடமைகள், நைமித்திக (அவ்வப்போது, ஆனால் கட்டாயமாக, செய்ய வேண்டிய) கடமைகள். இவை ஆத்மாவை சுத்தப்படுத்த உதவுகின்றன.

**மோட்சம்**: மனிதனைப் பொறுத்தமட்டில் மிக உயர்ந்த (நிச்ரேயஸ்) நோக்கம் மீண்டும் மீண்டும் பிறவிகள் எடுப்பதைவிட்டு மோட்சம் அடைவதுதான். மோட்சத்தில் ஆத்மாவுக்கு வலியோ துன்பமோ இராது. அதே சமயம் உணர்வோ மகிழ்ச்சியோகூட இருக்காது. வாழ்க்கையின் இறுதி லட்சியம் சொர்க்கத்தின் எல்லையில்லா ஆனந்தத்தில் திளைப்பது என்று மீமாம்ஸம் கூறுவதாக முதலில் எண்ணியிருந்தனர். ஆனால் நமக்குக் கிடைக்கும் நூல்கள் அவ்வாறு கூறுவதாகத் தெரியவில்லை.

மோட்சத்தை அடைவது எப்படி என்பதற்குச் சற்று எளிதாகவே விடையளிக்கிறது மீமாம்ஸம். காம்ய கர்மாக்கள் (ஆசையால் செய்யப் படும் காரியங்கள்) செய்யாதிருந்தால் மறுபிறவி ஏற்படாது என்பது உண்மை அல்ல. மனமில்லாமல் செய்யும் பாவச் செயல்கள், பிராயச்சித் தங்களால் விலக்கப்படும் நித்ய, நைமித்திய கர்மங்களால் சித்தசுத்தி ஏற்படும். அவற்றைச் செய்யாவிடில் 'பிரத்யவாயதோஷம்' (செய்யத் தவறிய குற்றம்) காரணமாக மோட்சத்துக்கு செல்லும் வழியில் தடை ஏற்படும். பிராரப்த கர்மம் (பிறவி எடுக்க நேர்ந்த கர்மம்) இந்த பிறவி யோடு முடிகிறது. ஆகவே, உடல் விழுந்தவுடன் ஆத்மாவை மீண்டும் இந்த உலகுக்குக் கொண்டுவருவதற்கு எந்தக் கர்மமும் பாக்கி இருப்ப தில்லை. எனவே மோட்சம் இயல்பாகவே கிடைத்துவிடுகிறது என்ற தத்துவம் கூறப்படுகிறது.

கடவுள்: கடவுள் உண்டா இல்லையா என்ற கேள்வியை மீமாம்ஸம் ஒதுக்கித் தள்ளிவிட்டது. இந்த உலகில் உள்ள எல்லாப் பொருட்களும் வெளிப்படையாகவே இருக்கின்றன. ஆத்மாவின் 'அத்ருஷ்ட' கர்மங்கள் இந்தப் பொருட்களைப் படைக்கின்றன. எனவே படைக்கும் கடவுள் என்ற ஒன்றை ஏற்றுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை என்கிறது.

## முடிவுரை

வேதங்களின் முக்கியத்துவத்தை உயர்த்தி அதையே கடவுளாக மதிக்கும் ஒரு மரபு கடவுளையே ஒதுக்கித் தள்ளுவது விசித்திரம்தான். கடவுளை மட்டுமல்ல, இந்திரன், மித்ரன், வருணன், போன்றவர்கள்கூட கற்பனைப் பாத்திரங்களாகவே ஒதுக்கப்படுகின்றனர்.

இதன்மூலம் உயிருள்ள தத்துவமாக இருக்கவேண்டிய மீமாம்ஸம் தனக்கே குழிவெட்டிக் கொண்டது என்று சொல்லலாம்.

# 7. வேதாந்த தரிசனம்

## சூத்திரங்கள்

பண்டைக்கால இந்தியாவில் கல்விமுறை என்பது குருவுடன் தங்கிப் பயிலும் குருகுல முறையில் இருந்தது. குரு வழங்கும் கல்வி சூத்திர வடிவில் இருக்கும். அவ்வப்போது அவற்றுக்கான உரைகளும் விளக்கங்களும் தரப்படும். நினைவாற்றல் மிக முக்கியம் என்று கருதப்பட்ட அந்தக் காலத்தில் இந்த முறை மிக வசதியாயிருந்தது.

சூத்திர இலக்கியம் தனித்தன்மை வாய்ந்தது. சூத்திரத்தின் இலக்கணப்படி அது குறைந்த எழுத்துக்களைக் கொண்டதாயிருக்க வேண்டும். பொருள் குறித்த ஐயம் இருக்கக் கூடாது. கருத்து நிரம்பியதாக இருக்க வேண்டும். அதன் எல்லா அம்சங்களையும் தொட்டிருக்க வேண்டும். ஆனால் ஸூத்திரங்களை இயற்றியவர்கள் மிகுந்த சிக்கனம் காட்டிவிட்டனர். எனவே பின்னர் அவற்றுக்கு பாஷ்யங்கள், விரிவுரைகள் தேவைப்பட்டன.

## வேதாந்த தரிசனம்

இந்து மரபின் ஆறு தரிசனங்கள் வேதத்தின் அதிகாரத்தை ஏற்றுக் கொள்கின்றன.

ஒரே சடங்கிற்கு வேறுவேறு வழிகளைக் காட்டும் வேத நூல்களை ஒருங்கிணைத்தது மீமாம்ஸம். வேதாந்தமோ, உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ள மாறுபட்ட கொள்கைகளுக்குப் பதிலாக பிரம்மம் பற்றிய முரண்பாடில்லாத தத்துவம் ஒன்றைக் கொண்டு வந்தது.

## பிரஸ்தான–த்ரயம்

வேதாந்தம் வேதத்தின் இறுதிப் பகுதியான உபநிடதங்களைப் பற்றிப் பேசுகிறது (வேதத்தின் இறுதி). அந்தம் என்றால் கருப்பொருள் என்றும் பொருள்படும். எனவே வேதத்தின் சாரம் என்றும் இதைக் கொள்ளலாம்.

இது உபநிடதங்கள், பிரம்மஸூத்திரம், பகவத்கீதை என்ற மூன்று நூல்களை அடிப்படையாகக் கொண்டது. உபநிடதங்களை 'சுருதிபிரஸ் தானம்' என்றும், பிரம்ம சூத்திரங்களை 'நியாயபிரஸ்தானம்' என்றும், பகவத்கீதையை 'ஸ்ம்ருதி பிரஸ்தானம்' என்றும கூறுவர். மூன்றும் இணைந்து 'பிரஸ்தானத்ரயம்' என்று பெயர் பெற்றது. 'பிரஸ்தானம் ' என்றால் ஒரு தத்துவம் அல்லது மதம் சம்பந்தமான அமைப்பு எனலாம்.

## உபநிடதங்கள்

நிறைய நூல்கள் உபநிடதங்கள் என்ற பெயரில் இன்று கிடைக் கின்றன. ஆனால் பழமைவாதிகள் அவற்றில் பன்னிரண்டு அல்லது பதினான்குதான் அதிகாரப் பூர்வமானவை என்று நம்புகின்றனர். வேதாந்த தத்துவம் முழுவதுமே இந்த ஒரு சில உபநிடதங்களில்தான் அடங்கி யுள்ளது என்கின்றனர்.

உபநிடதங்கள் சொல்வது என்ன? பிரம்மமே படைப்புக் கடவுள். பிரம்மத்தின் இயல்பு, உலகின் படைப்பு, அதன் தன்மை, ஆத்மாவான உயிர் இனங்களின் இயற்கை இயல்பு, பிரம்மத்தோடு அவற்றுக்குள்ள தொடர்பு, இந்த உலகோடு அவர்களுக்குள்ள பிணைப்பு, வேறு உலகம் செல்வது, வாழ்வின் இறுதிக் குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடைய தேவையான நடைமுறைகள், அதை அடையும் வழிகள் ஆகியன பற்றி உபநிடதங்கள் கூறுகின்றன.

உபநிடதங்கள் அனைத்தும் ஒரே அடிப்படைத்தத்துவம் கொண்டவை என்று கருதுவது வழக்கம். எனவே அவை கூறுவதை ஆய்ந்து தெளிவான ஒரு கருத்தை எடுப்பது அவசியம். பாதராயணர் இதையே முயற்சி செய்தார். அதன் விளைவாகவே பிரம்ம ஸூத்திரங்கள் தொகுக்கப் பட்டன.

### பிரம்மசூத்திரங்கள்

முக்கியமாக பிரம்மம் (கடவுள்) பற்றிய முழு பரிமாணத்துடன் கூறுவதால் இதற்கு பிரம்மஸூத்திரங்கள் என்ற பெயர் வந்தது. வேறு சில பெயர்களாலும் இது அறியப்படுகிறது.

1. வேதாந்த சூத்திரங்கள் – உபநிடதம் என்ற வேதாந்தத்தைப் பற்றிக் கூறுவதால் இப்பெயர் பெற்றது.
2. சாரீரக சூத்திரங்கள் – சரீரத்தில் உறையும் ஆத்மா பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.
3. உத்தர மீமாம்ஸ சூத்திரங்கள் – வேதங்களின் உத்தர (பின்) பகுதியைப் பற்றி விசாரணை (மீமாம்ஸ) செய்வதால், (இதற்கு எதிர் பூர்வமீமாம்ஸ சூத்திரங்கள்) இப்பெயர் பெற்றது.
4. பிக்ஷு சூத்திரங்கள் – சன்னியாசிகள் அவசியம் கற்க வேண்டிய நூல். அதனால் பிக்ஷு என்று பெயர் பெற்றது.

### பாதராயணர்

இந்த நூலின் ஆசிரியரான பாதராயணரைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. மகாபாரதம் எழுதிய வியாசருடனும் புராணங் களுடனும் இவ்ரைத் தொடர்புபடுத்துகின்றனர். இந்த நூலின் காலம் கிமு 500–200 என்று இந்திய மற்றும் மேனாட்டு ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்[10]. வேறு சிலரோ வியாசரும் இவரும் வெவ்வேறு காலத்தினர் என்றும், பாதராயணரின் காலம் கிபி 200 என்றும் கூறுகின்றனர்.

### பிரம்மஸூத்திரங்கள்

பிரம்மசூத்திரங்கள் நான்கு அத்தியாயங்களைக் கொண்டவை.

பிரம்மசூத்திரங்களுக்கு மொத்தம் 191 அதிகாரங்களும் 515 சூத்திரங்களும் உள்ளன என்கிறார் இதற்கு உரை எழுதிய சங்கரர். ஆனால் எண்ணிக்கை குறித்தும், விஷயங்கள் குறித்தும் மாறுபட்ட கருத்துக்கள் இருக்கின்றன. ஒரு சூத்திரத்தை இரண்டாகப் பிரிப்பது, இரண்டு சூத்திரங்களை இணைப்பது, ஒரு சூத்திரத்தின் கடைசி வார்த்தையை

அடுத்த சூத்திரத்தின் ஆரம்பமாக வைப்பது போன்றவை இதற்குக் காரணம். இதனால் சூத்திரங்களை பொருள் காண்பதிலும் விளக்கு வதிலும் கருத்து வேறுபாடுகள் ஏற்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட சூத்திரம் பூர்வபக்ஷத்தை (மறுப்பு அல்லது சந்தேகத்தை) குறிப்பிடுவதாகக் சிலர் கூறும்போது, வேறுசிலர் அது ஸித்தாந்தத்தை (ஆசிரியரின் கருத்தை) கூறுவதாகக் கருதுகின்றனர்.

## முதல் அத்தியாயம்

முதல் அத்தியாயம் 39 அதிகரணங்களும் 134 சூத்திரங்களும் கொண்டது. இதன் பெயர் ஸமன்வயாத்யாயம். பல்வேறு உபநிஷத்து களில் இடம்பெற்ற கருத்துக்களை ஸமன்வயம்(பொருந்தும்படி) செய் வதால் இந்த பெயர் பெற்றது.

## இரண்டாம் அத்தியாயம்

அவிரோதாத்யாயம் என்ற பெயர் கொண்ட இதில் 47 அதிகரணங் களும் 157 சூத்திரங்களும் உள்ளன. வேதாந்த தத்துவத்தில் எதிர்ப் படும் எதிர்முறைக் கருத்துக்களை அகற்றுகிறது.

## மூன்றாம் அத்தியாயம்

மூன்றாவது அத்தியாயம் 'ஸாதனாத்யாயம்'என அழைக்கப்படு கிறது. இது அளவில் பெரியது. 186 சூத்திரங்கள், 67 அதிகரணங்கள் கொண்டது. ஸாதனாத்யாயம் என்ற பெயர் இருந்தாலும் இதில் பலதரப் பட்ட விஷயங்கள் இடம் பெற்றிருக்கின்றன. ஜீவன்கள் வேறு உடலுக்குள் மாறிச் செல்வது, ஜீவன்களின் கனவுகள், கடவுள் விருப்பப்படி கர்ம பலன்களை அனுபவித்தல், உபநிடதங்களில் குறிப்பிடும் பல்வேறு தியான முறைகள் பற்றிய விளக்கங்கள், வெவ்வேறு உபநிடதங்களில் ஒவ்வொரு விதமாகக் கூறப்படும் தியான முறைகளை (வித்யைகள்) ஒப்பிட்டுப் பார்த்தல், கர்மங்களுக்கும் வழிபாடுகளுக்கும் அப்பாற்பட்ட பிரம்மத்தைப் பற்றி அறிதல், பிரம்மச்சரியம், ஸன்னியாசம் போன்ற பல்வேறு ஆஸ்ரமங்களுக்கான நடைமுறைகள் பற்றி விளக்குதல், பிராயச்சித்தங்கள் முதலியன இடம் பெற்றுள்ளன.

## நான்காவது அத்தியாயம்

பலாத்யாயம் என்று அழைக்கப்படும் இதுவே மிகச் சிறியது. 78 சூத்திரங்களும் 38 அதிகரணங்களும் கொண்டது. மரணத்துக்குப்பின் ஜீவன் 'அர்சிராதி' அல்லது 'தேவயான' (கடவுளின் ஒளிப் பாதை) வழியாக பிரம்மலோகம் செல்வது போன்றவை முக்கிய இடம் பெறுகின்றன.

மோட்சம் அடைய விரும்பும் ஒருவன் சிரவணம் (பிரம்மத்தைப் பற்றிக் கூறும் வேதங்கள்) மற்றும் அது போன்றவற்றைக் கேட்டு உணர வேண்டும்

## பாதராயணரின் தத்துவம்

உபநிடதங்கள் கூறும் செய்திகளை முரணில்லாத தத்துவமாகத் தமது பிரம்மசூத்திரத்தில் தந்திருக்கிறார் பாதராயணர். சூத்திரங்கள் மிகச் சுருக்கமானவை. மற்ற நூல்களைவிட இதிலுள்ள சூத்திரங்கள் சற்றுத் தெளிவானவை.

வேதாந்த மரபை விளக்குவதற்காக பாதராயணர் எடுத்துக்கொண்ட ஒரே பிரமாணம் (அறிவுக்கான வழி) சுருதி என்ற வேதங்கள் மற்றும் குறிப்பாக அதன் ஞானகாண்டம் எனப்படும் உபநிடதங்கள் ஆகும். வேதங்களில் இடம்பெறும் வார்த்தைகள் நித்யமானவை, அழிவற்றவை என்று அவர் கருதுகிறார். உலகின் இறுதி நோக்கம் என்ன என்ற உண்மையை கண்டுபிடிப்பதில் காரணங்களும் வாதமும் பயன்படாது என அவர் நம்பினார். ஏனெனில் அவற்றை விட சிறந்த வாதங்கள் அதைத் தோற்கடித்து விட வாய்ப்புண்டு.

பிரம்மமே இந்த பிரபஞ்சத்தின் தொடக்கமும், முடிவும், அதுதான் ஒரே உண்மை என்கிறது சுருதி. அதுதான் 'ஜன்மாத்யஸ்ய யதா'[11] என்ற குறிப்பு. பிரம்மமே எல்லாவற்றுக்கும் காரணம், ஆதாரம், உலகை ஆட்டி வைப்பது என்கிறது. உலகின் தோற்றத்துக்கும் சுழற்சிக்கும் காரணம். அவற்றுக்கு வேறு எந்த உதவியும் தேவையில்லை. பால் வெவ்வேறு பொருட்களாக மாறிக் கொள்வதுபோல் அது தன்னை மாற்றிக் கொள்கிறது.

பிரம்மம் நினைத்தபோதே தன்னை ஆகாயம், வாயு போன்றவையாக மாற்றிக் கொள்கிறது. படைப்பின் சகல அம்சங்களிலும், அதன் இறுதி வரை சம்பந்தப்பட்டிருக்கிறது.

பிரம்மமே இந்த உலகமாக வெளிப்படுவதால் உலகம் அதுவன்றி வேறல்ல. மடிக்கப்பட்ட ஒரு வஸ்திரம் விரிக்கப்படும்போது அதில் எவ்வித மாற்றமும் இராது. படைப்பு என்பது பிரம்மத்துக்கு ஒரு விளை யாட்டு. ஜீவன்களின் கர்மங்களுக்கு ஏற்ப உலகம் படைக்கப்பட்டிருப்ப தால், உலகில் துன்பங்களும் தீமைகளும் நிலவுவதை அதனுடைய தவறு என்று கூறமுடியாது.

ஜீவன் அல்லது தனிப்பட்ட ஆத்மாவை பாதராயணர் 'ஞா' என்கிறார். இதற்கு உணர்வுள்ள, அறிவுள்ள ஒன்று. பிறப்பு இறப்பு இல்லாததது, நிரந்தரமானது, அணு அளவானது என்று பொருள்.

ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் உள்ள உறவு, பாம்புக்கும் சுருண்டு கிடக்கும் நிலைக்கும் இணையானது. அல்லது வெளிச்சமும் அது தோன்று மிடமும் போன்றது.

ஆத்மா / பிரம்மத்தைத் தியானிப்பதன் மூலம் ஞானத்தைப் பெற்று ஜீவன் மோட்சத்தை அடைகிறது.

ஆன்மிகத்தை விரும்புகிற ஒருவன்கூட வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் (ஆஸ்ரமத்திலும்) ஆற்ற வேண்டிய கடமைகளை செய்து முடிக்க வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறது. ஆயினும் கர்மத்தைச் செயல்படுத்துவதற்கும் தியானத்துக்கும் சுருதிகள் ஒரே மாதிரியான முக்கியத்துவம் கொடுக்கின்றன.

ஜீவன் மேற்கொள்கிற உபாசனைகளுக்கும் தியானத்துக்கும் ஈஸ்வரனின் அருள் கிடைக்கிறது.

பிரம்மத்தைப் பற்றிய அறிவு கிடைக்கப் பெற்றதும் இதுவரை ஜீவன் சேர்த்து வைத்திருந்த கர்மா (ஸஞ்சித கர்மா) அழிக்கப்பட்டு விடுகிறது. அவனுடைய பிராரப்த கர்மம் நிச்சயித்தபடி அவன் வாழ் கிறான். ஞானம் பெற்றபின் புரியும் கர்மங்கள் அவனைப் பாதிக்காது.

வாழும்போதே தியானத்தின் உச்சகட்டத்தை அடைந்த ஜீவன், மரணத்திற்குப் பின் அர்சிராதிமார்க்கம் (ஒளியின் அல்லது கடவுளின் பாதை) வழியாக பிரம்மலோகத்தை அடைகிறது. அங்கே பிரமத்துடன் இணைந்து விடுகிறது. அப்போது பிரமத்துக்கும் இந்த ஜீவனுக்கும் வித்தியாசம் இல்லை. பிரம்மத்தின் குணங்கள் அனைத்தும் ஜீவனுக்கும் கிடைத்துவிடுகின்றன. சைதன்யம் மட்டும் எப்போதும் அதனிடம் இருக்கும்.

முடிவாக இந்த சூத்திரங்களில் பாதராயணர் ஒருவித அத்வைதத்தைத் தருகிறார் என்று சொல்லலாம். அவர், ஜீவன் அல்லது உலகம் பிரமத்திடமிருந்து வேறுபட்டு தனியாக இயங்குவதாகக் கூறவில்லை. உபநிடதங்களை மிக உயர்ந்த சக்திகளாக அவர் கருதுகிறார். இரண்டு கருத்துக்களும் பிரம்மம் நிர்விசேஷ சின்மாத்ர ஸ்வரூபம் (எதைவிட சிறப்பும் இல்லாத தூய உணர்வுடையவன்) மற்றும் சுவிசேஷன் (சிறப்புடையவன்) என்பதால் அவர் அதை ஏற்றுக் கொள்கிறார். உபநிடதங்கள் தன்னுடைய தத்துவத்தை வெளிப்படுத்தாமல் கூறும் பலவித, முரண்பாடுடையது எனத் தோற்றம் அளிக்கும் கருத்துக்களை சமன்படுத்தி அதனை விளக்குகிறார்.

## உரையாசிரியர்களும் நூல்களும்

பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியக் கலாசாரத்தின் அடிப்படையாக வேதங்கள் திகழ்கின்றன. உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்ட வேதாந்த தத்துவம் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் அறிஞர்களை ஆட்கொண்டிருக்கிறது. பாதராயணரின் பிரம்மசூத்திரங்கள் அறிஞர்களைக் கவர்ந்ததில் அதிசயமில்லை. அவர்கள் ஏற்கனவே தங்கள் ஆராய்ச்சி நூல்களால் வேதாந்த இலக்கியத்தை வளப்படுத்தியிருக்கிறார்கள். இந்த உரையாசிரியர்கள் பாதராயணரிடமும் அவரது மாபெரும் நூலிடமும் மிக்க மரியாதை கொண்டவர்கள். தங்கள் காலத்தில் நிலவிய பல மரபுகளையும் ஆராய்ந்து வேதாந்தமே அவற்றைவிட மேலானது என்பதை நிரூபிக்க முயன்றவர்கள். அதே சமயம் வேதாந்தத்தில் தங்கள் கருத்துக்களை வலியுறுத்தவும் அவர்கள் தவறவில்லை.

நமக்கு இப்போது கிடைக்கும் பல உரைகளில் சங்கரருடையதே மிகப் பழமையானது. அவருக்கும் முன்பே பலர் உரைகள் எழுதியிருக்க லாம். சங்கரர் தமது உரையில் குறிப்பிடும உபவர்ஷா என்பவர் அவர்களில் ஒருவராக இருக்க வேண்டும். போதாயனர் என்பவர் இன்னொரு உரையாசிரியர். இராமானுஜர் இவரை வருத்திகாரர் என்று குறிப்பிடுகிறார்.இவற்றில் முக்கியமான சிலவற்றைப் பற்றி இங்கே பார்க்கலாம். சங்கரர், இராமானுஜர், மத்வர் பிரிவுகள் நன்கு அறியப் பட்டவை. மற்றவர்களைவிட முக்கியம் வாய்ந்தவை என்பதால் அவற்றை முதலில் பார்க்கலாம். பிரம்மசூத்திரங்களுக்கு நேரடியாக உரை எழுதிய சிலரது பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| உரையாசிரியர் | வேதாந்த பிரிவு | காலம் (கிபி) |
|---|---|---|
| 1. சங்கரர் | அத்வைதம் | 788–820 |
| 2. பாஸ்கரர் | பேதாபேதம | 996–1061 |
| 3. யாதவப்ரகாசர் | பேதாபேதம் | 1000 |
| 4. இராமானுஜர் | விசிஷ்டாத்வைதம் | 1017–1127 |
| 5. மத்வர் | த்வைதம் | 1238–1317 |
| 6. நிம்பார்கர் | த்வைதாத்வைதம் | 13 ம் நூ. |
| 7. ஸ்ரீகண்டர் | சைவவிசிஷ்டாத்வைதம் | 1270 |
| 8. ஸ்ரீபதி | பேதாபேதாத்மக விசிஷ்டாத்வைதம் | 1400 |
| 9. வல்லபர் | சுத்தாத்வைதம் | 1479–1544 |
| 10. சுகர் | பேதவாதம் | 1550 |
| 11. விஞ்ஞான பிக்ஷு | ஆத்மப்ரஷ்மைக்ய பேதாவதம் | 1550 |
| 12. பலதேவர் | சிந்த்ய பேதாபேதம் | 1725 |

## சங்கரர் (கிபி 788–820)

சங்கரருடைய தரிசனம் அல்லது தத்துவம் அத்வைத வேதாந்தம் எனப்படும். பகவத்கீதை, பத்து பழைய உபநிடதங்கள், பிரம்மஸூத் திரங்கள் ஆகியவற்றுக்கு அவர் எழுதிய உரைகளிலிருந்து அது வெளிப் படுகிறது.

அடிக்கடி மேற்கோளாகக் கூறப்படும் 'பிரம்ம ஸத்யம்' ஜகன் மித்யா, ஜீவோ ப்ரமைவ நாபரஹ (பிரம்மமே உண்மை, இந்த உலகம் ஒரு மாயை, ஜீவன் பிரம்மமே, இரண்டுக்கும் வித்தியாசம் இல்லை) என்ற செய்யுள் அவருடைய தத்துவத்தைச் சுருக்கமாக எடுத்துரைக் கிறது.

பிரம்மத்தை பரம்பிரம்மம், அபரப்பிரம்மம் என்று இரு வகையாகப் பிரிக்கிறார் சங்கரர். பிரம்மத்தின் உண்மை தன்மையை அறியாமல் அதற்கு அளிக்கும் பெயர், வடிவம் போன்ற சிறப்புகளை உபநிடதக் குறிப்புகள் ஏற்றுக் கொள்ளாவிடினும் அது மிக உயர்ந்த (பர) பிரம்மம் தான். மாறாக பெயர், உருவம் போன்ற அடைமொழிகள் 'அபர' என்ற தாழ்ந்த பிரம்மத்தைத்தான் குறிக்கும். உலகத்தைக் காத்து, ரட்சித்து, அழிப்பது இந்த பிரம்மம்தான்.

சொல்லப்போனால், இந்த உலகத்தில் பிரம்மம் மாற்றப்பட வில்லை. பல்வேறு உருவங்களும் பெயர்களும் வெறும் விவர்த்தம் – தோற்றம் – மட்டுமே. இது அவித்யை (அறியாமை) யால் ஏற்பட்டது. இருட்டில் கயிற்றை பாம்பெனக் கருதுவது போன்றது. இதையே சங்கரர் 'அத்யாஸம்' அல்லது 'அத்யாரோபம்' (ஒன்றின்மேல் பதிந்த மற் றொன்று) என்கிறார். பகுத்தறிவு மூலம் மாயத்தோற்றம் மறைந்து உண்மை அறிவு பிறக்கிறது.

ஜீவனை 'தூய உணர்வு' அல்லது 'சைதன்யம்' என்கிறார் சங்கரர். அதை அந்தக்கரணம் என்ற மனம் சூழ்ந்திருக்கிறது. ஜீவன் அழிவற்றது, தூய்மையானது, புத்தி (விழிப்புணர்வு), முக்தி (விடுதலை) பெற்றதாக இருந்தாலும் அந்தக்கரணத்தின் காரணமாக கர்த்தா (செயல்வீரன்) அல்லது போக்தா (அனுபவிப்பவன்) ஆக தோன்றுகிறான்.

'தத் த்வம் அஸி' (நீ அதுவாய் இருக்கிறாய்)[12] என்ற உபநிடத வாக்கியம் ஜீவனுக்கும் பிரம்மத்துக்குமுள்ள முக்கிய அடையாளத்தைச் சுட்டுகிறது. அவற்றின் தேவையற்ற தன்மைகளை அகற்றி பரிசுத்த உணர்வைக் காட்டுகிறது.

மரணத்துக்குப் பின் ஜீவன் தேவையான வழியாக பிரம்மலோகம் செல்வதாக (கர்மமுக்தி) உபநிடதங்களும் பிரம்மஸூத்திரங்களும் சொல்வதை சங்கரர் ஏற்றுக் கொள்கிறார். எனினும் ஞானம் பெற்றதுமே உடனடி மோட்சம் (ஸத்யோமுக்தி) கிடைப்பதாகக் கூறுகிறார். இதுவே ஜீவன்முக்தி எனப்படுகிறது.

**சங்கரரின் வேதாந்தக் கருத்துக்கள்[13]**

- நாம் காண்கின்ற உலகம் அனைத்தும் இறைவனிலிருந்தே வந்துள்ளன, இறைவன் இல்லையென்றால் உலகங்களும் இல்லை.
- உபநிடத வாக்கியங்களின் பொருளை ஆராய்வதால் சிறந்த அறிவு பிறக்கிறது. அதனுடைய தொடர்ச்சியாக சம்சார துக்கத்திற்கு முற்றிலும் அழிவு ஏற்படுகிறது.
- சிரத்தையும் பக்தியும் தியானயோகமும் முக்திக்குக் காரணங்களாக வேதம் கூறுகிறது. எவனொருவன் இவைகளில் நிலை பெற்றிருக்கிறானோ அவனுக்கு அவித்தையால் கற்பிக்கப்பட்ட உடலாகிய தளையிலிருந்து விடுதலை ஏற்படுகிறது.
- போகத்தால் அல்ல, அறிவினால் அல்ல, கர்மத்தால் அல்ல, கல்வியால் அல்ல, பிரம்மமும் அல்ல, பிரம்மமும் தானும் ஒன்று என்ற விழிப்புணர்வால்தான் முக்தி ஸித்திக்கிறது, வேறு வகையில் இல்லை.
- முக்திக்கு முதல்படி நிலையற்ற பொருட்களில் தீவிரமான வைராக்கியம், பிறகு அகக்கரணங்களின் கட்டுப்பாடும், புறக்கரணங்களின் கட்டுப்பாடும், அதன்பின் பொறுமையும் பற்றுடன் எந்த வேலையையும் செய்யாமல் இருப்பதும் ஆகும்.
- நான் அழியாதவன், உயிருக்கு உயிராகியவன். நான் ஒப்பிலா ஆனந்தம் நிறைந்தவன். நான் அளவிலடங்காதவன்.

- ஆகாயத்தைப் போல் நான் உள்ளேயும்வெளியேயும் நிரம்பி நிற்கிறேன்; மாறுபடாமல் அனைத்திலும் ஒன்றேயாய், பரிசுத்த மாய், பற்றற்று மாசற்று நான் இருக்கிறேன்.
- அறிவும் நானே. அறியப்படுவதும் நானே. அறிபவனும் நானே. அறிவின் சாதனங்களும் நானே, அறிபவன், அறிவு, அறியப்படு வது என்ற மூன்றையும் கடந்த ஆன்மாவும் நானே.
- எனக்கு விருப்பும் வெறுப்பும் இல்லை; பேராசையும் மனமயக்கமும் இல்லை; அறமும் பொருளும் இன்பமும் வீடும் இல்லை. அறிவும் ஆனந்தமும் உருக்கொண்ட மெய்ப்பொருள் நான். எனக்கு புண்ணியமும் பாவமும் இல்லை; இன்பமும் துன்பமும் இல்லை;
- நான் மாறுபடாதவன், உருவில்லாதவன்; நான் எல்லா இடத் திலும் வியாபித்திருப்பதால் எனக்குப் பற்றின்மை என்பதில்லை; முக்தியுமில்லை. அறிவும் ஆனந்தமும் உருக்கொண்ட மெய்ப் பொருள் நான், மெய்ப்பொருளே நான்.
- எல்லா ஆசைகளையும் விட்டு ஆன்மாவைக் கண்டு அனுபவிக்க வேண்டும் என்ற தீவிரமான ஆசைமட்டும் தான் ஆத்மதரிசனத் திற்கு அவசியமான சாதனம்.
- எதை அடைந்தபின் வேறு அடையவேண்டியது எதுவும் இல்லை யோ, எந்த ஆனந்தம் அனுபவிக்கப்பட்டபின் அதற்கு மீறிய ஆனந்தம் வேறொன்று வேண்டப்படுவதில்லையோ, எதையறிந்த பின் வேறு அறியவேண்டியது எதுவுமில்லையோ அதை பிரம்மம் என்று அறிந்து அனுபவிப்பாயாக.
- உலகம் பிரம்மமே. பிரம்மத்திலிருந்து வேறாக எதுவும் இல்லை. பிரம்மம் அல்லாத ஏதாவது ஒரு பொருள் தனித்திருப்பதாகத் தோன்றினால் அது கானல் நீரைப்போல் பொய்யானது.

**பாஸ்கரர்** (கிபி 996 – 1061)

சங்கரர் காட்டிய வேதாந்தக் கொள்கைகளை மற்றவர்களுக்கு விளக்கிக் கூறியவர் பாஸ்கரர். ஆனால் சங்கரரின் மாயாவாதத்தை அடிப்படையாகக் கொண்ட அத்வைதத்தை இவர் ஏற்றுக் கொள்ள வில்லை. பாஸ்கரர் ஒரு தீவிர வேதாந்தி. உபநிடதங்களையும் பிரம்ம

ஸூத்திரங்களையும் தீவிரமாக ஆதரிப்பவர். பிரம்ம சூத்திரங்களுக்கு அவர் எழுதிய உரை அவரது தத்துவ ஞானத்தை வெளிப்படுத்துகிறது.

உபநிடதங்களில் கூறப்படும் ஸூத்திரங்களின் நேரடி அர்த்தத்தை எவ்வித மாற்றமுமின்றி அப்படியே ஏற்றுக் கொள்ளவேண்டும் என்கிறார் பாஸ்கரர். அளப்பரிய நற்குணங்கள் கொண்ட ஒரு பிரம்மத்தைக் காட்டுகிறார் அவர். ஆனால் அந்த பிரம்மத்துக்கு உருவம் ஏதும் இல்லை. அதற்கு இரண்டுவித சக்தி உண்டு – போக்த்ரு சக்தி .(மகிழ்ச்சி அளிப்பது), போக்தா சக்தி (மகிழ்ச்சி அடைவது). இந்த இரண்டு சக்திகளையும் உபயோகித்து அது அசேதன உருவங்களாகவும சேதன உருவங்களாக வும் மாறிக்கொண்டிருக்கிறது. இந்த உருமாற்றம் உண்மையாக நிகழ்ந் தாலும் அது பிரம்மத்தை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. உயிர்கள் இயல்பாகவே பிரம்மத்தோடு ஒன்றியவை. எனினும் உபாதி (தடை) என்ற உடல் – மனம் பிணைப்பால் வேறுபடுபவை. இந்த உபாதி உண்மை யானது என்றாலும் நிரந்தரமானதல்ல. அனுபவப்படுவதால் அவை உண்மையாகின்றன. ஆறுகள் கடலில் கலந்து அதோடு ஒன்றாவது போல முக்தி நிலையில் அவை பிரம்மத்தோடு இணைந்துவிடுகிறது.

இந்த உலகம் பிரம்மத்தின் படைப்பு (கார்ஷ்ய மூலம்) என்கிறார் பாஸ்கரர்.

வேதங்களில் கூறியுள்ளபடி, பலாபலன்களைப் பற்றிக் கவலைப் படாமல் தம் கடமைகளைச் செய்யவேண்டும் என்கிறார் பாஸ்கரர். தியானம் செய்வதால் ஜீவன் பிரம்மத்தை அடையமுடியும்.

**இராமானுஜர்** (கிபி 1017 – 1127)

பிரம்மஸூத்திரங்களுக்கு இராமானுஜர் எழுதிய உரை 'ஸ்ரீபாஷ்யம்' எனப்படுகிறது. இது தவிர அவர் 'வேதாந்த தீபம்', 'வேதாந்த ஸாரம்' என்ற பிரம்ஸூத்திர உரைகளாக இரண்டு சிறு நூல்களையும் இயற்றி யிருக்கிறார். வேதாந்ததீபம் கடைசியாக வந்தது, நிறைய விளக்கங்கள் கொண்டது.

இராமானுஜரின் ஸ்ரீபாஷ்யம், 'போதாயனவிருத்தி' என்ற பெரிய நூலை அடியொற்றி எழுதப்பட்டது.

பிரம்மத்தை மிக உயர்ந்த சுதந்திர உண்மையாக இராமானுஜர் கருதுகிறார். எனினும் பிரம்மம் தனக்குள்ளே சித், அசித் இரண்டையும்

வைத்திருக்கிறது. இந்த இரண்டும் நிஜமே. இவை பிரம்மத்தின் கட்டுப் பாட்டில் உள்ளவை.

எனவே இராமானுஜரின் முறை 'விசிஷ்ட அத்வைதம்' என்று அழைக்கப்படுகிறது. பூர்ணமான பிரம்மம் ஒன்றுதான், ஆனால் சித் 'அசித் என்ற இரண்டு சிறப்பு தன்மைகளும் (விசிஷ்டம்) உடையது. கிளை களும் இலைகளும் மரங்களும் உடைய மரம் போன்றது. மரம் ஒன்றே தான், அதில் பல பாகங்கள் இருக்கின்றன ஒன்றுக்கொன்று வித்தியாச மானவை என்பது போல.

இராமானுஜரைப் பொறுத்தவரை பிரம்மம் என்பது யாவற்றிலும் பெரியது, அதாவது ஸர்வேஸ்வரன், எல்லாவற்றையும் ஆள்வது. கெட்டதற்கெல்லாம் விரோதி, நற்குணங்கள் நிரம்பப் பெற்றது. எல்லாம் அறிந்தது. எங்கும் நிறைந்தது. இவ்வுலகின் படைப்பு, காத்தல், திரும்ப எடுத்துக் கொள்வது யாவும் அதனிடமிருந்தே பிறந்தது.

ஜீவன் (ஆத்மா) உடம்பிலிருந்து வேறுபட்டது என்று நம்புகிறார் இராமானுஜர். அது அணு அளவே உள்ளது. அதனுடைய ஞானம் சுருங்கவும் விரியவும் கூடியது. அது தன்னிச்சையானது. ஜீவன்கள் கணக்கற்றவை. அவை நித்யர்கள் என்று அழைக்கப்படும், சில ஜீவன்கள் என்றும் சுதந்திரமாக இருப்பவை. இப்போது பந்தத்தில் கட்டுண்டு கிடப்பவை பக்தி மற்றும் பிரபத்தி (சரணாகதி) மூலம் முக்தி அடைய முடியும். விடுதலை பெற்ற ஜீவன்கள் அனைத்தும் ஸமமானவை.

நல்ல மனதுடன் குறிப்பிட்ட கர்மங்களைச் செய்வதால் மனம் தூய்மையடைகிறது. இதுவே ஆன்மீக வாழ்வின் தொடக்கம். இந்தத் தூய்மை யான ஜீவன் ஞானத்தைப் பெறத் தயாராகிறது. உடல் – உள்ளம் என்ற பிணைப்பிலிருந்து விடுபடுவதை உணர்கிறது. ஆயினும் பக்தி, பிரபத்தி வழி, விடுதலை பெற்று பிரம்மத்தை அடைய முடியும், போன்றவை மூலம் கருத்துக்கள் இவரது விசிஷ்டாத்வைதத்தில் காணக்கிடைக்கிறது.

## சைவ சித்தாந்தம்

என்னை அறிவென்றான் என்னறிவில் ஆனந்தம்
தன்னைச் சிவம் என்றான் சந்ததமும் – என்ன்னை உன்னிப்
பாரா மறைத்தது'வே பாசம் என்றான் இம்மூன்றும்
ஆராய்ந்தவர் முக்த ராம்

– திருஞான சம்பந்தர் அருளிய சிவபோக ஸாரம்

சிவநெறி காலத்தால் மூத்த பழமை உடையது, தெய்வ நெறியாக உலகெங்கும் பரவியிருந்த காலம் உண்டு. சிவநெறிக் கொள்கைகள் உலகத்தில் உள்ள தத்துவ நெறிகளுக்கு எல்லாம் மேம்பட்ட தன்மை உடையது.0 சைவம் மிகத் தொன்மையானது. இவைகளில் பெரும்பாலும் தமிழ் மொழியில் உள்ளன. தமிழ் மொழியும், சைவமும் வெவ்வேறாகக் கருத முடியாமல் ஒன்றையொன்று தழுவியே வளர்ந்து வந்தன. தமிழ் இலக்கியங்களில் பல நூல்கள் அழிந்து போனதாகவும், அழிக்கப்பட்டு போனதாகவும் அறிஞர்கள் கருதுகிறார்கள். இன்று நமக்குக் கிடைத்தவை களில் முக்கியமானவை பின்வருமாறு

| | |
|---|---|
| வேத உபநிடதங்கள்,<br>ஆறு அங்கங்கள்,<br>பிரம்ம ஸூத்திரம்,<br>சைவ ஆகமங்கள் | தொன்மையானவை. |
| தொல்காப்பியம் | இலக்கண நூல் (தொன்மையானது) |
| சங்க இலக்கியங்கள் | இல்லற வாழ்க்கை பற்றியது; அரசர்களின் வீரத்தையும் பற்றியது. |
| திருக்குறள் | ஒழுக்க நூல் (சங்க இலக்கியங்கள் என்று கூறப்படும் பல நூல்களுள் ஒன்றான பதினென்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று) |
| ஐம்பெருங்காப்பியங்கள் | கி.பி. 2ஆம் நூற்றாண்டு வரலாறு பொருந்தியது. |
| பன்னிரு திருமுறைகள் | தோத்திர நூல் ; உள்ளத்தைத் தூண்டுவன; |
| சைவ சித்தாந்த சாத்திரங்கள் | தத்துவ நூல், அறிவைத் தூண்டுவன. உண்மைப் பொருளாகிய இறைவனின் இயல்பை அறியத் தூண்டுவன. |

இதில் மேலே குறிப்பிட்ட சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் ஈடு இணையற்றவை. கிரேக்க தேசத்தின் தத்துவ ஆராய்ச்சியாளர் சாக்ரட்டீஸ் (469 – 399 B.C.) காலத்திற்குப் பின்னர் தான் மேற்கத்திய தத்துவம் ஆரம்பிக்கப்பட்டது. இந்திய தத்துவ ஞானம் அப்படிப்பட்டதல்ல. அது இன்ன காலத்தில் இன்னாரால் தொடங்கப்பட்டதென்று சொல்ல முடியாத அளவுக்குப் பழைமை வாய்ந்தது. அதன் தொடக்க காலம் சரித்திர காலத்திற்கு எவ்வளவோ முற்பட்டது.

இத்தனை தொன்மை வாய்ந்ததும், சிறப்புமிக்கதும், தர்க்க ரீதியாக மிக்க மேம்பட்ட கருத்துக்களையும், பேருண்மையையும் கொண்டது சைவ சித்தாந்தம்.

'பிரதமோ தைவ்யோ பிஷக்' என்று யஜுர் வேதத்தில் சிவபெருமானைப் பற்றிக் காணப்படுகிறது. இது சைவ சித்தாந்தத்தின் ஆணி வேராகக் கருதப்படுகிறது.

'சைவம்' என்பது சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம். சித்தாந்தம் என்றால் முடிந்த முடிவு. சைவ சித்தாந்த தத்துவம் என்பதனைச் சுருக்கி சைவ சித்தாந்தம் எனக் கூறிவருகிறோம். சைவ சித்தாந்தம் என்ற தத்துவத்தைச் சுருக்கமாக ஒரே வரியில் சொல்லுவது என்றால் 'பதி, பசு, பாசம் 'அல்லது 'இறைவன், உயிர், தளை' என்னும் முப்பொருள் உண்மையை மேற்கொண்டு, பாசத்தின் விரிவாகிய ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் சக்தி அற்றுப் போகும் நிலைக்கு ஆன்மா பக்குவப்பட்டு, சிவனது அருள் ஆன்மாவில் பதியப்பட்டு (சத்திநிபாதம் என்ற நிலை) அவன் அருளால் முக்தி பெறும் என்று கொள்வதும் தான் சைவ சித்தாந்த தத்துவம். என்றும் உள்ள உண்மையான பொருள் இறைவன் ஒருவனே. ஆதலால் அவனைப்பற்றி ஆராய்ச்சி செய்து, அந்த இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு என்ன ? மக்கள் ஏன் துன்புறுகிறார்கள்இ மக்களது வாழ்க்கையின் குறிக்கோள் என்ன? அதை அடைவது எவ்வாறு என்பன போன்ற பல அரிய பெரிய தத்துவக் கொள்கையைத்தான் சைவ சித்தாந்தம் என்று கூறலாம் என்று டாக்டர் ஜி.யு. போப் என்ற இங்கிலாந்து தேசத்து கிறித்துவப் பாதிரியார் கூறுகிறார்.

திராவிடர்களின் ஞானத் தெளிவையும், அறிவுக்கூர்மையையும் விளக்கும்படியாக சைவ சித்தாந்தம் அமைந்துள்ளது. இந்திய சமயங் களில் மிக விஸ்தாரமாகவும், தாக்கத்தை ஏற்படுத்தும் படியாகவும், மேன்மையுடையதாகவும் இது விளங்குகிறது என்று கூறுகிறார்.

மனித இனத்தின் சிந்தனைகளில் சைவ சித்தாந்தத்தை மிகவும் நுட்பமானது என்றும், ஸம்பூரணமானது என்றும் டாக்டர் கமில் ச்வெரில் பில் என்ற ரஷ்யநாட்டு அறிஞர் கூறுகின்றார்.

## முப்பொருள் உண்மை

சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையாகிய முப்பொருள் உண்மையைப் பற்றிச் சற்று விரிவாகக் காண்போம். முப்பொருள் உண்மையாவது:-

| | | |
|---|---|---|
| பதி | : | இறைவன்/தலைவன்/ சிவன் |
| பசு | : | அனைத்து உயிர்கள் |
| பாசம் | : | தளை, கட்டு. (பந்தம்) |

ஆகிய இம்மூன்றும் அனாதி; அதாவது இம்மூன்றுக்கும் தோற்றமும் கிடையாது; முடிவும் கிடையாது. கடல், நீர், உப்பு ஆகியவைபோல பதியும், பசுவும், பாசமும் ஒன்றில் ஒன்று அடங்கியும், கலந்தும், வியாபக வியாப்பிய முறையில் என்றும் அநாதியாய் மூவகைத் தனி இயல்புகளை உடைய முப்பொருள்கள் ஆகும்.

பாசம் என்ற சொல் மூன்று பொருட்களைக் குறிக்கின்ற ஒரு சொல். அவையாவன

| | | |
|---|---|---|
| ஆணவம் | – | மூல இருள் |
| கன்மம் | – | கருமம் |
| மாயை | – | மூலப்பிரக்ருதி |

இந்த மாயை என்ற சொல்லை மேலும் இரண்டு பகுதிகளாகப் பிரிப்பர். அவை அசுத்த மாயை, சுத்த மாயை.

ஆக மேலே கூறிய முப்பொருள்கள் கீழ்க்கண்டவாறு ஆறு பகுதி களாகப் பிரிக்கப்பட்டு உள்ளன.

| | |
|---|---|
| 1. பதி | 4. கன்மம் |
| 2. பசு | 5. அசுத்த மாயை அல்லது தூய்மை அல்லாத மாயை |
| 3. ஆணவம் | 6. சுத்த மாயை அல்லது தூய மாயை |

ஆக இந்த ஆறு பொருள்களும் அனாதி; தோற்றமும் கிடையாது, முடிவும் கிடையாது, ஆணவம், கன்மம், சுத்த மாயை, அசுத்த மாயை என்ற நான்கும் பாசம் என்ற சொல்லில் அடங்கும் ஆதலால் சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை முப்பொருள் உண்மை என்று கூறுவர்.

இந்த அடிப்படைக் கொள்கைகளை விரிவாக விளக்கிக் கூறும் நூல்கள் 14 ஆகும். அதனை அருளியவர்கள் இறையருள் நிரம்பப் பெற்ற ஏழு ஞானிகள் ஆவார்கள். இத்தகைய சிறப்புமிக்க தத்துவக் கொள்கையினை விளக்கும் நூல்களை 'மெய்கண்ட நூல்கள்' அல்லது 'மெய்கண்ட சாத்திரம்' எனக் கூறுவர்.

சைவ சித்தாந்த சாத்திர நூல்களை அருளிச் செய்தவர்கள் ஏழு அல்லது ஆறு அருளாளர்களாக இருப்பினும் சந்தானக் குரவர்கள் என்று குரு–சிஷ்ய பரம்பரை அமைப்பு முறையில் கீழ்கண்டவாறு அமைக்கப் பட்டு உள்ளன.

சிவபெருமான் சிவாகமங்களை திருவாய் மலர்ந்தருளி அதிகார நந்தி என்று சொல்லப்படும் நந்தி தேவருக்கு உபதேசம் செய்தார். நந்தி தேவர், சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் ஆகிய நால்வருக்கும் உபசேதித்தார். சனத்குமாரர் சத்திய ஞான தரிசினிக்கு உபதேசித்தார். சத்திய ஞானதரிசினி பரஞ்சோதி முனிவருக்கு உபதேசித்தார். பரஞ்சோதி முனிவர் சுவேத வனப் பெருமாளுக்கு (மெய்கண்டாருக்கு) உபதேசம் செய்து, தனது உபதேச குருவின் திருநாமம் ஆகிய சத்ய ஞான தரிசினி என்ற வடமொழிப் பெயரைத் தமிழில் மெய் கண்டார் எனச் சூட்டி அருள்பாலித்தார். இவ்வாறு மெய்கண்டார் உபதேசம் பெறும்பொழுது அவருக்கு வயது மூன்றரை. இவர் திருப்பெண்ணாடகத்தில் பிறந்து திரு வெண்காட்டு இறைவர் பெயராகிய திருவெண்காடர் என்ற பெயரைத்

தாங்கி திருவெண்ணை நல்லூரில் பரஞ்சோதி முனிவரால் உபதேசிக்கப் பெற்று மெய்கண்டார் என்ற தீக்ஷா நாமம் பெற்று சிவஞான போதம் என்ற ஈடு இணையற்ற தத்துவ நூலை அருளிச் செய்தார்.

### பதி

தலைவன்இ முழுமுதற் கடவுள், பிரம்மம், எனப் பல நாமங்களை நாம் அவனுக்குச் சூட்டி உள்ளோம். இறைவன் ஒருவன்தான். ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் ஜோதி. அவனுக்கு தோற்றமும் கிடையாது; முடிவும் இல்லை.'ஏகன், அனேகன் இறைவன் அடி வாழ்க' என்கிறது திருவாசகம். இறைவன் ஒருவனே. ஆனால் அவன் சூழ்நிலைக்கு ஏற்ப பல்வேறு வடிவங்கள் எடுத்து, சூழ்நிலை மாறியவுடன் தன் சுய நிலையை அடைந்து விடுவான். சைவ சமயத்தில் அவனுக்கு அவதாரம் என்பது கிடையாது.

- "ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி" – உபநிடதம்.

  மெய்ப் பொருள் ஒன்றே அதை நாம் பல பெயரில் அழைக் கிறோம்.

- "ஒரு நாமம், ஒருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" – திருவாசகம்

இறைவனது பண்புக்கூறு இரண்டு:

1. தத்துவம் கடந்த நிலை அறிவினால் அறியப்பட மாட்டாதவன். அறிவின் பிடிப்பிற்கு அப்பாற்பட்டவன்.
2. உள்ளார்ந்த நிலை பாலில் நெய் போல இயல்பாகவே எல்லாப் பொருள்களிலும் ஊடுருவிப் பரவியுள்ள தன்மை.

## நாஸ்திக தரிசனம்

### ஜைன தரிசனம்

சமண மதத்திற்கு ஜைன மதம் என்று பெயர். ஜின் என்ற வார்த் தைக்கு வெற்றி கொள்ளுதல் என்று பொருள். ஆசைகளை வெற்றி

கொள்ளுபவர்களுக்கு ஜைனர்கள் அல்லது சமணர்கள் என்று ஒரு அர்த்தம். ரிஷபதேவர் என்பவரால் ஜைன ஸித்தாந்தம் உருவாக்கப் பட்டது. அது 24 தீர்த்தங்கரர்களால் நாடு முழுவதும் பரப்பப்பட்டது. வர்த்தமானர் 24 வது தீர்த்தங்கரர் ஆவார். ஜைனர்களில் இரண்டு வகைகள் உண்டு. ஒரு வகைக்கு ஸ்வேதாம்பரர்கள் என்று பெயர். இரண்டாவது வகைக்கு திகம்பரர் என்று பெயர். மஹாவீரர் தவம் மூலமாகவே எல்லோரும் மோக்ஷத்தை அடைய வேண்டும் என்று வலியுறுத்தினார். அஹிம்சையை மிகவும் போதித்தார். உலகத்தில் உள்ள அனைத்து வஸ்துக்களையும் நேசிக்க வேண்டும் என்று சொன்னார். அறம் சார்ந்த புத்தகங்கள் எல்லாம் ஜைனர்களால் எழுதப்பட்டன. அறம் அவர்களுக்கு இன்றியமையாததாகும். 'அநேகாந்த வாதம்' என்று அவர்களுடைய கொள்கைகளுக்கு பெயர் உண்டு.

சமண மதத்தின் முக்கிய ஸித்தாந்தமாக அநேகாந்த வாதம் கருதப்படுகிறது. ஏகாந்தம் என்றால் ஒரு சார்பானது என்று பொருள் (அதாவது தான் கூறுகின்ற கருத்து மட்டுமே சரி என்று கூறுவது). அநேகாந்தம் என்பது ஒரு சார்பு அல்லாதது (பல சார்பானது) என்று பொருள். அநேகாந்த வாதம் மற்றவர்களின் கண்ணோட்டத்தையும், நம்பிக்கையையும் உள்ளடக்கிக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறது. ஒரு மாறுபட்ட கண்ணோட்டத்தில் ஒரு கருத்துக் கூறப்பட்டிருந்தாலும் அதை புறக்கணிக்கவோ, குறை கூறவோ கூடாது என்று அநேகாந்த வாதம் கருதுகிறது. மற்றவர்களின் கூற்றுக்களில் உண்மையிருந்தால் அதையும் உள்ளடக்கிக் கொள்ள வேண்டும் என்பதே அநேகாந்த வாதத்தின் கொள்கையாகும்.

இந்தச் சித்தாந்தத்தின்படி உண்மையானது, பல கண்ணோட்டங் களில் பலவிதமாக அறிந்து கொள்ளப்படுகிறது. எந்தவொரு கருத்தும் முழுமையான உண்மை இல்லை. சமணர்களின் கருத்துப்படி எல்லையற்ற அறிவைக் கொண்ட கேவலி (உண்மை நிலையை உணர்ந்த சமணத் துறவிகள்)களுக்கு மட்டுமே இதனுடைய உண்மை விடை தெரியும். மற்றவர்களால் உண்மையின் ஒரு பகுதியை மட்டுமே அறிந்து கொள்ள முடியும்.

சமணத்தில் கூறிய கருத்துக்கள் மட்டுமல்லாது பலரும் கூறியக் கருத்துகளையும் உட்படுத்தியே வாழ வேண்டும் என்று அநேகாந்தவாதம் கூறுகிறது.

ஆத்ரேய பத்ர காப்பியத்தில் உள்ள சுவை பற்றிய விவாதத்திலும் மற்றும் சரக ஸம்ஹிதை சரீர ஸ்தானத்தில் உடல் உறுப்புகள் உற்பத்தி யாவதைப் பற்றிய விவாதத்திலும் அநேகாந்தவாதம் கடைபிடிக்கப் பட்டுள்ளது.

## புத்த தரிசனம்

கபிலவஸ்து நகரின் அருகில் உள்ள லும்பினி என்னும் சோலையில் ஒரு அரச குடும்பத்தில் மகனாக பிறந்தார் பகவான் புத்தர். அவருடைய இயற்பெயர் ஸித்தார்த்தர். இதற்கு நினைத்ததை அடைந்தவர் என்று பொருள். ஸித்தார்த்தர் இளமையிலேயே திருமணம் செய்து கொண்டார். வெளியுலகையே காணாதவாறு வாழ்ந்தார். அவர் முதன் முதலில் வெளியில் சென்ற பொழுது மூப்பு, நோய், மரணம், என்ற வாழ்க்கையின் உண்மைகளைக் கண்டார். இவற்றிலிருந்து யாரும் தப்ப முடியாது என்பதை உணர்ந்த அவர் சிந்தனை வசப்பட்டார். பின்பு அரண்மனையை விட்டு வெளியேறினார். அவர் மெய்யுணர்வு பெற்றார். பின்பு புத்தர் ஆனார். அவர் கண்ட உண்மையை போதிக்க தொடங்கினார். வாரணாசிக்கு அருகில் உள்ள சாரநாத் என்ற இடத்தில் போதனையை நிகழ்த்தினார். வைகாசி பௌர்ணமி புத்தர் புனிதம் பெற்ற நாளாகக் கருதப்படுகிறது. பஞ்சசீலம் என்ற ஐந்து போதனைகளைக் கூறினார். அவை,

1. கொலை செய்யக்கூடாது.
2. களவு செய்யக்கூடாது
3. ஒழுங்கின்மை கூடாது
4. பொய் பேசக் கூடாது
5. மது கூடாது

என்பனவாகும்.

நல்லறிவு, நன்நினைவு, நல்ல செயல், நல்பேச்சு, நல் முயற்சி, நல்வாழ்வு, நல் விழிப்பு, நல் ஒற்றுமை என்ற எட்டு நல்ல நெறிகளைக் கூறினார்.

1. கொல்லாதே
2. பொய் பேசாதே
3. விபசாரம் செய்யாதே
4. பழி வாங்காதே
5. கடுஞ்சொல் சொல்லாதே
6. வம்பு பேசாதே
7. பிறர் பொருளை விரும்பாதே
8. பகைமை கொள்ளாதே
9. நேர்மையாக நினை

என்ற அறிவுரைகளைக் கூறினார்.

தகுந்தவர்களுக்கு தானம் செய், ஒழுக்கநெறிகளைப் பின்பற்று, நல்லெண்ணங்களை கொள், பிறருக்கு பணி செய், பெற்றோரையும், மூத்தோரையும் மதித்து நட, உன் புண்ணியங்களில் ஒருபகுதியை பிறருக்குக் கொடு. நல்ல கருத்துக்களைக் கேட்டு உணர். நல்ல கருத்துக்களை பிறருக்கு கற்றுக் கொடு. உன் குற்றங்களை நீக்கு போன்ற அறிவுரை களையும் போதித்தார்.

நாம் அழிவுக்கும் உள்ளாவோம் என்றும், அதிலிருந்து நம்மால் தப்ப இயலாது என்பதையும் அவர் கூறினார். ஆணோ, பெண்ணோ நோயுற்று, படுக்கையில் வீழ்ந்து சொந்த மலத்தில் புரண்டு, பிறருடைய உதவியில் வாழ வேண்டியிருப்பதைக் கண்டு உணர வேண்டும். நோயிலிருந்து தப்ப இயலாது என்பதை நினைத்துக் கொள்ள வேண்டும் என்றார். ஆணின் பிணமோ, பெண்ணின் பிணமோ ஒருசில நாளைக்கு பின் ஊதிப் போய் கருநீலம் பெற்று அழுகும் என்பதையும் எப்பொழுதும் நினைவு வைத்துக் கொள்ள வேண்டும் என்றார்.

மீனோ இறைச்சியோ உண்ணாமலிருப்பதோ, ஆடையின்றி இருப் பதோ, தலையை மழித்துக் கொண்டு இருப்பதோ, ஜடாமுடி வைத்துக் கொள்வதோ, அக்னிதேவனுக்கு வேள்வி செய்வதோ, ஒரு மனிதனைத் தூய்மைப்படுத்தாது என்றார். வேதம் ஓதுவதும், குருமார்களுக்கு காணிக்கை செலுத்துவதும், தெய்வங்களுக்கு பலி இடுவதும் மயக்கம் தெளியாத மனத்தை தூய்மைப்படுத்தாது என்றார்.

கோபம், பிணி, பொறாமை, மதவெறி, வஞ்சகம், தற்புகழ்ச்சி, பிறரை இகழ்ந்து பேசுவது இவைகள்தான் தூய்மையின்மை என்றார்.

## மத்தியம மார்கம்

கர்ம காண்டத்தை பூரணமாகச் சார்ந்திருப்பது அல்லது அறவே விடுவது, இவற்றிற்கு இடைப்பட்ட நிலை என்ற இரண்டு எல்லை யிலிருந்து விலகியிருப்பதற்கான நடுவழியை அவர் கூறினார். உடலை வருத்துவது உலக அறிவைப் பெறுவதற்கு உதவாது என்றார். ஆசை களுக்கு மனிதன் அடிமையாகிறான். ஆசையை ஒழிக்க வேண்டும் என்றார். சுயநலத்தை வென்றவன் ஆனந்தமாக இருப்பான் என்றார். எதையும் எதிர்பார்க்கக் கூடாது என்றார். பகை கூடாது என்றார். எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்ட வேண்டும் என்றார். அன்பு, கருணை, ஆனந்தம் போன்றவற்றை தியான மார்கமாக அவர் கூறினார். தனிமை யாக இருப்பதும், மனதில் அமைதி நிலைமையும் ஆன்மீக விஷயங்களில் இன்பம் காண்பதும், பரிபூரணமான தூய்மையும் அவர் விளக்குகிறார். நான் என்பது ஒரு பிழை, ஒரு பொய்த்தோற்றம், கனவு, கண்களை திறங்கள், உள்ளதை உள்ளபடி காணுங்கள், ஆறுதல் பெறுவீர்கள் என்றார். நான் என்பதே இல்லை என்று கண்டறிந்தவன் அஹங்காரத்தால் விழை கின்ற காமம், ஆசை அனைத்தையும் ஒழித்துவிடுவான் என்றார். முற்பிறவிகளிலிருந்து வந்துள்ள பற்று, பேராசை, போகநாட்டம் இவையே உலகிற் காணும் துயரங்களுக்கு காரணம் என்றார். கொல்வது தீமை என்றார். காமம் போகங்களுக்கு இணங்குவது தீமை என்றார். காமம், பேராசை போன்றவையே துக்கத்திற்கு காரணம் என்றார்.

புத்தர் பற்றற்றவர், குறுகிய உள்ளம் அற்றவர், பூரண ஞானம் பெற்றவர். நல்லதும் தீயதுமாகிய நம் செயல்கள் நிழல்போல நம்மைத் தொடர்கின்றன என்றார். காமத்தை அபாயம் என்றார். இரும்பிலிருந்து பிறக்கின்ற துரு இரும்பை அழித்துவிடுவதைப் போல நன்னெறி யிலிருந்து பிறழ்பவன் அவன் செயலை அழித்துவிடுகின்றன என்றார். பிரத்யக்ஷம், அனுமானம் போன்ற கொள்கைகளை புத்தர் நம்பினார்.

### சார்வாகர்கள்

நாஸ்திகர்களுக்கு சார்வாகர்கள் என்று பெயர். இவர்கள் வேதத்திற்கு எதிரானவர்கள். இது பிரஹஸ்பதியால் உருவாக்கப்பட்டது. சார்வாகார் கள் இதை பிரபலப்படுத்தியதால் இதற்கு சார்வாக தரிசனம் என்று பெயர் ஏற்பட்டது. இவர்கள் பிரத்யக்ஷத்தைத் தவிர வேறு எதையும் நம்புபவர் கள் இல்லை. அனுமானத்தையும், சப்த பிரமாணத்தையும் அர்த்தமற்றது என்று இவர்கள் கூறுகிறார்கள். இவர்கள் கடவுளை நம்புவதில்லை. மறுபிறப்பை இவர்கள் நம்புவதில்லை. இல்வாழ்க்கையில் நமக்கு கிடைக்கின்ற இன்பமே முக்கியமானதாக கருதுகிறார். வாழ்கின்ற காலத்தில் சுகமாக வாழ வேண்டும் என்று இவர்கள் கூறுகிறார்கள்.

### ரஸேச்வர தரிசனம்

பல தரிசனங்களும் இறந்தபிறகு அடையும் நிலையை மோக்ஷம் என்று குறிப்பிடுகின்றன. ஆனால் ரஸேச்வர வாதிகள் ஜீவன் முக்தியைப் பற்றிப் பேசுகின்றன. உடம்பை வைத்துக் கொண்டே மோக்ஷம் அடைய வேண்டும் என்றும், மோக்ஷத்திற்கு உடம்பு சாதனம் என்கிறார்கள். அதனால் உடலை வலுப்படுத்த வேண்டும் என்று அவர்கள் கூறுகிறார்கள். பாதரஸம் மூலம் உடம்பை சில சாதனைகள் செய்து அவற்றை பயன் படுத்தி உடலை வலிமையுடையதாக ஆக்கி அதன்மூலம் தவம் செய்து மோக்ஷப் பிராப்தியை அடையலாம் என்று கூறுகிறார்கள். இது ரஸவாதி களின் கருத்தாகும். இதற்கு ரஸ தரிசனம் என்ற பெயரும் உண்டு.

### ஸாங்க்யமும் ஆயுர்வேதமும்

ஸாங்க்ய தரிசனத்தில் கூறியுள்ள பிரத்யக்ஷம், அனுமானம், ஆப்தோபதேசம் என்னும் மூன்று பிரமாணங்களை சரகர் நோய் கண்டறிதலில் பயன்படுத்துகிறார்.

- ஆதி தைவிகம் (வினை சார்ந்தது). ஆதி பௌதிகம் (பஞ்ச பூதம் மற்றும் வெளிப்பொருள் சார்ந்தது) மற்றும் ஆத்யாத்மிகம் (உயிர் சார்ந்தது) என்ற தத்துவங்களை ஆயுர்வேதம் ஸாங்க்ய தரிசனத்திலிருந்து எடுத்துக் கொண்டது.

- **ஸாங்க்ய தரிசனம்** சிருஷ்டியைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது 25 **தத்துவங்களைக்** குறிப்பிடுகிறது.
- ஆயுர்வேதமும் 24 தத்துவங்களைக் குறிப்பிட்டு புருஷனை 25 வது தத்துவமாகக் கூறுகிறது.
- ஸுச்ருதர் புருஷர் எண்ணிலடங்காதவன் என்று கூறுகிறார். ஸாங்க்யமும் அவ்வாறே கூறுகிறது.
- ஆயுர்வேதத்தில் தாது உற்பத்தியில் கூறப்படும் பரிணாம வாதம், ஸாங்க்ய தரிசனத்தைச் சார்ந்ததே.
- ஆயுர்வேதத்தில் கூறப்படும் ஸத்காரிய வாதம், ஸாங்க்ய தரிசனத்தைச் சார்ந்ததே. ஸத்காரிய வாதம் என்றால் காரிய மானது, தன்னை வெளிப்படுத்திக் கொள்வது, முன் காரணத்தில் புதைந்துள்ளது என்பதாகும். எள் வித்தில் எள்ளெண்ணை புதைந்துள்ளது.
- ஸத்திலிருந்து ஸத் வருகிறது என்பதை ஸாங்க்யமும் ஆயுர் வேதமும் ஏற்றுக் கொள்கின்றன. ஜ்வர நிதானத்திலிருந்தே ஜ்வரம் வருகிறது, குல்மம் வருவதில்லை. ஸத்வ, ரஜோ, தமோ குணங்களின் தாக்கம் ஸாங்க்ய தரிசனத்தினால் ஏற்படுத்தப் பட்டதே.

## ஆயுர்வேதமும் வைசேஷிக தரிசனமும்

- பதார்த்தங்களை விளக்கிக் கூறும் முறையும், விசேஷம் என்று கூறும் பதார்த்தமும் வைசேஷிக தரிசனத்தின் தாக்கமாகும்.
- ஸாமான்யம் விசேஷம் என்று சரகர் தொடங்கும் தத்துவங்கள் சிகிச்சைக்கு மிக்க பலனளிப்பவை.
- வறட்சித் தன்மையால் வாதம் பிரகோபம் அடையும் என்பதும், எண்ணெய்ப்பசையினால் வாதம் சமனம் அடையும் என்பதும், ஸாமான்ய விசேஷ தத்துவத்தைச் சார்ந்ததே.
- வைசேஷிகர்களின் பரமாணுவாதத்தை சரகர் உடல் அவயவங் களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது குறிப்பிடுகிறார்.

- வைசேஷிகர்கள் ஆத்மா இருப்பதை ஒத்துக் கொள்கிறார்கள். ஆனால் இறைவனைப் பற்றிக் குறிப்பிடுவதில்லை.
- ஸுச்ருதத்தில் பிரக்ருதி, ஜாடராக்னி போன்றவை இறைவனுடன் ஒப்பிடப்பட்டுள்ளன.

## நியாய தரிசனமும், ஆயுர்வேதமும்

- நியாயம் என்ற வார்த்தை ஆயுர்வேதத்தில் காணப்படவில்லை.
- நியாயத்தில் அனுமானம் மிக அதிகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஆயுர்வேதத்**திலும்**, அனுமானத்திற்கு முக்கிய பங்கு உண்டு.
- பிரமாணங்கள், அனுமானத்ததின் தாக்கம், தத்வித்யா ஸம்பாஷணை கள், விவித வாதங்கள் மற்றும் இவற்றைப் போன்று சரக ஸம்ஹிதை விமான ஸ்தானம் 8ம் அத்தியாயத்தில் காணப்படும் பல விஷயங்களும் நியாய தரிசனத்தின் தாக்கமே.
- நியாயத்தில் கூறப்படுகின்ற காரிய அபிவிருத்தி கடகங்கள் எனப்படும் காரணம், காரியயோனி, காரியம், காரிய பலம், அனுபந்தம், தேசம், காலம், பிரவ்ருத்தி, உபாயம் என்று சரகர் விமானம் 8 ம் அத்தியாயத்தில் விளக்கிக் கூறுபன.வ நியாயத்தின் தாக்கமே.
- தந்திரயுக்தி நியாயத்தின் தாக்கமே. தந்திர யுக்திவிகாரம் நியாயத்தில் கூறப்பட்டதே.
- நியாயத்தில் கூறப்படும் 16 பதார்த்தங்கள் சரக ஸம்ஹிதை விமானம் 8 வது அத்தியாயத்தில் காணக் கிடைக்கின்றன.

## யோக தரிசனமும் ஆயுர்வேதமும்

- பதஞ்சலியே சரகர் என்ற ஒரு கூற்று உண்டு. யமம் நியம் என்று கூறப்படும் அக ஒழுக்கம் மற்றும் புற ஒழுக்கம் போன்றவை ஆசார ரஸாயனங்களாக சரகரால் மொழியப்பட்டுள்ளன. பிரத்யக்ஷம், அனுமானம், ஆப்தோபதேசம், நித்ரா, ஸ்ம்ருதி,

அப்யாஸம், ஸித்திகள், போன்றவை ஆயுர்வேதத்திலும் யோகத் திலும் ஒரேபோல் கூறப்பட்டுள்ளன.

## பூர்வ மீமாம்ஸமும் ஆயுர்வேதமும்

- யக்ஞங்கள், யாகங்கள் என்று பூர்வ மீமாம்ஸையில் விவரித்துக் கூறப்படும் விஷயங்கள் ஆயுர்வேதத்தில் தெய்வ விபாச்ரய சிகிச்சை என்னும் இறை சார்ந்த சிகிச்சையாகக் கூறப்பட்டுள்ளது.

## வேதாந்தமும் ஆயுர்வேதமும்

உலகத்தில் தன்னைப் பார்ப்பதையும், தன்னிடத்தில் எல்லா உலகத்தைப் பார்ப்பதையும் சரகர் வற்புறுத்துகிறார். இக்கருத்து வேதாந்த புத்தகமாகிய பகவத் கீதையிலும் உள்ளது. பஞ்சீகரண தத்துவம் , பரஸ்பர அனுப்ரவேச தத்துவம் என்று ஆயுர்வேதத்தில் கூறப்படும் தத்துவங்கள் வேதாந்தக் கருத்துக்களை ஒத்தவையே. 'பூர்வ ஜென்ம கிருதம்' என்று சரகர் பயன் படுத்தும் பதம் வேதாந்தத்துடன் தொடர்புடையதே.

## சமணமும், புத்தமும் ஆயுர்வேதமும்

கர்மம், பந்தம், மோக்ஷம், தர்மம், அதர்மம் போன்ற விஷயங்கள் சமணத்தைப் போன்று உள்ளன. புத்தரின் க்ஷண பங்குர வாதம் ஆயுர் வேதத்தில் காணப்படுகிறது. தசவித பாபங்கள் என்று வாக்படர் கூறுவது புத்தனால் வகுக்கப்பட்டதாகும்.

அஷ்டாங்க ஸங்க்ரஹம் மற்றும் அஷ்டாங்க ஹ்ருதயத்தில் பிரார்த்தனை பாடல் புத்தரைப் பற்றியேக் குறிப்பிடுகிறது. வாந்திக்கு மருந்து கொடுக் கின்ற சமயத்தில் புத்த மதக் கடவுளை வணங்குமாறு கூறப்படுகிறது.

## நாஸ்திக தரிசனமும் ஆயுர்வேதமும்

எல்லா தத்துவங்களையும் விட்டுவிட்டு உடலைப் பாதுகாக்க வேண்டும் என சரகர் கூறுவது இக வாழ்க்கைக்கு முக்கியத்துவம் ஆகும்.

ஆயுர்வேதம் படிக்கும் மாணவனுக்கு மேற்கூறிய பதார்த்த விஞ்ஞான அறிவு, இன்றியமையாததாகிறது. தோஷங்கள், குணங்கள், ஆத்மா தத்துவங்கள் போன்றவையெல்லாம் நாம் படித்த இந்திய ஞான மரபின்

தாக்கங்களாகவே உள்ளன. இவற்றையெல்லாம் ஆயுர்வேதத்திலிருந்து பிரிக்க இயலாது.

## பதார்த்தம்

இப்போது பதார்த்தம் என்னும் சொல் விளக்கத்திற்கு வருவோம். ஆயுர்வேத முதலாமாண்டு மாணவர்களுக்கு பதார்த்த விஞ்ஞானம் என்று ஒரு பாடம் இருக்கிறது. இது ஆயுர்வேதத்தின் தத்துவ அடிப் படையை விள்க்குகின்ற ஒரு பாடமாகும். ஆயுர்வேதத்தின் தத்துவம் சார்ந்த பின்னணி என்ன, நவீன மருத்துவத்திலிருந்து ஆயுர்வேதம் எவ்வாறு வேறுபடுகிறது என்பதை இது நமக்கு உணர்த்துகிறது. ஆயுர் வேதத்தின் வேதம் சார்ந்த பின்னணியை பதார்த்தம் மூலம் மாணவன் நன்றாக புரிந்து கொள்கிறான்.

பதார்த்தம் என்ற சொல் இரு பதங்களை (சொற்களை)க் கொண்டது. பதம் என்ற ஒரு சொல், அர்த்தம் என்று ஒரு சொல். பதம் என்ற சொல்லுக்கு வார்த்தை என்று பொருள், அர்த்தம் என்றால் பொருள் என்று கூறலாம்.

'பதஸ்ய பதயோ: பதானாம் வா அர்த்த: பதார்த்த:'

என்கிறார் ஸுச்ருதர்.

ஒரு குறிப்பிட்ட அர்த்தத்தை தருகின்ற சொற்களுக்கெல்லாம் பதார்த்தம் என்று பெயர் கூறலாம். அவை ஒரு தனிச் சொல்லாகவோ அல்லது சொற்களின் தொகுப்பாகவோ இருக்கலாம். கற்றுக் கொள்ளும் முறை என்ற பொருள்கூட பதார்த்தத்திற்கு உண்டு. இவைகளெல்லாம் மேலெழுந்தவாரியாக உள்ள அர்த்தங்களே.

பதார்த்தம் என்ற வார்த்தைக்கு திரவ்யம் என்ற அர்த்தமே ஒரு ஆயுர்வேதக் கண்ணோட்டத்தில் மிகவும் முக்கியமானதாகக் கருதப் படுகிறது. பதம் என்றால் சொல் என்றும், அர்த்தம் என்றால் பொருள் என்றும், பதார்த்தம் என்றால் பொருள்களை தெரிவிக்கின்ற சொல் என்றும் கூறப்படுகிறது. உதாரணமாக பானை, யானை போன்ற வார்த்தை களை ஒப்பிட்டு கூறுவது இலக்கணக்காரர்களுக்கு பொருந்துமே அல்லாமல் ஆயுர்வேதத்திற்கு பொருந்தாது. பதார்த்தம் என்ற சொல் திரவ்யங்களைக்

குறிக்கின்ற சொல்லாகவே நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இந்த உலகமே ஒரு பதார்த்தம் என்று நாம் குறிப்பிடலாம். உயிருள்ள பொருட்கள், உயிரில்லாத பொருட்கள், நுண்ணுயிர்கள், ஸ்தூல உயிர்கள், ஒரு குணம், ஒரு செயல் போன்ற எல்லாவற்றையுமே பதார்த்தம் என்று குறிப்பிடலாம். இந்த உலகம் முழுவதையும் இறை சிருஷ்டியில் உள்ள அனைத்து விஷயங்களையும் பதார்த்தம் என்று குறிப்பிடுவதில் தவறில்லை.

**பதார்த்த லட்சணம்**

வைசேஷிக தரிசனத்தில் பதார்த்தத்திற்கு மூன்று குணங்கள் கூறப் படுகின்றன:

1. அஸ்தித்வம் – நிலைபெற்று இருக்கிறது என்ற குணம்
2. அபிதேயத்வம் – ஒரு பெயரிட்டு அழைக்கும் தன்மையுடைய குணம்.
3. ஞேயத்வம் – அறியும்படியான ஒரு தத்துவமாகிய குணம்.

இதில் ‘அபிதேயத்வம்’ ஒரு முக்கியமான தன்மையாகக் கருதப் படுகிறது. எது இருக்கிறதோ, எதற்கு பெயர் கூற முடியுமோ, எதை அறியமுடியுமோ அவையெல்லாம் பதார்த்தங்களே. அப்படியென்றால் பதார்த்தங்கள் எண்ணிலடங்காதவை. வைசேஷிக தரிசனத்தின்படி ஆறு பதார்த்தங்கள் உள்ளன[18]. அவை

- திரவ்யம் – பொருள்
- குணம் – பொருளின் தன்மை
- கர்மம் – செயல்
- விசேஷம் – தனித்தன்மை
- ஸாமான்யம் – பொதுத்தன்மை
- ஸமவாயம் – ஒரு பொருளிலிருந்து பிரிக்கஇயலாது சார்ந்திருக்கும் குணம்

என்பனவாகும்.

நியாய தரிசனத்தின்படி ஏழு பதார்த்தங்கள் உள்ளன. ஏழாவது பதார்த்தத்தை அவர்கள் அபாவம் என்று குறிப்பிடுகிறார்கள். அபாவம்

என்றால் இல்லாத தன்மை என்று பொருள். வைசேஷியர்கள், நியா யிகர்கள் கூறுகின்ற ஏழாவது பதார்த்தத்தை (அபாவத்தை) ஏற்றுக் கொள்வதில்லை. ஏனென்றால் ஒரு பொருள் இருக்கிறது என்பதையும், இல்லை என்பதையும் புலன்களைச் சார்ந்தே நாம் கண்டறிகிறோம். இல்லாத பொருள்களினால் எந்த பலனும் இல்லை என்பது அவர்களின் கருத்து. ஆதலால் அவர்கள் அபாவம் என்ற பதார்த்தத்தை ஏற்றுக் கொள்வதில்லை.

பதார்த்தங்களை பாவ பதார்த்தம் என்றும், அபாவ பதார்த்தம் என்றும் இரு வகைகளாகப் பிரிக்கலாம். பாவ பதார்த்தங்கள் ஆறு வகைப்படும். அபாவ பதார்த்தங்கள் நான்கு வகைப்படும்.

மேலே கண்ட ஆறு பதார்த்தங்களும் பாவ பதார்த்தங்களாகும். அபாவ பதார்த்தங்கள் பிராக் அபாவம், பிரத்வம்ஸா அபாவம், அத்யந் தாபாவம், அன்யோன்யாபாவம் என நான்கு வகைப்படும்.

குணங்களினால் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளும் பொருட் களுக்கு பாவ பதார்த்தம் என்றும், வெளிப்படுத்திக் கொள்ளாதவற்றிற்கு அபாவ பதார்த்தம் என்றும் குறிப்பிடப்படுகிறது. பாவம் என்ற சொல்லுக்கு வெளிப்பாடு, குணம், தன்மை என்று பல அர்த்தங்கள் உண்டு. இந்த ஆறு பதார்த்தங்களுக்கும் சில பொதுத் தன்மைகளும், சில விசேஷத் தன்மை களும் காணப்படும். இதற்கு ஸாதர்ம்யம் என்றும், வைதர்ம்யம் என்றும் பொருள்.

1. நாம் முதலில் கூறிய அஸ்தித்வம், அபிதேயத்வம், ஞேயத்வம் இவை பதார்த்தங்களின் பொது குணங்களாகும்.

2. திரவ்யம், குணம், கர்மம், ஸாமான்யம், விசேஷம் இவற்றிற்கு ஸமவாயித்வம் (ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்க இயலாத தன்மை) மற்றும் அநேகத்வம் (எண்ணற்ற தன்மைகள்) என்ற பொது குணங்களும் உண்டு.

3. திரவ்யம், குணம் மற்றும் கர்மத்திற்கு ஸாமான்யம், விசேஷம், ஸமவாயம் என்கிற பொது குணங்கள் உண்டு. இதல்லாமல்

ஒவ்வொரு பதார்த்தத்திற்கும் சில சிறப்பு குணங்கள் இருக்கலாம். உதாரணமாக பால் என்பதை ஒரு பதார்த்தம் என்று எடுத்துக் கொண்டால் எல்லா பாலுக்கும் சில பொதுவான குணங்களும், பசும்பாலுக்கென சில விசேஷ குணங்களும் காணப்படும்.

## ஆயுர்வேதமும் பதார்த்தமும்

வைசேஷியர்களின் பதார்த்தங்களை ஆயுர்வேதம் ஏற்றுக் கொள்கிறது. சரகர் ஸூத்திர ஸ்தானத்தில் கூறியுள்ளபடி சாமான்யம், விசேஷம், குணம், திரவ்யம், கர்மம், ஸமவாயம், என்று பதார்த்தத்தை பிரிக்கலாம். சரகர் பதார்த்தத்தைக் குறிப்பிடும் வரிசை முறை வைசேஷிகர்கள் குறிப்பிடும் வரிசை முறையிலிருந்து சற்று மாறுபடுகிறது. ஆனால் வைசேஷிகர்கள் கூறிய ஆறு பதார்த்தங்களையே சரகரும் கூறியிருக் கிறார். இவ்வாறு மாற்றிக் கூறுவதற்கு காரணம் ஸாமான்யம் மற்றும் விசேஷம் என்கின்ற இரண்டு பதார்த்தங்கள் சிகிச்சையில் முக்கிய பங்கு வகிக்கின்றன என்பதால் ஆகும். சரகர் சிகிச்சைக்கான புத்தகத்தை எழுதியவர் என்பதாலும், ஸாமான்யம், விசேஷம் என்ற பதங்களை முதலில் பயன்படுத்துகிறார்.

ஆயுர்வேதம் என்ற சொல்லுக்கு வாழ்க்கையைப் பற்றிய அறிவியல் என்று பொருள். ஆயுர்வேத சாஸ்திரம் வாத பித்த கபங்களைச் சார்ந் திருக்கிறது. வாத பித்த கபங்களின் சமநிலையை ஆரோக்கியம் என்றும் சமநிலையிலிருந்து மாறுபட்டால் அதை நோய் என்றும், ஆயுர்வேதம் கூறுகிறது. ஆயுர்வேதம் சிகிச்சை அளிக்கும் பொழுது

'ஸாமான்யம் விருத்தி காரணம், விசேஷம் க்ஷய காரணம்'[19]

என்கிற தத்துவத்தை பயன்படுத்துகிறது. ஒன்றுக்கொன்று ஸம குணமுள்ள பொருட்கள் தோஷங்களை அதிகரிக்கும் என்றும், விசேஷ / மாறுபட்ட குணங்களுள்ள பொருட்கள் தோஷங்களை குறைக்கும் என்றும் ஆயுர்வேதம் கூறுகிறது.

உதாரணமாக வாதத்தின் தன்மை வறட்சி என்று எடுத்துக் கொள்வோம். வறட்சியான பிரதேசத்தில் வாழ்ந்தால் அது வாதத்தை அதிகரிக்கும்.

வாதத்தின் வறட்சிக்கு எதிர்குணம் எண்ணெய் பசை உள்ள தன்மை ஆகும். உடலில் எண்ணெய் தேய்த்துக் கொள்வதால் வாதத்தின் வறட்சி என்கின்ற குணம் தணிவடையும். இவ்வாறு பொதுக் குணங்கள் நோயை அதிகரிக்கும் என்றும், தோஷத்தின் எதிர்மறைக் குணங்கள் நோயைத் தணிக்கச் செய்யும் அல்லது தோஷங்களை தணிக்கச் செய்யும் என்றும் ஆயுர்வேதம் கருதுகிறது. இதைப்பற்றியுள்ள அதிக விவரங்களை நாம் பின்னால் காண்போம்.

குணங்களும் கர்மங்களும் எப்பொழுதும் திரவ்யங்களைச் சார்ந்திருக்கின்றன என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்வோம்.

## ஆயுர்வேதத்தில் தரிசனம்

**(நூலாசிரியரின் அனுபவ உரை)**

ஆசார்யாத் பாதம் ஆதத்தே
பாதம் சிஷ்ய ஸ்வமேதயா: |
பாதம் ஸப்ரஹ்மசாரிப்யோ:
பாதம் காலக்ரமேண ச ||

மாணவன் அல்லது பிரம்மச்சாரி என்பவன் தன்னுடைய ஆசிரியரிடமிருந்து கால்பாகம் அறிவைப் பெறுகிறான், மற்றொரு கால்பாகத்தை தன் புத்தியினாலும், மூன்றாவது பாகத்தை தன் உடன் இருக்கும் மற்ற மாணவர்களுடன் கலந்து பேசுவதன் மூலமும், நான்காவது பாகத்தை தன்னுடைய வாழ்நாளில் அனுபவங்கள் மூலமாகவும் பெறுகிறான்.

ஆயுர்வேதம் நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கும் ஒரு மருத்துவ முறையாகும். இது வந்த நோய்களைக் குணப்படுத்துவதற்கும் நோய் வராமல் தடுப்பதற்கும் பயன்படுகிறது. ஆரோக்கியமான உடல்நிலையும், மனநிலையும் ஆரோக்கியத்தின் இலட்சியமாகிறது. ஆயுர்வேதம் ஆறு தரிசனங்களிலும் சில சில பகுதிகளை ஏற்றுக் கொண்டுள்ளது. உடல் நிலைச் சார்ந்த பகுதிகள் எங்கு கூறப்பட்டுள்ளதோ அதையெல்லாம் எடுத்துக் கொண்டுள்ளது. ஆஸ்திக தரிசனத்தையோ, நாஸ்திக தரிசனத்தையோ ஆயுர்வேதம் பிரிவுப்படுத்திப் பார்ப்பதில்லை. உலகத்தின்

சிருஷ்டியைப் பற்றியும், புருஷனையும், பிரக்ருதியைப் பற்றியும் ஸாங்க்யத்திலிருந்து எடுத்துள்ளது. பிரம்ம ஞானத்தைப் பற்றிய அறிவும், ஆத்மாவைப் பற்றிய அறிவும் வேதாந்த கருத்துக்கள் ஆகும். ஆத்மாவைப் பற்றி, சரக ஸம்ஹிதை ஸூத்ர ஸ்தானம் முதல் அத்தியாயத்திலும், சரீர ஸ்தானத்திலும் காணப்படுகின்றன. இவை வேதாந்த கருத்துகள் ஆகும். பதார்த்தங்களைப் பற்றி வைசேஷிகத்திலிருந்து ஆயுர்வேதம் கருத்துக்களை எடுத்துக் கொண்டுள்ளது. மோக்ஷத்தைப் பற்றியக் கருத்துக்கள் ஸாங்கியத்திலிருந்தும், யோகத்திலிருந்தும் எடுத்துக் கொண்டுள்ளது. நான்கு பிரமாணங்கள் நியாய தரிசனத்திலிருந்து ஆயுர்வேதம் எடுத்துக் கொண்டுள்ளது. நோய்களைக் கண்டறிய ஆயுர்வேதம் இந்த நான்கு பிரமாணங்களையும் பயன்படுத்துகிறது. இகவாழ்வில் நன்றாக வாழ வேண்டும் என்ற கருத்துக்கள் ரஸாயன வாஜீகரண அத்தியாயங்களில் காணப்படுகின்றன. இது நாஸ்திக தரிசனமாகிய சார்வாகர்களின் கருத்துக்கள் ஆகும். ஆசார்ய ரஸாயனம் என்று சரகர் கூறுகின்ற நல்லொழுக்கம் ஜைன புத்த மதங்களைச் சார்ந்ததாகும். ஆயுர்வேதத்தில் ரஸ சாஸ்திரம் ரஸேச்வர வாதத்தை சார்ந்ததாகும். அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் காணப்படுகின்ற ஸத்விருத்தம் போன்றவை புத்த மதத்தை சார்ந்ததாகும். இவை எல்லா தரிசனங்களும் ஆயுர்வேதத்துடன் தொடர்பு உடையதாகக் காணப்படுகின்றன. ஆனால் அதிகமாக ஸாங்கியத்தின் கருத்துக்கள் காணப்படுகின்றன. ஆயுர்வேதம் முழுவதுமாக எந்த தரிசனங்களையும் சார்ந்திருக்கவில்லை. தனெக்கென்றே சில கொள்கைகளைக் கொண்டுள்ளது.

'தர்மார்த்த காம மோக்ஷாணாம் ஆரோக்யம் மூலகாரணம்' என்றே ஆயுர்வேதம் கூறுகிறது[21]. அறம், பொருள், இன்பம், வீடு இவற்றை அடைவதற்கு ஆரோக்கியமே வேண்டும் என்ற கொள்கையுடன் எழுதப்பட்ட ஒரு சாஸ்திரமாகும். நோய் வராமல் தடுப்பதற்கு ஸ்வஸ்த்த விருத்தம் (உடல் நலம் பெறுதல்) என்றும், ஸத்விருத்தம் (ஒழுக்க நியதி) என்றும் சில அத்தியாயங்களை ஆயுர்வேத ஆசார்யர்கள் எழுதியிருக்கிறார்கள். சரகர் ஸாங்கிய தரிசனங்களைச் சார்ந்திருந்தாலும் தனக்கென சில கொள்கைகளை உலக சிருஷ்டியைப் பற்றிக் குறிப்பிடும பொழுது குறிப்பிடுகிறார். பதார்த்த குணத்தை வைத்துக் கொண்டே திரவ்ய குணம்,

கிரியா சரீரம், ஸ்வஸத்த விருத்தம், நிதானம், சிகிச்சை போன்றவற்றை நாம் புரிந்து கொள்கிறோம். ஆயுர்வேதம் ஆயுளைப் பற்றி விளக்குகிறது. நமது வாழ்க்கைக்கு ஆயுள் என்று பெயர். ஆயுர்வேதத்தில் புருஷன் என்று கூறினால் இது மனிதனைக் குறிக்கும் வார்த்தையாகும். இந்த புருஷன் என்பவன் உடல், மனம், ஆத்மா இவற்றின் இணக்கமாகும். இந்த மூன்றைப் பற்றியும் அறிந்து கொள்ள ஆயுர்வேதம் உதவுகிறது. திரவ்ய குணம் முழுக்க முழுக்க பதார்த்த விஞ்ஞானத்தை சார்ந்ததாகும். திரவ்யங்கள், குணங்கள், கர்மங்கள், திரவ்யத்தின் ஸமவாயம், விசேஷம் போன்றவற்றின் மூல தத்துவங்கள் பதார்த்த விஞ்ஞானத்திலேயே உள்ளன. நோய்களைக் கண்டறிவதற்கு நிதானம் முக்கிய பங்கு வகிக்கிறது. நிதானங்கள் பிரமாணத்தை சார்ந்திருக்கின்றன. ஆயுர்வேத சிகிச்சை முழுவதும் பிரமாணத்தைச் சார்ந்திருக்கிறது. எனவே பதார்த்த விஞ்ஞானம் ஆயுர்வேதத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது என்பதை உணர்கிறோம்.

### சரகத்தில் நியாய தரிசனத்தின் தாக்கமும், காரண காரிய சித்தாந்தமும்

உலகத்திலுள்ள பொருட்கள் எல்லாம் ஸத்தாகவும் (மெய்வடிவு), அஸத்தாகவும் (மாய வடிவு) உள்ளன. அவற்றை புரிந்து கொள்வதற்கு ஆப்தோபதேசம் என்னும் சான்றோர் வாக்கு, பிரத்யக்ஷம் என்னும் நேர்காணல், அனுமானம் மற்றும் யுக்தி எனும் யோசனை பயன்படு கின்றன. ரஜஸ் மற்றும் தமோ குணங்களிலிருந்து மனதானது தூய்மைப் படுத்தப்பட்டு மெய்ஞான அறிவினால் (ஸத்வ குணத்தினால்) கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் இவற்றை யார் அறிகிறார்களோ அவர்களைஆப்தர்கள் என்று அழைக்கிறோம். இந்த ஆப்தர்களுக்கு அறிவில் எவ்வித குறையும் கிடையாது. இவர்கள் பொய் பேசமாட்டார் கள். இவர்கள் நம்பத் தகுந்தவர்கள். இந்த ஆப்தர்களின் வாக்கியத்தை ஆயுர்வேதம் ஏற்றுக் கொண்டுள்ளது. அறிவானது பொருட்களுக்கும் புலன்களுக்குமுள்ள தொடர்பினால் ஏற்படுகிறது. புலன்களை இந்திரியம் என்றும், பொருட்களை அர்த்தம் என்றும் ஆயுர்வேதம் கூறுகிறது. இத்தொடர்பை சக்ரபாணி (சரகத்திற்கு உரை எழுதியவர்) ஆறு வகையாகப் பிரிக்கிறார்.

1. திரவ்யங்களுடன் புலன்களுக்கு ஏற்படுகின்ற தொடர்பை 'ஸம்யோகம்' என்கிறார்.

2. திரவ்யங்களைச் சார்ந்த குணங்களுடன் ஏற்படுகின்ற தொடர்பை 'ஸம்யுக்த ஸமவாயம்' என்கிறார். ஸமவாயம் என்றால் பிரிக்க முடியாத தன்மை என்று பொருள்.

3. குணத்திலிருந்து பிரிக்க முடியாத குணதத்வம் என்ற தொடர்பை ஸம்யுக்த 'ஸமவேத ஸமவாயம்' என்று கூறுகிறார். (அதாவது ஒரு பானை இருக்கிறது. பானை சிவப்பு நிறமுடையதாக இருக்கிறது. இந்த சிவப்பு நிறத்தில் வர்ணத்துவம் (நிறத்தன்மை) என்ற தன்மை இருக்கிறது. அந்த நிறமூட்டும் தன்மையை நாம் நிறத்திலிருந்து பிரிக்க முடியாது. அத்தகைய ஒரு தன்மையை நாம் கண்ணால் காண்கிறோம். இதற்கு ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம் என்று பெயர்.

4. சக்ரபாணி காதினால் கேட்கின்ற ஒலிகளை 'ஸமவாயம்' என்று கூறுகிறார். ஒலியானது ஆகாசத்தை சார்ந்துள்ளது. அந்த ஒலிக்கும் ஆகாசத்திற்கும் ஸமவாயம் (பிரிக்க இயலா) என்ற தொடர்பு உள்ளது.

5. காதுக்கும் ஒலிக்கும் ஏற்படுகின்ற ஒரு தொடர்பினால் நம்மால் ஒலியை உணரமுடிகிறது. ஒலிக்கு, ஒலியை உண்டாக்கும் ஒரு தன்மை நுண்ணியதாக உள்ளது. இதற்கு சப்தத்வம் என்று பெயர். நாம் ஒலியைக் கேட்கும் பொழுது அந்த நுண்ணிய ஒலியை ஒலி அலைகளும் இணைந்து வருகிறது. இதற்கு ஸமவேத ஸமவாயம் என்று பெயர்.

6. விசேஷா விசேஷ்யபாவம் – இல்லை என்பதை உணர்வதற்கு தேவைப்படும் அறிவு விசேஷ விசேஷ்ய பாவம் எனப்படும். உதாரணமாக இங்கு பானை இல்லை. இதற்கு முன் பானை இருந்தது, ஆனால் இப்போது இல்லை. இங்கு பானை இல்லை என்பதை இருப்பதாக அறிவதற்கு தேவைப்படும் அறிவையே விசேஷா விசேஷ்ய பாவம் என்கிறோம்.

புலன்களுக்கும், பொருட்களுக்குமிடையே உடனடியாக நடக்கும் தொடர்பிற்கு பிரத்யக்ஷம் என்று பெயர். அனுமானம், நினைவு போன்றவை பிரத்யக்ஷத்தைச் சார்ந்து பின்னால் வருகின்றன என்கிறார் சக்ரபாணி. இதனை பாரம்பரியம் என்று கூறுகிறார். பொருளுக்கும் இந்திரியத்திற்கும் உள்ள தொடர்பே அறிவுக்கு காரணமாகிறது. அதனால் அத்தொடர்பை மிகவும் வலியுறுத்தி கூறுகிறார். இது நியாய சாஸ்திரத்தைச் சார்ந்தே உள்ளது.

சக்ரபாணி நிர்விகல்ப பிரத்யக்ஷத்தை விளக்கிக் கூறவில்லை. அனுமானமானது பிரத்யக்ஷத்தை சார்ந்துள்ளது என்கிறார். அனுமானம், காரியம் முதல் காரணம் வரை உள்ள விஷயங்களை விளக்குகிறது என்று கூறுகிறார். கர்பாதானத்தினால் கர்பம் ஏற்படுகிறது என்று கூறும் பொழுது கர்பத்திற்கான பெண்ணுடன் ஆணுக்கு உள்ள தொடர்பும் (இல்வாழ்வு) அதனால் ஏற்பட்ட கர்பத்தையும் அறிகிறோம். இது காரணமும் காரியமும் ஆகும். சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானம் முதல் அத்தியாயத்தில் 20 ஆம் ஸ்லோகத்தில் சக்ரபாணி எழுதியுள்ள உரையில் இவை மிக அற்புதமாகக் கூறப்பட்டுள்ளன. வேறு எந்த தரிசனங்களிலும் (சரகம் தவிர) யுக்தி ஒரு தனி தரிசனமாகக் கூறப்படவில்லை. சக்ரபாணி யுக்தியை தனி பிரமாண மாகக் கூறவில்லை. மற்ற பிரமாணங்களுக்கு இது உறுதி அளிப்பதால் இதை பிரமாணமாகக் கருதுகிறோம் என்று கூறுகிறார். ஒரு நிலத்தைப் பார்த்து இங்கு நல்ல விளைச்சல் வரும் என்றோ, இங்கு விளைச்சல் வராது என்றோ நாம் கூறுகிறோம். இது மழையையும், தட்ப வெப்பநிலையையும் சார்ந்திருக்கிறது. இவ்வாறு பல விஷயங்களைச் சிந்தித்து ஒரு முடிவிற்கு வருவதால் யுக்தியை ஊகம் என்றும் குறிப்பிடுகிறார். ஆனால் சரகர் யுக்தியை தனிப் பிரமாணமாகக் கூறுகிறார். ஏனென்றால் சிகிச்சைக்கு யுக்தி ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது.

நோய் உண்டாவதற்கான காரணங்கள், நோய்க்கான லக்ஷணங்கள், நோய்க்கான தன்மைகள் இவற்றையெல்லாம் கேட்டறிந்து யுக்தி பூர்வம் (common sense / wisdom) சிகிச்சை செய்ய வேண்டும் என்பதால் யுக்தி ஒரு தனிப் பிரமாணமாகக் கருதப்படுகிறது. சரகர் மருத்துவக் கண்ணோட் டத்தில் எழுதியதால் யுக்தியைத் தனியாகக் கருதினார். மற்ற தரிசன

வாதிகள் வீடுபேறு அடைவதை ஒரு முக்கிய நோக்கமாகக் கொண்டு எழுதியதால் அவர்கள் யுக்திக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை.

யுக்தியானது ஒரு காரியத்திலிருந்து காரணத்தைப் புரிந்து கொள்ள உதவுகிறது. ஆனால் மூன்று காலங்களையும் சரகர் கூறுவதைப் போல் அறிந்து கொள்ள இயலாது என்று சக்ரபாணி கூறுகிறார். இதற்கான விளக்க உரைகள் ஒன்றாம் அத்தியாயத்தில் காணக் கிடைக்கின்றன.

இங்கு ஒரு திருஷ்டாந்தம் அல்லது உதாரணம் காணப்படவில்லை. எங்கெங்கு புகையுள்ளதோ அங்கங்கு நெருப்பு உள்ளது என நியாய தரிசனம் கூறுகிறது. காரண காரிய ஸித்தாந்தங்களை ஆதாரமாகக் கொண்டு இது நடந்து கொண்டு இருக்கிறது, இது நடக்கும் என்று ஊகிப்பதெல்லாம் யுக்தியைக் கொண்டு சார்ந்தது என்பது சரகரின் கருத்தாகும். சாந்தரக்ஷிதர், கமலசீலர் (நவீன புத்தமத அறிஞர்கள்) போன்றவர்கள் இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. இவர்கள் புத்த மதத்தை சார்ந்தவர்கள் ஆவார்கள். இவர்களுக்கு யுக்தி என்று ஒன்று தனியாகக் கிடையாது. சக்ரபாணி இதற்கு விளக்கம் கொடுக்கும் பொழுது யுக்தி என்பது சரகரின் கண்ணோட்டத்தின்படி காரிய காரணமாக இல்லை என்று கூறுகிறார்.

பலவிதமான விஷயங்களைக் கண்டறிந்து நாம் உண்டாக்கும் ஒரு முடிவிற்கே யுக்தி என்று பெயர் என்றும் கூறுகிறார். சரகர் முதலில் மூன்று பிரமாணங்களைக் குறிப்பிடுகிறார். பிரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்பனவாகும் அவை. அனுமானத்தை ஒரு தர்க்கமாகவும், யுக்திபூர்வ மாகவும் கூறுகிறார். கண்ணால் காண முடியாத விஷயங்களை நாம் தர்க்கித்து உணர வேண்டும் என்றும் கூறுகிறார்.

சக்ரபாணி யுக்தியை அபின்னபாவம் என்று கூறுகிறார். ஆப்தோப தேசத்தை சரகர் ஐதீகம் என்றே குறிப்பிடுகிறார். ஐதீகம் என்றால் மரபு என்று ஒரு அர்த்தமும் உண்டு. பெரியவர்களின் வார்த்தையை மரபு என்று சரகர் கூறுவதை நாம் காண வேண்டும் (சரக ஸம்ஹிதை 3.8.6.33).

தர்க்கங்களுக்கும், பதார்த்த விஞ்ஞானத்திற்கும் சரக ஸம்ஹிதையில் ரோக பிஷக்ஜிதீயம் என்ற 8வது அத்தியாயம் முழுவதும் அர்ப்பணிக்கப்

பட்டுள்ளது. நியாய சாஸ்திரத்தைச் சேர்ந்த பல விஷயங்கள் இங்கு காணக்கிடைக்கின்றன. நட்புடன் உரையாடல், பகையுடன் உரையாடல், சபையின் விளக்கம், சபையில் நடந்து கொள்ளும் விதம், போன்றவை காணக் கிடைக்கின்றன. இங்கெல்லாம் சரகரின் கருத்துக்கள் நியாய தரிசனத்தின் கருத்துக்களை ஒட்டியே உள்ளன.

ஸித்தாந்தங்களைச் சரகர் நன்றாகக் கூறியுள்ளார். ஸர்வ தந்திர ஸித்தாந்தம், பிரதி தந்திர ஸித்தாந்தம், அதிகரண ஸித்தாந்தம், அப்யுபகம ஸித்தாந்தம் மற்றும் சப்தங்களைப் பற்றியும் சரகர் விவரித்துக் கூறி யுள்ளார். இது அல்லாமல் ஆயுர்வேதத்தைப் படிப்பதற்கு 10 விஷயங் களைச் சரகர் முக்கியமாகக் கூறுகிறார். அவை

1. காரணம் – எதனால் நாம் ஒன்றை அறிந்து கொள்கிறோமோ அதற்கு காரணம் என்று பெயர்
2. கரணம் – செயலைச் செய்யும் கருவி
3. காரிய யோனி – எதனால் ஒரு மாற்றம் உருவாகிறதோ அதற்கு காரிய யோனி என்று பெயர்
4. காரியம் – செய்து முடிக்கப்பட்ட பொருள்
5. காரிய பலன் – செய்து முடிக்கப்பட்ட பொருளினால் ஏற்படும் பலன்
6. அனுபந்தம் – அந்த காரியத்தை தொடர்ந்து வரும் நல்ல, கெட்ட விஷயங்கள்
7. தேசம் – வாழுமிடம்
8. காலம் – தட்பவெப்ப நிலை
9. பிரவ்ருத்தி – மனிதன் எடுக்கும் முயற்சி
10. உபாயம் – எதன் மூலம் இச்செயல்களைச் செய்கிறோமோ அதற்கு உபாயம் என்று பெயர்.

- சிகிச்சையில் மருத்துவர் காரணமாகிறார்.
- மருந்துகள் கரணமாகின்றன.
- தோஷங்களை சமநிலைக்கு கொண்டு வரவேண்டும் என்பது காரிய யோனியாகிறது.

- தோஷங்களை சிகிச்சையின் மூலம் சம நிலைக்கு கொண்டுவருவது காரியமாகிறது.
- இதனால் ஏற்படும் மன உடல் மகிழ்ச்சி காரிய பலன் ஆகிறது.
- இந்த சிகிச்சையினால் ஏற்பட்ட நீண்ட ஆயுள் அனுபந்தமாகிறது.
- நோயாளியின் உடலும், நோயாளி தங்கியிருக்கும் இடமும் தேசமாகிறது.
- நோய் வந்த காலமும் நோயினால் துன்பப்பட்ட சமயமும் காலமாகிறது.
- மருத்துவன் நோயாளியை நோயிலிருந்த விடுபட முயற்சி செய்வது பிரவ்ருத்தியாகிறது.
- மருத்துவன், மருந்து இவற்றில் காணப்படும் குணாதிசயங்கள் உபாயமாகிறது.

இவ்வாறு ஆயுர்வேதத்தில் காரண காரிய ஸித்தாந்தம் பயன் படுகிறது.

ஸுச்ருதர் உத்திர தந்திரத்தில் 32 தந்திர யுக்திகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். சரகர் ஸித்தி ஸ்தானத்தில் 36 தந்திர யுக்திகளைக் குறிப்பிடுகிறார். இவை வாதங்களிலிருந்து வேறுப்பட்டவை. தந்திர யுக்திகளின் மூலமே ஒரு சாஸ்திரம் அல்லது ஒரு புத்தகத்தை பற்றி நாம் படித்து உணர்ந்து கொள்ள முடியும். ஆதலால் ஆயுர்வேத புத்தகங்களில் தந்திரயுக்தி அழகாக விளக்கப்பட்டுள்ளது. சரகரும் ஸுச்ருதரும் ஆதிகாலத்தில் புத்தகங்களை எழுதியதால் தந்திரயுக்திக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். பின்னால் வந்த அஷ்டாங்க ஹ்ருதயம் போன்ற புத்தகங்களில் தந்திரயுக்தி தனியாக விளக்கப்படவில்லை.

டாக்டர் மஹா மஹோபாத்யாயா சதீஷ் சந்திர வித்யா பூஷண், ஹிஸ்டரி ஆப் இந்தியன் லாஜிக் என்ற புத்தகத்தில் கரகரானவர் மேதாதிதி கௌதமர் எழுதிய அன்வீஷிகி என்ற புத்தகத்தை சார்ந்து பல கருத்துக் களைக் கூறுவதாகக் கூறுகிறார். மேலும் அவர் அன்வீஷிகியின் தத்துவங் கள் உண்மையான ஆயுர்வேதத்தைச் சார்ந்திருக்கவில்லை என்றும், புனர்வஸு ஆத்ரேயர் இவற்றைக் கூறவில்லை என்றும், புனர்வஸு

ஆத்ரேயருக்கு பின்னால் வந்த சரகரானவர் இவற்றை எடுத்துக் கொண் டிருக்கலாம். ஆனால் சரகருக்கு முற்பட்ட காலங்களில் இவற்றின் தாக்கம் காணப்படவில்லை என்றும் கூறுகிறார்.

சரக ஸம்ஹிதையில் பல முனிவர்களைப் பற்றியும், ரிஷிகளைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன. அவர்கள் எல்லோரும் நோய்க்கான காரணங்கள் பற்றியும், அவற்றிலிருந்து எவ்வாறு விடுபட வேண்டும் என்பதைப் பற்றியும் இமயமலையில் தர்க்கம் செய்து விவாதித்ததாகக் கருத்துகள் காணப்படுகின்றன. சரக ஸம்ஹிதை நிதான ஸ்தானத்தில் ஹேதுவிற்கு பல பரியாயங்களைச் சரகர் குறிப்பிடுகிறார். ஹேது, நிமித்தம், ஆயதனம், காரியம், காரணம், பிரத்யயம். ஆயதனம் போன்ற வார்த்தைகள் புத்த மதத்தைச் சார்ந்தவையாகும். புத்தமதத்தை அல்லாத பிற மதங்களில் பிரத்யயம் என்ற வார்த்தைக் காணப்படவில்லை. இது முதன்மையாக எழுதிய அக்னிவேச தந்திரத்தை சரகர் பின்பு மாற்றி எழுதும் பொழுது மாற்றிய விஷயங்களாகவே காணப்படுகின்றன.

ஆயுர்வேதமானது மூன்று கேள்விகளை ஆதாரமாகக் கொண்டுள்ளது. நோய் எவ்வாறு உருவாகிறது? நோயை எப்படிக் கண்டுபிடிக்கலாம்? அதிலிருந்து எவ்வாறு விடுபடலாம்? என்பதே அவை. இவை ஆயுர் வேதத்தில் மிக முக்கியமான விஷயங்களாகும்.

ஆக்ஷபாதரின் நியாய ஸூத்திரமானது நாகார்ஜுனரின் மத்யாமிக காரிகையிலிருந்தும், ஜாங்கவபாக ஸூத்திரத்திலிருந்தும பல கருத்துக் களைக் கொண்டுள்ளதாகத் தெரிகிறது. பழைய நியாயத்தில் அனுமானம் பூர்வவத், சேஷவத், ஸாமான்யதோதிருஷ்டம் என்று மூன்றாக பிரிக்கப் படுகிறது. இந்த மூன்று அனுமானங்களும் சரக ஸம்ஹிதையில் காணப் படுகின்றன.

அனுமானத்தை இவ்வளவு பழைமையாகக் கூறப்பட்ட புத்தகம் சரகம் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். பூர்வவத் என்றால் காரணம் காரியமாக மாறுவது, சேஷவத் என்றால் காரியம் காரணமாக மாறுவது, ஸாமான்யதோ திருஷ்டா என்று சொன்னால் இரண்டு பொருட்களுக்குமுள்ள ஒற்றுமையின் மூலம் அனுமானிப்பது.

சரகருடைய எழுத்துக்கள் அக்னிவேசருடைய எழுத்துக்களை சார்ந்திருக்கின்றன. மேலும் அது பரத்வாஜருடைய கொள்கையைச் சார்ந்திருக்கிறது. அக்னிவேசரின் புத்தகத்தை இப்பொழுது நாம் இழந்து விட்டோம். சரக ஸம்ஹிதையில் காண்கின்றதைப் போல நியாய வைசேஷிகத்தை, அலசி ஆராய்கின்ற ஒரு புத்தகத்தை நாம் காணமுடியவில்லை. ஆனால் நியாய தரிசனத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைச் சரகர் நோயைக் கண்டறிவதற்கும், நோய்க்கான சிகிச்சை அளிப்பதற்கும் மட்டுமே பயன்படுத்துகிறார்.

வாதம், ஜல்பம், விதண்டம், சலம், ஜாதி, நிக்ரஹஸ்தானம், போன்றவை பற்றி சரகர் கூறியுள்ளது, நியாய தரிசனத்தை ஒட்டியுள்ளது. (விமான ஸ்தானம் –8) சிகிச்சை சம்பந்தமான புத்தகங்களைப் படிப்பதற்கு ஏதுவாக அமைந்துள்ளது.

பழைய காலத்தில் மருத்துவர்கள் வாதம் செய்து வெற்றி கொள்வதற்கு சலம், ஜாதி, நிக்ரஹ ஸ்தானம் போன்றவை பயன்பட்டன.

சரக ஸம்ஹிதையில் ஆரோக்கியமான வாழ்வும், நல்ல வளமுடைய வாழ்வும் முக்கியமானதாகக் கருதப்பட்டன. இந்த கருத்தானது மற்ற தரிசனங்களிலிருந்து மாறுபடுகிறது. பல தரிசனங்களும் உணர்வுகளும், உணர்ச்சிகளுமே செயலைத் தூண்டுவனவாகக் கருதுகின்றன. இன்பத்தை விரும்புவதும், துன்பத்தை வெறுப்பதுமே செயல்பாடுகளுக்கு (பிரவிருத்தி) காரணம் என்று வைசேஷிகர்கள் கூறுகின்றனர்.

நியாய கந்தலீயை எழுதிய ஸ்ரீதரர் சராசரியான மகிழ்ச்சியை விட மனதிற்கு ஏற்படும் நிறைவு, அமைதி, போன்றவற்றையும் சுகமாகவே கருதுகிறார். இவை தர்மமான செயல்கள் கொண்டு ஏற்பட்டவை. தவறான நடவடிக்கைகளினால் துக்கம் ஏற்படுகிறது. சரகரோ வாழ்க்கையை மேம்படுத்துவதற்கும் இச்சைகளைப் பூர்த்தி செய்வதற்கும், இச்சைப் பூர்த்தி செய்தபிறகு மோக்ஷபிராப்திக்குமான (வீடுபேறு அடைதல் (அ) தன்னை தான் உணர்தல்) வழிகளைக் கூறுகிறார். சுகாயு, துக்காயு, ஹிதாயு போன்றவற்றைப் பற்றி சரகர் விளக்கிக் கூறுகிறார். பிராணேஷணம் (உயிராசை), பரலோகேஷணம் (முக்தி ஆசை) தனேஷணம் (பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை) என்கின்ற மூன்று இச்சைகளைப் பற்றியும்

கூறுகிறார். பிரக்ஞாபராதம் என்ற தவறான வழிநடத்தலாலேயே துன்பங்கள் ஏற்படுகின்றன என்கிறார். மனிதனுக்கு ஏற்படுகின்ற ஸுக ஆயு, துக்க ஆயு, ஹித ஆயு, அஹித ஆயு போன்றவற்றையெல்லாம் கூறிவிட்டு சரகர் தன்னையும் உணர வேண்டும் என்பதைப் பற்றியும் வலியுறுத்திக் கூறுகிறார். துன்பங்களுக்கு காரணம் பிரக்ஞாபராதம் என்று கூறுகிறார். பிரக்ஞாபராதம் என்றால் அறிவானது மாயையினால் மறைக்கப்பட்டு தவறுகளைச் செய்து அதனால் பலனை அனுபவிக்கும். இதனை நியாய வைசேஷிகர்கள் மோஹம் என்றும், அவித்யை என்றும் குறிப்பிடுகிறார்கள். பூதாத்மன் அல்லது ஸம்யோக புருஷன் சுக துக்கத்தை அனுபவிக்கிறான் என்றும், ஒரு வைத்தியனின் கடமையானது உடலில் உள்ள துன்பத்தை மாற்றுவது என்றும் சரகர் கூறுகிறார். இதை அவர் நைஷ்டிக சிகிச்சை என்று கூறுகிறார். அந்த துக்கத்திற்கு, உபதா என்று அவர் ஒரு பெயர் கொடுக்கிறார். உபதாவே அனைத்து துக்கத்திற்கும் காரணம் என்று அவர் கூறுகிறார். சக்ரபாணியோ உபதாவை திருஷ்ணா என்றும், ஆசை என்றும், குறிப்பிடுகிறார். இது புத்த மதத்தைச் சார்ந்த கருத்துபோல் உள்ளது. பட்டுப்பூச்சியானது எப்படி கட்டு கூண்டிலேயே அழிந்து போகிறதோ அதேபோல் ஆசை வயப்பட்ட ஒரு மனிதன் தனக்குத்தானே அழிவைத் தேடிக்கொள்கிறான் என்றும் கூறுகிறார். எல்லாப் பொருட்களையும் நெருப்பைப் போல் கண்டு கொள்ள வேண்டும் என்றும், நெருப்பைப் போல் அதிலிருந்து விலகியிருக்க வேண்டும் என்றும் கூறுகிறார். செயல்களிலிருந்து விடுதலை, புலனடக்கம் இவை துன்பங்களிலிருந்து விடுவிக்கும் என்று கூறுகிறார். தீவிப்ரம்ஸத்தினாலும் (அறிவினால் தடுமாற்றம்), த்ருதி விப்ரம்ஸத்தினாலும் (தைரியக் குறைவு) ஸ்ம்ருதி விப்ரம்ஸத்தினாலும் (மறதி) பல துன்பங்கள் ஏற்படுகிறது என்கிறார். இதை பிரக்ஞாபராதம் என்று அவர் சுருக்கிக் கூறுகிறார். இந்த பிரக்ஞாபராதத்தினாலேயே போட்டி, பொறாமை, வஞ்சகம், கோபம், வெறுப்பு, பயம், அறிவின்மை, தற்புகழ்ச்சி, தவறுதல் போன்றவை செயலில் ஏற்படுகின்றன என்று கூறுகிறார். மனதானது மோஹத்தினாலும், ரஜஸினாலும் அலைக்கழிக்கப்பட்டு ஒரு மனிதன் பிரக்ஞாபராதம் மூலம் தவறுகளைச் செய்கிறான் என்கிறார். இதையே விஷமபிரவர்த்தனம் என்றும் கூறுகிறார். (சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் –1)

பிரக்ஞும் என்ற வார்த்தைக்கு அறிவு என்று பொருள்; பரம் என்ற வார்த்தைக்கு மெய்ப்பொருள் என்று பொருள். அறிவானது மெய்ப்பொருளைச் சாராமல் பொய்யைச் சாருவதால் ஒரு மனிதன் தவறாக வழிகாட்டப்பட்டு பல தவறுகளைச் செய்கிறான். இதற்கு பிரக்ஞாபராதம் என்று பெயர். எண்ணுவதில் தவறு, சிந்திப்பதில் தவறு, வழி நடத்தலில் தவறு இவையனைத்தும் பிரக்ஞாபராதமே. பிரக்ஞாபராதத்திலிருந்து விடுபட்டால் நோயிலிருந்து விடுபடலாம். பல செயல்களைச் செய்ய முடியும் என்று சரகர் கூறுகிறார். இதுவே சரக தரிசனமாகும். சரகர் துக்கத்தை விட்டு ஓடச் சொல்லவில்லை. ஒருவருக்கு உகந்த நல்வாழ்வு வாழ வேண்டும். வாழும் பொழுது தவறுகள் செய்யக் கூடாது. உணவில் கவனம், வாக்கில் கவனம் தேவை என்று மீண்டும் மீண்டும் கூறுகிறார். ஸத்விருத்தம் என்னும் நன்னடத்தையைப் பற்றிக் கூறுகிறார். ஸன்னியாஸத்தைப் பற்றி சரகருக்கு கருத்திருந்தாலும், சாதாரணமான ஆரோக்கியமான வாழ்க்கையை சரகர் மிகவும் பெருமைப்பட பேசுகிறார். உடற்பயிற்சி செய்ய வேண்டும் என்றும், உடலை நன்றாகப் பேணிக் காக்க வேண்டும் என்றும், பசுவை வழிபட வேண்டும் என்றும், இறைவனை வழிபட வேண்டும், நன்மக்களை வழிபட வேண்டும், ஆசிரியர்களை வழிபட வேண்டும் என்றும் உள்ள கருத்துக்களெல்லாம் சரகத்தில் காணக் கிடைக்கின்றன. தனது நோயாகிய துன்பத்திற்கு தானே காரணம் என்று சரகர் கூறுவது மூடநம்பிக்கையில் இருந்து விடுபட்ட அவரது அறிவு சார்ந்த நிலையை வெளிப்படுத்துகிறது.

மனதில் நோயில்லாமலிருப்பது, உடலில் நோயில்லாமலிருப்பது, கவனக்குறைவில்லாமலிருப்பது, ஸத்விருத்தத்துடன் இருப்பது, ஸத்ய ஸந்தனாக இருப்பது, நல்லொழுக்கமுள்ள மனிதனாக இருப்பது இவையெல்லாம் சரகத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளன. ஆரோக்கியம் மேம்பட்டு ஆரோக்கியத்தினால் தர்மார்த்த காம மோட்சங்களை (அறம், பொருள், இன்பம், வீடு) அடையலாம் என்ற கருத்தும் சரகத்தில் காணப்படுகிறது. இதுவே சரக தரிசனமாகும்.

## அடிக்குறிப்புகள்

1 தர்க்க சங்கிரஹம்
2 *A history of Indian Philosophy* - Dr. Surendranath Das Gupta
3 ஆதி சங்கரர் இயற்றியது
4 108 உபநிடதங்களில் ஒன்று – இராமகிருஷ்ணா பதிப்பகம்
5 கௌதமர் இயற்றியது
6 ஈஸ்வர கிருஷ்ண சாங்கியம்
7 பதஞ்சலி யோகஸூத்திரம்
8 பதஞ்சலி யோக ஸூத்திரம்
9 கிருஷ்ண யசூர் வேதம்
10 *The Six Systems of Hindu Philosophy* - A Primer by Swami arshananda, Ramakrishna Math, Bangalore Oct-2000
11 பாதராயணரின் பிரம்ம சூத்திரம் 1:1:2
12 பிரம்ம் சூத்திர வாக்கியம்
13 ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலா, ஸ்ரீ மத லிங்கம்மாள் ராமராஜூ சாஸ்த்ரப்தஷ்டா டிரஸ்ட், இராஜபாளையம் 18 - *A History of Indian Philosophy* - Dr.Surendranath Das Gupta

# 8. திரவ்ய விஞ்ஞானம்

திரவ்யம் என்றால் என்ன? எந்த ஒரு பொருளில் குணமும், செயலும் பிரிக்க முடியாமல் இருக்கிறதோ அந்தப் பொருளை நாம் திரவ்யம் என்று கூறுகிறோம்.

ஒருவன் நல்லவனாக இருக்கிறான். அதனால் அவன் தான தர்மங்களை செய்கிறான். நல்லவன் என்பது குணம், தான தர்மங்கள், செய்வது என்பது செயல் (கர்மம்). நல்லவனாக இருப்பதும், தான தர்மங்களைச் செய்வதும் பிரிக்க இயலாமல் அவனிடம் இருக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். பால் இருக்கிறது. பாலுக்கு ஸரம் (மலத்தை இளக்கும் தன்மை), ஸ்நிக்தம் (எண்ணெய்பசை) என்கின்ற குணங்கள் இருக்கின்றன. பாலைக் குடித்தால் சிறிது மலமிளகிப் போகும் (மிருது விரேசனம்). இது பாலின் கர்மமாக இருக்கிறது. இந்த கர்மமும் மேற்கூறிய குணமும் பாலிலிருந்து பிரிக்க இயலாமல் இருக்கிறது. இதனால் பாலை நாம் ஒரு திரவ்யம் என்று கூறுகிறோம்.

(சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானம் 1:51)
(ஸுச்ருத ஸம்ஹிதை ஸூத்ர ஸ்தானம் 40/3)

தேனை எடுத்துக் கொண்டால், தேனுக்கென்று சில குணங்கள் இருக்கின்றன; புண்ணை ஆற்றும் குணம், இருமலை போக்கும் குணம் போன்றவை தேனிடம் உள்ளன. தேன் கபத்தைக் குறைக் கும் செயல்பாடுகளை உடையது. இவற்றைத் தேனிலிருந்து தனிமைப் படுத்த முடியாது. எனவே தேனை ஒருதிரவ்யமாகக் குறிப்பிடுகிறோம்.

திரவ்யங்களை காரண திரவ்யங்கள் அல்லது மூல திரவ்யங்கள் என்றும், காரிய திரவ்யங்கள் (காரண திரவ்யங்களினால் உருவாக்கப் படும் திரவ்யங்கள்) என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்பது காரண திரவ்யங்கள் உள்ளன. சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானத்திலும், வைசேஷிக தரிசனத்திலும் இவை சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. (வைசேஷிக தர்சனம் 1:48)

- பிருத்வி – நிலம்
- ஜலம் – நீர்
- அக்னி – நெருப்பு
- வாயு – காற்று
- ஆகாசம் – வெட்டவெளி
- ஆத்மா – ஆன்மா
- மனஸ் – மனம்
- காலம் – காலம்
- திசா – திசைகள்

என ஒன்பது காரண திரவ்யங்கள் உள்ளன.

**காரிய திரவ்யங்கள்**

காரிய திரவ்யங்கள் எண்ணற்றவையாகும். அவை ஸசேதனம் என்றும், அசேதனம் என்றும் இருவகைப்படும். புலன்களுடன் கூடியவை சேதன திரவ்யங்கள் என்றும், புலன்களற்றவை அசேதன திரவ்யங்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். சேதன திரவ்யங்களை அந்தர் சேதனம், பஹிர் சேதனம் என்றும் மீண்டும் இருவகையாகப் பிரிக்கலாம். அந்தர் சேதனம் என்றால் உள்ளுணர்வு உடையது என்றும், வெளிப்பாடு உடையதும் என்றும், பஹிர் சேதனம் என்றால் வெளிச்செயல் உடையது என்றும் பொருள்.

**1. அந்தர்சேதன திரவ்யங்களை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.**

1. வனஸ்பதி – பூக்காமல் காய்க்கும் மரங்களை வனஸ்பதி என்று குறிப்பிடலாம். உதாரணம் ஆலமரம்.
2. வானஸ்பத்தியம் – எந்தவொரு மரம் பூத்துக் காய்க்கிறதோ அதனை வானஸ்பத்தியம் என்று குறிப்பிடலாம். கொய்யாப் பழம், மாம்பழம் முதலியன இந்த வகையாகும்.

3. வீருத் – கொடிகள், உதாரணமாக சீந்தில் கொடி போன்றவை.
4. ஔஷதி – குறுகிய காலப் பயிர்களை ஔஷதி என்று குறிப் பிடலாம். அரிசி, கோதுமை போன்றவை.

2. **அசேதன திரவ்யங்கள் – கனிமங்கள், உலோகங்கள் போன்றவற்றை நாம் அசேதன திரவ்யங்கள் என்று குறிப்பிடலாம்.**
    1. இயற்கையாகக் கிடைக்கின்ற உலோகப் பொருட்களை கனிஜம் என்றும்,
    2. ஒரு சில உலோகங்களை கலந்து காய்ச்சி தயாரிக்கின்ற உலோகங் களுக்கு கிருத்ரிமஜம் என்று (அலாய்) பொருள்.

பஹிர் சேதன திரவ்யங்களை மீண்டும் நான்கு வகையாக பிரிக்கலாம்.

1. ஜராயுஜம் – யோனியில் இருந்து பிறப்பவை (கர்ப்பத்தினால் பிறப் பவை) – மனிதர்கள், மிருகங்கள்.
2. அண்டஜம் – முட்டையிலிருந்து பிறப்பவை – பறவைகள், பல்லி வகைகள்
3. ஸ்வேதஜம் – நீர்ப்பதம், வியர்வையிலிருந்து பிறப்பவை – பூச்சிகள், அழுக்குகள், பூஞ்சை போன்ற கிருமிகள்.
4. ஔத்பிஜம் – பூமியிலிருந்து வருபவை – மண்புழு முதலியன.

மேலே நாம் படித்தவற்றை ஒரு வரைபடம் மூலம் காண்போம்.



## காரண திரவ்யங்கள்

ஒன்பது காரண திரவ்யங்கள் இருக்கின்றன என்பதைப் பார்த்தோம். அவற்றுள் முதலாவதாக பூமியின் தன்மையை உணர்ந்து கொள்வோம். பூமி முதலான ஐந்து திரவ்யங்களுக்கு பஞ்சமஹாபூதங்கள் என்று பெயர். பஞ்சமஹாபூதம் என்று குறிப்பிடும் பொழுது ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பிருத்வி என்ற வரிசையிலேயே நாம் குறிப்பிட வேண்டும். சிருஷ்டியானது சூன்யத்தில் தொடங்கி ஜடப்பொருளில் முடிவுறுவதால் இந்த வரிசைக்கிரமமானது ஏற்றுக் கொள்ளும்படியாக இருக்கிறது.

## பஞ்ச பூதங்கள்

பூதம் என்ற சொல் பூ என்ற வார்த்தையிலிருந்து உருவானது. பூ என்ற சொல்லிற்கு நிலைத்திருப்பது, உருவானது அல்லது புலன்களால் அறியக்கூடியது என்று பொருள்.

'பூ ஸத்தாயாம்' [1]

பூதம் என்பது நிலைத்திருப்பது, இது நித்யமானது, நுண்ணியது, எல்லாப் பொருட்களும் பஞ்சபூதங்களால் ஏற்படுத்தப்பட்டவையே. உதாரணமாக ஒரு கல்லை பூமியால் ஏற்படுத்தப்பட்டது என்று சொன்னால் அந்த கல்லில் பூமியின் தன்மை ஐம்பது சதவீதம் காணப்படும். ஆனால் மற்ற பூதங்களின் தன்மையும் அதனுடன் அமைந்திருக்கும். இது மூலிகைகளுக்கும் பொருந்தும்.

பஞ்ச மஹாபூதங்கள் பஞ்ச தன்மாத்திரையிலிருந்து உருவாகின்றன. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பவை பஞ்ச தன்மாத்திரைகளாகும். ஆகாச மஹா பூதமானது சப்த தன்மாத்திரையிலிருந்து மிக நுண்ணிய வடிவில் முதலில் உருவாகிறது. இந்த சப்த தன்மாத்திரையிலிருந்து அஹங்காரத்தின் தொடர்புடன் ஸ்பர்ச தன்மாத்திரை உருவாகிறது. இந்த ஸ்பர்ச தன்மாத்திரையிலிருந்து அகங்ஹாரத்தின் தொடர்புடன் ரூப தன்மாத்திரை உருவாகிறது. மற்ற மூன்று தன்மாத்திரைகளிலிருந்தும் சப்தம், ஸபர்சம், ரூபம் இவற்றுடன் அஹங்காரத்திற்கு ஏற்படும் தொடர்பினால் ரஸ தன்மாத்திரை உருவாகிறது. மற்ற நான்கு தன்மாத்திரை

களுடன் அஹங்காரத்திற்கு ஏற்படும் தொடர்பினால் கந்த தன்மாத்திரை உருவாகிறது.

- சப்த தன்மாத்திரை + அஹங்காரத் தொடர்பு = ஸ்பர்ச தன்மாத்திரை
- சப்த தன்மாத்திரை + ஸ்பர்ச தன்மாத்திரை + அஹங்காரத்தின் தொடர்பு = ரூப தன்மாத்திரை
- சப்த தன்மாத்திரை + ஸ்பர்ச தன்மாத்திரை + ரூப தன்மாத்திரை +அஹங்காரத்தின் தொடர்பு = ரஸ தன்மாத்திரை
- சப்த தன்மாத்திரை + ஸ்பர்ச தன்மாத்திரை + ரூப தன்மாத்திரை + ரஸ தன்மாத்திரை + அஹங்காரத்தின் தொடர்பு = கந்த தன்மாத்திரை

இந்த தன்மாத்திரைகள் என்பன பஞ்சமஹா பூதங்களின் மிக நுண்ணிய ரூபங்களாகும். சூட்சும ரூபங்கள் என்று இவற்றைக் குறிப்பிடலாம். இதிலிருந்தே ஸ்தூல வடிவாகிய பஞ்ச மஹாபூதங்கள் தோன்றுகின்றன. ஆகாச மஹாபூதமானது சப்த தன்மாத்திரையிலிருந்து அஹங்காரத்தின் தொடர்பு காரணமாக உருவாகிறது. ஒவ்வொரு தன்மாத்திரையிலிருந்தும் பூதங்கள் உருவாகின்றன. பரஸ்பர அணுப்ரவேசம் என்ற குணத்தினால் எல்லாப் பொருளிலும் பஞ்சமஹாபூதங்களும் சேர்ந்தே காணப்படுகின்றன. ஒரு பூதத்தில் ஒரு குணம் விசேஷமாகக் காணப்படும் ஆனால் மற்ற குணங்கள் உள்ளடங்கிய குணங்களாகக் காணப்படும். ஒரு கல் என்று எடுத்துக் கொண்டால் அதில் பார்த்திவம் என்ற பூமியினுடைய குணங்கள் தனிப்பட்டு காணப்படும். ஆனால் அந்த கல்லில் அக்னி, ஆகாசம், வாயு, ஜலம் என்ற நான்கு பூதங்களும் உள்ளடக்கிக் காணப்படும். இது எல்லாப் பொருட்களுக்கும் பொருந்தும். ஸுச்ருதர் இதை சாரீர ஸ்தானம் முதல் அத்தியாயத்தில் பரஸ்பர அனுப்ரவேஸத்வம் என்ற தத்துவமாக விளக்குகிறார்.

## பிருத்வி எனும் நிலம்

பூமியானது நீரிலிருந்து உண்டாகிறது. மணம் என்னும் குணம் பூமியைச் சார்ந்திருக்கிறது. சப்தம் எனும் ஒலி, ஸ்பர்சம் எனும் தொடு

உணர்வு, ரூபம் எனும் வடிவம் அல்லது நிறம், ரஸம் எனும் சுவை, கந்தம் எனும் மணம் போன்ற தன்மாத்திரைகளை (நுண் வடிவங்கள் – 5 நுண்குணங்கள்) தன்னுள் கொண்டிருக்கிறது.

### பிருத்வியின் குணங்கள்

பிருத்விக்கு எல்லா குணங்களும் இருந்தாலும் மணம் என்னும் குணம் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. பிருத்வி நித்யம், அநித்யம் என்ற இரண்டு பிரிவுகளை உடையது. நித்யம் என்றால் அணு வடிவில் காணப்படுவது; அநித்யம் என்றால் ஸ்தூல வடிவில் காணப்படுவது.

நமது உடலில் அணு வடிவில் காணும் திசுக்கள் எல்லாம் பிருத்வியின் நித்ய வடிவங்களே. இதை சூட்சுமம் அல்லது நுண்ணியது என்று கூறுகிறோம்.

அநித்யமானது மூன்று வகைப்படுகிறது. உடல், புலன், பொருள் இவற்றில் அது பிரதிப்பலிக்கிறது. நமது உடலே பூமி வடிவானதாகும். மூக்கு பூமியின் புலனம்சமாகும் (அது மூக்கு நுனியில் உள்ளது). கற்கள், களிமண் போன்றவை உலகத்தில் காணப்படும் பூமி சார்ந்த பொருட்களாகும். ஒவ்வொரு பூதங்களைப் பற்றி படிக்கும்போது நமது உடலில் அதன் பங்கு என்ன என்பதையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அதன்படி பூமி என்று சொல்லக்கூடிய பிருத்வியானது உடலுக்கு கனத்தன்மையும், உடல் உருவத்தையும் தருகிறது. வளர்ச்சி, ஸ்திரத் தன்மை, மணம் போன்றவை பூமியைச் சார்ந்திருக்கிறது. கபமானது பூமியின் ஸ்திரத்தினால் உண்டானது. உடலின் உருவ அமைப்பு, எலும்புகள் இவையெல்லாம் பூமியைச் சார்ந்தவையே.

### ஜலம் எனும் நீர்

தண்ணீர் தொடுவதற்கு குளிர்ச்சி என்னும் குணமுடையது. நெருப்பிலிருந்து இது உருவாகிறது. வைசேஷிக குணங்களின்படி ரஸம் (சுவை), ரூபம் (உருவம்), ஸ்பர்சம் (தொடு உணர்வு), சப்தம் (ஒலி) என்கின்ற 4 நுண் குணங்களை இது உடையது. ஜலமானது நாக்கினாலும், கண்ணி

னாலும், தோலினாலும், செவியினாலும் உணரப்பட்டாலும் நாக்கு இதன் முக்கிய புலனாகக் கருதப்படுகிறது (தர்க்க ஸங்க்ரஹம்).

## ஜலத்தின் ஸாமான்ய குணங்கள்

- திரவத்வம் – நீர்த்தன்மை
- ஸ்நேஹம் – நெய்ப்புத்தன்மை
- ஸாங்க்யம் – அளக்க முடியும் தன்மை
- பரிணாமம் – மாறுபடும் தன்மை
- பிருதக்த்வம் – பிரித்தெடுக்கும் தன்மை
- ஸம்யோகம் – இணைக்கும் தன்மை
- விபாகம் – பிரிக்கும் தன்மை
- பரத்வம் – தொலைவு
- அபரத்வம் – அருகாமை
- குருத்வம் – கனத்தன்மை
- ஸம்ஸ்காரம் – மாறுபடும் தன்மை

நித்யமாகவும், அநித்யமாகவும் ஜலம் உள்ளது. அநித்யமானது உடலிலும், பொருள்களிலும், புலன்களிலும் காணப்படுகிறது. ஜலம் வருண உலகத்தைச் சார்ந்திருக்கிறது. உடலில் நாக்கு என்று சொல்லக் கூடிய ரஸன இந்திரியம் ரஸத்தின் ஸ்தானமாகக் கருதப்படுகிறது. உலகில் ஆறுகளாகவும், நதிகளாகவும், கடலாகவும் ஜலம் தன் தன்மையைப் பிரதிபலிக்கிறது. இந்த நீரானது சுவையாகவும், சுவையை கண்டறியும் புலனாகவும், குளிர்ச்சியாகவும், மார்தவம் என்கின்ற மிருது தன்மையாக வும், உடலில் ஸ்நேஹம் என்கின்ற எண்ணெய்ப் பசையாகவும், கிலேதம் என்கின்ற நீர்ப்பதமாகவும் காணப்படுகிறது. இரக்த தாது, சுக்ர தாது, போன்றவற்றிற்கு ஆதாரமாகவும் இருக்கிறது. வஸா, மஜ்ஜை மற்றும் கொழுப்பு என்கின்ற மேதஸிலும் மற்றும் மலம், மூத்திரம் போன்ற வற்றிலும் நீரம்ஸம் காணப்படுகிறது. நீரம்ஸமானது உடலை மென்மைப் படுத்துதல், ஈரப்பதம் அடையச் செய்தல், குளிர்ச்சியடையச் செய்தல் போன்றவற்றைத் தருகிறது. கபத்திற்கு ஆதாரமாக இருக்கிறது.

## அக்னி எனும் நெருப்பு

இதனை தேஜஸ் என்றும் குறிப்பிடலாம்.

தொடு உணர்வினால் சூடு என அறியப்படுவது. இது வாயுவிலிருந்து உருவானது. வைசேஷிக குணங்களின்படி ரூபம், ஸ்பர்சம், சப்தம் என்கின்ற 3 நுண் குணங்களுடையது. அக்னியை கண் மற்றும் தோலால் நாம் அறியலாம். இதன் ஸாமான்ய குணங்கள் ஸாங்க்யம், பரிணாமம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், பிருதக்த்வம், அபரத்வம், திரவத்வம், ஸம்ஸ்காரம் என்பனவாகும். இது நித்யம் என்றும், அநித்யம் என்றும் இருவகைப்படுகிறது. அநித்யம் உடலிலும், புலன்களிலும், உலகப் பொருட்களிலும் காணப்படுகிறது. சூரிய உலகம் அக்னியைச் சார்ந்துள்ளது. கண்களில் அக்னி பூதம் உள்ளது. நிறத்தை அறிவதற்கு அக்னிபூதம் உதவுகிறது. கண்ணிலுள்ள கருவிழியில் அக்னி காணப்படுகிறது. உலகப் பொருட்களில் உள்ள அக்னி நான்கு வகையாகக் காணப்படுகிறது (தர்க்க ஸங்க்ரஹம்).

- பௌமாக்னி – பொதுவாக சமையல் கட்டில் பயன்படுத்தப்படும் அக்னிக்கு பௌமாக்னி என்று பெயர்.
- திவ்யாக்னி – மின்னல் போன்றவற்றிற்கு திவ்யாக்னி என்று குறிப்பிடுகிறோம்.
- ஔதர்யாக்னி – வயிற்றில் காணப்படும் பாசகாக்னி என்று சொல்லக்கூடிய உணவை செரிக்கும் பித்தத்திற்கு ஔதர்யாக்னி என்று பெயர்.
- ஆகரஜாக்னி – தங்கம், வெள்ளி, போன்ற உலோகங்களில் காணப்படும் அக்னியாகும்.

அக்னி என்னும் நெருப்பே உடலில் பித்தமாக இருக்கிறது என்கிறது சரக ஸம்ஹிதை. இது வர்ணம், உடலில் செரிமானம், உடலின் உஷ்ண தன்மை மற்றும் உடல் நிறத்திற்கு ஏதுவாகிறது. பார்வை, கண்களின் செயல்பாடு, உடலிலிருக்கின்ற சுரப்பிகளின் செயல்பாடு, புத்தி, காமம், ஆசைகள் போன்றவற்றிற்கு ஏதுவாகின்றது.

**வாயு பூதம்** (காற்று)

வாயு என்பது உருவமில்லாதது, ஆனால் உணரப்படும் தன்மை யுடையது.

'ஆகாசாத் வாயு:' (தர்க்க ஸங்க்ரஹம்)

வாயுவானது ஆகாசத்திலிருந்து உருவானது. இது சப்தம் மற்றும் ஸ்பர்சம் எனும் 2 தன்மாத்திரைகளைக் கொண்டது. உலகம் தோன்று வதற்கு முன் வெற்றிடமாக இருந்தது. இந்த வெற்றிடத்தை ஆகாசம் என்று கூறுகிறோம். இந்த ஆகாசத்திலிருந்து வாயு உருவானது. எங்கெங்கு வெற்றிடம் உள்ளதோ அங்கு வாயு காணப்படும். உடலில் நுரையீரல் ஒரு வெற்றிடமாகும். அங்கு பிராணவாயு காணப்படுகிறது. குடல் ஒரு வெற்றிடமாகும். அங்கு அபான வாயு காணப்படுகிறது. வாயுவானது அசையும் தன்மையுடையது, அசைய வைக்கும் தன்மையுடையது. இதற்கு கதி என்று பெயர் (சலனத்வம் ). இது வாயுவின் முக்கியமான தன்மையாகும். வாயு என்ற சொல்லுக்கே 'வா கதி கந்தனயோ:'[2] என்று பொருள். வாயுவானது சுயம்புவாகும் (தானாகவே பிறந்தது). எல்லா இடங்களிலும் காணக்கூடியது.

**வைசேஷிக குணங்கள்:** சப்தம் என்னும் செவியுணர்வு, ஸ்பர்சம் என்னும் தொடுஉணர்வு, என்பன வாயுவின் குணங்களாகும். ஸாமான்ய குணங்களாக ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், ஸம்ஸ்காரம், ஆகியவற்றைக் குறிப்பிடலாம். வாயுவை நித்யம் என்றும் அநித்யம் என்றும் குறிப்பிடலாம். அநித்யத்தை மூன்று விதமாகப் பிரிக்கலாம். பிரபஞ்சமாகிய இந்த அண்டத்தை இந்த வாயு இயக்குகிறது. இந்த வாயுவே நம் உடலில் காணப்படுகிறது. மேலும் நம் உடலில் தோலிலும், அதன் தொடு உணர்ச்சியாகவும் வாயு விளங்குகிறது. இலைகளையும், செடிகொடிகளையும் அசைய வைப்பதற்கு வாயு உதவுகிறது. ஆயுர்வேத கொள்கைப்படி உடலில் வாயு ஐந்து பிரிவுகளாகக் காணப்படுகிறது. அவை பிராணன், உதானன், வியாயன், சமானன், அபானன் எனப்படும்.

தொடு உணர்ச்சி, இரத்த ஓட்டம், மூச்சு விடுதல், தாதுக்களின் பரிணாமங்கள், சுவாசித்தல் போன்றவை வாயுவின் குணங்களாகும். வாத, பித்த கபங்களில் முக்கியமான தோஷமாக வாயு கருதப்படுகிறது. வாயுவின் செய்ல், பித்தத்தையும், கபத்தையும் செயல்பட வைக்கிறது. பித்தம் மற்றும் கபத்தினை பங்கு என்று கூறுகிறோம். அதாவது கபமும், பித்தமும் தானாக செயலாற்றும் தன்மையற்றது. வாயுவினுடைய தொடர்பினாலே பித்தமும், கபமும் செயல்படத் தொடங்குகின்றன. இந்த வாயு பூதமானது உடலில் வாதமாக உள்ளது. இந்த வாதம் வறட்சித் தன்மை, லகுத்தன்மை, சீதத்தன்மை, கரடு, சூட்சுமம் (**நுண்ணியது**), சலம் (அசையும் தன்மையுடையது) என்கின்ற குணமுடையது.

## ஆகாசம் எனும் வெட்டவெளி

ஒலி என்னும் குணத்தை ஆதாரமாகக் கொண்டது ஆகாசம் அல்லது வெற்றிடம் ஆகும். ஆத்மாவிலிருந்து ஆகாசம் உருவாகிறது என்று தைத்ரீய உபநிஷத் கூறுகிறது. ஆகாசம் முதல் தன்மாத்திரையாகிய சப்த தன்மாத்திரையிலிருந்து உருவாகிறது. இது ஒன்றே எங்கும் பரவி உள்ளது. நித்யமானது, உடலில் காது என்ற செவிப்புலன் ஆகாசத்தின் ஆதாரமாகிறது. இதன் வைசேஷிக குணமாக சப்தம் கூறப்பட்டுள்ளது. ஸாமான்ய குணங்களாக ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம் போன்றவை கூறப்பட்டுள்ளன. உடலில் சப்தம் (செவிப்புலன்), இலகுத்தன்மை, நுண்ணிய உறுப்புகள், உடலில் எலும்புகளில் உள்ள ஓட்டைகள் மற்றும் நவ துவாரங்கள் போன்றவை ஆகாசத்தை சார்ந்திருக்கின்றன. சூன்யத்தன்மையும் ஆகாசத்தின் ஒரு குணமாகும் (தர்க்க ஸங்க்ரஹம், தைத்ரேய உபநிடதம்).

இவ்வாறு நாம் படித்த பஞ்ச பூதங்கள் திரிதோஷங்களுடன் எவ்வாறு தொடர்புடையது என்பதை பார்ப்போம்.

- வாயுவும், ஆகாசமும் உடலில் வாதத்தை ஏற்படுத்துகின்றன.
- அக்னியானது பித்தத்தை ஏற்படுத்துகிறது.
- ஜலமும் பூமியும் உடலில் கபத்தை ஏற்படுத்துகிறது.

| மஹாபூதங்கள் | பஞ்ச மஹாபூதங்களிலிருந்து உருவாகும் உடல் அங்கங்கள் | |
|---|---|---|
| ஆகாசம் (வெட்டவெளி) | சப்தம் | ஒலி |
| | ச்ரோத்தேந்திரியம் | செவிப்புலன் |
| | லாகவம் | லகுத்தன்மை |
| | சூட்சுக்ஷ்மம் | நுண்ணியது |
| | விவேகம் | ஆய்ந்தறியும் தன்மை |
| | ஸ்ரோதஸ் | நாளங்கள் |
| | சித்ரங்கள் | துவாரங்கள் |
| வாயு (காற்று) | ஸ்பர்சம் | தொடுஉணர்வு |
| | ஸ்பர்சனேந்திரியம் | தோல் |
| | பிரஸ்பந்தனம் | அசைவு, இரத்த ஓட்டம் |
| | தாது வியூகனம் | தாதுக்களின் உற்பத்தி மற்றும் இயக்கம் |
| | உச்வாஸம் | மூச்சைஉள் இழுத்தல் |
| அக்னி (நெருப்பு) | ரூபம் | பார்வை |
| | சக்ஷு இந்திரியம் | கண் |
| | பக்தி | பரிணாமம் |
| | ஊஷ்மா | தட்பவெப்பம் |
| | பிரகாசம் | ஒளி |
| | பித்தம் | ஜீரணிக்கச் செய்யும் அக்னி அம்சம் |
| | தேஜஸ் | காந்தி |

| | | |
|---|---|---|
| ஜலம் (நீர்) | ரஸம்<br>ரஸனேந்திரியம்<br>சீதம்<br>மார்தவம்<br>ஸ்னேஹம்<br>கிலேதம்<br>அஸ்ருக்<br>சுக்ரம்<br>வஸா | சுவை<br>நாக்கு<br>குளிர்ச்சி<br>மிருதுதன்மை<br>நெய்ப்புத்தன்மை<br>ஈரப்பதம்<br>இரத்தம்<br>உயிரணுக்கள் /விந்து<br>கொழுப்பு |
| பிருத்வி (நிலம்) | கந்தம்<br>கிராணேந்திரியம்<br>கௌரவம்<br>ஸ்தைர்யம்<br>மூர்த்தி<br>கேசம்<br>அஸ்தி | மணம்<br>மூக்கு<br>கனத்தன்மை<br>நிலைப்புத்தன்மை<br>உடலின் அமைப்பு<br>முடி<br>எலும்புகள் |

## பஞ்சபூதங்களின் பிரிவுகள்

### 1. பிருத்வி மஹாபூதம்

பிருத்வி என்னும் பூமியானது நித்யம், அநித்யம் என்று இருவகைப் படுத்தப்படுகிறது. தர்க்க ஸங்க்ரஹம் போன்ற புத்தகங்களில் இவற்றைக் காணலாம். நித்ய பிருத்வியின் பரமாணுக்கள் மிக நுண்ணியது. இவை காரண ரூப வடிவத்தில் இருக்கின்றன. அநித்ய பிருத்வியானது ஸ்தூல வடிவில் உள்ளது. இது பரமாணுக்களால் ஏற்படுத்துப்பட்டது. இந்த அநித்ய ரூப ஸ்தூல பிரக்ருதியானது பானையிலும், துணியிலும், உலகப் பொருட்களிலும் காணக்கிடைக்கிறது. இது மூன்று வகையாகப் பிரிக்கப் படுகிறது. அவை சரீர ஸம்ஞகம், இந்திரிய ஸம்ஞகம், விஷய ஸம்ஞசகம் என்பனவாகும்.

• **சரீர ஸம்ஞகம்**

மனிதனின் உடல், விலங்குகள், பறவைகள் இந்த வகையைச் சார்ந்துள்ளன. ஆத்மாவானது சுக துக்கங்களை இந்த உடல் மூலமே அனுபவிக்கிறது. அதனால் இதனை ஆத்மாவின் போகாயதனம் என்று குறிப்பிடுகிறார்கள்.

• **இந்திரிய ஸம்ஞகம்**

பூமியின் குணமானது எந்தப் புலனால் அனுபவிக்கப்படுகிறதோ அதற்கு இந்திரிய ஸம்ஞகம் என்று பெயர். இது கிராணேந்திரியம் என்னும் மூக்கைச் சார்ந்துள்ளது. மண உணர்வே பூமியின் இந்திரிய ஸம்ஞகமாகும்.

• **விஷய ஸம்ஞகம்**

மண், கற்கள் போன்றவை.

## 2. ஜல மஹாபூதம்

ஜல மஹாபூதமானது நித்யம், அநித்யம் என்றும் இருவகைப் படுத்தப்படுகிறது. ஜலமானது அநித்யம் சரீர ஸம்ஞகம், இந்திரிய ஸம்ஞகம், விஷய ஸம்ஞகம் என்று மூன்று வகைப்படுத்துப்படுகிறது.

• **சரீர ஸம்ஞகம்**

இது வருண உலகத்தைச் சார்ந்துள்ளது. இதுவும் ஆத்மாவின் போகாயதனமாகக் கருதப்படுகிறது.

• **இந்திரிய ஸம்ஞகம்**

ரஸனேந்திரியம் என்னும் நாக்கு இந்திரிய ஸம்ஞகமாகக் கருதப் படுகிறது. இது அறுசுவைகளை உணருகிறது.

• **விஷய ஸம்ஞகம்**

கடல், ஆறுகள், குளங்கள், குட்டைகள் போன்றவை. இது மேலும் நான்கு வகைப்படுகிறது. அவையாவன,

அம்ப – வானத்தில் காணப்படும் நீரம்ஸம்.

மரீசி – சூரிய மண்டலத்திற்கும் பூமிக்கும் இடையில் காணப்படும் நீர்.

மரம் – கடல், ஆற்றுத் தண்ணீர், குளத்து தண்ணீர் போன்றவை.

அப் – பூமிக்கு அடியில் காணப்படும் கிணற்றுநீர்.

அம்பு – பரமேஷ்டி மண்டலத்தில் காணப்படும் ஜலம்.

## 3. தேஜோ மஹாபூதம்

தேஜோ மஹாபூதம நித்யம், அநித்யம் என்றும் இருவகைப் படுத்தப்படுகிறது. அநித்யம் சரீர ஸம்ஞகம், இந்திரிய ஸம்ஞகம், விஷய ஸம்ஞகம் என்று மூன்று வகைப்படுத்தப்படுகிறது.

- சரீர ஸம்ஞகம் – இது அயோனிஜம் எனப்படும். இது நட்சத் திரக்கூட்டங்களிலும், கிரகங்களிலும், சூரிய மண்டலத்திலும் காணப்படுகிறது.
- இந்திரிய ஸம்ஞகம் – சக்ஷுஷ்யம் எனப்படும் கண்ணில் காணப் படுகிறது.
- விஷய ஸம்ஞகம் – இது திவ்யம், ஔதர்யம், பௌம்யம், ஆகர்ஜம் என நான்கு வகைப்படுகிறது.
- மின்சாரம் போன்றவற்றை திவ்யம் எனக் குறிப்பிடலாம்.
- வயிற்றில் காணப்படும் பாசனாக்னியை ஔதர்யம் எனக் குறிப்பிடலாம்.
- பூமியில் உள்ள நெருப்பை பௌம்யம் என்று குறிப்பிடலாம்.
- தங்கம் போன்ற கனிமங்களுக்கு வர்ணத்தைக் கொடுக்கும் அக்னியை ஆகர்ஜம் என்று குறிப்பிடலாம்.

## 4. வாயு மஹாபூதம்

- வாயு நித்யம் அநித்யம் என்று பிரிக்கப்படுகிறது. அநித்யம் மேலும் ஸம்ஞகம், இந்திரிய ஸம்ஞகம், விஷய ஸம்ஞகம் என்று எல்லாவற்றையும் போல் பிரிக்கப்படுகிறது.
- சரீர ஸம்ஞகம் – இது வாயு உலகத்தில் காணப்படுகிறது.

- இந்திரிய ஸம்ஞகம் – தொடு உணர்வாகிய தோல் இந்திரிய ஸம்ஞகமாகிறது.
- விஷய ஸம்ஞகம் – பிராணன், உதானன், வியானன், ஸமானன், அபானன் போன்றவை விஷய ஸம்ஞகமாகிறது.

## 5. ஆகாச மஹாபூதம்

சுத்தமானது, உருவமில்லாதது, கண்ணால் காண இயலாதது. காதினாலும், தொடு உணர்வினாலும் உணரக்கூடியது. ஆகாசத்தின் தன்மையை காதினால் அறியலாம். வாயுவின் தன்மையை தொடு உணர் வினால் அறியலாம். தொடு உணர்வு என்னும் ஸபர்சம் வாயுவின் குணமாகும். ஒலி ஆகாசத்தின் குணமாகும்.

## அனுஷ்ண சீத ஸ்பர்சம்

அதிகம் உஷ்ணமும் குளிர்ச்சியும் இல்லாத தன்மை வாயுவைச் சார்ந்துள்ளது. வாயுவைப் போல் ஆகாசம், காலம், திக், ஆத்மா உருவம் இல்லாதது. ஆனால் அவற்றிற்கு அனுஷ்ண சீத ஸ்பர்சம் என்ற குணம் இல்லை. மனமோ பரமாணு வடிவானது. நுண்ணியது. தொட இயலாதது. சப்தம் ஆகாசத்தையே சார்ந்துள்ளது. அதை வைத்தே ஆகாச பூதத்தை நாம் நிரூபிக்க இயலும். அனுஷ்ண சீத ஸ்பர்சத்தை வாயுவினாலேயே அறியலாம்.

## பஞ்சமஹாபூதங்களின் குணங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகாசம் | – | வெற்றிடம் | – | சப்தம் (ஒலி) |
| வாயு | – | காற்று | – | ஸ்பர்சம் (தொடுஉணர்வு) |
| அக்னி | – | நெருப்பு | – | ரூபம் (வடிவம், ஒளி) |
| ஜலம் | – | நீர் | – | ரஸம் (சுவை) |
| பிருத்வி | – | பூமி | – | கந்தம் (மணம்) |

பஞ்சமஹாபூதம் உருவானபொழுது முதலில் உருவாகிய ஆகாயத் திற்கு ஒரே ஒரு குணம் இருந்தது. அதுவே ஒலி என்று சொல்லக்கூடிய சப்த குணமாகும். ஒவ்வொரு பூதம் உருவாகும் பொழுதும் இந்த எண்ணிக்கை

அதிகப்பட்டு கொண்டே வந்தது. வாயுவிற்கு ஸ்பர்சம் என்கின்ற தொடு உணர்வு குணமாகும். ஆனால் வாயுவினிடத்தில் ஆகாசத்தின் குணமும் சேர்ந்திருக்கும். அதுபோன்று அக்னிக்கு ஆகாசத்தின் குணமும் வாயுவின் குணமும் சேர்ந்திருக்கும். ஜலத்திற்கு ஆகாசம், வாயு, அக்னி ஆகிய மூன்றின் குணங்கள் சேர்ந்து காணப்படும், பூமிக்கு மற்ற எல்லாவற்றின் குணங்களும் காணப்படும். குணத்தைப் பொறுத்தவரை நாம் இதை இவ்வாறு புரிந்து கொள்ள வேண்டும்: ஐந்து மஹாபூதங்களுக்கும் சரக ஸம்ஹிதை சரீர ஸ்தானத்தில் சில குறிப்பிட்ட குணங்களை தனித்தன்மை வாய்ந்த குணங்களாகக் குறிப்பிடுகிறார். பூமிக்கு கரத்வம் என்கின்ற வறட்சித் தன்மை, நீருக்கு திரவத்வம் என்கின்ற நீர்த்தன்மை, வாயுவிற்கு சலத்வம் என்கின்ற அசைய வைக்கும் தன்மை, அக்னிக்கு உஷ்ணம் என்கின்ற எரிபொருள் தன்மை, ஆகாசத்திற்கு வெற்றிடம் என்ற சூன்யத் தன்மை என்ற ஐந்து குணங்களைக் கூறுகிறார். இவை சிகிச்சைக்கு பயன்படும் குணங்களாகும். இந்த குணங்களை ஒரு அட்டவணைப்படி காண்போம்.

| எண் | மஹாபூதம் | விசேஷ குணம் (செயல்பாடு) | ஸாமான்ய குணம் (குணாதிசயம்) |
|---|---|---|---|
| 1. | ஆகாசம் | சப்தம் | ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம் |
| 2 | வாயு | சப்தம், ஸ்பர்சம் | ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், ஸம்ஸ்காரம் |
| 3 | அக்னி (நெருப்பு) | சப்தம், ஸ்பர்சம், ரூபம் | ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், ஸம்ஸ்காரம் திரவத்வம் |

| | | | |
|---|---|---|---|
| 4 | ஜலம் (நீர்) | சப்தம், ஸ்பர்சம் ரூபம், ரஸம் | ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், ஸம்ஸ்காரம் திரவத்வம், ஸ்நிக்தம் |
| 5 | பிருத்வி | சப்தம், ஸ்பர்சம் ரூபம், ரஸம், கந்தம் | ஸாங்க்யம், பரிணாமம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், குருத்வம், திரவத்வம் மற்றும் ஸம்ஸ்காரம் |

மேற்கூறிய குணங்களுக்கு தமிழ் சொற்களைப் பார்ப்போம்.

- ஸாங்க்யம் – எண்ணிக்கை
- பரிணாமம் – மாறுபட்டு பிரதிபலிக்கும் தன்மை
- பிருதக்த்வம் – பிரிவுபடும் தன்மை
- ஸம்போகம் – ஒன்றிணைக்கும் தன்மை
- விபாகம் – இணைப்பைப் பிரிக்கும் தன்மை
- பரத்வம் – அருகாமை
- அபரத்வம் – தொலைவு
- ஸம்ஸ்காரம் – மாறுபடும் தன்மை
- த்ரவத்வம் – நீர்த்தன்மை
- குருத்வம் – கனத்தன்மை
- ஸ்நிக்தம் – எண்ணெய்ப்பசையுடன் கூடிய நெய்ப்புத் தன்மை

பஞ்சமஹா பூதங்களுக்கும், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மனோ குணங்களுக்கும் உள்ள தொடர்பு

- ஆகாசம் – ஸத்வ குணமுடையது
- வாயு – ரஜோ குணமுடையது

- அக்னி – ஸத்வரஜோ குணமுடையது
- ஜலம் – ஸத்வதமோ குணமுடையது
- ப்ருத்வி – தமோ குணமுடையது

ஸத்வ குணம் என்றால் மன அமைதியை வெளிப்படுத்தும் நற்குண மாகும். ரஜோ குணம் என்றால் ஆசையை வலுப்படுத்துகின்ற உணர்வு சார்ந்த குணமாகும். தமம் என்ற சொல்லுக்கு இருட்டு என்றும், அறியாமை என்றும், எது நல்லது, எது தீயது என்று பிரித்து அறியமுடியாத மந்தத் தன்மை என்றும் பொருள் கூறலாம்.

## பஞ்சமஹாபூதங்களுக்கும் உடலின் உறுப்புகளுக்கும் உள்ள தொடர்பு

- செவி, செவிப்புலன், ஒலி, உடலில் காணப்படும் ஸ்ரோதஸ்கள் ஆகாச குணத்தைச் சார்ந்தது. உடலில் இருக்கின்ற ஒவ்வொரு உறுப்புகளுக்கிடையே உள்ள பிரிவு (differentiation) ஆகாசத்தினால் ஏற்படுத்தப்பட்டது. (அஷ்டாங்க ஸங்க்ரஹம் சாரீர ஸ்தானம் 5/9)
- தோல், தொடு உணர்வு, ஒவ்வொரு கணத்திலும் நாம் சுவாசிக்கும் மூச்சு, உடலில் ஏற்படுகின்ற மூட்டுகளின் அசைவுகள், பலவித மான நடை, உடை பாவனைகள், இலகுத்தன்மை போன்றவை வாயு மஹாபூதத்தால் ஏற்படுகின்றன. (அஷ்டாங்க ஸங்க்ரஹம் சாரீர ஸ்தானம் 5/10)
- கண், உருவம், உஷ்ணம், செரிக்கும் தன்மை, புத்தி, நிறம், ஒருவரிடம் காணப்படும் தேஜஸ், மன தைரியம், உடல் சூடு போன்றவை அக்னி மஹாபூதத்தால் ஏற்படும் குணங்களாகும். (அஷ்டாங்க ஸங்க்ரஹம் சாரீர ஸ்தானம் 5/11)
- நாக்கு, சுவை, நீர்ப்பதம், கொழுப்பு, இரத்தம், சிறுநீர், உடலில் காணப் படும் திரவத்தன்மை, உடலின் மென்மை, உடலின் எண்ணெய்ப் பசை போன்றவை ஜல மஹாபூதத்தினால் ஏற்படும் குணங்களாகும். (அஷ்டாங்க ஸங்க்ரஹம் சாரீர ஸ்தானம் 5/12)

- மூக்கு, நாற்றத்தையும் மணத்தையும் பிரித்தறியும் தன்மை, முடிகள், நகம், எலும்புகள், மனதைரியம், உறுதித்தன்மை போன்றவை பூமி மஹாபூதத்தால் ஏற்படுகின்றன. (அஷ்டாங்க ஸங்க்ரஹம் சாரீர ஸ்தானம் 5/13)

பஞ்ச பஞ்சீகரணம்




படத்தில் காட்டப்பட்டுள்ளது பிருத்வியின் பஞ்ச பஞ்சீகரணமாகும்.

சூட்சும வடிவத்திலிருக்கின்ற பூதங்களானவை ஸ்தூல வடிவத்தை அடையும் முறைக்கு பஞ்சீகரணம் என்று பெயர். ஸ்தூல மஹாபூதத்தில் ஒரு பாதி அந்தக் குறிப்பிட்ட பூதத்தின் அம்சத்தினால் உருவாக்கப் படுகிறது. மீதமுள்ள மறுபாதி மற்ற 4 பூதங்களின் சூட்சும அம்சங்களினால் சரிசமமாக நிரப்பப்படுகிறது.

### பஞ்சீகரண பிரக்ரியை

சூட்சுமமாயிருகின்ற ஒரு பூதமானது ஸ்தூலவடிவத்திற்கு எவ்வாறு மாறுகிறது என்பதை நாம் கண்டோம். ஒரு பொருள் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அந்த பொருளில் 50 சதவீதம் ஒரு குறிப்பிட்ட பூதம் இருக்கிறது. உதாரணமாக பிருத்வியில் 50 சதவீதம் பிருத்வி இருக் கிறது. மீதி இருக்கின்ற அரைப்பகுதி நான்கு பகுதிகளாகப் பிரிந்து மீதமுள்ள ஒவ்வொரு பூதமாக - அதாவது ஜலம் 1/8, வாயு 1/8, ஆகாசம்

1/8, அக்னி 1/8 பாகங்களாக - உள்ளடங்கியுள்ளன. இப்பொழுது நாம் ஒரு பொருளை வாயவ்யம் என்று கூறினால் அங்கு ஐம்பது சதவீதம் வாயு இருக்கிறது என்றும் மற்ற எல்லாபூதங்களும் 12.5 சதவீதம் என்ற விகிதத்தில் இருக்கின்றன என்பதையும் நாம் குறிப்பிடலாம். இதற்குப் பஞ்சீகரண பிரக்ரியை என்று பெயர்.

ஐந்து பூதங்களுக்கும் அதனுடைய குணங்களை சரகர் குறிப்பிடு கிறார். ஆகாசத்திற்கு ஒலியும், வாயுவிற்கு தொடுஉணர்வும், அக்னிக்கு காணும் சக்தியும், நீருக்கு சுவையறிவும், பூமிக்கு மணத்தையும் குணங் களாகக் குறிப்பிடுகிறார். இதில் ஆகாசம் சப்தம் என்னும் குணத்தை மட்டும் பெற்றுள்ளது. பின்வரும் ஒவ்வொரு பூதங்களும் ஒவ்வொரு குணம் கூடுதலாக உடையதாகவும், கடைசிவரும் பூதம் ஐந்து குணங்கள் உடையதாகவும் கூறப்படுகின்றன. ஆனால் ஆகாசத்திற்கு மற்ற நான்கு பூதங்களை உண்டாக்கும் சக்தியும் மற்ற நான்கு பூதங்களின் குணமும் உள்ளடங்கியிருக்கிறது. இதற்கு பஞ்சீகரண பிரக்ரியை என்று பெயர்.

### பரஸ்பர அனுப்ரவேசம்

மூலப்பிரக்ருதியிலிருந்தே பஞ்சமஹாபூதங்கள் உற்பத்தியாகின்றன. அவற்றிற்கென்றே தனித்தன்மை வாய்ந்த குணங்கள் இருக்கின்றன. மூலப் பிரக்ருதியிலிருந்து மஹத் ஆகிய புத்தியும், புத்தியிலிருந்து அஹங் காரமும், அஹங்காரத்திலிருந்து ஸத்வம், ரஜஸ், தமோ குணங்களும் உற்பத்தியாகின்றன. விலங்குப் பொருட்களும், கனிமப் பொருட்களும், தாவரப் பொருட்களும், பஞ்சமஹா பூதங்களாலேயே உருவாகி நிலை பெறுகின்றன. சேதன (உயிருள்ள) வஸ்துக்களிலும் அசேதன (உயிரற்ற) வஸ்துக்களிலும் குருத்வம் (கனத்தன்மை), ஸ்திரத்வம் (நிலைபெறுதல்), உஷ்ணத்தன்மை (சூடு) போன்றவை காணக்கிடைக்கின்றன. ஆகாசத் திலிருந்து வாயு உற்பத்தியாகின்றது. வாயுவிலிருந்து அக்னியும், அக்னி யிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலம போன்றவை உருவாகின்றன. ஆகாசம் நித்யமானது, எங்கும் பரவியிருக்கக்கூடியது. ஆகாசத்தின் பிரிக்க முடியாத குணம் ஒலியாகும். ஒலி என்றும் நித்யமானது, என்றும் நிலைத்திருக்க கூடியது. ஆகாசத்தில் ஒலியானது தன்மாத்திரை வடிவத்தில் காணப்

படுகிறது. ஆகாசத்திலிருந்து பின்பு வாயு உற்பத்தியாகிறது. வாயுவில் தொடு உணர்வு என்னும் ஸ்பர்ச தன்மாத்திரையும், ஆகாசத்தின் தன்மாத்திரையாகிய சப்த தன்மாத்திரையும் காணக்கிடைக்கிறது. பின்பு வாயுவிலிருந்து அக்னி உருவாகிறது. அக்னியில் ரூப தன்மாத்திரை காணக்கிடைக்கிறது. அதனுடன் சப்தமும், ஸ்பர்சமும் இணைந்து காணக்கிடைக்கிறது. அக்னியிலிருந்து நீர் உண்டாகிறது. நீரில் ரஸ தன்மாத்திரைக் காணக்கிடைக்கிறது. அதனுடன் ரூபம், ஸ்பர்சம், சப்தம், போன்ற தன்மாத்திரைகளும் காணக்கிடைக்கின்றன. இறுதியாக பிருத்வி என்னும் பூமி உருவாகிறது. இதில் கந்தத்தன்மை காணக்கிடைக்கிறது. அதனுடன் சப்தம், ஸபர்சம், ரூபம், ரஸம் என்னும் தன்மாத்திரைகளும் காணக்கிடைக்கின்றன. இவ்வாறு மேலேக் குறிப்பிட்டுள்ள தத்துவத்திற்கு திரிவிதி கரணம் என்று பெயர். பூமியில் ஐந்து நைஸர்கிக குணங்களும் காணக்கிடைக்கின்றன. ஆகாசத்தில் சப்தம் என்ற ஒரு தன்மாத்திரையே காணக்கிடைக்கிறது. ஆனால் ஆயுர்வேதம் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆயுர்வேதத்தில் ஒரு பூதத்தில் எல்லா பஞ்சமஹாபூதங்களும் காணக் கிடைக்கின்றன. இதனால் ஒரோரு பூதங்களும் மற்றொரு பூதங்களுடன் நெருங்கிய பரிமாற்றத்தில் உள்ளது என்று கருதுகிறது. ஆயுர்வேதமோ வேதாந்தத்தில் குறிப்பிட்டுள்ள பஞ்சீகரண ஸித்தாந்தத்தை ஏற்றுக் கொள்கிறது.

ஸுச்ருதர், சாரீர ஸ்தானம் மூன்றாவது அத்தியாயமாகிய கர்ப்பா வக்ராந்தி சாரீரம் என்னும் அத்தியாயத்தில் பரஸ்பர உபஹாரம், பரஸ்பர அனுப்ரவேசம் என்ற பதங்களைப் பயன்படுத்துகிறார். பரஸ்பர உபஹாரம் என்று சொன்னால் பரஸ்பர அனுகிரஹம் என்று அர்த்தம். ஒன்றுக்கொன்று சார்ந்து இருப்பவையாகவும், ஒன்றுக்கொன்று பலன்களை பகிர்ந்து கொள்பவைகளாகவும் பஞ்சபூதங்கள் இருக்கின்றன. எனவே எல்லா திரவ்யங்களிலும் ஐந்து பூதங்களின் தன்மைகளும் காணப்படும் என்பதை இந்தக் கூற்றின் மூலம் அறியலாம்.

பரஸ்பர அனுப்ரவேசம் என்பது, ஒரு அணு என்று எடுத்துக் கொண்டால் அதில் எல்லா பூதங்களின் தன்மையும் இணைந்து செயலாற்றி ஒன்றுக்கொன்று இணைந்து பணியாற்றும் தன்மை

யுடையதாக இருக்கின்றன என்பதைக் குறிக்கின்ற கருத்தாகும். இந்த இரண்டு பதங்களும் எல்லா திரவ்யங்களும் பஞ்சபூதத் தன்மை உடையது என்பதையும், ஒரு திரவ்யம் ஒரு பொருளை மட்டும் சார்ந்ததல்ல என்பதையும் குறிக்கிறது. கல் என்று சொன்னால் அது பிருத்வி பூதத்தால் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் அந்தக் கல்லிலும் மற்ற நான்கு பூதங்களின் தன்மையும் அணு வடிவத்தில் நுண்ணியதாக மறைந்து காணப்படும் என்பதை இது உணர்த்துகிறது. ஆயுர்வேதக் கண்ணோட்டத்தின்படி (ஸுச்ருதரின் படி) எல்லா திரவ்யங்களும் பஞ்சமஹாபூதத்தால் ஏற்படுத்தப்பட்டவையே என்பதையும், ஒவ்வொரு பூதமும் மற்ற பூதங்களை சார்ந்து இருப்பவையே என்பதையும் இந்தக் கூற்று நிரூபிக்கின்றன.

## பஞ்சபூத உற்பத்தி – பரஸ்பர அனுப்ரவேசம்

ஒரு பூதத்திற்கும் மற்றொரு பூதத்திற்கும் இணக்கமும், தொடர்பும், பரிமாற்றமும் உண்டு. இதற்கு அன்யோன்ய பிரதிஷ்டம் என்று பெயர். இது பஞ்சீகரண தத்துவத்தையே சார்ந்துள்ளது.

## பஞ்சமஹாபூதங்களுக்கும் ஆயுர்வேதத்திற்கும் உள்ள தொடர்பு

இந்த பிரபஞ்சமாகிய அண்டமானது பஞ்ச மஹாபூதங்களினால் உருவாகியிருக்கும் போது, ஆயுர்வேதமும் பஞ்சமஹாபூதத்தையே சார்ந்துள்ளது. பஞ்சமஹாபூதம் இல்லாவிட்டால் சிகிச்சை இல்லை. பஞ்சமஹாபூதத்தாலேயே உடலில் த்ரிதோஷங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. பஞ்சமஹாபூதங்களாலேயே சுவையை நாம் அறிகிறோம். உடல் உறுப்புகள் அனைத்தும் பஞ்சமஹாபூதங்களாலேயே ஏற்படுத்தப்பட்டவை. நமது உணவு, சுற்றுப்புறச்சூழல் போன்றவை பஞ்சமஹாபூதத்தை சார்ந்தது. வெளியில் இருக்கின்ற பஞ்சமஹாபூதம் அண்டம் எனப்படும். உள்ளே இருக்கின்ற பஞ்சமஹாபூதம் பிண்டம் எனப்படும். அண்டத்திற்கும் பிண்டத்திற்கும் தொடர்பு உண்டு.

'யதா அண்டே ததா பிரம்மாண்டே'

என்பது வாக்கியம். சிகித்ஸா புருஷன் என்ற நோயினால் பாதிக்கப்படுகின்ற மனிதனும் பஞ்சமஹாபூதத்தினாலேயே உருவாக்கப்பட்டிருக்கிறான்.

அவனுக்கு சிகிச்சை செய்கின்ற மருந்து பொருட்கள் அனைத்தும் பஞ்சமஹாபூதங்களாலேயே உருவானவை. தோஷங்கள், தாதுக்கள், மலங்கள் போன்ற அனைத்தும் பஞ்சமஹாபூதங்களாலேயே உருவாக்கப் பட்டிருக்கின்றன. பூமி, நீர் போன்ற பூதங்கள் அதிகமாகக் காணப்படும் மூலிகைகள் உடலை வலுப்பெற செய்கின்றன. வாயு, ஆகாசம், போன்ற பூதங்கள் நிறைந்த மூலிகைகள் உடலின் வலிமையைக் குறைக்கின்றன. உடலின் பிரக்ருதி என்ற உடல் மனத்தன்மை பஞ்சமஹாபூதங்களையே சார்ந்திருக்கிறது. பஞ்சமஹாபூதங்களில்லாத திரவ்யங்கள் இல்லை. பஞ்சமஹாபூதங்கள் இல்லாத இடங்கள் இல்லை. ஆதலால் பஞ்சமஹா பூதமே ஆயுர்வேதத்தின் அடிப்படையாகும். பஞ்சமஹாபூதம் பல்வேறு சிகித்ஸைகளிலும் காணப்படுகிறது. நேச்சுரோபதி என்ற இயற்கை மருத்துவத்திலும் பஞ்சமஹாபூதத்தை சிகிச்சையாக பயன்படுத்து கிறார்கள். களிமண்ணை தேய்த்துக் கொள்ளுதல் பூமியை ஆதாரமாகக் கொண்ட சிகித்ஸை முறையாகும். ஹைட்ரோ தெரபி என்ற குளியல் முறைகள் போன்றவை நீரை ஆதாரமாகக் கொண்டு செய்யக் கூடிய சிகிச்சையாகும். சூரிய ஒளியில் நிற்பது, சூரிய நமஸ்காரம் போன்றவை அக்னியை ஆதாரமாகக் கொண்டு செய்யக்கூடிய சிகிச்சைகளாகும். பிராணாயாமம் என்ற மூச்சுப் பயிற்சி வாயுவை ஆதாரமாகக் கொண்டு செய்கின்ற சிகிச்சை முறையாகும். வெட்ட வெளியில் தியானம் செய்தல் போன்ற ஆகாசத்தை ஆதாரமாகக் கொண்டு செய்கின்ற நிர்குணம் பிரம்ம த்யானம் ஆகும். உருவமில்லா இறைவனை வழிபடுவதற்கு ஆகாச தத்துவம் பயன்படுகிறது.

## ஆத்மா

'ஞானாதிகரணம் ஆத்மா'

ஞானத்தின் அடிப்படை ஆன்மாவாகும். இந்த ஆன்மா பரமாத்மா, ஜீவாத்மா என இருவகையாகப் பேசப்படுகிறது. இதில் பரமாத்மாவானது எங்கும் நிறைந்திருப்பது, சகல வல்லமை படைத்தது, அனைத்தையும் அறிந்திருப்பது, ஒன்றானது. ஜீவாத்மா ஒவ்வொரு உடம்பிற்கும் மாறுபடுகிறது. ஆனால் இதுவும் அழிவற்றது. சர்வ வியாபினி என்னும்

குணமுடையது. சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானத்தில் (ஸூத்திரம் –1) சரகர் ஆத்மாவை விகாரமற்றது (உருவமற்றது), மெய்ஞானத்தன்மை யுடையது, ஸத்வ குணமுடையது, சைதன்ய வடிவானது, தூய உணர்வு டையது, நித்யமானது மற்றும் அழிவற்றது என்று குறிப்பிடுகிறார். பரமாத்மாவைப் பற்றி சொல்லும்போது சுக துக்கங்கள் அற்றது என்றும் ஜீவாத்மாவைப் பற்றி சொல்லும் பொழுது சுக துக்கங்களுக்கான உறைவிடம் என்றும் ஒரு சில ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். (சரக ஸம்ஹிதை ஸூத்திரம் 1:55)

ஆத்மா நோயினால் பாதிக்கப்படாதது, இது நிர்விகாரமானது என்று கூறுகிறார். இது பரமானது (மேன்மையானது) என்று கூறுகிறார். ஸத்வ குணத்தினால் அறியக் கூடியது என்றும் சைதன்ய வடிவமானது என்றும், அனைத்திற்கும் காரணமானது என்றும், எப்போதும் நிலைத்திருப்பது என்றும் (நித்யமானது), திருஷ்டனாகவும் (காண்பவனாகவும்), எல்லா வற்றிற்கும் சாட்சியாகவும் இருக்கிறது என்றும் கூறுகிறார். இவை யெல்லாம் சரகத்தில் காணப்படும் வேதாந்த கருத்துக்கள் என்று கூறலாம். மனம் நோயினால் பாதிக்கப்படும், உடல் நோயினால் பாதிக்கப்படும், ஆத்மா நோயினால் பாதிக்கப்படாது என்கிறார். ஆத்மாவானது மனதோடும், உடலோடும் தொடர்பு ஏற்படுத்தப்படும்பொழுது நோயினால் பாதிக்கப்படுவதைப் போன்றோ, இன்ப துன்பங்களை அனுபவிக்கிறது போன்ற உணர்வு ஏற்படுகிறது என்கிறார். ஆத்மா என்று எடுத்துக் கொண்டால் அதை எந்த நோயும் தனிப்பட்ட முறையில் தாக்காது என்கிறார். ஆத்மாவானது உடலுடனும், புலன்களுடனும், பஞ்சபூதங் களுடனும் ஏற்படுகின்ற தொடர்பினால் மாயையினால் சூழப்படுகிறது என்கிறார். ஆத்மா நித்யமானது என்று கூறுவதை நாம் முதலில் கண்டோம். ஒரு மனிதருக்கு உள்ள அறிவு மற்ற மனிதருக்கு இல்லை. தேவதத்தனுக்கு இருக்கின்ற அறிவு யக்ஞ தத்தருக்கு இல்லை. ஆத்மா அனைத்து செயல் களுக்கும், சாட்சியாக இருக்கிறது இன்பமும், துன்பமும் மனதுக்கும், உடலுக்கும் தான். ஆத்மா இதிலிருந்து வேறுபட்டிருக்கிறது. இது ஸாங்க யத்தையும், வேதாந்த கருத்துக்களையும் சற்று சார்ந்துள்ளது.

## பரமாத்மா, ஜீவாத்மா பேதம்

| ஜீவாத்மா | பரமாத்மா |
|---|---|
| அறியாமை என்னும் தன்மையுடையது | மெய்ஞானமுடையது |
| எண்ணற்றது | ஒன்றானது |
| ஊழ்வினை சார்ந்தது | வினைகளுக்கு அப்பாற்பட்டது. |
| சாட்சியானது உலகவாழ்க்கையில் உடல் | துக்கத்திற்கும், வினைக்கும் அப்பாற்பட்டது. |
| மனத்தொடர்பு ஏற்படும் பொழுது துக்கம் சார்ந்து வினை எனும் கர்மத்தை தாங்குகிறது. | |

ஜீவாத்மா பரமாத்மாவிற்கிடையே பல வேறுபாடுகளை ஆசிரியர்கள் கூறினாலும், ஞானம் என்ற மெய்ப்பொருளே ஆத்மாவின் அடிப்படையாக இருக்கிறது. உண்மையான அறிவு என்பது நாம் அழிவற்ற ஆத்மா என்பதை உணர்ந்து கொள்வதாகும் என்கிறார்கள் வேதாந்திகள். வேதாந்திகள் இதைப்பற்றி குறிப்பிடும்பொழுது நாம் உடலல்ல, மனமல்ல, சுற்றுச்சூழல்கள் அல்ல, உணர்ச்சிகள் அல்ல, அழிவற்ற மெய்ப்பொருளாகிய ஆத்மாவே நாம் என்றும், இதுவே தூய சைதன்யம் என்றும் கருதுகிறார்கள். நாம் அழிவற்ற தூய சைதன்யமே என்று அறிவதையே அவர்கள் மெய்ஞானம் என்று குறிப்பிடுகிறார்கள். நாம் தூய மெய்ப்பொருள் என்று அறிந்து அதில் நிலைபெற்றிருப்பதையே அவர்கள் வாழ்க்கையின் இலட்சியமாகக் கொள்கிறார்கள். இதையே பிரம்ம தத்துவமாகவும் குறிப்பிடுகிறார்கள். இதை கீழ்கண்ட வாசகங்கள் தெரிவிக்கின்றன:

- பிரக்ஞானம் பிரம்ம (மெய்யறிவே பிரம்மம்)
- அயம் ஆத்மா பிரம்ம (ஆத்மாவாகிய நானே பிரம்மம்)
- தத்வமஸி (அதை நீயாக அறி)
- அஹம் பிரம்மாஸ்மி (நானே அதுவாயிருக்கிறேன்)

பிரம்மத்தின் வடிவே நாம் என்ற அறிவும் இன்றியமையாதது என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆத்மாவானது மனதுடனும், உடலுடனும் தொடர்பு எடுத்துக் கொள்ளும்பொழுது பலவித பரிணாமங்களுக்கு சாட்சியாக விளங்குகிறது. இது தன்னுடைய நிலையை மறந்து கடலை எப்படி அலை சார்ந்திருக்கிறதோ அதைப்போல தூய உணர்வினை மறந்து உலகத் தொடர்புகளைச் சார்ந்திருக்கிறது. அதனால் வினைக்கு உட்படுகிறது.

## ஆத்ம ஸங்க்யா (எண்ணிக்கை)

ஆத்மா பலவிதமானது என்ற ஒரு கருத்து இருக்கிறது. ஒவ்வொரு உடம்பிலும், ஒவ்வொரு ஜீவராசியிலும் ஒரு ஆத்மா உள்ளது. இதனை ரிஷிகள் பல சந்தர்ப்பங்களில் விவாதித்திருக்கிறார்கள். ஒரே ஒரு ஆத்மாவாக இருந்தால் எல்லா ஜீவராசிகளுக்கும்,பிறந்திருக்கும் எல்லா ஜென்மங் களுக்கும் இன்பமும், துன்பமும் ஒரே மாதிரியாக இருந்திருக்க வேண்டும் என்றும், அவ்வாறு இல்லாத காரணத்தினால் ஒவ்வொரு ஜீவராசியிலும் ஒவ்வொரு ஆத்மா தனித்தியங்குவதாகவும் அவர்கள் கூறுகிறார்கள். ஒவ்வொரு ஆத்மாவிற்கும் பிறப்பும் இறப்பும் உண்டு என்று அவர்கள் கூறுகிறார்கள்.

## ஆன்மாவை ஒப்புக் கொள்வதால் ஏற்படும் பலன்

ஒரு செயலை செய்வதற்கு வெவ்வேறு சாதனங்கள் இருப்பது அனைவரும் அறிந்ததே. செய்பவன் ஒருவன்தான். அவன் பற்பல சாதனங்களைக் கொண்டு பற்பல செயல்களைச் செய்து பலவற்றிற்கு காரணமாகிறான். உடல் முதலான அனைத்தும் அழியும் இயல்புடையவை. ஆதலால் அவை கண நேரம் இருக்கக் கூடியவை, அழிந்தவையோ மறுபடியும் தோன்றாது. எனவே அத்தகைய அழியும் உடலை சாதனமாகக் கொண்டு ஒருவன் செய்த செயலின் பலனை வேறொருவன் அடைய முடியாது. இது உலகம் அறிந்த அறிஞர்களின் முடிவு. இதைபோல முற்பிறவியில் ஒருவன் செய்த வினையின் பயனை அடுத்த பிறவியில் அவன் அனுபவிப்பான். அவ்வாறு அவன் செய்த செயல் அழிந்தாலும் தான் மாத்திரம் தொடர்ந்து அழிவின்றி என்றென்றும் நிலையாக உள்ளவனே புருஷன் அல்லது ஆன்மா எனப்படுவான்.

அஹங்காரம், வினை, வினைப்பயன், மறுபிறவி, அனுபவித்தவை, நினைவாற்றல் இவையனைத்தும் உயிரினங்களுக்கு காரணமான ஆன்மா என்ற ஒன்று இருந்தால்தான் ஏற்படும். இவ்வாறான கருத்துக்களின் மூலம் சரகர் தான் ஒரு வேதாந்தி என்று தெளிவுபடுத்துகிறார். என்றென்றும் இருக்கும் இறைவனுக்கு தோற்றம் என்பதே இல்லாமையால் தோன்றக் காரணமும் கிடையாது. தாதுக்களின் கூட்டுருவான புருஷன் மட்டும் மோக மயக்கத்தில் உண்டான விருப்பு வெறுப்புக்களின் பலனாக ஐவகை பூதங்களின் தோற்றங்கொண்டு தோற்றமளிப்பான். ஆன்மா எனப்படும் புருஷன் ஞானத்திற்குக் காரணமாவான். ஆத்மாவிற்கு மனம், புத்தி மற்றும் புலன்களுடன் தொடர்பு ஏற்படுகின்ற பொழுது நிறம் சுவை சார்ந்த அறிவு ஏற்படுகிறது.

அழுக்கு நிறைந்த கண்ணாடியில் முகம் தெரியாது. அப்படியே காணப்பட்டாலும் தெளிவான உருவம் தெரியாது. அதுபோன்ற மனம் புலன்களை விட்டு ஒதுங்கிய போது உண்மையான அறிவு ஏற்படாமல் அறிவு கலக்கமே ஏற்படும். மனம், புத்தி புலன்கள் போன்றவை ஆத்மா விற்கு சாதனங்களாக இருக்கின்றன. இத்தகைய சாதனங்களற்ற பரமாத்மா எதையும் செய்ய முற்படுவதில்லை, எப்பலனையும அனுபவிப்பதில்லை. முக்கிய காரணமாகிய ஆத்மாவாலும் துணைக் காரணங்களாகிய மனம் முதலிய சாதனங்களாலும் செயல்கள் ஏற்படுகின்றன. ஆத்மா என்றும் நிலையானது. பஞ்சபூதத்தினால் ஆன சரீரம் நிலையற்றது. ஸத் நிலை யானது. பானை முதலியவை அஸத் எனும் நிலையற்றது. ஆத்மா க்ஷேத்ரக்ஞன், எங்கும் பரவியவன், நிலையானவன், பஞ்சபூதங்கள், புத்தி, அவயக்தம், அஹங்காரம் இவை சேர்ந்து பூத பிரக்ருதி என்று பெயர்பெற்றது. உலகிற்கு மூலக்காரணம் இதுதான். மற்றவை அனைத்தும் விகாரங்கள் என்று கூறப்படுகின்றன. உடலை க்ஷேத்ரம் என்றும் உடலில் உறைபவனை க்ஷேத்ரக்ஞன் என்றும் சரகர் கூறுகிறார்.

உள்ளே இழுக்கும் காற்றான பிராண வாயு, வெளியே விடும் அபான வாயு, கண்ணை மூடித் திறத்தல், பிழைத்திருத்தல், மனதை பல இடங் களுக்குக் கொண்டு செல்லுதல், மனதினால் புலன்களில் ஏற்படுகின்ற தொடர்பு, மனதினால் ஏற்படும் தூண்டுதல், கனவு காணுதல், இறப்பைப்

பற்றி அறிதல், விருப்பு, வெறுப்பு, துன்பம், இன்பம், அறிவு, ஞாபக சக்தி, அஹங்காரம், இவை ஆத்மாவினாலேயே அறியப்படுகின்றன. இவை ஆத்மா என்னும் புருஷனின் இலக்கணங்களாகக் குறிப்பிடப்படு கின்றன.(சரக ஸம்ஹிதை ஸுத்திர ஸ்தானம் –1)

உயிரில்லாத உடலில் ஆத்மாவினுடைய இலக்கணங்கள் காணப் படுவதில்லை. மனம் உணர்ச்சியற்றது, செயலுடன் கூடியது. அத்தகைய மனதின் செயலைத் தூண்டுவது ஆத்மா. மனம் ஆத்மாவின் வசமிருந்து செயல்படும்பொழுது மனதின் செயல்களெல்லாம் ஆத்மாவைச் சேர்ந்தவை என உபசாரமாக ஏற்றி வைத்துக் கூறப்படுகின்றது. ஜீவன் தான் செய்த நல்வினை, தீவினைகளுக்கு ஏற்ப பிறவியெடுக்கிறான்.

ஒரு உடலில் உள்ள ஆத்மாவே எல்லோருடைய உடலிலும் பரவியுள்ளது. அப்படியிருக்க தன்னுடைய துன்பங்களைப் போல் பிறருடைய துன்பங்களை ஆத்மா அறிய வேண்டும். ஆனால் அது நடைபெறுவதில்லை. ஏனெனில் இந்த ஆத்மா தன் வினையின் காரண மாக தனக்கு அமைந்துள்ள புலன்களில் மட்டுமே தொடர்பு கொண்டுள்ளான். பிற உடல்களில் தன்வினைகளுக்கு ஏற்ப புலன்களையோ, அவற்றின் தொடர்போ ஏற்படுவதில்லை. இதுதான் பிறருடைய துன்பத்தை அறியாத தற்கு காரணம். தலைமயிர், நகம் போன்றவற்றில் வலியுணர்வும் ஏற்படு வதில்லை. அங்கு சைதன்யமும் இல்லை. ஆத்மா எங்கும் பரந்து வியா பித்திருப்பதால் அது விபு என்று கூறப்படுகிறது.

ஆத்மா பிறப்பு இறப்பு அற்றது. ஆத்மாவே சாட்சியாகக் கருதப் படுகிறது. இன்ப துன்பங்களுக்கு தொடர்பில்லாதது. 24 தத்துவங்களைக் கொண்டு வருகின்ற புருஷனிடத்தில் இன்ப துன்ப உணர்ச்சியெல்லாம் காண முடியும். 24 தத்துவங்களைப் பற்றி பின்னால் விரிவாக விளக்கப் பட்டுள்ளன. மாறுபாடுகளெல்லாம் கூட்டுருவான புருஷனைச் சார்ந்த வையே. பரமாத்மாவைச் சார்ந்தவையல்ல. முன்பு வந்த தலைவலியே மறுபடியும் வந்துள்ளது. முன்பு வந்த காய்ச்சலே மறுபடியும் வந்துள்ளது. முன்பு வந்த இருமலே மீண்டும் வந்துள்ளது என்று திரும்ப திரும்ப பேசுபவர்கள் உண்டு. முன்பு பயிர் செய்த போது கெட்டத் தண்ணீரைப்

பாய்ச்சியதால் பயிர்கள் அழிந்துபோனதும், அதனால் மறுபடியும் பயிர் செய்யும் போது கெட்ட நீர்ப் பாய்ச்சாமல், உயரமாக மேடுகட்டி பயிரைக் காப்பதுபோல் கடந்த காலத்தில் வந்த நோய் மீண்டும் வராமல் இருக்க எச்சரிக்கையாக சிகிச்சை செய்ய வேண்டும். சிகித்ஸா புருஷனுக்கு இவையெல்லாம் பொருந்தும்.

துன்பம் அனைத்தும் அறவே ஒழிவதற்கான சிகிச்சை ஆசைகளைத் துறப்பதுதான். துன்பத்திற்கும், துன்பத்திற்கு சார்பான உடலையும் தோற்றுவிக்கும் ஆசையை அறவே ஒழித்தல் எல்லாத் துன்பங்களிலிருந் தும் விடுதலை அளிக்கும். இதற்கு நைஷ்டிக சிகிச்சை என்று பெயர். சிலந்தி பூச்சி தனக்குத்தானே துன்பம் விளைவிக்கும் நூல்களை தன் உடலிலிருந்து வெளியே கிளப்பி அதைக் கொண்டு கூடுகட்டும். அதே போல் அறிவில்லாதவன் எல்லாப் பொருட்களின் மீதும் ஆசை வைத்து துன்பத்தை பற்றுவான்.பொருள்களை தீயவைப் போல கருதி அவற் றிலிருந்து விலகி நிற்கும் துன்பங்களையும் அவற்றின் இருப்பிடமான உடலையும் பெறாமல் மோட்சத்தையும் பெறுவான் (சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானம் –1)

## புருஷன்

ஸத்வம் என்னும் மனம், உடல், ஆத்மா இவற்றை திரிதண்டகம் என்று கூறி, இவற்றின் சேர்க்கையே புருஷன் என்று தொடங்குகிறார். ஆத்மாவை புருஷன் என்று குறிப்பிடுகிறார்கள். புருஷனானவன் பல பெயர்களில் அழைக்கப்படுகிறான். அவையாவன: க்ஷேத்ரக்ஞன் (உடல் என்ற கோவிலில் வாழும் மெய்ப்பொருள்), திருஷ்டன் (காண்பவன்), சுரோத்ரன் (கேட்பவன்), ரஸாயுதன் (சுவையை உணர்பவன்), க்ராதன் (மலத்தையும் நாற்றத்தையும் நுகர்பவன்), வாக்தன் (பேசி தன் கருத்துக் களை வெளிப்படுத்தும் தன்மையுடையவன்), சாக்ஷி (சாட்சியானவன்), இவையெல்லாம் உயிருடன் வாழும் ஒரு மனிதனின் குணங்களை குறிக்கும் பதங்களாகவே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. (சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம்1:70–73)

சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானத்தில் உயிருடன் கூடிய ஒரு புருஷனின் லட்சணங்களைக் கீழ்கண்டவாறு குறிப்பிடுகிறது. இந்த புருஷனான

வனுக்கு மூச்சு விடுதல், கண்களின் இமைகளை மூடி எழுப்புதல், உயிர், மனம் சார்ந்த உணர்வுகள், நினைவாற்றல், அன்றாட வாழ்வின் செயல்கள், கனவுகள், மரணம் உண்டு என்கின்ற உணர்வு, ஆசை, பகை, இன்பம், துன்பம், முயற்சி, அஹங்காரம், மெய்யறிவு பெற வேண்டும் என்ற குணங்கள் காணப்படுகின்றன. இவையெல்லாம் சராசரி ஒரு மனிதனிடம் காணப்படும் குணங்களே. இறந்த உடலில் நாம் இவற்றைக் காண்பதில்லை. ஆத்மாவானது உடலை விட்டு செல்லும்போது உடல் சவமாகிறது. தூய சைதன்யத்தை உடல் இழக்கிறது. இறந்த பிறகு உடல் அழிக்கப்படும் பொழுது ஸ்தூலவடிவமான பஞ்சமஹாபூதங்கள் அந்தந்த பூதங்களுடன் இணைந்து கொள்கிறது.

### ஸம்யோக புருஷன்

புருஷனுக்கு 'ஸம்யோக புருஷன்' என்ற பெயரும் உண்டு. ஒரு புருஷனானாவன் பல தத்துவங்களால் இணைக்கப்படுவதால் ஸம்யோக புருஷன் என்று குறிப்பிடப்படுகிறான்.

### இரு தாது புருஷன் (துவிதாது புருஷன்)

க்ஷேத்ரன், க்ஷேத்ரக்ஞன் என்ற இரண்டு தத்துவங்களை வெளிப் படுத்துவதால் இரு தாது புருஷன் (துவிதாது புருஷன்) என்றும் அவன் அழைக்கப்படுகிறான்.

### திரிதண்ட புருஷன்

'ஸத்வாத்மா சரீரம் ச த்ரயமேதத் த்ரிதண்டவத்' (சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானம்(1:46)

ஒரு புருஷனானவன் மனம், ஆத்மா, உடல் (ஸத்வம், ஆத்மா, சரீரம்) என்ற இணக்கத்தினால் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதால் திரிதண்ட புருஷன் என்றும் அழைக்கப்படுகிறான்.

### ஷட் தாது புருஷன்

பஞ்சமஹாபூதங்களுடன் ஆத்மாவிற்கு ஏற்படும் தொடர்பினால் புருஷனானவன் ஜீவனுடன் அறியப்படுவதால் அவனை ஷட் தாது

புருஷன் அல்லது காதைய சேதனா புருஷன் என்று அழைக்கிறோம். ('க' என்ற சொல்லிற்கு ஆகாசம் என்று பொருள், காதையம் என்றால் ஆகாசம் முதலான பஞ்சமஹாபூதங்களைக் குறிக்கும், சேதனம் என்றால் மெய் யுணர்வைக் குறிக்கும்).

### சதுர்விம்சதி தத்வாத்மக புருஷன்

புருஷன் என்று சொல்லக்கூடியவன் சதுர்விம்சதி என்ற 24 தத்து வங்களை உடையவனாக இருக்கிறான். அவனை சதுர்விம்சதி புருஷன் என்றும், ராசி புருஷன் என்றும் நாம் குறிப்பிடுகிறோம். (சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் 1:17)

அந்த 24 தத்துவங்களாவன:

- மூல பிரக்ருதி (சிருஷ்டிக்குக் காரணமான பரம்பொருள்)
- புத்தி தத்துவம் என்ற மஹத்
- அஹங்காரம் (தான் என்னும் உணர்வு)
- ஐந்து தன்மாத்திரைகள் (பஞ்ச மஹாபூதங்களை உருவாக்கும் குணமுடைய நுண்பொருட்கள்)
- ஐந்து மஹாபூதங்கள்
- ஐந்து ஞானேந்திரியங்கள் (காது, கண், தோல், மூக்கு, நாக்கு என்பன)
- ஐந்து கர்மேந்திரியங்கள் (வாக்கு, கைகள், கால்கள், பிறப்புக் குறி, மலக்குறி என்பன)
- மனது

### பஞ்சவிம்சதி தத்வாத்மக புருஷன்

இந்த 24 தத்துவங்களுடன் ஆத்மா என்கின்ற தூய சைதன்யம் (உணர்வு) சேரும் பொழுது 25 வது தத்துவமாக பஞ்சவிம்சதி தத்வ புருஷன் உருவாகிறான்.

### கர்ம புருஷன்

இந்த புருஷனானவன் எல்லா செயல்களுக்கும், செயல்களின் விளைவுகளுக்கும், அழிவுக்கும், ஆசைக்கும், இன்பத்திற்கும், துன்பத்திற்கும்,

வாழ்க்கைக்கும், மரணத்திற்கும் காரணமாகிறான். இந்த ஆத்மாவானது மெய்யறிவை உணர்வதற்கு ஏதுவாகிறது. இது உடலில் இருக்கின்ற பொழுது மனிதப்பிறவி உயர்ந்ததாகக் கருதப்படுகின்றது. அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்பது மூதோர் வாக்கு. மனிதன் உடலைக் கருவியாகப் பயன்படுத்தி அழிவில்லா தூய மெய்யுணர்வை உணர் வதால் மனிதப்பிறவி மிகப் பெரிய பேறாகக் கருதப்படுகிறது. அறம், பொருள், இன்பம், வீடு என்ற தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இவற்றிற்கு இந்த மனிதப் பிறவியே காரணமாகிறது. ஆதலால் ஆத்மா வாழ்கின்ற இந்த உடம்பை பேணிக்காத்தல் என்பது ஒருவனின் கடமையாகிறது. இந்த ஆத்மாவாகிய மெய்ப்பொருள் உடலை சார்ந்திருப்பதால் உடலை கோவில் என்றும், ஆலயம் என்றும் கூறுகிறோம். எனவே உடலை க்ஷேத்ரம் என்றும், உடலில் உறைபவனை க்ஷேத்ரக்ஞன் என்றும் கூறுகிறார்கள். மேற்கூறிய 24 தத்துவங்களும் தானாக செயலாற்றும் தன்மையற்றவைகளாகும். ஆத்மாவின் தொடர்பு ஏற்பட்டு அதாவது 25 தத்துவங்களின் கூட்டு சேர்க்கையினாலே அனைத்து செயல்களும் நடைபெறுகின்றன. (சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் 1:37)

### சிகித்ஸா புருஷன்

உடம்பே நம் கோவிலாக இருப்பதாலும் அந்த கோவிலுக்கு செய் கின்ற பணியாக சிகிச்சை அமைவதாலும், சிகிச்சை புனிதத் தன்மை யுடையதாக கருதப்படுகிறது. இந்த 24 தத்துவங்களுடன் கூடிய தூய சைதன்யம் என்ற 25வது தத்துவம் சேரும்பொழுது இந்த புருஷனானவன் சிகித்ஸா புருஷன் ஆகிறான். இவனுக்கு பிரக்ஞா எனும் அறிவு இருக் கிறது. இந்த அறிவை சரியாகவும் அல்லது தவறாகவும் பயன்படுத்து கிறான். சரியாக பயன்படுத்தினால் அவன் நோயின்றி வாழ முடியும். தவறாக பயன்படுத்தினால் அதாவது தவறான ஆஹாரங்கள், தவறான விஹாரங்கள், தவறான சுற்றுச்சுழல் போன்றவற்றால் வாழ்க்கை பாதிக்கப் பட்டு நோய்வாய்ப்படுகிறான். நோயினால் பாதிக்கப்பட்டால் சிகிச்சை எடுத்துக்கொள்ள தகுதிவாய்ந்தவன் ஆகிறான். ஆதலால் ஸுச்ருதர் போன்றவர்கள் சிகித்ஸா புருஷன் என்றே இவனைக் குறிப்பிடுகிறார்கள். ஆத்மா நித்யமானதாக இருந்தாலும், உருவமற்றதாக இருந்தாலும்,

அவ்யக்தமாக இருந்தாலும், உடல்மனத் தொடர்பு ஏற்படும்பொழுதும், தன்னுடைய புத்தியை தவறாக பயன்படுத்தி நோயை வருத்திக் கொள் வதாலும் நோய்வாய்ப்பட்டு அதற்கான சிகிச்சை எடுத்துக்கொள்ளும் நிலை மனிதனுக்கு வருகிறது.

## சூட்சும புருஷன்

சூட்சும சரீரம் என்றால் கண்ணுக்கு புலப்படாதது என்று பொருள். ஸாங்க்ய தத்துவத்தின்படி இந்த சூட்சும சரீரம் 18 தத்துவங்களை கொண்டது. அவையாவன:

மஹத் என்ற புத்தி, அஹங்காரம் , மனது, பஞ்ச தன்மாத்திரை, பஞ்ச ஞானேந்திரியம், பஞ்ச கர்மேந்திரியம், என்பனவாகும். நியாய தத்துவம் இந்த 18 தத்துவங்களை ஏற்றுக் கொள்வதில்லை, அவர்களுக்கு 8 தத்துவங்களே உள்ளன. அவை மஹத், அஹங்காரம், மனது, பஞ்ச தன்மாத்திரைகள் என்பனவாகும்.

## ஆத்ம சரீர கண்ணோட்டம்

வேதாந்த புத்தகங்களில் ஆத்மா என்பது, பஞ்ச பூதங்களால் ஏற்பட்ட பூத உடல், சூட்சும உடல், காரண சரீரம் ஆகியவற்றிலிருந்து அப்பாற் பட்டது, தூய உணர்வாய் இருப்பது, ஆனந்தமாய் இருப்பது என்று கூறுகிறது. இதை அபக்தாத்ரய ஸாக்ஷி – விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று நிலைகளையும் காண்கின்ற ஸாக்ஷி ஸ்வரூபம் என்கிறது. சச்சிதானந்த ஸ்வரூபம் (உடல்) (பேரானந்த வடிவமே) ஆத்மா என்கிறது. இதில் ஸ்தூல சரீரம் என்றால் என்ன என்பதைப் பற்றி பார்ப்போம். ஸ்தூல சரீரம் பூத உடலைக் குறிக்கும். ஸ்தூல என்றால் பெரியது, அறியக் கூடியது,உணரக் கூடியது என்று பொருள். சரீரம் என்பது பிறந்தது முதல் அழிந்து கொண்டே இருப்பதாகும். ஸ்தூல சரீரம் என்ற சொல்லின் பொருளே மிக அரிதாக உள்ளது. நாம் இந்த உடலுடன் பிறந்து இந்த உடலுடன் வாழ்ந்து இறக்கிறோம் என்று எண்ணிக்கொண்டிருக்கிறோம்.

நமது வாழ்வு இவ்வுடலுடன் தோன்றி வாழ்ந்து முடிவிற்கு வருகிறது என்பது போல் தோன்றுகிறது. எனவே இந்த பூத உடல் மறையும்பொழுது மரணம் நம்மைத் தழுவுகிறது என்று நாம் நினைக்கிறோம்.

பூமியில் விதைக்கப்டும் விதைபோல் பூத உடலின் விதை தாயின் கருவறையில் விதைக்கப்படுகிறது. எப்படி சிறிய விதையில் ஓர் ஆலமரம் ஒடுங்கியிருக்கிறதோ அப்படி விந்துவில் மனிதனின் அனைத்து விவரங் களும் அடங்கியிருக்கின்றன. இது இறை சக்தியின் ஒரு பேராற்றல் ஆகும். இந்த பூத உடல் சிக்கல்களையும், புதிர்களையும் அறிந்து அதற் கேற்றார்போல் செயல்படுகிறது. விதை முளைவிட்டு துளிர்ப்பதுபோல் குழந்தையும், தாயின் கருவறையிலிருந்து வெளிவருகிறது. கருவறையில் குழந்தை வளர்ச்சியடைந்து ஆணாகவோ பெண்ணாகவோ முதிர்கிறது. இளஞ்செடிகள் வளர்ந்து மரமாகி பூத்து கனிகளைத் தருகின்றன. மனித உடலும் மரமும் இறுதியில் முடிவை எட்டுகின்றன. அவை இயற்கை எய்துகின்றன.

மரத்திற்கும் மனிதனுக்கும் உள்ள வேறுபாடு, மரத்திற்கு தான் என்கிற உணர்வு இல்லை என்பதுதான். மனிதனிடம் தோன்றுகிற தான் என்ற உணர்வு மேலோங்கி நான் இந்த உடல் என்ற அர்த்தத்தில் போய் முடிகிறது. மரத்திற்கு இந்த உணர்வு இல்லாத காரணத்தினால் அதற்கு எவ்வித போராட்டமும் ஏற்படுவதில்லை.

பரிணாமத்திற்கு (மாற்றத்திற்கு) உட்படுவது உடலேயன்றி நான் (ஆத்மா) அல்ல. இந்த நான் என்பது மாறுபாடு ஏதுமின்றி அப்படியே இருக்கிறது. இந்த பூத உடல் எப்பொழுதும் மாறிக்கொண்டு மரணத்தை நோக்கி போய்க்கொண்டிருக்கிறது. மூப்பும், மரணமும் உடலுக்குத்தான் ஏற்படுகின்றன. ஆனால் நாம், நான், மரணமடையப் போகிறேன் என்கிறோம். வளர்ச்சியும், மாற்றமும், மரணமும் இயற்கையே. ஆனால் நான் என்கின்ற தூய சைதன்யமாகிய ஆத்மா அழிவடைவதில்லை. இந்த நான் என்னும் அஹங்கார எண்ணம் அதை தானாக அடையாளம் கொள்வதால் பிரச்சனைகள் எழுகின்றன. இந்த பூத உடலின் மாற்றங்கள் ஆறு வகை யாகின்றன.

1. அஸ்தி என்ற சொல்லிற்கு இருப்பு என்று பொருள். எப்படி ஒரு பெரிய மாமரம் அல்லது ஆலமரம் ஒரு சிறிய விதையில் சாத்தியமாய் மறைந்திருக்கிறதோ அதேபோன்று ஒரு பூத உடல் தாய் தந்தையரிடம் வீர்யமாக மறைந்திருக்கிறது.

2. ஜாயதே என்றால் குழந்தையின் பிறப்பைக் குறிக்கும். கருவறையிலிருந்து வெளிவரும் முன்பே இது நிகழ்கிறது. தாயின் வயிற்றிலிருக்கும்போதே குழந்தை உயிர்த்தன்மை உடையதாக மாறுகிறது. பின்பு பிறக்கிறது.

3. வர்த்ததே என்றால் வளர்ச்சியைக் குறிக்கும். பிறந்த குழந்தை நன்றாக வளர்ச்சியடைகிறது.

4. விபரிணமமே என்றால் மாற்றம் என்று பொருள். குழந்தை வளர்ந்து இளமையையும், முழுமையையும் அடைகிறது. மனதிலும் மாற்றங்கள் அடைகிறது.

5. அபக்ஷீயதே என்றால் சீர் குலைதல் என்று பொருள். முதுமையடையும் போது உடல் நலம் குன்றி க்ஷீணமடைகிறது, நரை தோன்றுகிறது, கண்களும் காதுகளும் தங்கள் சக்தியை இழக்கின்றன. முதுமையின் சீர்குலைதல் ஆரம்பத்திலிருந்தே நடைபெறுகிறது. முதலில் இந்த மாற்றங்களை வளர்ச்சி என்கிறோம். சில காலங்களுக்குப் பிறகு இதனை அழிவு என்கிறோம்.

6. வினச்யதி என்றால் மரணம். இதுவே உடலிற்கு ஏற்படும் க்டைசி நிலையாகும்.

கருவடைதல், பிறத்தல், வளர்தல், மாற்றம், க்ஷீணமடைதல், இறுதியில் மரணம் – இவைதான் ஆறுவகை மாறுபாடுகள்.

இவையனைத்தும் உடலுக்குத்தானேயன்றி ஆத்மாவிற்கல்ல. இந்த தூய உணர்வான ஆத்மா உடலில் நடைபெறும் எல்லா மாற்றங்களையும் தன்னுடன் இணைத்துக் கொள்கிறது. எனவே நமது சிந்தனையில் நாம் தெளிவாகக் காணவேண்டியது கருவடைதல், பிறத்தல், மாற்றம், வளர்ச்சி குன்றுதல், இறத்தல் இவையெல்லாம் உடலின் குணங்களேயல்லாது நான் அல்லது ஆத்மாவின் குணங்கள் அல்ல என்பதே.

## பூத உடலின் கட்டமைப்பு

சூட்சுமமான பஞ்சபூதங்கள் ஸ்தூலமாகி நல்ல கர்மத்தின் பயனாக பிறவியெடுத்து சுக துக்கங்களை அனுபவிக்க ஏதுவானதாக விளங்கு

வதே இந்த ஸ்தூல சரீரம்தான். இந்த ஸ்தூல சரீரம் பஞ்சபூதங்களால் ஆனது. இந்த பஞ்சபூதங்களும் உடல் இறக்கும் பொழுது திரும்பி பஞ்சபூதங்களுடன் கலந்து விடுகின்றன. முதலில் நாசியின் வழியாக உடலின் உள்ளும் புறமும் மனிதனை உயிருடன் வைத்து வந்த காற்று, காற்று மண்டலத்தில் கலந்து விடுகிறது. சுவாசம் நடைபெறுவதில்லை. பின் உடலின் உஷ்ணம் அக்னி மண்டலத்தில் கலந்து விடுகிறது. இதனால் உடல் குளிர்ந்து விறைத்து விடுகிறது.

உடல் தகனமாகும் பொழுது அதிலுள்ள நீர், நீர் மண்டலத்தில் கலந்து கொள்கிறது. ஆறடி வெளியை ஆக்ரமித்துக் கொண்டிருந்த மனிதன் இப்பொழுது ஒரு பானையில் எலும்பும் சாம்பலுமாக குறைந்து விடு கிறான். இதையும் கடலிலோ பூமியிலோ எறிந்துவிட்டால் அவன் ஆக்ரமித்துக் கொண்டிருந்த வெளி விண்ணில் ஐக்கியமாகிறது. அவன் உடலை உருவாக்கிய மண் மண்ணுடன் கலந்து விடுகிறது. எனவே வெளி விண்ணில் கலக்கிறது, காற்று காற்றுடன் ஐக்கியமாகிறது, உஷ்ணம் அக்னி மண்டலத்தை அடைகிறது. நீரோ நீருடன் சேருகிறது.

இந்த ஸ்தூல சரீரம் படைப்பிலிருந்து தோன்றியதுதான், படைப்புக் குள் வந்து சேர்ந்தல்ல. ஸ்தூல சரீரம் படைப்பிற்குள் வந்து சேர்வதாயின் ஒவ்வொரு பிறப்பிலும் படைப்பில் ஒரு புதிய சேர்க்கை நிகழ வேண்டும். இது சக்தியும், ஸ்தூல பொருட்களும் குறையவோ, அதிகரிக்கவோ இயலாது என்ற விதிக்கு முரண்பட்டதாகிவிடும். எப்பொருளும் படைக்கவோ, அழிக்கவோ இயலாது என்பது நமக்குத் தெரியும்.

பஞ்சபூதங்களாயிருந்த உடல் பின்னர் அவற்றில் கலந்து விடுகிறது. இந்த உடல் பஞ்சபூதங்களில் தோன்றி அவற்றால் பராமரிக்கப்பட்டு பின்பு அவற்றில் கலந்து விடுவதால் பிறப்பு என்றும், இறப்பு என்றும் ஒன்று உண்டோ என்ற கருத்தும் ஏற்படுகிறது.

உடல் தோன்றுவதால் புதிதாக ஒரு பொருள் தோன்றுவதில்லை. உடல் அழியும் பொழுது எந்தப் பொருளும் அழிவதில்லை. அது எப்பொழுதும் ஒரு வடிவில் இருந்து கொண்டுதான் இருக்கிறது. ஒரு காலத்தில் உடல் வடிவில் இருந்தது. இப்பொழுது எந்த மூலப்பொருளால்

ஆனதோ அந்த மூலப்பொருளில் இருக்கிறது. கடல் அலையைப் பாருங்கள். அலை கடலிலிருந்து எழுந்து மறிகிறது. கடலால் சிறிதுநேரம் தாங்கப் படுகிறது பின்பு கடலில் கலந்து மறைகிறது. அலை கடலுக்கு அந்நியமாக இருக்க முடியுமா? அலைக்குத் தோற்றம் அல்லது மறைவு என்ற ஒன்று உண்டா? அது பெயரிலும், உருவிலும் ஏற்படும் மாற்றமேயாகும். ஐந்து பூதங்களுக்கும் இறப்பு என்று ஒன்றில்லை.

பஞ்சபூதங்களால் ஆன இந்த உடல் இறப்பது என்பது ஒரு தோற்றமேயன்றி உண்மையில் அதற்கு இறப்பு இல்லை. எனவே அது வடிவமற்றோ அல்லது மற்றொரு வடிவிலோ தொடர்ந்து இருக்கிறது. எனவேதான் இந்த உடல் பஞ்சபூதங்களைக் கொண்டது என்றும் அதன் குணங்களைக் கொண்டது என்பதையும் உணரும் பொழுது இவ்வுடல் உண்மையில் இறப்பதில்லை என்ற உண்மை நம்மை ஆச்சரியப்பட வைக்கிறது. இந்த உடல் நிலைத்திருப்பதற்கு காரணம் உணவல்ல ; பஞ்சபூதங்களேயாகும். இந்த ஐந்தில் ஏதேனும் ஒன்று சிறிது காலம் இல்லாமல் போகுமேயானால் மனித உடல் மறைந்து விடும். மனிதன் இவ்வுடல் நிலைத்து நிற்பதற்கு தானே காரணம் என்ற பெருமை கொள்கிறான். அவனால் இதை பராமரிக்க மட்டுமே இயலும். அதை துஷ்பிரயோகம் செய்ய இயலாமல் இருக்க இயலும். கடவுள் மட்டுமே இவ்வுடலை காக்க இயலும். இயற்கையே அதற்கு பாதுகாப்பு. இதை ஸர்வபூத சிந்தா சாரீரம் போன்ற அத்தியாயங்களில் ஸுச்ருதர் பஞ்சமஹாபூதங்கள் கர்ப்பத்தில் ஒரு சிசுவை எவ்வாறு காக்கின்றன என்பதைக் குறித்து அற்புதமாக விளக்குகிறார்.

நற்கர்ம வினையின் பயனே இந்த பூத உடலாகும். இந்த பூத உடல் பல நல்ல கர்ம வினையின் பயனாகும். ஒரு கொசுவினுடைய மரணம் ஒரு மனிதனின் கைவீச்சில் சம்பவித்து விடுகிறது. ஒரு புலியாக இருந்தால் துப்பாக்கி மூலம் கூட அதன் அழிவு நிகழ்ந்து விடுகிறது. ஆனால் மனிதப்பிறவி இந்த பூச்சிகளையும் விட மிருகங்களையும் விட மேம்பட்டது. மனிதப்பிறவி எடுக்கும்பொழுதுதான் நான் என்கிற உணர்வு முழுமை பெறுகிறது. எனவே நான் என்பது என்ற என்ற கேள்விக்கு விடை தேடுவதும் முழுமையாகிறது. மனிதனுக்குப்

பிறவியிலேயே மூளை நன்கு வளர்ச்சி பெறுகிறது. பகுத்தறிவு நிலை பெறுகிறது. பிரித்துப் பார்க்கும் அறிவு மேம்படுகிறது.

மனிதனுக்கே விடுதலை என்ற வீடுபேறு சாத்தியமாகிறது. இந்த உடலைப் பெறுவதற்கு புண்ணியம் செய்திருக்க வேண்டும் என்றும், அறம், பொருள், இன்பம், வீடுபேறு இவ்வுடலைக் கொண்டே செய்ய முடியும் என்றும், உடலைப் பேணிக் காப்பதற்கு மருத்துவம் இன்றி யமையாதது என்றும், இவ்வுடலை இரட்சிக்க வேண்டுமென்பதற்கு முனிவர்களால் ஆயுர்வேதம் உருவாக்கப்பட்டது என்றும், உடலின் முக்கியத்துவத்தையும், ஆயுர்வேதத்தின் முக்கியத்துவத்தையும், அதனால் ஏற்படுகின்ற ஆத்ம ஞானம் என்கின்ற லாபத்தையும் நாம் இங்கு கருத்தில் கொள்ள வேண்டும்.

ஆஹாரம், உறங்குதல், கனவு, பயம், மைதுனம் (இனப்பெருக்கம்), இந்த செயல்கள் மனித இனத்திற்கும் விலங்குகளுக்கும் பொதுவானவை. தர்மம் என்கின்ற ஒன்றே மனித வாழ்வை சிறப்பாக தாங்குகிறது. அது இல்லையென்றால் மனிதன் விலங்கிற்கு சமமாகவே இருப்பான். நாய் உண்கிறது, நாமும் உண்கிறோம், நாய் உறங்குகிறது, நாமும் உறங்கு கிறோம். தன்னைவிட பலம் வாய்ந்த நாயைக் கண்டு நாய் பயப்படுகிறது. நாமும் மேலதிகாரியைக் கண்டோ, ஆசிரியர்களைக் கண்டோப் பயப்படுகிறோம். நாய் இனப்பெருக்கம் செய்கிறது, நாமும் இனப் பெருக்கம் செய்கிறோம். ஆனால் மனித இனத்திற்கு சிறப்பாக சில குணங்கள் இருக்கின்றன. அவைதான் தர்மம், விவேகம், உண்மை எது, உண்மையற்றது எது என்பதை பகுத்தறிவும் சக்தியாகும்.

உண்ணுதல், உறங்குதல், இனப்பெருக்கம் செய்தல் போன்றவற்றை நாம் எல்லா இடத்திலும், எல்லா சந்தர்ப்பத்திலும் செய்வதில்லை. இதற்கு சில தர்ம, ஒழுக்க நீதிகளை வழிவகுத்துக்கொண்டு அதை நாம் செய் கிறோம். இது நிலையானது , இது நிலையற்றது என்ற பகுத்தறியும் சக்தி நமக்கு இருக்கிறது. மிருகங்களுக்கு இல்லை. இந்த விவேக சக்தியை பயன்படுத்தி அகத்திலிருக்கும் சக்தியைக் கண்டுகொள்ள தவறினால் அவன் தன்னிலையிலிருந்து தவறி மிருகங்களுக்கு ஒப்பானவனாகிறான் என்று வேதம் கூறுகிறது.

'அரிதரிது மானிடராய் பிறத்தல் அரிது' என்கிறார் ஔவையார்.

'ஐந்தூனாம் நரஜன்ம' (விவேக சூடாமணி) – மானிடப் பிறவி பெறுதற்கரிது போன்ற வார்த்தைகளை நாம் கேட்கிறோம். இந்த உடலே சுகம் மற்றும் துக்கத்தின் இருப்பிடமாகும். இன்பம் துன்பம் போன்ற அனுபவங்களைப் பெறுவதற்கான சாதனமே இது.

இவ்வுடலை ஒரு களம் என்று நாம் கண்டு கொள்ளும் பொழுது இவ்வுலகின் மீது ஏற்றிய சுமையை அகற்றி நாம் விடுபடுகிறோம். ஆசை நம்மிடம்தான் தோன்றுகிறது. ஒரு பெண்ணோ அல்லது ஆணோ கவர்ச்சிக்கு காரணமானால் எல்லோருமே அந்த ஆணாலோ பெண்ணாலோ கவரப்பட வேண்டும். ஏன் நாம் மட்டும் கவரப்பட்டு மற்றவர்கள் கவரப்படாமல் இருக்கின்றனர். அதற்கு கவர்ச்சியடைதல் என்ற காரணம் நம்முள்ளே இருக்கிறது என்பதுதான்.

பசி ஒன்றுதான் உடலின் முதல் தேவை, சுவாசம் மற்றொரு தேவை. இவையில்லாமல் உடல் உயிருடன் இருக்க முடியாது.

### சூட்சும சரீரம்

சூட்சும சரீரம் என்றால் நுண்ணுடல் என்று பொருள். இது இன்பம் துன்பம் முதலியவற்றை அனுபவிக்க ஏதுவான கருவியாகும்.

சூட்சும சரீரம் பதினேழு அம்சங்களை கொண்டது. அவை

- பஞ்ச ஞானேந்திரியம் எனும் ஐந்து புலன்கள் அல்லது ஐந்து உணரும் கரணங்கள்,
- ஐந்து கர்மேந்திரியம் என்னும் ஐந்து செயல் கரணங்கள்,
- பஞ்ச பிராணன் என்னும் ஐந்து பிராணன்கள்,
- மனம் என்னும் மனது,
- புத்தி என்னும் அறிவு

இவையனைத்தும் சேர்ந்ததே சூட்சும சரீரம் ஆகும்.

தொட்டுப் பார்த்து அறியக் கூடிய நமது ஸ்தூல உடலைத் தவிர சூட்சும சரீரம் என்று அழைக்கக்கூடிய மற்றொரு உடலும் இருக்கிறது.

சூட்சும சரீரம் பிரஸன்னமாக இருக்கும் பொழுதுதான் ஸ்தூல உடல் இயங்குகிறது. சூட்சும சரீரத்தை தொட்டுப்பார்த்தோ அல்லது கண்ணால் கண்டோ அறியமுடியாது. ஆனால் உணர முடியும். எண்ணங்களும் சூட்சுமமாகவே இருக்கின்றன. எண்ணங்கள் ஐம்புலன்களால் அறியப் படுவதில்லை.

சூட்சும சரீரம் இருப்பதால் ஸ்தூல சரீரம் உயிருடையதாக இருக் கிறது. சூட்சும சரீரம் ஒரு உடலை விட்டு நீங்கி மற்றொரு உடலை அடைகிறது. இதனை மறுஜென்மம் என்பார்கள். எப்படி ஸ்தூல சரீரம், ஆகாசம், நீர், வாயு, பூமி, அக்னி ஆகிய ஐந்து ஸ்தூல பூதங்களால் ஆனதோ அதேபோல் நுட்ப நிலையில் உள்ள அதே ஐந்து பூதங்களினால் ஆனதுதான் சூட்சும சரீரம். நுட்பநிலையிலிருந்து மாற்றப்பட்டு ஸ்தூல நிலையை அடைவதே பஞ்சீகரணம். இந்த மாற்றம் ஏற்படாத நிலையில் பஞ்சபூதம் இருக்கும் நிலை சூட்சும (நுண்ணியது) எனப்படும். இந்த சூட்சும உடலில் புண்ணியம் எனப்படுவது நல்ல கர்ம வினைகளின் பயனாகத் தோன்றுவதுதான். அது சுக துக்க நிலைகளை அனுபவிக்கப் பயன்படும் ஒரு கருவியாக இருக்கிறது.

ஸ்தூல சரீரத்தை ஒரு களமாக ஒப்பிட்டால் சூட்சும சரீரத்தை அந்த களத்தின் செயல்புரியும் பணியாளாக ஒப்பிடலாம்.

பஞ்ச ஞானேந்திரியங்களாவன: சக்ஷு என்ற கண்கள், ஸ்ரோத்ரம் என்ற செவி, கிராணம் என்ற நாசி, ரஸனம் என்ற நாக்கு, துவக் என்ற தோல் என ஐம்புலன்களாக குறிக்கப்பட்டுள்ளன. செவிகளுக்கு தேவதை திக் (திசை) ஆகும். காதுகளின் துணை கொண்டு நாம் திசைகளை அறிகிறோம். செவியின் செயல் கேட்டறிதலாகும். நமக்கு இரு செவிகள் இருப்பதால் எங்கிருந்து ஒலி வருகிறது என்பதை நாம் கேட்டு அறிந்து கொள்ள முடிகிறது. தோலின் அதிபதி வாயு தேவன். தோலினால் காற்று என்ற பூதத்தை நாம் உணரமுடிகிறது. தோலின் செயல் உணர்தலாகும். கண்களின் அதிபதி சூரியன். கண்களின் செயல் உருவங்களையும், வ்ண்ணங்களையும் அறிதல். கண்களால் ரூபத்தைப் பார்ப்பதற்கு ஒளி நமக்கு அவசியம். நாவிற்கு அதிபதி வருணன், நாவின் செயல் சுவையை

அறிதலாகும். நாசிக்கு அதிபதி அஸ்வினி குமாரர்கள். மூக்கின் செயல் மணத்தை அறிதலாகும். இந்த புலன்களின் தனிச்சிறப்பு என்னவெனில் ஒவ்வொரு புலனும் ஒரு செயலைத்தான் செய்யமுடியும். ஒன்றிற் கொன்று மாற்ற முடியாது. இந்த ஐம்புலன்களின் வாயிலாக பிற பொருட்களைப் பற்றிய ஞானத்தை நாம் பெறுகிறோம்.

இனி பஞ்ச கர்மேந்திரியங்கள் என்ற செயல் உறுப்புகளைப் பற்றி பார்ப்போம். வாக் என்ற பேசும் வாய், பாணி என்ற கைகள், பாதம் என்ற கால்கள், பாயு என்ற மலவாய், உபஸ்தம் என்ற பிறப்புறுப்பு போன்றவை பஞ்ச கர்மேந்திரியங்களாகும். பேசும் கருவியின் தேவதை நெருப்பாகும். சிலரின் பேச்சில் நெருப்பு பறக்கிறது, அனலைக் கக்கினான் என்றெல்லாம் கூறுகிறோம். கைகளின் தேவதை இந்திரன். இந்திரன் கையில் உள்ள தன் செங்கோலால் உலகை அளக்கிறார். பாதயோர் விஷ்ணு என்கிறது வேதம். கால்களுக்குரிய தேவதை விஷ்ணுவாகும். விஷ்ணு உலகத் தையே காலால் அளந்தார் என்றெல்லாம் புராணங்கள் கூறுகின்றன. குதத்திற்கு தேவதை எமன். பிறப்பு உறுப்பிற்கு அதிபதி பிரஜாபதி ஆவார்.

நாவானது இரு செயல்களைச் செய்கிறது. ஒன்று பேசுவது மற்றொன்று சுவையை அறிவது. கைகளின் செயல் பற்றுவது, தாங்குவது, பெறுவது மற்றும் கொடுப்பதாகும். கால்களின் செயல் நடத்தல் போன்ற வையாகும். குதத்தின் செயல் கழிவுப் பொருட்களை வெளியேற்றி உடலுக்கு சுத்தத்தை அளிப்பதாகும். பிறப்புறுப்பின் செயல் இன்பத்தைக் கொடுப்பது. பாலினச் சேர்க்கையில் இன்பமில்லையெனில் உற்பத்தி நிகழாது.

ஸ்தூல, சூட்சும சரீரங்களைப் பற்றிய அறிவு ஒரு மனிதனின் சிந்தனைக்கு உதவியாக இருக்கிறது. நாம் ஸ்தூல, சூட்சும சரீரங் களிலிருந்து வேறுபட்டவர்கள். ஸ்தூல சரீரம் பஞ்சபூதங்களால் ஆனது. அது பிறப்பு, வளர்ச்சி, மாற்றம், நோய், அழிவு, மரணம் என்னும் மாற்றங் களுக்கு உட்பட்டது. ஆனால் ஆத்மாவாகிய நானோ இந்த மாற்றங் களுக்கு உட்படாதவன். பஞ்ச ஞானேந்திரியங்கள், பஞ்ச கர்மேந்திரியங் கள், பஞ்ச பிராணன்கள், மனம், புத்தி ஆகியவை உடைய சூட்சும சரீரம்

தனது வேலையைச் செய்கிறது. நான் என்கிற ஆத்மா இவற்றிலிருந்தும் வேறுபட்டவன், நானே பேருணர்வு, சுத்த சைதன்யம், விழிப்புணர்வு எல்லாவற்றிற்கும் சாட்சி என்று நாம் உணர வேண்டும். இதுவே ஞானமாகும்.

**காரண சரீரம்**

காரண சரீரம் என்றால் என்ன? எந்த சரீரத்தைப் பற்றி விளக்க முடியாதோ, எதற்கு ஆரம்பம் இல்லையோ, எதில் அறியாமை குடி கொண்டிருக்கிறதோ, எது மற்ற இரண்டு சரீரங்களுக்கும் காரணமாக இருக்கிறதோ, எது மற்ற உண்மைத் தன்மையைப் பற்றி அறியாமல் இருக்கிறதோ, எது மாறுபடாத உருவில் இருக்கிறதோ அதுவே காரண சரீரமாகும்.

காரண சரீரம் என்றால் 'அநாதி அவித்யா ரூபம்' என்று கூறலாம். அதன் தன்மை ஆரம்பமற்ற தூய அஞ்ஞானம் ஆகும். இதில் எதைப் பற்றிய அறிவும் இல்லை. நம்மைப்பற்றிய அறிவோ, இவ்வுலகை பற்றியோ அறிவோ இதில் இல்லை.

எந்த அஞ்ஞானத்திற்கும் தொடக்கம் என்பது கிடையாது. ஒரு பொருளைப் பற்றிய அறிவு எப்போது தொடங்கியது என்பதைப்பற்றி கூறிவிடலாம். ஆனால் அறியாமையின் தொடக்கத்தைப் பற்றி கூற முடியாது. சூட்சும ஸ்தூல சரீரங்களுக்கு காரணமாக இருப்பது காரண சரீரம். காரண சரீரத்தில் சூட்சும ஸ்தூல சரீரங்கள் பீஜரூபமாய் விதைபோல் மாற்றத்திற்கு முந்தைய நிலையில் இருக்கின்றன.

ஆத்மா மூன்று நிலைகளையும் (அவஸ்தைகளையும்) காணும் சாட்சியாக விளங்குகிறது. அவை,

- ஜாக்ரதம் – விழிப்பு நிலை
- ஸ்வப்னம் – கனவு நிலை
- ஸுஷுப்தி – ஆழ்ந்த உறக்க நிலை

எனப்படும்

## ஜாக்ரதா எனும் விழிப்பு நிலை

செவிகள் முதலிய புலன்கள் மூலம் பொருள்களைப் பற்றிய அறிவை ஒருவர் பெறும் நிலையே விழிப்பு நிலையாகும். இந்த நிலையில் நான் எனும் ஆத்மா ஸ்தூல சரீரமாக அடையாளம் காணப்படுகிறது. இந்நிலை உடலாக தன்னை பாவிக்கும் நிலையாகும்.

## ஸ்வப்ன நிலை

விழிப்பு நிலையில் கண்டும் கேட்டும் அனுபவமான நிலையின் நீட்சியே கனவு நிலையாகும். கனவு நிலையில் ஸ்தூல சரீரம் நுழைய முடியாது. புற உலகை அறிய உதவும் புலன்கள் செயலற்ற நிலையில் நாம் எதையும் கண்டு கொள்ள முடியாது. இந்த பௌதீக உலகின் கதவுகள் நமக்கு தூக்கத்தில் மூடப்பட்டு விடுகின்றன. நமக்குள் ஒரு உலகம் சிருஷ்டிக்கப்படுகிறது. அதுதான் கனவு நிலையின் தொடக்கமாகும். இது சூட்சும சரீரத்தின் வேலையாகும். இந்நிலையில் ஸ்தூல சரீரத்தின் வேலையோ, பங்கோ எதுவும் இல்லை. சூட்சும சரீரத்தைப் பேணும் ஆத்மா, தேஜஸம் என்று அழைக்கப்படுகிறது.

## ஸுஷப்தி எனும் ஆழந்த உறக்க நிலை

எனக்கு எதுவும் தெரியாது. நல்ல உறக்கத்தை அனுபவித்தேன் என்று சொல்லக்கூடிய நிலையே ஆழ்ந்த உறக்க நிலையாகும். காரண சரீரமான தன்னை அந்நிலையில் அடையும் தன்மை, பிரக்ஞா என்று அழைக்கப்படுகிறது.

## கோசங்கள்

பஞ்ச கோசங்கள் எனப்படும் ஐந்து உறைகளும் ஒவ்வொரு மனிதனிடத்திலும் உள்ளன. அவையாவன: அன்ன மயம், பிராண மயம், மனோ மயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் போன்றவையாகும். ஆத்மாவும், இந்த ஐந்து கோசங்களும் வேறானவை. கோசங்கள் என்றால் உறை அல்லது மூடி என்று பொருள் கூறலாம். கத்தியை வைப்பதற்கென்று ஒரு உறை உண்டு. உறை கத்தியாகாது. அது கத்தியைச் சுற்றி மூடும் ஒரு பொருள். அதுபோல ஆத்மாவைச் சுற்றிலும் ஐந்து உறைகள் இருக்கின்றன. அவை

| | | |
|---|---|---|
| அன்ன மய கோசம் | – | உணவானாலான உறை |
| பிராணமய கோசம் | – | சுவாசத்தால் ஆன உறை |
| மனோமய கோசம் | – | மனதால் ஆன உறை |
| விஞ்ஞானமய கோசம் | – | புத்தி அல்லது நான் என்கிற உணர்வாலான உறை |
| ஆனந்த மய கோசம் | – | ஆனந்தத்தால் ஆன உறை |

என ஐந்து வகைப்படும்.

### 1. அன்ன மய கோசம்

எது உணவிலிருந்து தோன்றுகிறதோ, உணவினால் வளர்கிறதோ, திரும்பவும் உணவைத்தரும் இந்த பூமியைச் சென்றடைகிறதோ அதுவாக இருக்கிற இந்த ஸ்தூல சரீரத்தை அன்னமய கோசம் என்றழைப்பார்கள்.

### 2. பிராணமய கோசம்

ஐந்து பிராணங்களும், ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்தது தான் பிராண மய கோசமாகும். உயிர்வாழ இன்றியமையாத காற்றை உள்ளே இழுத்தும் வெளியே விட்டும் சுவாசிக்கிறோம். இது பிராணன் எனப்படும். நாம் சுவாசிக்கும் காற்று உயிருடன் இருக்க உதவுகிறது. நமது நுரையீரலிலும், நாசியிலும் இருக்கும் பிராண வாயு நம்மைக் காக்கிறது. மூன்று நிமிடங்கள் மூச்சுக்காற்று நின்றால் நாம் உயிரை இழந்து விடுவோம். இறப்பிற்கும் வாழ்விற்கும் இடையிலான தூரம் இரண்டே நிமிடங்கள் தான்.

இந்த பிராணன்கள் ஐந்து வகையாக ஆயுர்வேதத்தில் பிரிக்கப் பட்டுள்ளன. அவையாவன

- பிராணன்
- உதானன்
- வியானன்
- ஸமானன்
- அபானன்

என்பவையாகும்.

- பிராண வாயு – இது மூளையிலும், தண்டுவடத்திலும், மார் பகத்திலும் உள்ளது. புத்திக்கும், மூளையின் செயல்பாடு களுக்கும், புலன்களின் செயல்பாடுகளுக்கும், காரணமாகிறது. இருதயத்தை இயக்குகிறது. ஆஹாரத்தை விழுங்குதல், சுவாசித் தல், ஏப்பம் விடுதல், தும்முதல் போன்ற செயல்கள் பிராண வாயுவைச் சார்ந்திருக்கின்றன.

- உதான வாயு – இது மார்பில் உள்ளது. தொண்டையிலும், மூக்கிலும், நுரையீரலிலும், வயிற்றின் மேற்பகுதியிலும் சஞ்சரிக் கிறது. ஒரு மனிதனின் பேச்சாற்றலுக்கும், நினைவாற்றலுக்கும் முயற்சிக்கும், தைரியத்துக்கும், மனதின் இயக்கத்துக்கும் காரண மாகிறது.

- வியான வாயு – இதன் இருப்பிடம் இருதயமாகும். இது தேகம் முழுவதும் சஞ்சரிக்கிறது. சுவையை அறிதல், விந்துவை யோனிக் குள் செலுத்துதல், கண் இமைகளின் செயல்பாடு, கொட்டாவி விடுதல், வியர்வை, சுவையை அறிதல், கை கால்களின் அனைத்து அசைவுகள், திசுக்களுக்கு போஷாக்கு அளித்தல், உடலில் சக்தியையும், மலத்தையும், பிரித்தறிதல் போன்ற பல செயல்களை இந்த வாயு செய்து வருகிறது.

- ஸமான வாயு – அக்னி ஸ்தானமாகிய வயிற்றிலும், சிறு குடலிலும் காணப்படுகிறது. உணவை செரிக்கச் செய்கிறது. அன்ன ரஸத்தையும், மலத்தையும் பிரிக்கிறது.

- அபான வாயு – இடுப்புப் பகுதியிலும், குடலிலும், சிறுநீரகத் திலும், பெண்களின் கர்ப்பாசயத்திலும் காணப்படுகிறது. மலம், மூத்திரம், ஆர்த்தவம், விந்து போன்றவற்றை வெளியேற்றுகிறது.

### 3. மனோமய கோசம்

மனதும், ஐந்து ஞானேந்திரியங்களும் சேர்ந்தது மனோ மய கோசம்.

### 4. விஞ்ஞானமய கோசம்

ஞானேந்திரியங்களும், புத்தியும் சேர்ந்தது விக்ஞானமன கோசம்.

## 5. ஆனந்தமய கோசம்

அவித்யா எனப்படும் அறியாமையினால் காரண சரீர ரூபத்தில், கிரியா முதலியவற்றின் மாறுபாட்டுடன் கூடிய வெளிப்பாடு ஆனந்தமய கோசமாகும்.

எப்பொழுதும் ஆனந்தத்தைத் தவிர வேறொன்றும் இல்லை. ஆனந்தமய கோசம் காரண சரீரத்துடன் சேர்ந்தது. ஆழ்ந்த உறக்கநிலையில் இருப்பவர் இவ்வுலகத்தைப் பற்றியோ, தன்னைப்பற்றியோ எதையும் அறியார். அதனால் அவருக்கு பிரச்சனை இல்லை; அவர் மகிழ்வுடன் இருக்கிறார். அறியாமையில் தோன்றிய காரணத்தினால் அந்த மகிழ்ச்சி உண்மை யானதல்ல. தாமஸ நிலையில் உள்ள அறியாமையில் தோன்றுவது அந்த இன்பம். அந்த இன்பம் தாமஸ குணமுடையது. துயில் எழுந்தவுடன் நீங்கள் அதை ஆனந்த நிலை என்று வர்ணிக்கிறீர்கள். நான் யார் என்ற புதிருக்கு விடை கண்டபின் தன்னிலையில் பெறும் ஆனந்தமே உண்மை யான ஆனந்தமாகும்.

உடல், பிராணன், புத்தி, மனம், அறிவு, உறைகள் ஆகியவை நான் என்கிற ஆத்மாவாக இருக்க முடியாது. அப்படியென்றால் ஆத்மா என்ற நான், யார் என்கின்ற கேள்வி எழுகிறது. அது சச்சிதானந்தமாக இருக்கிறது. எது முக்காலங்களிலும் இருக்கிறதோ அதை சத் என்பர். ஞான சரீரத்தை சித் என்பர். என்றும் மகிழ்ச்சியான நிலைமை ஆனந்தம் என்பர். ஆத்மா சத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் இருக்கிறது.

### சரகரின் கருத்துக்கள்

சரகர் சாரீர ஸ்தானம் முதல் அத்தியாயமாகிய கதீதா புருஷீயத்தில் ஆறு தாதுக்களின் சேர்க்கையால் புருஷன் உருவாகிறான் என்று கூறுகிறார். பஞ்சமஹாபூதங்களையும், சேதனம் என்கின்ற நுண் உணர்வையும் அவர் ஆறு பூதங்களாக குறிப்பிடுகிறார். சேதனமே (Consciousness) புருஷனின் லக்ஷணம் என்றும் குறிப்பிடுகிறார். ஸுச்ருதரும் முதல் அத்தியாயத்தில் இவ்வழியையே கடைபிடிக்கிறார். ஐந்து பூதங்கள் என்ற சொல்லில் ஐந்து புலன்களும் அடக்கம் என்று சக்ரபாணி உரை எழுதியிருக்கிறார்.

புரம் என்கின்ற உடலில் வாழ்பவன் புருஷன் என்று சக்ரபாணி விளக்கம் கொடுக்கிறார். ஆறு தாதுக்களுடன் கூடிய புருஷனே சிகிச்சைக்கு தொடர்புடையவன் ஆகிறான். உடலுடன் தொடர்பில்லாத சைதன்யத்தைப் பற்றி சிகிச்சா புத்தகங்கள் பேசுவதில்லை. புருஷன் என்ற வார்த்தை பசுக்களுக்கும், மிருகங்களுக்கும் பொருந்துவதாக இருந்தாலும், அவை ஆறு தாதுக்களால் உருவாக்கப்பட்டிருந்தாலும், இவையெல்லாவற்றை யும் நிர்ணயிக்கும் தன்மையுடையவனாக பகுத்தறிவு படைத்தவனாக இருப்பதால் புருஷன் என்ற பதம் மனிதனுக்கே அதிகம் பொருந்தும் என்று சக்ரபாணி உரை எழுதியிருக்கிறார்.

புருஷன் 24 தத்துவங்கள் உடையவனாகக் கருதப்படுகிறான். அவை பத்து இந்திரியங்கள், புலப்பொருள் ஐந்து, பஞ்சமஹாபூதங்கள், பிரக்ருதி, புத்தி, மனது, அஹங்காரம், என்பன. அறியாமையும், அறிவதும் மனதின் இலக்கணமாகும். சில நேரங்களில் சில விஷயங்களைப் புரிந்து கொள் கிறோம். சில நேரங்களில் சில விஷயங்களைப் புரிந்து கொள்ள முடி வதில்லை. இதைக் கொண்டு மனது ஒரு இந்திரியமாக இருக்கிறது என்பதை நாம் உணரலாம் என்று சரகர் கூறுகிறார். மனதிற்கும், புலனிற்கும், புறப் பொருள்களுக்கும் தொடர்பில்லாத பொழுது விஷய ஞானம் நமக்குக் கிடைப்பதில்லை என்றும், புலன்களுக்கும், புறப்பொருளுக்கும் தொடர்பு ஏற்படும் பொழுதே நாம் விஷயத்தை புரிந்து கொள்கிறோம் என்றும் கூறுகிறார். அணுத்வம் என்ற நுண்ணிய தன்மையும், ஏகத்வம் என்ற ஒன்றாக இருக்கும் தன்மையும், மனதினுடைய முக்கிய குணங்களாக சரகர் கூறுகிறார். புருஷனுக்கும், ரஜஸ், தமஸ் என்னும் குணங்களுக்கும் தொடர்பு உண்டாகும் பொழுது முன்கூறிய 24 தத்துவங்களுடன் தொடர்பு ஏற்படுகிறது. அது முடிவில்லாததது. ரஜஸ், தமஸ் என்ற இரண்டு குணங்களுடன் கூடிய புருஷனுக்கு மேற்கண்ட 24 தத்துவங்களுடன் தொடர்பு ஏற்படுகிறது. அந்த தொடர்பே முடிவில்லாத ஸம்ஸாரம் எனும் பிறவியாகின்றது. இவையிரண்டும் நீங்கிய பிறகு ஸத்வம் எனும் சூழலிலிருந்து விடுபட்டு வீடுபேறு அடைகிறான் புருஷன். 24 தத்து வங்களின் கூட்டாகிய புருஷனின் முன்வினை, வினைப்பயன், அறிவு, மோக மயக்கம், இன்பம், துன்பம், வாழ்க்கை, இறப்பு, இறுமாப்பு

இவையனைத்தும் இருக்கும் புருஷனில் இந்நிலையறிந்தவன் ஊழிக்காலத்தையும், உலகத்தோற்றையும் அறிந்தவன் ஆகிறான். தன்னை அறிந்தவன் ஆகிறான். உழலும் சக்கரம் போல் மாறி மாறி வருகின்ற உடல்களின் தொடர்ச்சியையும் அந்த தொடர்ச்சியில் உண்டாகும் துன்பத்திற்காக அவன் செய்யும் ஆன்மீக சிகிச்சையையும் அவன் அறிவான். ஆத்மா என்னும் புருஷன் இல்லாவிடில் அறிவுத்திறன், மோக மயக்கம், உண்மை, பொய், வேதங்கள், நன்மை, தீமை ஆகிய இவையனைத்தும இராது. செய்பவன் (கர்த்தா), அறிபவன் என்ற பாகுபாடும் இருக்காது. அதே போல அந்த ஆன்மாவிற்கு சார்பிடமான உடல் இன்பம், துன்பம், செல்கை, வருகை, சாஸ்திரம், சாஸ்திர அறிவு, பிறப்பு, இறப்பு, பிறவிச் சூழல், மோட்சம் என ஒன்றும் தேவைப்படாது. இவ்வித காரணங்களால் இந்த அனைத்திற்கும் காரணமானவன் புருஷனே என்று சரகர் கூறுகிறார். புருஷன் இல்லையெனில் அறிவுத்திறன் முதலியவை காரணமில்லாதவையாகிவிடும். களிமண், சக்கரம், சக்கரம் சுற்றும் தடி என்னும் காரணப் பொருள்களாலே மட்பாண்டம் உருவாகி விடுகின்றது என்றும் அதற்கு குயவன் தேவையில்லை என்றும், அதே போல வீடுகட்டும் தொழில் இல்லாமலேயே மண், புல், மரம் முதலிய சாதனங்களாலேயே வீடுகட்டி முடிந்துவிடும் என்று கூறும் சாகசக்காரனே ஆன்மாவின் சம்பந்தமில்லாமல் சாதனப் பொருட்கள் மட்டுமே ஒன்று கூடி உடலைப் படைக்கின்றன என்று அறியாமல் கூறுவான். அக்கூற்று, யுக்திக்கும், சாஸ்திரத்திற்கும் பொருந்தாது.

எப்படி பானை தயாரிப்பதற்கு குயவன் தேவையோ, வீடு கட்டுவதற்கு வீடு கட்டுபவன் தேவையோ அதேபோல் உடலை இயக்குவதற்கு புருஷன் தேவை என்று சரகர் வாதிடுகிறார். எந்தப் பிரமாணங்களினால் பொருட்கள் அனைத்தும் கண்கூடாக அறியப்படுகின்றனவோ, அதே பிரமாணங்களால் காரணமான ஆன்மா என்னும் புருஷன் அறியப்படுகிறான். ஆன்மா இல்லை என்று கூறும் ஒரு மதமும் அதன் குற்றத்தையும் சரகர் விளக்குகிறார். சிலர், குறிப்பாக பௌத்தர்கள், ஆன்மா என்பது ஒன்றில்லை, உடல் மட்டுமே உள்ளது, கண நேரம் இருக்கக்கூடியது. தொடர்ச்சியாகத் தோன்றுவதுமான அறிவு சந்தத்தின் கூற்றே உடல்.

அவ்வாறு தொடர்ந்து தோன்றுபவை ஒவ்வொன்றும் வெவ்வேறானவையே. இவ்வாறு கணநேரத்தில் அழியக்கூடிய நுண்பொருட்களின் கூட்டே உயிரினம். எனவே அது செய்பவன், அனுபவிப்பவன், ஆத்மா என்றெல்லாம் கூறப்படமாட்டாது என்பர்.

சரக ஸம்ஹிதை சாரீரம் 5வது அத்தியாயமாகிய புருஷ விஷயம் என்னும் அத்தியாயத்தில் சரகரின் வேதாந்தக் கருத்துக்கள் புலப்படுகின்றன. புருஷன் என்கின்ற அந்தர் ஆத்மா உலகத்திற்கு சமானமானவன். உலகம் முழுவதும் வியாபித்திருப்பவன் என்று புனர்வஸு ஆத்ரேயர் அந்த அத்தியாயத்தை தொடங்குகிறார். உலகில் உருவம் கொண்ட எத்தனைப் பொருட்கள் உள்ளனவோ அத்தனைப் பொருட்களும் புருஷனிடமும் உள்ளன. எத்தனைப் பொருட்கள் புருஷனிடத்தில் உள்ளனவோ அத்தனையும் உலகில் உண்டு என்று பகவான் கூறுகிறார். உலகத்தி லெல்லாம் என்னைப் பார்க்கலாம். என்னிடத்தில் உலகத்தைப் பார்க்கலாம் என்று கூறும் பகவத்கீதைக் கருத்தை இக்கருத்து ஒட்டியுள்ளது.

ஐந்து தாதுக்களுடன் பிரம்மம் என்கின்ற சேதனை சேரும்பொழுது ஆறு தாது சேர்க்கையுடைய புருஷன் எனப் பெயர்பெறுவான் என்று முன்பு நாம் பார்த்தோம். அந்தர் ஆத்மா என்ற உள்ளுணர்வையே பிரம்மம் என்று கருத வேண்டும். புருஷனுக்கும் பலவித விபூதிகள் உண்டு. புருஷனில்

- இந்திரன் அஹங்கார வடிவமாகக் கருதப்படுகிறார்.
- ஒளியைத் தரும் ஆதித்யர்கள் புருஷனில் காணப்படும் காந்தியாகக் கருதப்படுகிறார்.
- ருத்ரன் கோபமாகக் கருதப்படுகிறார்.
- சந்திரன் சாந்தமாகக் கருதப்படுகிறார்.
- வசுதேவர்கள் இன்ப உருவமாகக் கருதப்படுகிறார்.
- அசுவினி, தேவர்கள் ஒளி உருவமாகக் கருதப்படுகிறார்.
- வாயு தேவன் உற்சாகமாகக் கருதப்படுகிறார்.
- விச்வ தேவர் புலன்களாகக் கருதப்படுகிறார்.

இருள் மோக மயக்கமாகவும் கருதப்படுகிறது. கிருத யுகம் என்பது வாலிபப் பருவத்தையும், திரேதா யுகம் என்பது யௌவன பருவத்தையும், துவாபர யுகம் என்பது மூப்பையும், கலியுகம் என்பது நோய், மரணம் போன்றவற்றையும் குறிப்பிடுகிறது. உலகமனைத்தையும், தன்னிலும், தன்னை உலகத்திலும் காண்கின்ற ஒருவனுக்கு உண்மையறிவு உண்டா கின்றது. உலகம் முழுவதையும் தன்னில் காண்பவனுக்கு இன்ப துன்பங் கள் இரண்டிற்கும் தானே கர்த்தா (செய்பவன்) என்றும், தன்னைக் காட்டிலும் வேறொருவன் கர்த்தா இல்லையென்றும் அறிவு உண்டாகிறது. வினை வசத்திலிருப்பதால் மேலே கூறப்படும் காரணம் முதலியவற்றை மேலே ஐந்துடன் கூடிய உலகம் நானே என்றறிந்தவன் உண்மையறிவைப் பெற்று முக்தியைப் பெறுகிறான். இது சரகரின் வேதாந்த கருத்தாகும்.

இந்த உலகம் தோன்றுவதற்கான காரணம்

- ஹேது என்றும்,
- பிறப்பு உற்பத்தி என்றும்
- உடல் வளர்ச்சி பெறுதல் விருத்தி என்றும்
- துன்பம் உண்டாதல் உபத்ஸவம் என்றும்
- அழிதல் யோகம் என்றும்

கூறப்படும். துன்ப விஷயங்களில் வெறுப்புண்டாகி அவற்றை துறப்பதே நிவர்த்தி எனப்படும்.

தோட்டத்தில் நல்ல நிலையில் உள்ள ஒரு செடியில் நீண்ட கிளை களைக் கொண்ட மரங்கள் சூழ்ந்து கொண்டு ஒரு பழத்தைக் காணாமல் செய்து விடுவதுபோல அஹங்காரம் முதலான எண்வகை பொருட்களால் பரவப்பட்ட புருஷன் பிறப்பு, இறப்பு என்னும் ஈடுபாட்டைக் கடந்திருக்க மாட்டான்.

## பற்றுதலுக்கும் விடுதலைக்குமாகிய வழிகள்

1. **அஹங்காரம்** – சாதி, குலம், பெருமை, அழகு, செல்வம், நடத்தை, அறிவு, கல்வி, இவற்றில் தான் உயர்ந்தவன் என்று நினைப்பது அஹங்காரமாகும்.

2. **சங்கம்** – மனம், வாக்கு, உடல் போன்றவற்றால் மோக்ஷம் அடைய முற்படாமல் தடைபடுதல் சங்கம் எனப்படும்.

3. **ஸம்சயம்** – நற்செயல்களுக்கும், தீய செயல்களுக்கும் பலனுண்டா, உண்மையிலேயே ஞானம், மோக்ஷம் என்பது உண்டா, மரணத்திற்கு பிறகு பாவ புண்ணியங்களுக்கு பலன் உண்டா, சாஸ்திரத்தில் உள்ள விஷயங்கள் உண்மைதானா என்று சந்தேகப்படுவது.

4. **அதிஸம்பவம்** – உடலை சார்ந்த எல்லா நிலைகளிலும் நான் வேறுபட்டவன் அல்லன். படைப்பவன் நானே. இயற்கையாக உள்ளவன் நான். உடல் பொருள்களில் அறிவு என்பவற்றின் கூற்றே நான் என்று நினைப்பது அதிஸம்பவனம் எனப்படும்.

5. **அப்யவபாதம்** – தாய், தந்தை, சகோதரர், மனைவி, குழந்தைகள், சுற்றத்தார், பணியாளர் முதலியவர் என்னைச் சேர்ந்தவர் என்றும், நான் இவர்களைச் சேர்ந்தவர் என்றும் ஒருவருக்கொருவர் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதால் உண்டாகும் அறிவு அப்யவபாதம் எனப்படும்.

6. **விப்ரத்யயம்** – செய்யத் தகாததை செய்யத் தக்கது என்றும் நன்மையளிப்பதை தீமையளிப்பது என்றும் தூய்மையானதை தூய்மையற்றது என்றும் கருதும் எதிரிடையான அறிவு விப்ரத்யயம் எனப்படும்.

7. **அவிசேஷம்** – அறிவாளியையும், அறிவற்றவனையும் இயற்கை பொருட்களையும், மாற்றுப் பொருட்களையும், விருப்பையும், வெறுப்பையும் ஒன்று என்று கருதுவது அவிசேஷம் எனப்படும். இது நன்மை தீமையை புரிந்து கொள்ள இயலாமல் தவிக்கும் அறியாமையாகும்.

8. **அனுவாதம்** – சரியான முயற்சியில்லாத செயல்கள். மந்திராதிகளை தவிர்த்தல், உண்ணாவிரதம் போன்றவற்றை தவிர்த்தல், இறை வழிபாடுகளைத் தவிர்த்தல், தான தர்மங்களைத் தவிர்த்தல், இவ்வித முயற்சிகளை செய்யாதிருத்தல் அனுவாதம் எனப்படும்.

அஹங்காரம் கொண்டு பற்றுதலுடன் கூடிய வினைப்பயனில் ஆன்மாவைப் பற்றியவைகளை உடல் மீது ஏறிட்டு தாய் தந்தையர் முதலானவர்கள் மீது இல்லாத பற்றுதலை கற்பித்துக் கொண்டு செய்யத் தக்கவை செய்யத்தகாதவைகளில் மாறாத எண்ணம் கொண்டு அறிவு அறிவில்லாமை என்பதற்கிடையே அதிக பாகுபாடு பாராட்டாமல் மோட்சத்திற்கு சாதகமான ஞானமார்க்கத்தை விட்டு வேறொரு முறையைப் பின்பற்றி மனம் சார்ந்த குற்றங்களுக்கும், உடல் சார்ந்த குற்றங்களுக்கும் அடிப்படைக் காரணமான துன்பங்களுக்கெல்லாம் காரணமாகிறான் மனிதன்.

## மனம்

மன் ஞானே என்ற தாதுவிலிருந்து உருவானது மனஸ்.

மன்யதே அவபுத்யதே ஞாயதே அனேன இதி மன: (உபநிடதம்)

மனம் என்பதை தமிழில் உள்ளம் என்று குறிப்பிடலாம். புலன்களுக்கும், மனதிற்கும் தொடர்பு ஏற்படும் பொழுதே ஒரு பொருளைப் பற்றிய அறிவு நமக்கு பூரணமாகக் கிடைக்கிறது. ஒரு பொருள் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அந்தப் பொருளைக் கண்ணால் காண்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். ஒரு பொருளை கண்ணால் கண்டாலும் மனதோடு தொடர்பில்லையெனில் அந்தப் பொருளைப் பற்றிய அறிவு நமக்குக் கிடைப்பதற்கு காரணமாக இருக்கிறது. சுகங்களையும், துக்கங்களையும் உணர்வதற்கு ஒரு கருவியாக மனது விளங்குகிறது. ஒவ்வொரு உடம்பிலும் இது தனித்தனியாகப் பிரதிபலிக்கிறது. இது நுண்ணியது, அணு வடிவமானது. நித்யமானது. (தர்க்க சங்க்ரஹம்)

மனனம் (மனப்பாடம் செய்தல்) என்று சொல்லக்கூடிய பாட முறை மனதைச் சார்ந்தே இருக்கிறது. இதனை சித்தம் என்றும், ஹ்ருதயம் என்றும், ஸத்வம் என்றும் பல இடங்களில் குறிப்பிடுகிறார்கள். மனதினுடைய அடையாளமாக ஹ்ருதயம் குறிப்பிடப்படுகிறது. சேதனம் என்று சொல்கின்ற தூய உணர்வு ஹ்ருதயத்தைச் சார்ந்திருக்கிறது என்று ஸுச்ருதர் கூறுகிறார். பேலர் என்பவர் தலையாகிய சிரஸுக்கும் முகத்

திலுள்ள தாடைக்கும் இடையிலே மனம் இருக்கிறது என்கிறார். ஞானேந்திரியங்களுக்கும் கர்மேந்திரியங்களுக்கும் அதிபதியாக இருப்பதால் இதை சர்வேந்திரியம் மற்றும் அதீந்திரியம் என்கின்றனர். ஹ்ருதயம் என்ற சொல்லுக்கு இருதயம் என்றும், மூளை என்றும் அர்த்தம் காணலாம். ஆத்மாவிலிருந்து புத்திக்கும், புத்தியிலிருந்து மனதிற்கும், மனதிலிருந்து புலன்களுக்கும், புலன்களிடமிருந்து விஷயங்களுக்கும் தொடர்பு ஏற்படும் பொழுதே ஒரு பொருளைப் பற்றி அறிய முடிகிறது.

மனதிற்கு அணுத்வம் (நுண்ணியது) மற்றும் ஏகத்வம் (ஒன்றானது) என்ற குணங்கள் உண்டு. (சரக ஸம்ஹிதை சாரீரம் 1:18–19)

## அணுத்வம்

மிக நுண்ணியதாக இருப்பதால் பல இடங்களுக்கு எண்ணங்கள் தாவுகிறது. ஒரு இடத்திலிருந்து கொண்டே நாம் பல இடங்களையும், பல விஷயங்களையும் சிந்திக்கிறோம்.

## ஏகத்வம்

ஒரு நேரத்தில் ஒரு செயலை மட்டும் நாம் செய்ய முடியும். ஒரு புலனின்பத்தை நாம் அனுபவிக்க முடியும். பல நேரங்களில் நாம் பல விஷயங்களைச் செய்கிறோம், நினைக்கிறோம். இதனால் பல மனது இருப்பதாக நாம் நினைத்துக் கொள்கிறோம். மனதின் அணுத்வம் என்கின்ற குணத்தினால் வேகமாக ஒரு செயலிலிருந்து மற்றொரு செயலுக்கு மாறிக்கொள்கிறோம் என்றலல்லாமல் ஒரே நேரத்தில் நாம் பல செயல்களைச் செய்கிறோம் என்று பொருளில்லை. சிந்திக்கும் ஆற்றலை மனது என்று கூறுகிறோம்.

புலன்களைக் கட்டுப்படுத்துவது, தன்னடக்கம், நல்லது எது, கெட்டது எது என்று பாகுபடுத்தி முடிவெடுக்கும் தன்மை இவையெல்லாம் மனதின் குணங்களாகக் கருதப்படுகின்றன. நமது அனுபவங்களுக் கெல்லாம் மனதே காரணம்.

மனதின் குணங்கள் ஐந்து: அவையாவன

1. சிந்த்யம் எனும் சிந்திக்கும் ஆற்றல்
2. விசார்யம் எனும் சீர் தூக்கி அறிதல்

3. ஊஹ்யம் எனும் ஊகித்தல்

4. தியேயம் எனும் தியானம் செய்தல்

5. ஸங்கல்பம் எனும் உறுதி செய்து கொள்ளுதல்

போன்றவை மனதின் குணங்களாகும்.

(சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் 1:19)

இவை புலன்களின் உதவியின்றி மனதாலேயே உணரப்படுகின்றன என்றும், இன்ப துன்பத்திற்கு மனதே காரணம் என்றும் இந்த சந்தர்ப்பத்தில் சரகர் கூறுகிறார். ஒரு பொருளை புலனோடு ஏற்படும் தொடர்பு மூலமே மனம் அறிந்து கொள்ளும் என்று சரகர் கூறுகிறார். இந்த புரிந்து கொள்ளும் ஆற்றல் மன அளவிலேயே உள்ளது என்கிறார். பின்னர் ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள சிற்றறிவு அல்லது பேரறிவின் படி அவற்றின் ஏற்றத்தாழ்வுகள் பிரித்தறியப்படுகின்றன. ஐந்து புலன்களும் ஐந்து மஹாபூதங்களாலேயே உருவாக்கப்பட்டன. அவை புத்தியின் மூலம் இயக்கப்படுகின்றன. இதேபோல் ஐந்து கர்மேந்திரியங்கள் உள்ளன. அவையும், அவற்றுக்கான இயக்கத்தை செய்து வருகின்றன.

## மனதைப் பற்றி சரகர்

மனம் என்பது அறிவுப் புலன்களால் அறிய முடியாதது. இது உட்புலனாக இருக்கிறது. இது ஆத்மாவிற்கு கட்டுப்பட்டது. அறிவு புலன்கள் தம்தம் பொருட்களை அறிய அடிப்படைக் காரணமாக ஆவது மனதாகும். ஒரு மனிதனுடைய மனம், சிந்தனை, ஊகம் முதலியவற்றால் நிறைந்துள்ளது.

சரகர் மனதை அதீந்திரியம் என்று கூறுகிறார். ஸத்வம் என்றும் இதைக் கூறுகிறார். சேதனம் என்று இதைக் கூறலாம் என்கிறார். பொருட்களுக்கும் புலன்களுக்கும் உள்ள தொடர்பினால் மனது தூண்டப்பட்டு விஷயங்களைப் புரிந்து கொள்ள உதவுகிறது என்று கூறுகிறார். மனது ஒன்றே, பலதல்ல என்று கூறுகிறார். பலவித சிந்தனை உள்ள மனிதனுக்கு மனது பலதோ என்ற எண்ணம் வரும். ரஜோ, தமோ, ஸத்வ குணங்களால் மனதுடன் சூழப்படும் பொழுது இது இவ்வாறு

வருகிறது. ஐம்புலன்களைக் கொண்டும் ஒரு செயலை ஒரே நேரத்தில் செய்ய இயலாது. மனதானது ஒரே புலனை இயக்குகிறது. மனம் ஒன்றாகவும், அணுவாகவும் இருக்கும் காரணத்தினால் ஒரே நேரத்தில் பல பொருட்களை ஏற்றுக் கொள்வதில்லை. அறிவுப் புலன்கள் ஐந்திற்கும் ஒரே நேரத்தில் மனதின் தொடர்பு இல்லாமையால் எல்லாப் பொருட்களையும் ஒரே நேரத்தில் அறிய முடிவதில்லை என்கிறார். (சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் 1:20–25)

அதே அத்தியாயத்தில் மனம், அர்த்தம், புத்தி, ஆத்மா இவற்றை அயதார்த்த திரவ்யங்கள் என்று கூறுகிறார். இவைதான் மனதை நற்செயல்களிலும், தீய செயல்களிலும் ஈடுபடுத்தவும் செய்கின்றன என்று கூறுகிறார். சிந்தனை மனதின் செயலாகும். சிந்தனையில் அதியோகம் (புலன்களுக்கும், பொருட்களுக்கும் உள்ள தொடர்பு குறைவாக இருப்பது), மித்யா யோகம் (புலன்களுக்கும், பொருட்களுக்கும் உள்ள தொடர்பு முறைகேடாக இருப்பது) ஏற்பட்டால் மன நோய்கள் தோன்றுகின்றன என்றும், மனநோய்க்கு தூய ஒழுக்கம் என்னும் ஸத்விருத்தத்தைப் பற்றியும் அதிகமாகக் கூறுகிறார். தைரியத்தை இழத்தல், தம் சக்திக்கு அப்பாற்பட்டவனாக செயல்படாமல் இருத்தல், அன்னியரிடம் இரக்கம் காட்டுதல், தான் மட்டும் இன்பம் பெற வேண்டும் என நினைக்காமல் பிறருக்கும் இன்பம் தரும் செயல்களைச் செய்தல், துன்பம் தரும் செயல்களைத் தவிர்த்தல் நன்கு ஆராயாமல் ஒரு செயலில் இறங்கக் கூடாது என்றும், புலன்களுக்கு கட்டுப்பட்டு இருக்க வேண்டும் என்றும், சினம், வருத்தம் போன்றவற்றை கட்டுப்படுத்த வேண்டும் என்று மனக் கட்டுப்பாட்டைப் பற்றி சரகர் விளக்குகிறார். (சரக ஸம்ஹிதை : ஸூத்திர ஸ்தானம் – 8)

### மனோரோகங்களும் ஆயுர்வேத சிகிச்சையும்

மனதிற்கு ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்கள் உள்ளன. இதில் ஸத்வம் குணமாகவும், ரஜஸ் மற்றும் தமஸ் தோஷங்களாகவும் ஆயுர்வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. மனதிற்கென்று ஸத்வாவஜயம் என்று சிகிச்சைக் குறிப்பிடப்பட்டுள்ளது. மனதிற்கு தீமை

செய்கின்ற விஷயங்களை ஒதுக்கியும், மனதிற்கு நன்மை பயக்கின்ற எடுத்துக் கொள்வது இந்த சிகிச்சையின் நோக்கமாகும். இறை சார்ந்த சிகிச்சை என்று கூறப்பட்டுள்ள தெய்வ வியபாச்ரய சிகிச்சையில் உபவாஸம், பிரணிபாதகமனம் (இறைத் தலங்களுக்கு நடைபயணம் மேற்கொள்ளுதல்), பிராயச்சித்தம் போன்றவை மனோரோகங்களுக்கு சிகிச்சையாகும். பிராயச்சித்தம் என்ற வார்த்தையை சித்தத்தை சுத்தம் செய்வது என்று பொருள் கூறலாம். உன்மாதம் எனும் மனநோய்கள், அபஸ்மாரம் என்னும் காக்காய்வலிப்பு, அதத்வஅபினிவேசம் என்ற இல்லாத பொருட்களை இருப்பதுபோல உணர்வது போன்றவை மனோரோகங்களாக ஆயுர்வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவை யல்லாமல் தூக்கமின்மை, பிரமம் என்னும் மயக்கம், போன்றவைகளும் மனோ நோய்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. பல கிரக நோய்களில் மன லட்சணங்கள் . காணப்படுகின்றன. மனதிற்கென்று சில மருத்துவ முறைகளும், சிகிச்சை முறைகளும் ஆயுர்வேதத்தில் காணப்படுகின்றன. தலைக்கு எண்ணெய் தேய்ப்பது, நஸ்யம் செய்வது, தாரை செய்வது போன்றவை மனநோய்களுக்கு முக்கிய சிகிச்சைகளாகக் கருதப்படுகின்றன. மனதை அமைதிப் படுத்துவதற்கு கிருதம் (நெய்) முக்கியமான ஒரு மருந்தாகக் கொடுக்கப்பட்டு வருகிறது. கல்யாணக கிருதம், ஸாரஸ்வாத கிருதம், வல்லாரை கிருதம் போன்றவையும், நஸ்யம் போன்ற சிகிச்சை முறைகளும் மனதிற்குரிய சிகிச்சை முறைகளாக ஆயுர்வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றையெல்லாம் விட 'தீ' என்னும் மெய்யறிவு, தைரியம் என்னும் மன உறுதி, ஆத்மாதி விஞ்ஞானம் என்னும் தன்னைத் தான் உணரும் மெய்ஞானம் இவையெல்லாம் மனோ தோஷங்களுக்கு முக்கிய ஔஷதமாக ஆச்சாரியர்களால் கூறப்பட்டுள்ளன.

**காலம்**

அன்றாட வாழ்வின் அளவுகோலாக காலம் விளங்குகிறது. உண்மையிலேயே அது உள்ளது. எங்கும் வியாபித்திருப்பது, நித்ய மானது, நடந்தது, நடப்பது, நடக்கப்போவது என்று நாம் சொல்லும் சொற்கள் காலத்தைச் சார்ந்தே அமைந்திருக்கின்றன. உலகத்திலுள்ள எல்லா பூதங்களுக்கும் காலத்துடன் தொடர்பிருக்கிறது. காலம் வேகமாக

சென்று கொண்டேயிருக்கிறது. எந்த பூதங்களிடமும் இது அழிவதில்லை. மகிழ்ச்சியை மாற்றுவதற்கும், பல துக்கங்களை மறப்பதற்கும் காலம் ஒரு மருந்தாகிறது. வாழ்க்கையில் ஏற்படும் எவ்வகைத் துன்பங்களையும், சோர்வுகளையும், இழப்புகளையும் காலம் சரி செய்கிறது. ஒரு மனிதனுடைய வாழ்க்கை இத்தனை காலந்தான் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. பிறந்தவர் அனைவருக்கும் இறப்பு உண்டு என்பதையும், ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையிலும் கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் உண்டு என்பதையும் உணர்த்துகிறது. கடந்த காலத்தை மறந்துவிட்டு நிகழ்காலத்தில் நன்றாக சிந்தித்து வாழ்ந்தால் எதிர்காலத்தில் வரும் பிரச்சனைகளை தவிர்க்கலாம் என்று ரிஷிகள் கூறுகின்றனர். பருவகாலங்களினால் உலகம் உய்வு பெறுகிறது. செடி கொடிகள் பூக்க, காய்க்க, கனிய காலம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அவற்றை பரிணாமம் என்று அழைப்போம். பரிணாமம் என்ற சொல்லுக்கு மாறுதலடைதல் என்று பொருள். உலகத்தில் காலத்திற்கேற்ப பல மாற்றங்கள் வந்திருப் பதை நாம் காண்கிறோம்.

பழைய காலத்தில் உள்ள மருத்துவமுறை இன்று மாற்றம் பெற்றி ருக்கிறது. பழைய காலத்தில் உள்ள சிம்னி விளக்கு இன்று மின் விளக்காக மாற்றம் பெற்றிருக்கிறது. இந்த பரிணாமம் என்று சொல்லக்கூடிய மாறுதலடைதல் எப்போதும் நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது. காலத் திற்கேற்ப மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது. உலகம் அழியும் வரை இம்மாற்றம் நிகழ்ந்து கொண்டேயிருக்கும். சில பொருட்கள் வேகமாக மாறுதலடைகிறது, சில பொருட்கள் மாறுதலடைவதில்லை. பஞ்சபூதங்களின் குணங்கள் மாறுதலடைவதில்லை. பஞ்சபூதங்களால் ஏற்படும் விஷயங்கள் மாறுதலடைகின்றன. (சரக ஸம்ஹிதை : ஸூத்திர ஸ்தானம் 11:42)

மாற்றத்தை அளக்கும் ஒரு கருவியாக காலம் பயன்படுகிறது. காலம் என்பது ஆயுர்வேதத்தில் தட்ப வெப்ப நிலையையும், எமதர்மனையும், வினையையும், விதியையும், மரணத்தையும் குறிக்கும்படியான பல அர்த்தங்களில் பயன்படுத்தப்படுகிறது. காலத்தை சார்ந்தே வருடங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. அவை மேலும் முகூர்த்தம், பக்ஷம், மாதம், நாட்கள்,

என பிரிக்கப்பட்டுள்ளன. காலங்களையே ஆறு பருவங்களாக நாம் பிரிக்கிறோம். இவற்றிற்கு ஆறு ருதுக்கள் என்று பெயர். இவற்றை பின்பனிக்காலம், வசந்த காலம், வெயில்காலம், மழைக்காலம், இலை யுதிர்காலம், பனிக்காலம் என்று பிரிக்கிறோம். நியாயர்களும், வைசேஷிகர் களும் காலத்தை நித்ய வஸ்துவாகக் கருதுகிறார்கள். நியாய வைசேஷிகர் களின் கூற்றுப்படி காலமானது திரவியத்தை சார்ந்து அதன் பரிணாமத் திற்கு உட்பட்டு நடந்தது, நடப்பது, நடக்கப்போவது என்ற நிலையில் மாறுபடுகிறது. நவ திரவியங்களில் ஒன்றாக காலம் குறிப்பிடப்பட்டுள்ளது. காலத்திற்கு ஸாங்க்யம் என்றும் ,பரிணாமம் என்றும், ஸம்யோகம் என்றும், விபாகம் என்றும் குணங்கள் கூறப்படுகின்றன. (ஸங்க்யம் என்றால் எண்ணிக்கை, பரிணாமம் என்றால் வெளிப்பாடு, ஸம்யோகம் என்றால் இணைப்புத்தன்மை; விபாகம் ஒன்றால் பிரிவுப்படுத்தும் தன்மை)

### காலத்தின் வகைகள்

காலத்தை நாம் ஸம்வத்ஸர காலம் (பருவ காலம்) என்றும், ஆதுர காலம் (நோய் நிலைக் காலம்) என்றும் இரண்டாகப் பிரிக்கலாம்.

ஸம்வத்ஸர காலம் என்பது ருது காலம் ஆகும்.தட்ப வெப்ப நிலைக்கேற்றப்படி பருவநிலைகளில் ஏற்படும் மாறுதல்களை ஸம்வத்ஸர காலம் என்கிறோம். ஆங்கிலத்தில் இதனை வருடம் என்று சொல்கிறோம், மாதம் என்றும்; வாரம் என்றும் குறிப்பிடுவது இதைத்தான். பழைய வேத புத்தகங்களில் சூரியனுடைய இயக்கத்தைப் பொறுத்து காலம் உத்த ராயனம் என்றும், தக்ஷிணாயனம் என்றும் கூறப்பட்டுள்ளது. உத்தரா யனத்தில் சூரியன் வடதிசை நோக்கிச் செல்கிறார். தக்ஷிணாயனத்தில் சூரியன் தென்திசை நோக்கி செல்கிறார். தக்ஷிணாயனத்தை விஸர்க காலம் என்று சொல்கிறோம். தஷிணாயனம் என்றால் உடலுக்கு வலிமை உண்டாக்கி போஷாக்கை அடைகின்ற காலம் என்று பொருள். உத்தராயனத்தை ஆதான காலம் என்கிறோம். இக்காலத்தில் வறட்சித் தன்மை ஏற்பட்டு மனிதனுடைய ஆரோக்யமும், பலமும் குறைந்து காணப்படும்.

வருடத்தை ஆறு ருதுக்களாக ஆயுர்வேதம் பிரிக்கிறது. அவை சிசிரம், வசந்தம், கிரீஷ்மம், வர்ஷம், சரத், ஹேமந்தம் என்பவையாகும்.

இவற்றை 12 மாதங்களுக்குள் நாம் பிரிக்கிறோம். ஒரு ருதுவானது இரண்டு மாதங்களாகும். இதில் சிசிரம், வசந்தம், கிரீஷ்மம் ஆகிய ருதுக்களை நாம் ஆதான காலம் என்று குறிப்பிடுகிறோம். வர்ஷம், சரத், ஹேமந்தம் ஆகிய ருதுக்களை விஸர்க காலம் என்று குறிப்பிடுகிறோம். காலங்களை நாம் தமிழில் காண்போம்.

- ஹேமந்தம் – முன்பனிக்காலம்
- சிசிரம் – பின்பனிக்காலம்
- வசந்தம் – வசந்த காலம்
- கிரீஷ்மம் – வெயில்காலம்
- வர்ஷம் – மழைக்காலம்
- சரத் – இலையுதிர் காலம்

## முன்பனிக்காலம்

சுற்றுச் சூழல் பனியின் காரணமாக ஜடராக்னி உள்ளேயே அடைக்கப் பட்டு அதிகரிக்கப்படுகிறது. ஆகையால் ஜடராக்னியானது மிக கடினமான உணவையும் ஜீரணிக்க வல்லதாக இருக்கும். ஜடராக்னிக்கு ஏற்ற வகையில் உணவு கிடைக்காத போது அது தாதுக்களை அழிக்கத் தொடங்கும். இதன் காரணமாகவும், சுற்று சூழலின் பனியினாலும் வாயு அதிகரிக்கும். ஆனால் முன்பனிக்காலத்தில் மட்டுமே மூன்று தோஷங் களும் சமநிலையில் உள்ளதாகக் கூறப்படுகிறது.

## பின்பனிக்காலம்

ஜடராக்னி கூடுதலாக இருக்கும். இக்காலத்தில் கபத்தின் ஸ்நிக்தாதி குணங்கள் சீத குணத்துடன் சேர்கிறது. ஆதான காலத்தின் தொடக்கமாக இருப்பதால் தேக பலம் குறைய தொடங்குகிறது.

## வசந்த காலம்

பின்பனிக்காலத்தில் சயமாக இருக்கும் கபம் வசந்த காலத்தின் சூரிய வெப்பத்தினால் இளகி திரவமாகும். இவ்வாறு கோபித்த கபமானது ஸ்ரோதஸ்களை அடைத்து ஜடராக்னியை குறைத்து ஜீரண கோளாறு களையும், கபம் சம்பந்தமான நோய்களையும் உண்டாக்கும். தேக பலம் குறைந்து காணப்படும்.

### வெயில் காலம்

சூரிய வெப்பம் மிகுதியாக இருப்பதனாலும் இந்த ருதுவின் வறட்சி மற்றும் லகு குணத்தினாலும் கபத்தின் குணங்கள் குறைந்து காணப்படும். ஆனால் வறட்சி மற்றும் லகு குணம் வாதத்தை கூட்டும். ஆதான காலத்தின் கடைசி காலமாக இருப்பதால் சரீர பலமும் குறைவாக இருக்கும். வெப்பத்தினால் ஏற்படும் வியாதிகளாகிய மஞ்சள் காமாலை, கண்வலி போன்றவை இக்காலத்தில் காணப்படும்.

### மழைக்காலம்

மூன்று தோஷங்களும் கோபித்திருப்பதால் ஏற்கனவே பலவீனமாக இருக்கும் ஜடராக்னி மழைக்காலத்தில் மிகவும் பலம் குன்றியதாக இருக்கும்.

குளிர்ந்த காற்று (வாடைக்காற்று), கார் மேகங்கள், அசுத்தமான தண்ணீர், வெப்பமான பூமியில் திடீரென்று மழை பெய்தல் ஆகிய காரணத்தினால் தோஷங்கள் கேடு அடைகின்றன. திடீரென பெய்யும் மழையால் அம்ல பாகம் ஏற்பட்டு பித்தம் கோபிக்கிறது. சீத குணத்தினால் வாதம் கோபிக்கிறது.

மூன்று தோஷங்களும் கேடு அடைவதால் குடல் சம்பந்தமான நோய்கள் ஏற்படுகின்றன. அசுத்தமான குடிநீரை அருந்துவதால் ஏற்படும் வியாதிகளான காலரா, டைபாய்டு, சீத பேதி, குடல் பூச்சிகள், ஹெப் படைட்டிஸ் எனப்படும் மஞ்சள் காமாலை நோய் ஆகியவை ஏற்படும். நீர்தேக்கங்களில் கொசுக்கள் வளருவதாலும், மலேரியா, யானைக்கால் நோய், மூளைக்காய்ச்சல், டெங்கு காய்ச்சல் போன்றவை ஏற்படும் அபாயமும் உள்ளது.

ருது சந்தி என்பது ஒரு ருது முடிவடைந்து மறு ருது தொடங்கும் சமய மாகும். அந்த ருதுவின் ஆஹார விஹாரங்களை சிறிது சிறிதாக மாற்றி அடுத்துவரும் ருதுவின் நியமங்களை சிறிது சிறிதாக தொடங்கவும் உள்ள சமயமாகும். திடீரென சில நியமங்களை நிறுத்தவோ அல்லது கடை பிடிக்கவோ செய்தால் பல வியாதிகள் ஏற்பட காரணமாக அமைகின்றது.

ஆகையினால் ருது சந்தியைப் பற்றி தெரிந்து கொள்வதால் இயற்கைக்கு ஏற்றவாறு தக்க வழிமுறைகளை வகுத்துக் கொள்ளலாம்.

## சரத் – இலையுதிர் காலம்

மழைக்காலத்தில் குளிர்ச்சி ஒத்துக் கொண்டவர்களுக்கு திடீரென்று கதிரவனின் கிரணங்களின் சூடு ஏற்படுவதனால் குவிந்திருக்கின்ற பித்தம் பெரும்பாலும் சரத் ருதுவில் சீற்றமடைகிறது. இனிப்புச்சுவை, இலகு குணம், குளிர்ந்த வீர்யம், கசப்புச் சுவை, பித்தத்தை தணிக்கக் கூடிய உணவு வகைகள் ஆகியவற்றை நன்கு பசியெடுத்தபின் உட்கொள்ள வேண்டும். மலம் கழிக்கச் செய்யும் சிகிச்சை (விரேசனம்), அசுத்த இரத்தக் குழாயைக் கீறி இரத்தம் வெளியேற்றும் சிகிச்சை (இரத்த மோட்சனம்) போன்றவற்றை இக்காலத்தில் மேற்கொள்ளலாம். ஹம்ஸோதகம் என்ற பகலில் கதிரவனின் ஒளியால் சூடாகி இரவில் சந்திரனின் ஒளியால் குளிர்ந்து காலத்தின் இயல்பால் பக்குவமாய், மாலையில் அகஸ்திய நக்ஷத்திரம் தோன்றியதன் மகிமையால் உண்டாகும் நஞ்சற்ற நீரைப் பருக வேண்டும்.

## ஆயுர்வேதத்தில் காலத்தின் முக்கியத்துவம்

வர்ஷ ருதுவின் ஆரம்ப நிலையை இலக்கியங்கள் பிராவ்ருதம் என்றும் குறிப்பிடுகின்றன. ஓரோர் காலத்தில் எவ்வாறு நடக்க வேண்டும் என்பதையும் ஆயுர்வேதம் குறிப்பிடுகிறது.

(சரக ஸம்ஹிதை : சாரீர ஸ்தானம் 1:115)

ஆயுர்வேதத்தில் நோய்க்கான மூன்று காரணங்களைக் குறிப்பிடும் போது

1. அஸாத்ம்ய இந்த்ரியார்த்த ஸம்யோகம்,
2. பிரக்ஞாபராதம்,
3. பரிணாமம்

ஆகியவற்றைச் சரகர் குறிப்பிடுகிறார். புலன்களுக்கும் அதன் விஷயங்களுக்கும் ஏற்படுகின்ற ஒவ்வாத தொடர்பு நோய்க்கு ஒரு காரணமாகிறது.

கண்ணால் ஒரு பொருளை பார்க்கிறோம். அதாவது வெளிச்சத்தைப் பார்க்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். அந்த வெளிச்சத்தை அதிகப்படியாக பார்த்தாலோ, மங்கிய ஒளியில் பார்த்தாலோ, கண்ணை வக்கிரமாக வைத்துப் பார்த்தாலோ கண்நோய் வர வாய்ப்புண்டு. சூரிய ஒளியை நாம் நேராகப் பார்க்கிறோம். இதனை அதியோகம் என்று சொல்லலாம். மந்தமான வெளிச்சத்தில் படிக்கிறோம். இதனை ஹீனயோகம் என்று சொல்கிறோம். கண்ணைச் சுருக்கிக் கொண்டு தூரத்தில் தெரியும் பொருளைக் கண்களுக்கு சிரமம் கொடுத்து பார்க்கிறோம். இதனை மித்யாயோகம் என்று கூறலாம். இவ்வாறு புலன்களுக்கும் அதன் விஷயங்களுக்கும் ஏற்படுகின்ற ஒவ்வாத் தொடர்பை அஸாத்ம்ய இந்திரியார்த ஸம்யோகம் என்று சொல்கிறோம்.

அடுத்த காரணம் *பிரக்ஞாபராதம்*. மனிதனுக்கு இறைவனால் தரப்பட்ட அறிவு பிரக்ஞும் எனப்படும். இந்த அறிவானது,எது சரி, எது தவறு என்பதைப் பிரித்தறியும் பகுத்தறிவாகும். இதனை தவறாக பயன்படுத்தினால் நமக்கு நோய் வருகிறது. புகை பிடிப்பது புற்றுநோயை உருவாக்கும் என்று நமக்குத் தெரியும். புகை பிடிக்க வேண்டும் அல்லது பிடிக்க வேண்டாம் என்ற தேர்ந்தெடுக்கும் தன்மை நம்மிடம் உள்ளது. அதையும் மீறி புகைப் பிடிப்பதால் நமக்கு நோய் வருகிறது. இதற்கு *பிரக்ஞாபராதம்* என்று பெயர்.

மூன்றாவது காரணமாக காலத்தைக் குறிப்பிடுகிறார். காலத்தினால் எவ்வாறு நோய் வருகிறது என்றால் காலத்தின் மாற்றத்தின் காரணமாக ஒருவன் மூப்படைகிறான். வயது என்ற மூப்பு எல்லோர்க்கும் வருகிறது, நரை எல்லோர்க்கும் வருகிறது, மூப்பு தேய்வு எல்லோர்க்கும் வருகிறது. மரணம் எல்லோர்க்கும் வருகிறது. இதனையெல்லாம் ஸ்வபாவிக நோய்கள் என்று சொல்கிறோம். ஸ்வபாவிக நோய்களை நாம் தடுக்க முடியாது. அதனால் தான் எமனைக் கூட காலன் என்று குறிப்பிடுகிறோம். அவன் மரண தேதியை நிர்ணயிப்பதால் அவனுக்குக் காலன் என்று பெயர். இதல்லாமல் பருவ நிலைகளின் மாறுதல்களினால் ஏற்படும் நோய்களும் காலத்தின் காரணமாகவே உண்டாகின்றன.

## ஆதுர காலம்

ஆதுர காலம் என்றால் நோயாளிக்குச் சம்பந்தப்பட்ட காலம் ஆகும். நோய்க்கும் நோயாளிக்கும் தொடர்புடைய காலத்திற்கு ஆதுர காலம் என்று பெயர். ஒரு நோய் உருவாவதற்கு ஆறு நிலைகளை ஆயுர்வேதம் கூறுகிறது. அவையாவன

1. *சயம்* (தோஷங்கள் தன்னுடைய இடத்தில் தேங்குதல்)
2. *பிரகோபம்* (தேங்கி அதிகப்படுதல்)
3. *பிரஸரம்* (தன்னிடத்திலிருந்து வேறிடத்திற்கு செல்லுதல்)
4. *ஸ்தான ஸம்ச்ரயம்* (ஒரு இடத்தில் போய் தாதுக்களுடன் சேர்ந்து நிலைத்தல்
5. வியக்தி (நன்றாக வெளிப்படுதல்)
6. பேதம் (உபத்திரவங்களுடன் காணப்படுதல்)

வாத பித்த கபங்கள் ஒரு காரணத்தினால் சயம் என்னும் நிலையை அடைந்து அதிகரித்து பின்பு பிரகோபடைந்து, வேறொரு இடத்திற்குச் சென்று அந்த இடத்திலுள்ள தாதுக்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு (தோஷங்களுக்கும் தாதுக்களுக்கும் உள்ள தொடர்பின் காரணமாக) ஒரு நோய் உருவாகி அந்நோயானது தன்னுடைய தன்மை களை வெளிப்படுத்துகின்றன. இந்த ஆறு நிலையையும் ஆறு காலங்களாக வர்ணிக்கிறோம். ஓரோர் நிலையிலும் மனிதன் நோயின் ஓரோர் அறிகுறிகளை வெளிப்படுத்துகிறான். அதனை கண்டறிந்து அதற்கேற்றாற் போல் சிகிச்சையளிக்க வேண்டும். இதற்குக் கிரியா காலம் என்று பெயர். கிரியா காலம் என்றால் சிகிச்சை அளிக்கப்பட வேண்டிய நேரம் என்று பொருள் கூறலாம்.

## வயது என்னும் காலம்

மனிதனுடைய வயதையும் காலமாகக் கூறலாம். குறிப்பாக இளம் வயது கபமாகவும், நடுவயது பித்தமாகவும், மூப்புவயது வாதமாகவும், ஆயுர்வேதம் கூறுகிறது. அந்தந்த கால கட்டங்களில் அதற்கே உரிய சில நோய்களும் காணப்படலாம். இதற்கு ஸ்வபாவம் என்று பெயர்.

## ரோக காலம்

நோயினால் உண்டாகும் அவஸ்தைகளை நவம் என்றும், புராணம் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம். நவம் என்றால் நோய் தொடங்கி ஒரு சில நாட்களேயானது என்று அர்த்தம். புராணம் என்றால் நோய் தொடங்கி நீண்ட நாட்களானது என்று பொருள். இது நோய்க்குரிய காலங்களாகும்.

## ஔஷத காலம்

ஒவ்வொரு நோய்க்கும், ஒவ்வொரு பிரதான தோஷத்தின் சம்பந்தத்திற்கு ஏற்ப, எவ்வாறு மருந்து கொடுக்கப்பட வேண்டும் என்றிருக்கிறது. அந்த மருந்து கொடுக்க வேண்டிய காலத்தை ஔஷத காலம் என்கிறோம். உதாரணமாக, இருமல், சளி போன்றவற்றிற்கு அடிக்கடி மருந்து கொடுக்க வேண்டியிருக்கும் இதற்கு முஹுர் முஹுர் என்று பெயர். நடுக்கு வாதம் போன்ற நோய்களுக்கு உணவிற்கு முன்னும், உணவிற்கு பின்னும் மருந்து கொடுக்க வேண்டியிருக்கும். இதற்கு ஸாமுத்கம் என்று பெயர். அபான நோய்களுக்கு காலை வெறும் வயிற்றில் மருந்து கொடுக்க வேண்டியிருக்கும். இதற்கு பிராக்பக்தம் என்று பெயர். கழுத்துக்கு மேற்பட்ட பகுதிகளில் உள்ள நோய்களுக்கு இரவு உறங்கும் முன் மருந்து உட்கொள்ள வேண்டும் இதற்கு நிசி காலம் என்று பெயர். இது போல ஔஷத காலங்கள் அஷ்டாங்க சங்கிரஹத்தில் மற்றும் ஸுச்ருதத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

மருந்துகளைப் பயிரிடுவதற்கான காலம். ஒவ்வொரு மருந்துகளை எவ்வாறு பயிரிட வேண்டும் மருந்துகளை எந்த காலத்தில் அறுவடை செய்ய வேண்டும் போன்றவை மருத்துவத்தில் இன்றியமையாததாகக் கருதப்படுகின்றன.

## தோஷமும் காலமும்

ஒவ்வொரு தோஷங்களும் காலத்திற்குத் தகுந்தாற்போல் சயம் என்ற தன்னிலையில் விருத்தியடைதலையும், பிரகோபம் என்ற தன்னிலையிலிருந்து அதிகரித்தலையும், பிரசமனம் என்ற தன்னிலையடைதலையும் தன்னகத்தே கொண்டுள்ளது. அதனை கீழ்க்காணும் அட்டவணைப்படி காண்போம்.

| தோஷம் | சயம் | பிரகோபம் | பிரசமனம் |
|---|---|---|---|
| வாதம் | கோடைகாலம் | மழைக்காலம் | இலையுதிர் காலம் |
| பித்தம் | மழைக்காலம் | இலையுதிர்காலம் | இளவேனிற் காலம் |
| கபம் | முதுவேனிற்காலம் | வசந்தகாலம் | கோடைகாலம் |

| வாதம் | | |
|---|---|---|
| சயம் | பிரகோபம் | பிரசமனம் |
| கிரீஷ்மம் | வர்ஷம் | சரத் |

| பித்தம் | | |
|---|---|---|
| சயம் | பிரகோபம் | பிரசமனம் |
| வர்ஷம் | சரத் | ஹேமந்தம் |

| கபம் | | |
|---|---|---|
| சயம் | பிரகோபம் | பிரசமனம் |
| சிசிரம் | வசந்தம் | கிரீஷ்மம் |

## ஆறு ருதுக்களும் ஒரு நாளும்

ஆறு ருதுக்களின் குணாதிசயங்களும் ஒரு நாள் பொழுதிலேயே வெவ்வேறு சமயங்களில் காணப்படுகிறது.

- அதிகாலை — முன்பனி காலம்
- காலை — வசந்த காலம்
- மதியம் — வெயில்காலம்
- மாலை — பிராவ்ருத் காலம்

- இரவு . மழைக்காலம்
- நடு இரவு இலையுதிர்காலம்

## உணவு உட்கொள்வதற்கு உகந்த காலம்

- மலம் மற்றும் சிறுநீர் கழித்த பிறகு
- மனம் சுத்தமாக இருக்கும் பொழுது
- தோஷங்கள் அவற்றின் பாதையில் செல்லும் பொழுது
- சுத்தமான ஏப்பம் (முன்பு உண்ட உணவின் சுவை இல்லாமல்) ஏற்பட்டபிறகு
- நன்கு பசிக்கும் பொழுது
- அபான வாயு கீழ்நோக்கி சென்ற பிறகு
- ஜடராக்னி சீராக இருக்கும் பொழுது
- இந்திரியங்கள் தெளிவாக உள்ள பொழுது
- தேகம் லகுவாக உள்ள பொழுது.

மேற்கூறிய வழிமுறைகளை அனுசரித்து ஒருவன் உணவு உட்கொள்ள வேண்டும்.

## பெண்களின் ருது காலம்

பெண்களுக்கு மாதவிடாய் 28 நாட்களாகவும், மாதவிடாய் நின்ற பிறகு 12 நாட்கள் கர்ப்பம் தரிக்கும் காலம் என்னும் ருது காலமாகவும் ஆயுர்வேதத்தில் உள்ளது. வியாதியின் அவஸ்தை பல காலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

## திசை

கிழக்கு, மேற்கு, தென்மேற்கு என்ற அன்றாட வாழ்வில் நாம் பயன்படுத்தும் சொற்களுக்கு காரணமாகிறது திசையாகும். நியாய, வைசேஷிகர்களின் கருத்துப்படி திசை என்பது ஒன்றே. நாம் நமது வசதிக்காக அதை பலவிதமாக பிரித்து வைத்துள்ளோம். இவை அனைத்தும் சூரியன் உதிக்கும் இடத்தை ஆதாரமாகக் கொண்டு பிரிக்கப்பட்டிருப்பது. எங்கும் வியாபித்திருப்பது. நித்யமானது. திசையை

ஆதாரமாகக் கொண்டே நாம் ஒரு ஊரோ அல்லது ஒரு தேசமோ அருகில் உள்ளது, தொலைவில் உள்ளது என்பதை குறிப்பிடுகிறோம். திசைக்கு நியாய வைசேஷிகர்கள் 5 பொது குணங்களை (ஸாமான்ய குணங்களை) கூறுகிறார்கள். அவையாவன: ஸாங்க்யம், பரிமாணம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம் என்பனவாகும். (தர்க்க சங்க்ரஹம், முக்தாவளீ)

திசைகள் நடைமுறை யதார்த்தத்திற்காக பத்தாக பிரிக்கப்படுகின்றன.

பூர்வம் அல்லது மகேந்திரி – கிழக்கு,
தக்ஷிணம் அல்லது யமி – தெற்கு,
பக்ஷிமம் அல்லது வாருணி – மேற்கு,
உத்திரம் அல்லது கௌபேரி – வடக்கு,
பூர்வோத்தரம் அல்லது ஈசானம் – வடகிழக்கு,
தக்ஷிணபூர்வம் அல்லது வைச்வானரி – தென்கிழக்கு
உத்தர பச்சிமம் அல்லது வாயவ்யம் – வடமேற்கு,
தக்ஷிண பச்சிமம் அல்லது நைரித்யம் – தென் மேற்கு,
ஊர்த்வம் அல்லது பிரம்மி ஆகாயம் – பாதாளம் பூமிக்கு அடியில்
நீர் வடிவம், அதம் அல்லது நாகம்

## ஆகாசத்திற்கும் திசைக்கும் உள்ள வேற்றுமைகள்

| ஆகாசம் | திசை |
|---|---|
| இது ஒரு பூத திரவியம் | இது ஒரு பூத திரவியம் அல்ல |
| பஞ்சமஹாபூதங்களில் ஒன்று | திசை பஞ்சமஹாபூதங்களில் குறிப்பிடப்படவில்லை |
| இதற்கு சப்தம் என்ற தனிக்குணம் உண்டு | திசைக்குத் தனியாக எந்தக் குணமும் இல்லை |
| என்றும் நிலைத்திருப்பது | என்றும் நிலைத்திருப்பது |
| சப்தம் என்னும் ஒரு குணம் உண்டு | பல குணங்களுக்கும் ஆதாரமாக இருக்கிறது |

## திசைக்கும் காலத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள்

| திசை | காலம் |
|---|---|
| ஒரு பொருள் எங்கு உள்ளது என்பதை எடுத்துக் கூற திசை உதவுகிறது | ஒரு பொருளின் பரிணாம மாற்றத்தை விளக்கிக் கூற காலம் உதவுகிறது |
| நடைமுறையில் ஒன்றானாலும் நாம் இருக்கும் இடத்தைப் பொறுத்து மாறுபடுவது | நேற்று இன்று நாளை என்று கூறினாலும் யதார்த்தத்தில் ஒன்றானது |
| ஒரு பொருளின் சேர்க்கைக்கு காரணமாகிறது | பல பொருளின் மாறுதலுக்கு காலம் காரணமாகிறது. |

### ஆயுர்வேதத்தில் திசையின் முக்கியத்துவம்

ஆயுர்வேதங்களில் பல இடங்களில் திசையைப் பற்றியக் குறிப்புகள் காணப்படுகின்றன. ஒரு நோயாளி எந்தத் திசையிலிருந்து வருகிறான் என்பது அவன் வருகின்ற தேசத்தையும் பற்றியும், அந்த தேசத்தின் தன்மைகளைப் பற்றியும் அறிந்து கொள்ள உதவுகிறது.

ஒரு நோயாளியின் மரண லட்சணங்களைக் குறிக்கும் இந்திரிய ஸ்தானம் என்ற அத்தியாயத்தில் மருத்துவனை அழைக்க வருபவன் எங்கிருந்து வருகிறான் என்பதை பொறுத்து நோயாளியின் ஆரோக்கிய நிலைகள் குறிப்பிடப்படுகின்றன.

தெற்கு திசையிலிருந்து வரும் காற்றானது உடலுக்கு நல்லது என்பது போன்ற குறிப்புகள் அஷ்டாங்க சங்க்ரஹம் போன்ற புத்தகங்களில் காணப்படுகின்றன. சில திசைகளிலுள்ள மூலிகைகளின் குறிப்புகள் உள்ளன. வடக்கு பகுதியில் உள்ள மூலிகைகள் குளிர்ச்சியானதாகவும், தெற்கு பகுதியில் உள்ள மூலிகைகள் உஷ்ணமானதாகவும் குறிப்பிடப் பட்டுள்ளன. கிழக்கு திசை காற்றைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது இது உஷ்ணமானது, நெய்ப்புத் தன்மையுடைய அபிஷ்யந்தி என்னும் குணமுடையது, தோல்நோயை உண்டாக்கும், நச்சுத்தன்மையைப்

பரப்பும், பரவும் தன்மையுடைய பல நோய்களை எடுத்துச் செல்லும் ஆற்றல் உடையது, சுவாசம், ஜ்வரம் போன்ற நோய்களை ஏற்படுத்தும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

மேற்கு திசை காற்றைப் பற்றி குறிப்பிடும் பொழுது இது வறட்சி யானது, உடலின் பலத்தைக் குறைக்கும், உடலின் வறட்சித் தன்மையை அதிகரிக்கும், கபத்தையும், கொழுப்புச் சத்தையும் உடலில் வறட்சி யடையச் செய்யும் போன்ற குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. தென் திசையிலிருந்து வரும் காற்றைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது கண்களுக்கு நல்லது என்றும், பலத்தை தருவது என்றும், இரத்தபித்தம் என்னும் நோயை குறைக்கச் செய்வது என்றும் குறிப்புகள் காணக்கிடைக்கின்றன.

வடதிசைக் காற்று மிருதுவானது என்றும், சீதக் குணம் உடையது என்றும், மூன்று தோஷங்களை அதிகரிக்கச் செய்யாதது என்றும், உத்தமமானது என்றும் குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. உணவு உண்ணும் பொழுது வடதிசை நோக்கியோ, கிழக்குத் திசை நோக்கியோ, சூரியனுடைய திசையை நோக்கியோ அமர வேண்டும் என்று குறிப்பு வேத புத்தகங்களில் காணக்கிடைக்கிறது. வடக்கே தலைவைத்து படுக்கக் கூடாது என்று தர்ம சாஸ்திர புத்தகங்களில் உள்ளது. கிழக்கு நோக்கியோ, வடக்கு நோக்கியோ அமர்ந்து தானம் செய்ய வேண்டும் என்ற குறிப்பும் இருக்கிறது. வடக்கே நோக்கிச் செல்கின்ற செடிகளின் வேர்களை மருந்திற்காக எடுக்க வேண்டும் என்ற குறிப்பும் இருக்கிறது. இவ்வாறு திசைகள் ஆயுர்வேதத்திற்கு பலனளிக்கின்றன.

## ‘தமஸ்’ ஒரு திரவியம் அல்ல என்பதற்கான ஆதாரங்கள்

ஒரு சில தத்துவ ஞானிகள் தமஸ் என்கின்ற இருட்டு அல்லது அறியாமையைப் பத்தாவது திரவியமாக ஏற்றுக் கொள்கிறார்கள். ஒரு திரவியம் என்று எடுத்துக் கொண்டால் அதற்குக் குணமும், செயலும் பிரிக்க முடியாத தன்மையில் காணப்பட வேண்டும். தமஸை சில தத்துவ ஞானிகள் திரவியமாகக் கருதுவதற்கு இருட்டு என்ற குணமும், ஒளியைப் போக்குகின்ற செயலும் இருப்பதை காரணமாகக் குறிப்பிடுகிறார்கள். தமஸ் பூமியினால் ஏற்பட்டுள்ளது. பூமிக்கு மணம் என்னும் குணமுண்டு,

தமஸுக்கு மணமில்லை. தமஸ் என்பது ஒரு திரவமல்ல, அதற்கு சுவையில்லை. தமஸை உண்டாக்கிய நீர் மஹாபூதத்திற்கு சீத ஸ்பர்சம் என்னும் குணமுண்டு. உஷ்ணத்திற்கு உஷ்ண ஸ்பர்சம் என்னும் குணமுண்டு. இவையெல்லாம் தமஸில் இல்லை. தமஸ் என்பது அறியாமையாகும், இருளாகும். சூரிய ஒளி வந்துவிட்டால் தமஸ் மாறி விடும். தமஸ் நிலைத்திருக்கும் தன்மையற்றது. வாயுவில் அசையும் தன்மையும், அசைய வைக்கும் தன்மையும் உண்டு. ஆகாசம் என்று எடுத்துக் கொண்டால் உருவம் இல்லாத தன்மையும், நிறம் இல்லாத தன்மையும் உண்டு. ஆத்மா என்று எடுத்துக் கொண்டால் சைதன்யம் உண்டு. மனது என்று எடுத்துக் கொண்டால் ஏகத்வம், நுண்ணியது என்ற குணங்கள் உண்டு. காலமும் திசையும் எங்கும் பரவும் தன்மை யுடையது, உருவமற்றது. மேற்கொண்ட குணங்களோ கர்மங்களோ தமஸிற்கு இல்லாததால் அதை ஒரு திரவியமாக ஏற்றுக்கொள்ள இயலாது. தமஸிற்கு நெருப்பு மஹாபூதங்களில் இருக்கின்ற ஒளி என்னும் காரணங்கள் இல்லாததால் தமஸை ஆயுர்வேதத்தின் தத்துவ ஞானத்தின்படி திரவி யமாக ஏற்றுக் கொள்ளவில்லை.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களைக் குறிப்பிடும்பொழுது தமஸை மனதின் தோஷமாகவே குறிப்பிடுகிறார்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

# 9. குண விஞ்ஞானம்

## குணத்தின் பிரிவுகள்

- ஐந்து இந்திரிய குணங்கள் (வைசேஷிக குணங்கள்)
- இருபது குருவாதி குணங்கள்
- ஆறு ஆத்ம குணங்கள்
- பத்துப் பராதி குணங்கள்

என்று குணங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. (சரக ஸம்ஹிதை : ஸூத்திர ஸ்தானம் 1:49)

அவற்றைப் பற்றி விரிவாகப் பார்ப்போம்.

## வைசேக்ஷிக குணங்கள்

வைசேக்ஷிக குணங்கள் முறையே சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பனவாகும். இவை பஞ்சமஹாபூதங்களின் தன்மைகளாகும். ஐம்புலன்களின் விஷயமாகக் கூட இதைக் குறிப்பிடலாம். (சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம்1:31)

### 1. சப்த குணம்

காதினால் கேட்டறியும் குணத்திற்கு சப்த குணம் என்று பெயர். இது ஆகாச மஹாபூதத்தின் விசேஷ குணமாகும். சப்த குணம் துவன்யாத்மகம், வர்ண்யாத்மகம் என இருவகைப்படும். மிருதங்கம், போன்றவற்றின் ஓசை துவன்யாத்மகமாகவும், அன்றாடம் பேசும் பேச்சு வர்ண்யாத்மகமாகவும் கருதப்படுகிறது. (தர்க்க ஸங்க்ரஹம்)

## 2. ஸ்பர்ச குணம் என்னும் தொடு உணர்வு

தோலினால் அறியப்படும் குணத்திற்கு ஸ்பர்ச குணம் என்று பெயர். இது வாயு மஹாபூதத்தின் தன்மையாகும். ஸ்பர்ச குணம் மூன்று வகைப் படும். சீத ஸ்பர்சம் (தொடுவதற்கு குளிர்ச்சியானது), உஷ்ண ஸ்பர்சம் (தொடுவதற்கு உஷ்ணமானது), ஸம ஸ்பர்சம் (ஸம தன்மையுடையது). குளிர்ச்சி நீரைச் சார்ந்தும், உஷ்ணம் நெருப்பைச் சார்ந்தும், ஸமத்வம் பூமி, வாயுவைச் சார்ந்தும் உள்ளன. ஸமத்வத்தை அனுஷ்ணம், அசீதம் என்று குறிப்பிடுவதும் உண்டு. (தர்க்க ஸங்க்ரஹம்)

## 3. ரூப குணம்

கண்களால் அறியப்படும் குணத்திற்கு ரூபம் என்று பெயர். வர்ணங் களினால் இது எழு வகைப்படுகிறது. அவையாவன. வெண்மை, நீலம், மஞ்சள், சிவப்பு, பச்சை, கபிலம் என்னும் சாம்பல் நிற வர்ணம், பல வர்ணங்களின் தொகுப்பு என ஏழு வகைப்படும். ரூப குணம் என்பது நிலம், நீர், நெருப்பு மஹாபூதத்திலும் காணப்படுகிறது. மங்கிய வெண்மை யானது பூமியிலும், நிறம் வாய்ந்த வெண்மையானது தேஜஸிலும் காணப்படுகிறது. (தர்க்க ஸங்க்ரஹம்)

## 4. ரஸ குணம்

நாக்கினால் உணரப்படும் குணத்திற்கு ரஸ குணம் என்று பெயர். ஆயுர்வேதத்தில் ரஸம் என்ற சொல்லுக்கு பல பொருள் உண்டு. மூலிகை களின் சாறையும் ரஸம் என்று கூறுவார்கள். பாதரஸத்தையும் ரஸம் என்று கூறுவார்கள். ஆனால் ரஸம் என்று கூறும் பொழுது மதுரம் என்னும் இனிப்பு, அம்லம் என்னும் புளிப்பு, லவணம் என்னும் உப்பு, கடு என்னும் காரம், திக்தம் என்னும் கசப்பு, கஷாயம் என்னும் துவர்ப்பு, என்ற ஆறு சுவைகள் ஆயுர்வேதத்தில் முக்கியமானதாக கருதப்படுகின்றன. இந்த தன்மையானது நீரிலும், நிலத்திலும் காணப்படுகிறது. இந்த அறுசுவை களும் பூமியில் காணப்படுகிறது. ஜலத்தில் மதுரம் என்னும் தன்மை மட்டுமே காணப்படுகிறது. இந்த சுவைகள் மருத்துவத்தில் பெரும் பங்கு

வகிக்கின்றன. ஆயுர்வேதத்திற்கும் ரஸத்திற்கும் உள்ள தொடர்பைப் பார்ப்போம்.(தர்க்க ஸங்க்ரஹம்)

| ரஸம் (சுவை) | அதிகரித்தல் | குறைதல் |
|---|---|---|
| மதுரம் (இனிப்பு) | கபம் மற்றும் அனைத்து தாதுக்களும் | வாதம், பித்தம் |
| அம்லம் (புளிப்பு) | கபம், பித்தம் மற்றும் ரக்தம் | வாதம் |
| லவணம் (உப்பு) | கபம், பித்தம் மற்றும் ரக்தம் | வாதம் |
| கடு (காரம்) | வாதம் மற்றும் பித்தம் | கபம் |
| திக்தம் (கசப்பு) | வாதம் | கபம், பித்தம் மற்றும் தாதுக்கள் |
| கஷாயம் (துவர்ப்பு) | வாதம் | கபம், பித்தம் மற்றும் தாதுக்கள் |

## 5. கந்த குணம்

மூக்கினால் உணரப்படும் குணம் எதுவோ அதற்கு கந்தம் அல்லது மணம் என்று பெயர். இது பூமி மஹாபூதத்தை சார்ந்துள்ளது. மணமானது தர்க்க நியாயாதிகளினால் இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நல்ல மணத்திற்கு சுரபி என்றும், துர்கந்தத்திற்கு அசுரபி என்றும் பெயர். வைசேஷிக குணங்களில் ரஸம் ஆயுர்வேதத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது. குரு லகு என்று சொல்லக்கூடிய குருவாதி குணங்களும், வீரியங்களும் ரஸத்தையே சார்ந்திருக்கிறது. தோஷங்களும், தாதுக்களும் ரஸத்தையே சார்ந்திருக்கின்றன. விபாகமும் ரஸத்தையே சார்ந்திருக்கிறது.

## அறுசுவைக்கும் பஞ்சமஹாபூதத்திற்கும் உள்ள தொடர்பு

| | | |
|---|---|---|
| மதுரம் | இனிப்பு | பூமி மற்றும் நீர் |
| அம்லம் | புளிப்பு | நெருப்பு மற்றும் பூமி |
| லவணம் | உப்பு | நீர் மற்றும் நெருப்பு |
| திக்தம் | கசப்பு | வாயு மற்றும் ஆகாயம் |
| கடு | காரம் | வாயு மற்றும் நெருப்பு |
| கஷாயம் | துவர்ப்பு | வாயு மற்றும் பூமி |

### பராதி குணங்கள்

பராதி குணங்களும் ஒரு ஆயுர்வேத மருத்துவருக்கு இன்றிமையாததாகும். பத்து பராதி குணங்களை நாம் காண்போம். அவை பரம், அபரம், யுக்தி, ஸாங்க்யம், ஸம்யோகம், விபாகம், பிருதக்த்வம், பரிணாமம், ஸம்ஸ்காரம், அப்யாஸம் என்பனவாகும்.

பரம் – அடுத்துள்ள பொருட்களையும், தொலைதூரம் உள்ள பொருட்களையும் குறிப்பதற்கு பரம், அபரம் என் ற வார்த்தைகளை நாம் பயன்படுத்துகிறோம். இந்த பரம் அபரம் போன்றவை பிருத்வி, ஜலம், வாயு, அக்னி போன்றவற்றிலும் மனதிலும் காணப்படுகிறது. ஆயுர் வேதத்தில் பரம் என்ற வார்த்தை உத்தமமானது என்ற ஒரு பொருளைத் தருகிறது. பால்களில் பசும்பால் பரமானது என்றும், நெய் வர்க்கங்களில் பசுவின் நெய் முக்கியமானது என்றும், பிரம்மச்சரியம் என்னும் நல் லொழுக்கம் பரமானது என்றும், நீரில் கங்கோதகம் என்னும் மழை நீர் உத்தமமானது என்றும் ஆயுர்வேதத்தில் கூறப்பட்டுள்ளது. திரவியங் களில் மிக முக்கியமானதும், தனித்தன்மை வாய்ந்ததும், பெருமை மிக்கது மான வஸ்துக்களைக் குறிப்பிடும் பொழுது பரம் என்ற வார்த்தையை ஆயுர்வேதம் பயன்படுத்துகிறது. பூமி தேசங்களைப் பற்றிக் குறிக்கும் பொழுது மரு பூமி (வெயில் நிறைந்த நீரம்சம் இல்லாத இடம்) பரமானது. காலங்களில் விஸர்க்க காலம் (குளிர்காலம்) பரமானதாகக் கருதப்படு

**கிறது**. இளவயது பரமானதாகக் கருதப்படுகிறது. தோஷங்களில் கபம் பரமானதாகக் கருதப்படுகிறது. ஓஜஸ் பரம் அல்லது முக்கியமானதாகக் கருதப்படுகிறது. பரம் என்ற சொல்லிற்கு உத்தமமானது என்று பொருள் காண்க.

**அபரம்** – பரத்திற்கு எதிர்மறையான குணத்தை அபரம் என்றழைக்கிறோம். ஏற்றுக் கொள்ள இயலாது, தேவையற்றது, அதிக முக்கியத்துவம் இல்லாதது என்று பொருள். இவற்றை அதிக குறிப்பிடுவதற்கு அபரம் என்ற சொல்லை நாம் குறிப்பிடுகிறோம். ஆனூபதேசம் (நீரம்சம் நிறைந்த இடம்) உடல் நலத்திற்கு அவ்வளவு நல்லதல்ல என்றும்,ஆதான காலம் (வெயில்காலம்) அவ்வளவு நல்லதல்ல என்றும், வயதான காலங்களில் பல நோய்கள் காணப்படுவதால் அதுவும் அத்தனை நல்லதல்ல என்று நாம் குறிப்பிடுகிறோம். இதைப்போல பல மாம்ஸ வர்க்கங்களும், பழங்களில் லகுசம் (ஆயினி பழம்) என்னும் பழம், கெட்டுப்போனது போன்றவற்றைப் பயன்படுத்தக் கூடாது என்றும், சில ஆகாரங்கள் விருத்தமானது என்றும் ஆயுர்வேதம் கூறுகிறது. சில வைத்தியர்களைப் பற்றி சரகர் ஸூத்திர ஸ்தானத்தில் குறிப்பிடும் பொழுது இவர்கள் அபரமான வைத்தியர்கள் (சத்ம சரர்கள்) என்றும், இந்த போலி வைத்தியர்களால் மருத்துவ உலகத்திற்கு தீங்கு விளையும் என்ற கருத்தையும் கூறுகிறார். அபரம் என்றால் மேன்மையற்றது என்று பொருள்.

**யுக்தி:** யுக்தி என்றால் பகுத்தறிவு என்று பொருள். யுக்தி என்ற சொல்லுக்கு யோசிப்பது என்றும் பொருள் கூறலாம். வாத பித்த கபங்களை நாம் நன்றாகக் கற்றிருந்தாலும் யுக்தியைக் கொண்டே நாம் சிகிச்சையைச் செய்கிறோம்.

யுக்தி விபாச்ரய சிகிச்சை என்று ஒரு சிகிச்சை ஆயுர்வேதத்தில் உள்ளது. நம் பகுத்தறிவைப் பயன்படுத்தி நோயாளிக்கு எது நல்லதோ அதைக் கொடுத்து எது தீயதோ அதை விலக்கி செய்யும் செயல்கள் எல்லாம் யுக்தி என்ற பகுத்தறிவைச் சார்ந்துள்ளது. யுக்தி சார்ந்த சிகிச்சை ஆயுர்வேதத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது. உதாரணமாக, ஆமம் உள்ள நிலையில் கஷாயம் கொடுக்கக்கூடாது என்பதை நாம் படித்திருக்கிறோம்.

இதனை நடைமுறையில் நாம் பயன்படுத்த யுக்தி வேண்டும். ஆங்கிலத்தில் இதை Common sense என்று குறிப்பிடுகிறோம்.

**ஸங்க்யம்** (எண்ணிக்கை)

ஸங்க்யம் என்ற சொல் எண்ணிக்கை என்று பொருள்படும். ஆயுர் வேதம் ஒன்பது திரவியங்களையும், பஞ்ச மஹாபூதங்களையும், மூன்று தோஷங்களையும் குறிப்பிடுகிறது. இவ்வாறு ஆயுர்வேதத்தில் எண்ணிக்கை முக்கிய பங்கை வகிக்கிறது. எண்ணிக்கையானது ஒன்றில் தொடங்குவது ஆனால் எண்ணற்றது, முடிவற்றது, நித்யமானது, என்றும் இருப்பது, அணுவடிவானது. அணுக்களின் தொகுப்பானது. (தர்க்க ஸங்க்ரஹம்)

சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் 7ம் அத்தியாயத்தில் உடலிலுள்ள திரவத்தை அவரவர் கைக்குவியல் (அஞ்சலி) என்னும் அளவில் குறிப்பிடுகிறார். உடலிலுள்ள மொத்த திரவம் 10 அஞ்சலி இருக்கும் என்கிறார். இரத்தம் 8 அஞ்சலி என்றும், கபம் 6 அஞ்சலி என்றும், பித்தம் 5 அஞ்சலி என்றும், மூத்திரம் 4 அஞ்சலி என்றும், சுக்ரம் அரை அஞ்சலி என்றும், பரவோஜஸ் அரை அஞ்சலி என்றும் கூறுகிறார். இவை யெல்லாம் பரிமாணத்தில் நாம் எடுத்துக் கொள்ளலாம்.

**ஸம்யோகம்** (சேர்க்கை)

இருபொருள்களின் சேர்க்கைக்கு ஸம்யோகம் என்று பெயர். ஆயுர்வேதத்தில் ஸம்யோகம் என்ற வார்த்தை ஸம்ஸர்கம் என்று பயன்படுகிறது. ஒரு தோஷம், மற்ற தோஷத்துடன் இணையும் பொழுது ஸம்ஸர்கம் என்று ஆயுர்வேதத்தில் குறிப்பிடுகிறோம். இரண்டு ஸ்னேஹங்களின் தொகுப்பிற்கு ஸம்ஸர்கம் என்று பெயர். உதாரணமாக ஒரு தாவர ஸ்னேஹமும், ஒரு ஜங்கம ஸ்னேஹமும் இணைந்தால் அதற்கு ஸம்ஸர்கம் என்று பெயர். இதனை யமளம் என்று குறிப்பிடுகிறோம். மூன்று தோஷங்களின் சேர்க்கைக்கு ஸன்னிபாதம் என்று பெயர். பல மருத்துவ குணங்களில் தோஷங்களுக்கு இடையே உள்ள சேர்க்கையை ஸம்ஸர்கம் என்றும், ஸன்னிபாதம் என்றும், மருந்துகளுக்கிடையே உள்ள சேர்க்கையை ஸம்யோகம் என்றும் குறிப்பிடுகிறோம். தாளிஸபத்ராதி சூரணத்தைத் தேன் சேர்த்து இருமலுக்கு கொடுக்கிறோம். இது ஒருவகை

ஸம்யோகமாகும். சில வகை ஸம்யோகங்கள் ஒத்துக் கொள்ளததால் அதை விருத்தம் என்று குறிப்பிடப்படுகிறது.

### விபாகம் (பிரிதல்)

விபாகம் என்றால் பிரிவுபடுதல் என்று பொருள். பல மூலிகை களிலிருந்து ஒரு சில மூலிகைகளை நாம் பிரிக்கிறோம். பல சிகிச்சை களைப் பற்றி படித்திருந்தாலும் ஒரு சில சிகிச்சைகளை தனியாக எடுத்து ஒரு சில நோய்களுக்கு சிகிச்சை செய்கிறோம். ஒட்டியிருக்கும் சில உறுப்புகளை அறுவை சிகிச்சை செய்து பிரிக்கிறோம். பிறந்த குழந்தையை கர்ப்பக் கொடியை அறுப்பதன் மூலம் தாயிடமிருந்து பிரிக்கிறோம்.

### பிருதக்த்வம்

ஒவ்வொரு பொருளிலும் காணப்படும் தனித்தன்மைக்கு பிருதக்த்வம் என்று பெயர். இது விசேஷ குணமாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு ஒன்பது திரவியங்களுக்கும் பிருதக்த்வம் என்ற தனித்தன்மையும் பிரித்தறியும் குணமும் காணப்படுகிறது. இதே போல் ஒவ்வொரு நோய்க்கும் ஒரு தனித்தன்மை காணப்படுகிறது. இதனால் நம்மால் நோயை துல்லியமாக கண்டறிய முடியாது.

### பரிமாணம்

பரிமாணம் என்பது அளவுகளைச் சார்ந்தது. இது ஒன்பது திரவியங் களிலும் காணப்படுகிறது. அவையாவன அணுத்வம் – நுண்ணியது, மகத்வம் – பெரிதானது, தீர்க்கம் – நீளமானது, ஹிரஸ்வம் – குறுகியது என நான்கு வகைப்படும். ஒரு மனிதனுடைய ஆக்ருதி – உடல் அமைப்புப் பற்றிக் குறிப்பிடப்படும் பொழுதும், நோயினுடைய தன்மைப் பற்றிக் குறிப்பிடும் பொழுதும், காலத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுதும் பரிமாணம் என்ற வார்த்தை ஆயுர்வேதத்தில் பயன்படுத்தப்படுகிறது.

### ஸம்ஸ்காரம்

ஸம்ஸ்காரம் என்ற வார்த்தைக்கு செயலாக்குதல் அல்லது பக்குவப் படுத்துதல் என்று பொருள். ஒரு சில மருத்துவ செயல்முறைகள் மூலம்

ஒரு பொருளில் காணப்படும் குணங்களை மாற்றி அப்பொருளை மருந்தாகச் செய்வதற்கு ஸம்ஸ்காரம் என்று பெயர். ஆயுர்வேதத்தில் பல வித ஸம்ஸ்காரங்கள் கூறப்பட்டுள்ளன. பாதரஸ சோதனம் என்று எடுத்துக் கொண்டால் மர்தனம், மூர்ச்சனம், சோதனம் போன்ற ஸம்ஸ் காரங்கள் கூறப்படுகின்றன. வேதாந்தத்தில் ஸம்ஸ்காரம் என்றால் கர்மங்களினால் ஏற்பட்ட மன எண்ணங்கள் அல்லது வாசனை என்ற பொருளும் உண்டு. ஆயுர்வேதத்தில் நாம் செய்யும் சுத்தி செய்தல், சூடாக்குதல், பாகம் செய்தல் போன்றவற்றை ஸம்ஸ்காரமாகக் கருதலாம்.

மீண்டும் மீண்டும் ஒரு செயலை பயிற்சி செய்து அதில் பூரணத் தன்மை அடைவதற்கு அப்யாஸம் என்று பெயர். சிகிச்சையில் அப்யாஸம் தேவை.

## ஆத்ம குணங்கள்

| | | |
|---|---|---|
| புத்தி | – | மெய்யறிவு |
| இச்சை | – | தீரா ஆவல் |
| துவேஷம் | – | வெறுப்பு |
| சுகம் | – | இன்பம் |
| துக்கம் | – | துன்பம் |
| பிரயத்னம் | – | முயற்சி |

(சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் 1:72)

ஆகிய ஆறும் ஆத்ம குணங்களாகும். தர்க்க ஸங்க்ரஹத்தில் தர்ம அதர்மத்தைச் சேர்த்து ஆத்ம குணங்களை எட்டாகக் குறிப்பிட்டுள்ளனர்.

### புத்தி

எல்லா விவகாரங்களுக்கும் எது காரணமாக இருக்கிறதோ அதற்குப் புத்தி என்று பெயர். சரகரும் புத்தியைப் பற்றி குறிப்பிடுகிறார். இந்திரிய புத்தி என்றும், மனோ புத்தி என்றும் சரகர் இருவகையாகப் பிரிக்கிறார். புலன்களால் ஏற்படும் அறிவிற்கு இந்திரிய புத்தி என்று பெயர். மனதால் ஏற்படும் அறிவிற்கு மனோபுத்தி என்று பெயர். மனோ புத்தியே சுக

துக்கங்களுக்கு காரணமாகிறது. புத்தியினாலேயே அனைத்து செயல் களையும் அறிந்து கொள்கிறோம். வாழ்க்கையின் வியவஹாரங்கள், தொடர்புகள் புத்தியைச் சார்ந்துள்ளது. புத்தி என்பது மெய்யறிவாகும். அவை ஸ்ம்ருதி, அனுபவம் என இரண்டு வகைப்படுகிறது. (தர்க்க சங்க்ரஹம்)

ஸ்ம்ருதி என்பது நினைவைக் குறிக்கிறது. அனுபவம் என்பது செயல்களை மீண்டும் மீண்டும் செய்வதால் கிடைக்கும் அறிவைக் குறிக்கிறது. இந்த அனுபவம் இரண்டு வகைப்படுகிறது.

**1. யதார்த்த அனுபவம்:** மாறுபாடில்லாத உண்மையான அறிவிற்கு யதார்த்தம் அனுபவம் என்று பெயர். இதை பிரத்யக்ஷம், அனுமிதி, உபமிதி, சப்தம் என நான்கு வகையாகப் பிரிக்கலாம். புலன்களால் நேராகக் கிடைக்கும் அறிவிற்கு பிரத்யக்ஷம் என்று பெயர். கண்ணால் காண்பது, காதால் கேட்பது, மூக்கால் நுகர்வது போன்றவற்றை பிரத்யக்ஷம் என்று குறிப்பிடலாம்.

ஊகித்து அனுமானம் செய்து கொள்ளுதல் அனுமிதி எனப்படும். உதாரணமாக எங்கெல்லாம் புகையுள்ளதோ அங்கங்கு நெருப்பு இருக்கும். வயிறு வீங்கிய ஒருத்தனுக்கு வயிற்றில நீர் இருக்கும் போன்ற வற்றை அனுமானமாகக் குறிப்பிடலாம்.

**உபமிதி:** ஒரு பொருளை மற்றொரு பொருளுடன் ஒப்பிட்டு புரிந்து கொள்ளுவதற்கு உபமிதி என்று பொருள். பானை போல் வயிறு வீங்கிய நோயாளியை உபமானமாக கும்ப காமலா ரோகி என்று அழைத்தல் உபமிதியாகும்.

**சப்தம்:** சப்தம் என்ற சொல்லுக்கு ஆப்த வாக்கியம் என்று பொருள். சரகர், ஸுச்ருதர், வாக்படர் மற்றும் பெரியவர்களால் கூறப்பட்ட கருத்துக்கள், நோயாளி தெரிவிக்கும் நோயைப் பற்றிய வரலாறு இவை சப்தமாகும்.

**அயதார்த்த அனுபவம்:** யதார்த்தம் எனற் சொல்லுக்கு உண்மை யானது என்று பொருள் கண்டோம். அயதார்த்தம் என்றால் உண்மையான

அறிவைத் தராதது என்று பொருள். மெய்யறிவைத் தராதது என்று பொருள். நாம் ஒரு இடத்தில் ஒரு கயிறை பார்க்கிறோம். கயிறாக இருந்தாலும் அதனை நாம் பாம்பு என்று புரிந்து கொள்கிறோம். இது ஒரு வகை அயதார்த்த அனுபவமாகும்.

நினைவாற்றல் என்கின்ற ஸம்ருதியையும் தர்க்க வாதிகள் இரண்டாகப் பிரிக்கின்றனர். உண்மையான நினைவை யதார்த்தம் என்றும், தவறான நினைவை அயதார்த்தம் என்றும் இருவகைப்படுத்துகின்றனர்.

- **இச்சை**

இச்சை என்றால் ஆசையாகும். நமக்காகவோ, நம்மை சார்ந்தவர் களுக்காகவோ நாம் விருப்பப்படுவது இச்சை எனப்படும். இது மன இச்சையாக இருக்கலாம் அல்லது பொருள் சார்ந்த இச்சையாக இருக்க லாம். இது ஆத்மாவின் குணாக சிருஷ்டிக்கப்பட்டுள்ளது.

- **துவேஷம் – வெறுப்பு**

ஒருவரையோ, ஒரு செயலையோ வெறுப்பது துவேஷம் எனப்படும். இதுவும் ஆத்ம குணமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்கு குரோதம் என்றும் பெயர்.

- **சுகம்**

சுகம் என்றால் மகிழ்ச்சி என்று பொருள். இது அனுகூலமானது வேதனைக்கு அப்பாற்பட்டது. இது தர்ம குணங்களால் ஒரு மனிதனுக்கு ஏற்படுகிறது.

- **துக்கம்**

தவறான செயல்களைச் செய்வதால் ஏற்படும் வருத்தம் சார்ந்த உணர்வாகும். துக்கத்தை வலியாக ஆயுர்வேதம் வர்ணிக்கிறது. நோய் களெல்லாம் துக்கம் என்றே வர்ணிக்கப்படுகின்றன.

**பிரயத்னம் – முயற்சி**

ஒரு செயலைச் செய்வதற்கு நாம் எடுக்கும் முயற்சி பிரயத்னம் எனப்படும். இது மூன்று வகைப்படும்.

1. பிரவ்ருத்தி – ஆசையினால் ஏற்படுவது
2. நிவ்ருத்தி – கோபத்தினால் ஏற்படுவது
3. ஜீவனயோனி – வாழ வேண்டும் என்ற எண்ணத்தினால் ஏற்படும் முயற்சியாகும்.

சிகிச்சைக்கு பிரயத்னம் என்று ஒரு பர்யாயம் (பொருள்) உண்டு.

## குருவாதி குணங்கள்

குருவாதி குணங்கள் ஆயுர்வேதத்தில் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன. தோஷங்களெல்லாம் குருவாதி குணங்களையே சார்ந்திருக்கின்றன.

தத்ர ரூக்ஷோ லகு சீத கர ஸூக்ஷ்ம சலானில: (அஷ்டாங்க ஹ்ருதயம் ஸூத்ர ஸ்தானம் 1:18)

என்று சொல்லும் பொழுது அது வாதத்தின் குணமாகிறது. வாதம் என்பது ஒரு குறிப்பிட்ட குணங்களுக்கு நாம் கொடுக்கின்ற ஒரு பெயராகும். குருவாதி குணங்களையே ஆயுர்வேதம் சார்ந்திருக்கிறது. குணங்களில் மிக முக்கியமாக குருவாதி குணங்கள் கருதப்படுகிறது. தாதுக்களும் குருவாதி குணங்களையே சார்ந்திருக்கின்றன. நாம் சாப்பிடும் உணவானது குருவாதி குணங்களையே சார்ந்திருக்கிறது. பால் குரு குணம் உடையது என்றும், நெய் லகு குணம் உடையது என்றும், மாம்ஸம் குரு குணம் உடையது என்றும் குறிப்பிடுகிறோம். இதைப்போல் மூலிகைகளில் சந்தனம் சீத குணம் உடையது என்றும், அகரு (அகில்) உஷ்ண குணம் உடையது என்றும் நாம் குறிப்பிடுகிறோம். இவ்வாறு குறிப்பிடுகின்ற இருபது குருவாதி குணங்களும் ஆயுர்வேதத்தில் தோஷங்களைப் புரிந்து கொள்வதற்கும், தாதுக்களைப் புரிந்து கொள்வதற்கும் உணவைப் பற்றி தெரிந்து கொள்வதற்கும், சிகிச்சைக்கும் இன்றியமையாததாகக் கருதப் படுகிறது. இந்த குணங்களை நாம் காண முடியாது. ஆனால் அனுமானத்தின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். குணத்தின் செயல்பாடுகளை மனித உடலில் ஏற்படும் மாற்றங்களின் மூலம் புரிந்து கொள்ளலாம். இந்த இருபது குணங்களையும் ஆயுர்வேதம் விம்சதி குணங்கள் என்று குறிப்பிடப்பிடுகின்றன.

## 1. குரு குணம்

குரு என்ற சொல்லுக்கு கனத்தன்மை என்று பொருள். புவியீர்ப்பு விசை என்பது கனத்தன்மையை சார்ந்துள்ளது. கபம் இயற்கையாகவே குரு என்னும் குணம் உடையது. உளுந்து, கோதுமை, பால் போன்றவை குரு குணம் உடையது. குரு குணமுடைய பொருட்கள் வாதத்தை தணிக்கும் தன்மையுடையவை, ஆனால் கபத்தை அதிகரிப்பவை. இவை தாதுக்களை போஷிக்கும் தன்மையுடையவை. இதற்கு பிரும்ஹணம் என்னும் குணமுண்டு. மலத்தை அதிகரிக்கும் தன்மையுண்டு. ஸ்ரோதோ லேபனம் என்னும் குணமுண்டு. பொதுவாக இவையனைத்தும் மதுர விபாகம் அடையும். ஆண்மையை அதிகரிக்கும் மருந்துகள் அனைத்தும் குரு குணம் உடையதாகக் கருதப்படுகின்றன. ஆனால் அக்னிபலம் உள்ள ஒருவருக்கே குரு குணம் உள்ள மருந்துகள் கொடுக்கப்பட வேண்டும். இந்த குருவை ஸ்வபாவ குரு என்றும், மாத்ரா குரு என்றும் ஆயுர்வேதம் இருவகையாகப் பிரிக்கிறது. ஸ்வபாவ குரு என்பதற்கு இயற்கையாகவே குரு குணம் உடையது என்று பொருள். இதற்கு உதாரணமாக மாமிசம், உளுந்து இவற்றைக் குறிப்பிடலாம். மாத்ரா குரு என்று குறிப்பிட்டால் லகுவாக உள்ள பொருளையே நாம் அதிக அளவில் உண்டால் அதனால் ஏற்படும் குருத்தன்மையாகும். மனதில் குரு குணம் அதிகரிக்கும் பொழுது ஒரு மனிதனுக்கு க்லானி என்னும் சோம்பேறித்தனம் ஏற்படுகிறது. குரு குணமானது பூமியினாலும், ஜலத்தினாலும் ஏற்படுகிறது. மதுர ரஸம், மதுர விபாகம், சீத வீர்யம் போன்றவை குரு குணத்தையே சார்ந்துள்ளன. (ஸுச்ருத ஸம்ஹிதை ஸுத்ர ஸ்தானம் 46:518)

## 2. லகு குணம்

கனத்தன்மைக்கு எதிரான குணத்திற்கு லகு குணம் என்று பெயர். சிறுபயறு, நெற்பொரி போன்றவற்றை லகு குணத்திற்கு உதாரணமாக கூறலாம். லகுவான பொருட்கள் கபத்தை குறைப்பதாகவும், வாதபித்தத்தை அதிகரிப்பதாகவும் காணப்படுகின்றன. லங்கனம் என்னும் சிகிச்சை லகு குணத்தையேச் சார்ந்திருக்கிறது. மலத்தைக் குறைக்கிறது. ஸ்ரோதஸ்களை சுத்தி செய்கிறது. வமனம், விரேசனம் போன்ற சிகிச்சைகள் உடலில் லகுத்தன்மையை அதிகரிக்கின்றன. லகு குணமானது ஒரு பொருளை

சிரமமில்லாமல் ஜீரணிக்கச் செய்கிறது. மனதை மென்மையாக்குகிறது. எண்ண அலைகளைக் கூட்டுகிறது. லகு குணம், ஆகாச வாயு அக்னி பூதங் களால் ஆனது. கடு ரஸம், கடு விபாகம், உஷ்ண வீர்யம் போன்றவை லகு குணத்தையே சார்ந்திருக்கின்றன.

### 3. சீத குணம்

சீத குணம் என்றால் குளிர்ச்சியானது என்று பொருள். சந்தனம், வெட்டிவேர் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். இது பித்தத்தை தணிக்கச் செய்யும். வாதகபங்களை அதிகரிக்கும். தாதுக்களை அதிகரிக்கிறது. வியர்வையையும், வயிற்றுப் போக்கையும் தடுக்கும். மூர்ச்சை, நாவறட்சி, உடல் எரிச்சல் மற்றும் பித்த நோய்களை தணிக்கும் தன்மையுடையது. மனதிற்கு அமைதி அளிப்பது. ஜலம் மற்றும் வாயு மஹாபூதங்களினால் ஏற்படுத்தப்பட்டது. மதுர ரஸம், திக்த ரஸம், கஷாய ரஸம் போன்றவை சீத வீர்யங்களாகக் காணப்படுகின்றன. மதுர விபாகமும் சீதத் தன்மையுடையதே. (ஸுச்ருத ஸம்ஹிதை ஸூத்ர ஸ்தானம் 46:515)

### 4. உஷ்ண குணம்

இது உடலின் சூட்டை அதிகரிக்கும் தன்மை உடையது. உஷ்ண குணங்கள் வாத கபத்தை தணிக்கும் தன்மையுடையது. பித்தத்தை அதிகரிப்பது. இரத்தப்போக்கை அதிகரிப்பது. தாதுக்களை அழிக்கும் தன்மையுடையது. மூத்திரத்தை குறைப்பது, வியர்வையை அதிகரிப்பது, பாசனம், தீபனம், ஸ்வேதனம் மற்றும் லங்கனம் என்னும் குணமுடையது. பசி மந்தித்து இருக்கும் பொழுதோ, ஜலதோஷம் ஏற்படும்பொழுதோ கப நோய்களிலோ உஷ்ண குணமுடைய மருந்துகளை நாம் பயன்படுத்து கிறோம். உஷ்ண குணம் அக்னி பூதத்தை சார்ந்தது. கடு ரஸம், கடு விபாகம், உஷ்ண வீர்யம் போன்றவை உஷ்ண குணத்தையே சார்ந்திருக்கின்றன. சுக்கு, மிளகு, திப்பிலி, கொடுவேலி, போன்றவை உஷ்ண வீர்யம் உடைய மருந்துகளாகும்.

### 5. ஸ்நிக்த குணம்

ஸ்நிக்தம் என்ற சொல்லுக்கு நெய்ப்புத்தன்மை உடையது அல்லது எண்ணெய்ப்பசை கொண்டது என்று பொருள். இது உடலில் உள்ள

மிருதுத்வம், நீரம்ஸம், எண்ணெய்ப்பசை போன்றவற்றிற்கு காரணமாகிறது. வாதத்தைத் தணிக்கிறது. கபத்தையும், பித்தத்தையும் அதிகரிக்கிறது. தாதுக்களுக்கு போஷாக்கைத் தருகிறது. மலத்தை சீர் படுத்துகிறது. ஆண்மைக் குறைவை நீக்குகிறது. பலத்தை ஏற்படுத்துகிறது. உடலிற்கு நிறத்தைக் கொடுக்கிறது. ஜல மஹாபூதத்தை ஆதாரமாகக் கொண்டது. எண்ணெய், நெய், பால் போன்றவை ஸ்நிக்த குணமுடையவை. மதுர ரஸம், அம்ல ரஸம், லவண ரஸம் போன்றவை ஸ்நிக்த குணம் உடையது. மதுர விபாகம், வாத வியாதி சிகிச்சையில் ஸ்நிக்த குணம் முக்கியப் பங்கை வகிக்கிறது. வாதத்திற்கு பயன்படுத்தப்படும் எண்ணெய்களெல்லாம் வாத கபஹரமாகவும், நெய்களெல்லாம் வாத பித்த சமனமாகவும் சிகிச்சை களில் கொடுக்கப்பட்டுள்ளன. இவை நெய்ப்புத்தன்மை உடையவையே.

(ஸுச்ருத ஸம்ஹிதை –ஸூத்ர ஸ்தானம் 46:516)

## 6. ரூக்ஷ குணம்

ரூக்ஷம் என்ற சொல்லிற்கு வறட்சி என்று பொருள். உடலில் உள்ள நீர்ப்பதத்தை உறிஞ்சும் தன்மை இதற்கு உண்டு. கபத்தைக் குறைக்கும். வாதத்தை அதிகரிக்கும். தாதுக்களை சோஷணம் செய்யும். மலத்தைக் குறைக்கும். ஸ்தம்பனம், சோஷணம், ரூக்ஷணம், என்ற குணங்கள் இதற்கு உண்டு. ஆண்மையைக் குறைக்கச் செய்யும். வாயு மஹாபூதத்தை சார்ந்தது. கடு, திக்த கஷாய ரஸங்கள் மற்றும் கடு விபாக திரவியங்கள் ரூக்ஷ குணமுடையது. சோபம், பிரமேஹம், சுவாசம், மேதோ ரோகங்கள், ஆம ரோகங்கள், ஊரு ஸ்தம்பம் போன்ற நோய்களில் ரூக்ஷ குணம்முக்கிய பங்கு வகிக்கின்றது. உபநாஹம், உத்வர்த்தனம் போன்ற சிகிச்சைகளை ரூக்ஷத்தின் அம்சமாகக் குறிப்பிடலாம். வெண்ணெய் நீக்கிய (தக்ரம் என்ற) மோர் ஒரு ரூக்ஷ பொருளாகும்.

## 7. மந்த குணம்

மந்தத்தன்மை உடையது. அதாவது அதிக காலம் எடுத்து ஒரு திரவியத்தின் செயல்பாடை வெளிப்படுத்துவது என்று பொருள். கபத்தை அதிகரிக்கச் செய்யும். வாதத்தின் சல குணத்தை தடுத்து நிறுத்தும். தாதுக்களை போஷிப்பது. வாத பித்தத்தை சமனம் செய்வது. மலபந்தத்தை

ஏற்படுத்துவது. பிருத்வி, ஜல மஹாபூதங்களால் ஆனது. இதற்கு உதாரணமாக அதிவிடயம், எருமைத் தயிர் போன்றவற்றைக் குறிப்பிடலாம். மதுர திக்த கஷாய ரஸம் உடைய திரவியங்கள் மந்தத்தன்மை கொண்டிருக்கும். சீத வீரியமுடையது. மதுர விபாகத்தைச் சார்ந்தது. (ஸுச்ருத ஸம்ஹிதை – ஸுத்ர ஸ்தானம் 46:521)

### 8. தீக்ஷ்ண குணம்

நுண்மை மிக்கது. அதாவது ஒரு திரவ்யத்தின் துரிதமான செயல் பாட்டிற்கு காரணமாவது. தோஷங்களை வெளிப்படுத்துவதில் சிறந்தது. மந்த குணத்திற்கு எதிரானது. பித்தத்தை வர்த்தனம் செய்வது. கபத்தைக் குறைப்பது. உடல் எடையை குறைப்பது. மலத்தை வெளியேற்றுவது. வமன திரவ்யங்கள் மற்றும் விரேசன திரவ்யங்களுக்கு இந்த குணம் உண்டு. அக்னி பூதத்தினால் ஆனது. அபஸ்மாரம் (காக்காய் வலிப்பு), மதம் என்னும் புத்தி பேதலிப்பு, ஸ்வாசம் போன்ற நோய்களில் தீக்ஷ்ண குணத்தை நாம் பயன்படுத்துகிறோம். சேராங்கொட்டை, நாகதந்தி, மிளகு போன்றவற்றிற்கு தீக்ஷ்ணம் என்னும் குணமுண்டு. (ஸுச்ருத ஸம்ஹிதை – ஸுத்ர ஸ்தானம் 46:523)

### 9. ஸ்திர குணம்

நிலைநிறுத்த செய்வது என்று பொருள். கபவர்த்தனமானது. தாதுக்களை போஷணம் செய்வது. அதிகமான மலப் பிரவர்த்தியை தடுத்து நிறுத்துவது. அசைவிற்கு எதிரானது. முடி உதிர்வதைத் தவிர்ப்பது. எலும்புகளுக்கு வலுவைத் தருவது. இருதயத்தைச் சீராக இயக்குவது. பிருத்வி பூதத்தினால் ஆனது. முடி உதிர்தல், எலும்பு வளர்ச்சி, பற்களின் ஆட்டம் போன்ற வற்றில் சிறந்தது. ஓரிலை இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். மதுரம் மற்றும் திக்த ரஸத்தை சார்ந்தது. சீத வீர்யமானது, மதுர விபாகமானது. (பாவப்ரகாசம்)

### 10. ஸர குணம்

எந்த ஒரு குணத்தினால் பொருட்கள் அசையும் தன்மையைப் பெறுகிறதோ அதற்கு ஸரம் என்று பெயர். கடுக்காய் (ஹரீதகி), சிவதை

வேர் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். வாதத்தை அதிகரிப்பது. மலத்தை வெளிப்படுத்துவது போன்ற குணங்கள் உடையது. ஸுச்ருதர் இதை நீர் மஹாபூதத்தின் தன்மை உடையது என்று குறிப்பிடு கிறார். சலம் என்ற ஒரு குணமுண்டு. எண்ண அலைகளின் ஓட்டத்திற்கு சலம் என்ற பதத்தையும், பொருட்களின் அசைவிற்கு ஸரம் என்ற வார்த் தையும் பயன்படுத்துவது மரபு.

## 11. மிருது குணம்

மென்மைத் தன்மை உடையது. ஆசார்யர் ஸுச்ருதர், மாம்ஸம், ரக்தம், மஜ்ஜை, கொழுப்பு, நாபி கல்லீரல் போன்றவை மிருதுவான அங்கங்கள் என்று குறிப்பிடுகிறார். கபத்தை அதிகரிப்பது, வாத பித்தத்தை தணிப்பது, தாகத்தை தணிப்பது, என்னும் குணங்களுடையது. இது ஆகாச பூதத்தை சார்ந்தது. இதற்கு உதாரணமாக அதிமதுரம், நெற்பொரி போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

## 12. கடின குணம்

கடினத்தன்மை உடையது. தாதுக்களுக்கு பலம் ஏற்படுத்தக் கூடியது. மலத்தை உலரச் செய்வது. பிருத்வி பூதத்தினால் ஆனது, பவளம், முத்து, சங்கு போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். எலும்பு நோய்களுக்கு முக்கியத் தன்மை வாய்ந்தது.

## 13. விசாத குணம்

விசாத குணம் தெளிவான தன்மை உடையது. அழுக்கற்றது. தாதுக் களின் மலத்தை மாற்றுவது. வாதத்தை கோபிக்கச் செய்வது. கபத்தை தணிப்பது. மலசோதனம் செய்வது. லேகனம் என்னும் குணம் உடையது. நிலம், நீர், ஆகாசம் என்னும் குணமுடையது. வேப்பமரத்தை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

## 14. பிச்சில குணம்

பிச்சில என்னும் சொல் ஒட்டும் தன்மையுடையது என்று பொருள் படும். பசையைப் போல் உடலின் மேலே பரவும் தன்மையுடையது. இதற்கு லேபனம் என்று பெயர். கபத்தை அதிகரிக்கச் செய்வது. வாதத்தை

சமனம் செய்வது. தாதுக்களைப் போஷிப்பது. எலும்புகளை ஒட்டச் செய்வது. ஜீவனீயம் (உயிரை நிலை நிறுத்துவது). பல்யம் (பலம் அளிப்பது), ஸந்தானகரம் (உடைந்த எலும்புகளை இணைப்பது) என்னும் குணமுடையது. எலும்பு முறிவுகளுக்குச் சிறந்தது. ஜலமஹாபூதத்தை சார்ந்தது. கூஷ்மாண்டத்தை (கல்யாணபூசணி) இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். புண்களை உலரச் செய்வது. மஞ்சள் போன்றவற்றிற்கு இந்த குணம் உண்டு. கப பித்தத்தை அதிகரிக்கச் செய்வது தாதுக்களை விருத்தி செய்வது. மலத்தை இளக்குவது. சரகர் இதை ஆகாச குண பூயிஷ்ட மாகவும், நாகார்ஜுனர் அக்னிகுண பூயிஷ்டமாகவும் குறிப்பிடுகிறார். (ஸுச்ருத ஸம்ஹிதை 46:516)

### 15. கர குணம்

கரகரப்புத் தன்மையுடையது. வயம்பு, சிலாஜது போன்றவற்றை குறிப் பிடலாம். உடலில் இருக்கின்ற கொழுப்பை அகற்றுவது. வாதத்தை வர்த்தனம் செய்வது. தாதுக்களைக் குறைப்பது. மலங்களைக் குறைப்பது. கர்க்கசம் என்று இதற்கு ஒரு பெயரும் உண்டு. ஸுச்ருதர் இதை கர்க்கசம் என்றே குறிப்பிடுகிறார். வாயு அக்னி சம்பந்தப்பட்டது.

### 16. ச்லக்ஷ்ண குணம்

மென்மையையோ வழுவழுப்பையோ ஏற்படுத்துகின்ற குணத்திற்கு ச்லக்ஷ்ணம் என்று பெயர். இதற்கு ரோபணம் என்னும் புண்ணை ஆற்றும் குணம் உண்டு. இது கப பித்தத்தை அதிகரிப்பது. வாதத்தைக் குறைப்பது. தாதுக்களுக்குப் போஷாக்கை அளிப்பது, மலத்தை வெளியேற்றுவது. இதை ஆகாச பூயிஷ்டமாக சரகர் கூறுகிறார். ஸுச்ருதர் இதை பிச்சிலக் குணத்திற்கு சமமாகக் கூறுகிறார். (அஷ்டாங்க ஹ்ருதயம் ஸுத்ரம் 1:18)

### 17. சூட்சும குணம்

சூட்சும என்னும் சொல்லிற்கு நுண்மையானது என்று பொருள். ஸ்ரோதஸ்களுக்கு உள்ளே புகுந்து செல்லும் ஆற்றல் மிக்கது. வாதத்தை அதிகரிப்பது. கபத்தை சமனம் செய்வது. உடல் எடையைக் குறைப்பது. மலப் பெருக்கத்தை தடுப்பது. லகுபாகம் உடையது. அக்னி, வாயு, ஆகாச

குணமுடையது. இதற்கு உப்புகளையும், அரிஷ்டாஸவங்களையும் உதாரண மாகக் குறிப்பிடலாம். (ஸுச்ருத ஸம்ஹிதை – ஸுத்ர ஸ்தானம் 46:54)

### 18. ஸ்தூல குணம்

பெருக்கும் தன்மையுடையது. தயிர், பிண்ணாக்கு போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். குரு பாகம் உடையது, ஸ்ரோதஸ்களை அடைப்பது. கபத்தை வர்த்தனம் செய்வது, வாத பித்தத்தைத் தணிப்பது, உடல் எடையை அதிகரிப்பது, மலத்தை அதிகரிப்பது, பிருத்வி பூதமானது, வாத வியாதிகளில் பயன்படுத்தக்கூடியது.

### 19. ஸாந்த்ர குணம்

உடலில் உள்ள அங்கங்களை எது போஷிக்கிறதோ அதற்கு ஸாந்த்ரம் என்று பெயர். இதற்கு பிரஸாதனம் என்ற குணமும் உண்டு. கபத்தை அதிகரிப்பது, வாதத்தைத் தணிப்பது, தாதுக்களை புஷ்டிப்படுத்துவது, மலத்தை இறுக்குவது, பிருத்வி பூயிஷ்டமானது, பால், மோர், வெண் ணெய்க்கு இந்த குணம் உண்டு. உடலை சந்தர்ப்பணம் செய்வது, எலும்பு களை ஒட்டுவது, பாவ மிஸ்ரர் ஸாந்த்ரம் என்னும் இடத்தில் சுஷ்கம் என்னும் பதத்தை பயன்படுத்துகிறார். பிருத்வி, வாயு, அக்னி பூதங்களின் சேர்க்கையினால் அவர் இவ்வாறு கூறியிருக்கலாம்.

### 20. திரவ குணம்

நீர்த்தன்மையுடைது. ஜல மஹாபூதத்தால் ஆனது. ஸ்நேஹனம், ஸ்வேதனம், ஸ்தம்பனம் என்னும் பண்புகள் உடையது. கப பித்தத்தை அதிகரிக்கச் செய்வது. வாயுவை தணிப்பது. உடலில் நீரம்சமாகிய ரஸ ரக்த தாதுக்களை அதிகரிக்கச் செய்வது. மூத்திரத்தையும் அதிகரிப்பது. அதிஸாரம், ஜ்வரம், திருஷ்ணா (நீர் வேட்கை) போன்ற நோய்களில் திரவ குணம் முக்கிய பங்கு வகிக்கிறது.

(ஸுச்ருத ஸம்ஹிதை 46:52)

மேற்கூறிய குணங்களில் ஆறு குணங்களை மட்டும் சிகிச்சையில் பங்கு வகிக்கும் முக்கிய குணங்களாக ஒரு வைத்தியர் கருதுகிறார். அவை,

குரு குணம்

லகு குணம்

சீத குணம்

உஷ்ண குணம்

ஸ்நேஹ குணம்

ரூக்ஷ குணம்

என்பனவாகும்.

சரகர் இவற்றை ஆதாரமாகக் கொண்டே ஆறு வித சிகிச்சைகளைக் கூறுகிறார். இதற்கு ஷட்வித உபக்ரமம் என்று பெயர். குரு குணத்தை ஆதாரமாகக் கொண்டு உடலை போஷிக்கச் செய்யும் சிகிச்சையாகிய பிரும்ஹண சிகிச்சையை குறிப்பிடுகிறார். லகு குணத்தை ஆதாரமாகக் கொண்டு சோதன சிகிச்சையும், உடல் இளைக்கச் செய்யும் லங்கன சிகிச்சையும் ஸ்நேஹ குணத்தை ஆதாரமாகக் கொண்டு பூர்வ கர்மயுக்த சிகிச்சையாகிய ஸ்நேஹ சிகிச்சையையும் உஷ்ண குணத்தை ஆதாரமாகக் கொண்டு வியர்வை ஏற்படுத்துதல் போன்ற ஸ்வேத சிகிச்சையையும் ரூக்ஷ குணத்தை ஆதாரமாகக் கொண்டு ரூக்ஷ சிகிச்சையாகிற உத்வர்த்தனம் போன்றவற்றையும் சீத குணத்தை ஆதாரமாகக் கொண்டு வேகத்தை தடுத்து நிறுத்துகின்ற ஸ்தம்பன சிகிச்சையையும் கூறியுள்ளார். அதிஸாரம், திருஷ்ணா, மூர்ச்சை போன்றவற்றில் ஸ்தம்பன சிகிச்சை பயன்படுத்து வதை நாம் காணலாம். இந்த ஆறு குணங்களுக்கும் பிராண குணங்கள் அல்லது சிகித்ஸா குணங்கள் என்று பெயர். குருவாதி குணங்களில் ஆயுர்வேதத்தில் மிக முக்கிய குணங்களாக இவை கருதப்படுகின்றன. சிகிச்சையில் இந்த ஆறு குணங்களும் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன. இந்த ஆறு குணங்களையும் சரகர் மீண்டும் இரண்டாகப் பிரிக்கிறார். இதை த்வித உபக்ரமீயம் என்கிறார். இதற்கு லங்கனம், ப்ரும்ஹணம் என்று பெயர். இந்த ஆறு குணங்களும் உடலை போஷிக்கச் செய்யும் தன்மையை சார்ந்து சீதம் என்றும், உஷ்ணம் என்றும் இருவகையாகப் பிரிக்கிறார்.

உடலைப் போஷிக்கும் குணங்களெல்லாம் சீத குணமுடையதாகவும், உடலினுடைய மெலியச் செய்யும் செயலை எல்லாம் உஷ்ணமாகவும

அவர் கூறுகிறார். இதில் பிரும்ஹணம், ஸ்தம்பனம் போன்றவை சீத குணம் உடையவை. ரூக்ஷணம், ஸ்வேதனம் போன்றவை உஷ்ண குணம் கொண்டவை. இந்த எல்லா குணங்களையும் சீத குணமாகவும், உஷ்ண குணமாகவும் ஆயுர்வேதம் கூறுகிறது. ஆண்களை சீத குணம் மிக்கவர் களாகவும், பெண்களை உஷ்ண குணம் மிக்கவர்களாகவும் ஆயுர்வேதம் கூறுகிறது. உலகத்தை சோம (சந்திரன்) பூயிஷ்டமாகவும், அக்னி (சூரியன்) பூயிஷ்டமாகவும் பிரிக்கிறது. மூலிகைகளையும் குளிர்ச்சி வாய்ந்ததாகவும், உஷ்ணம் வாய்ந்ததாகவும் பிரிக்கிறது. ஆக குருவாதி குணங்களில் மிக முக்கியமானது சீத குணமும், உஷ்ண குணமும் என்பதை நினைவில் கொள்க.

**வைதர்ம்யம்** (வேற்றுமை)

சில குணங்கள் கண்ணால் காணப்படும் பொருட்களிலும், சில குணங்கள் காணப்படாத பொருட்களிலும், சில இரண்டிலும் காணப்படும்.

**மூர்த்த குணம்** (தன்னை வெளிப்படுத்தும் தன்மையுடைய குணங்கள்)

ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், பரத்வம், அபரத்வம், குருத்வம், த்ரவத்வம், ஸ்நேஹம் போன்றவை.

- ரூபம் – வர்ணம்
- ரஸம் – சுவை
- கந்தம் – மணம்
- ஸ்பர்சம் – தொடு உணர்வு
- பரத்வம் – தொலைவு
- அபரத்வம் – அருகாமை
- குருத்வம் – கனத்தன்மை
- த்ரவத்வம் – நீர்த்தன்மை
- ஸ்நேஹம் – எண்ணெய்ப்பசை

சரகரின் கூற்றுப்படி 20 குருவாதி குணங்களும் மூர்த்த குணங் களாகும்.

## அமூர்த்த குணங்கள்

அமூர்த்த குணங்கள் கண்ணால் காண இயலாதவை, உருவற்றவை, புத்தி (அறிவு), சுகம் (இன்பம்), துக்கம் (துன்பம்), இச்சை (தீரா ஆவல்), துவேஷம் (வெறுப்பு), பிரயத்னம் (முயற்சி), தர்மம் (அறம்), அதர்மம் (அறமில்லா செயல்), யுக்தி (பகுத்தறிவு) போன்றவை அமூர்த்த குணங் களாகும்.

## உபய குணங்கள்

உபய குணங்கள் இரண்டிலும் காணப்படுபவை. ஸங்க்யம், பரிணாமம், விபாகம், பிருதக்த்வம் இவை மூர்த்தமாகவும், அமூர்த்தமாகவும் தன்னை வெளிப்படுத்திக் கொள்கின்றன. சில குணங்கள் ஒரு சில திரவியங் களிலேயேக் காணப்படுகின்றன. சில குணங்கள் இரண்டு திரவ்யங்களில் காணப்படுகின்றன. சில குணங்கள் பல பொருட்களில் காணப்படுகின்றன. ஸங்க்யம், ஸம்யோகம், விபாகம், பிருதக்த்வம், பரிணாமம், பரத்வம், அபரத்வம் போன்றவை 9 திரவியங்களிலும் காணப்படுகின்றன. இதனால் இவற்றை ஸாமான்ய குணங்கள் என்று கூறலாம்.

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், புத்தி, சுகம், இச்சா, துவேஷம், பிரயத்னம், தர்மம், அதர்மம், ஸம்ஸ்காரம் மற்றும் குருவாதி குணங்கள் எல்லா திரவ்யங்களிலும் காணப்படவில்லை. இவை ஒரு திரவியத் திலிருந்து மற்றொரு திரவியத்தில் ஒவ்வொரு குணம் தனித்தன்மையாகக் காணப்படுகின்றன. இதற்கு விசேஷ குணங்கள் என்று பெயர்.

சில குணங்கள் புலன்களால் நுகரப்படுபவை. சில குணங்கள் நுண் அறிவினால் அல்லது மனதினால் அறியப்படுபவை. வைசேஷிக குணங் களில் சப்தம் என்னும் ஒலி, ஸ்பர்சம் என்னும் தொடு உணர்வு இவை புறப்புலன்களால் அறியப்படுபவை, இவற்றிற்கு பாஹ்ய குணங்கள் என்று பெயர். மனதினால் அறியப்படும் குணங்களுக்கு ஆத்ம குணங்கள் அல்லது அந்தர் இந்திரிய குணங்கள் என்று பெயர். குருத்வம், த்ரவத்வம் மற்றும 20 குணங்கள் புலன்களால் அறியப்படுவதில்லை. இதற்கு அதீந்திரிய குணங்கள் என்று பெயர்.

பராதி குணங்களையும், குருவாதி குணங்களையும், ஐந்து விசேஷ குணங்களையும் (ஒலி, தொடு உணர்வு, உருவம், சுவை, மணம்) ஆதி பௌதிக குண்ங்கள் என்றும் ஆத்மாதி குணங்களை அத்யாத்மிக குணங்கள் என்றும் ஆத்மாதி குணங்களை அத்யாத்மிக குணங்கள் என்று குறிப்பிடு பவர்கள் உண்டு. இவை இகலோக பரலோக சித்தாந்தங்களை அடிப் படையாகக் கொண்டவை.

## குணங்களின் முக்கியத்துவம்

வாத பித்த கபங்கள் குணங்களையே சார்ந்திருக்கின்றன. சந்தர்ப் பணம் மற்றும் அபதர்ப்பண சிகிச்சை குணங்களையே சார்ந்துள்ளது. பஞ்சகர்மா சிகிச்சை குணங்களையே சார்ந்துள்ளது. நாம் சாப்பிடுகின்ற உணவு, உடம்பின் வளர்ச்சி, மெலிதல் போன்றவை குணங்களையே சார்ந்துள்ளது. குணமில்லாவிட்டால் ஆயுர்வேதம் இல்லை. ரஸத்தைவிட குணத்திற்கு முக்கியத்துவம் உண்டு. சீதம் மற்றும் மிருது குணமிருப்பதால் நெல்லிக்காயானது புளிப்பு திரவியங்களில் உன்னத தன்மை பெறுகிறது. ஆறு கிரியைகளும் குணத்தையே சார்ந்திருக்கின்றன.

## நியாய வைசேஷிகர்கள் கூறும் 24 குணங்களும், சரகர் கூறும் 41 குணங்களும்

நியாய வைசேஷிகர்கள் 24 குணங்களைக் கூறுகிறார்கள். இதற்கு சதுர்விம்சதி குணம் என்று பெயர். அவையாவன.

1. ரூப்ம் – உருவம் அல்லது வர்ணம்
2. ரஸம் – சுவை
3. கந்தம் – மணம்
4. ஸ்பர்சம் – தொடு உணர்வு
5. ஸாங்க்யம் – எண்ணிக்கை
6. பரிணாமம் – மாறுதல்
7. பிருதக்த்வம் – தனித்தன்மை
8. ஸம்யோகம் – சேர்க்கை
9. விபாகம் – பிரிவு

| | | |
|---|---|---|
| 10. பரத்வம் | – | தொலைவு |
| 11. அபரத்வம் | – | அருகாமை |
| 12. குருத்வம் | – | கனத்தன்மை |
| 13. திரவத்வம் | – | நீர்த்தன்மை |
| 14. ஸ்நேஹம் | – | எண்ணெய்ப்பசை |
| 15. சப்தம் | – | ஒலி |
| 16. புத்தி | – | நுண்ணறிவு |
| 17. சுகம் | – | இன்பம் |
| 18. துக்கம் | – | துன்பம் |
| 19. இச்சை | – | தீரா ஆவல் |
| 20. துவேஷம் | – | வெறுப்பு |
| 21. பிரயத்னம் | – | முயற்சி |
| 22. தர்மம் | – | அறம் |
| 23. அதர்மம் | – | பாவச்செயல் |
| 24. ஸம்ஸ்காரம் | – | வாசனை (ஆழ்மன எண்ணங்கள்) |

(ஆயுர்வேதத்தில் ஸம்ஸ்காரம் என்பதற்கு வேறு ஒரு பொருள் உண்டு. ஒரு செயலின் மூலம் ஒரு பொருளின் குணம் மாற்றப்படுமானால் அதற்கு ஸம்ஸ்காரம் என்று பெயர். நெல் கணமானது, இதை சட்டியில் இட்டு வறுக்கும் பொழுது அது பொரியாகிறது. நெல்லுக்கும் பொரிக்கும் எதிரிடை குணங்கள் உண்டு. இது ஸம்ஸ்காரத்தால் ஏற்படுத்தப்பட்டது. இதையும் தர்க்க ஸங்கிரஹத்தில் உள்ள ஸம்ஸ்காரத்தையும் குழப்பக் கூடாது)

ஆயுர்வேதத்தில் தர்மமும், அதர்மமும் குணமாகக் குறிப்பிடப்பட வில்லை. ஆயுர்வேதத்தில் சிகிச்சைக்கு 20 குணங்களே மிக முக்கியமாகக் கருதப்படுகின்றன. நியாய வைசேஷிகர்களின் வாக்கியங்கள் மெய்யறிவு சார்ந்த கருத்துக்களாக இருப்பதால் மற்ற குணங்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கின்றன. யுக்தியும், அப்யாஸமும் சரகர் பல இடங்களில் குறிப்பிடு கிறார் என்பதை நினைவில் கொள்க.

**நியாயத்தின் 24 குணங்கள்,**

**5 வைஷேிக குணங்களாகவும் (சப்தம், ஸ்பர்சம், ருபம், ரஸம், சந்தம்)**

6 ஆத்ம குணங்களாகவும் (புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்னம்) 13 ஸாமான்ய குணங்களாகவும் (ஸாங்க்யம், பரிமாணம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், ஸ்நேஹம், தர்மம், அதர்மம், ஸம்ஸ்காரம்) என மொத்தம் 24 குணங்கள். இதில் இச்சை, துவேஷம், துக்கம் போன்றவற்றை மனோ குணங்களாகவே குறிப்பிட வேண்டும். ஆத்ம குணங்களாக குறிப்பிடக் கூடாது என்று ஒரு பாடமும் உண்டு.

**சரகர் கூறிய 41 குணங்கள்**

வைசேஷிக குணங்கள் (5) (5 புலன்களின் குணங்கள் முறையே சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பன)

**ஆத்ம குணங்கள் (6)**

ஸாமான்ய குணங்கள் (பராதி குணங்கள்) (10 தர்மம், அதர்மம், யுக்தி மற்றும் அப்யாஸம் தவிர)

**குருவாதிக் குணங்கள் (20)**

# 10. கர்ம விஞ்ஞானம்

ஆயுர்வேதத்தில் கர்மம் மூன்றாவது பதார்த்தமாகக் கூறப் பட்டுள்ளது. கர்மம் என்ற சொல்லுக்கு செயல் அல்லது கிரியை என்று பொருள் கூறலாம். நாம் எதைச் செய்கிறோமோ அதற்கு கர்மம் என்று பெயர். சிகிச்சைக்கு கர்மம் என்ற பெயருண்டு. பொதுவாக பஞ்சகர்மம் சிகிச்சையை ஐந்து வித கர்மம் என்று குறிப்பிடுவதை நாம் நினைவில் கொள்ளலாம். கர்மமானது திரவியத்தையேச் சார்ந்திருக்கிறது. ஒரு பொருளின் சேர்க்கைக்கும் பிரிவிற்கும் கர்மம் காரணமாகிறது. இதை ஸம்யோகம் என்றும் விபாகம் என்றும் குறிப்பிடலாம்.

## கர்மத்தின் லட்சணம்

திரவியமில்லாமல் கர்மத்தால் தனித்து செயல்பட இயலாது. ஒரு குணமானது பல திரவியங்களில் காணப்படலாம். ஆனால் ஒரு திரவியத்திற்கென்று சில குறிப்பிட்ட கர்மங்கள் உண்டு. திரவியத்தை சார்ந்திராமல் கர்மத்திற்கென்று குணங்கள் இல்லை. மூர்த்த திரவியங்களிலேயே கர்மம் காணப்படுகிறது. பிருத்வி, அப், தேஜஸ், வாயு மற்றும் ஆகாயத்திற்கும் கர்மங்கள் உண்டு. மனதிற்கும் கர்மங்கள் உண்டு. கர்மமானது தனது செயலைச் செய்து முடித்தபிறகு அழிந்து விடுகிறது. மற்ற திரவியங்களைப் போல் என்றும் நிலைத்திருப்பதில்லை.

## கர்மத்தின் பிரிவுகள்

பௌதிக கர்மம் (அ) லௌகிக கர்மம்.

உலகத்தில் நாம் செய்யும் செயல்களை பௌதிக கர்மங்கள் என்று குறிப்பிடலாம். அதை விஹித கர்மங்கள் என்றும் நிஷித்த கர்மங்கள் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம்.

### விஹித கர்மங்கள்

விஹித கர்மங்கள் என்றால் வேதத்தாலும் சாஸ்திரத்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கர்மங்கள் அல்லது செயல்கள் என்று பொருள்.

### நிஷித்த கர்மங்கள்

'நிஷித்த கர்மங்கள்' என்றால் வேதத்தால் புறக்கணிக்கப்பட்ட அல்லது சாஸ்திரங்களால் ஏற்றுக் கொள்ளப்படாத கர்மங்கள் என்று பெர்ருள்.

விஹித கர்மங்களை மேலும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை இஷ்ட கர்மம் மற்றும் பூர்த்த கர்மம் எனப்படும். ஆன்மீக செயல்பாடுகள், பூஜைகள் போன்றவை இஷ்ட கர்மங்கள் ஆகும். யக்ஞம் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

உலக நலனிற்காகச் செய்யப்படும் சேவைகளை பூர்த்த கர்மங்கள் என்று குறிப்பிடலாம்.




கர்மத்தின் செயல்பாட்டின் அடிப்படையில் விஹித கர்மம் நான்கு நான்கு வகையாகப் பிரிக்கப்படுகிறது.

**நித்ய கர்மங்கள் –** ஆயுர்வேதத்தில் கூறப்படும் தினச்சரியை, ருது சரியை போன்றவற்றை நித்ய கர்மங்களாகக் குறிப்பிடலாம். இது தனிமனித ஆரோக்கியத்திற்காகக் கூறப்பட்டுள்ளவை. இத்தகைய கர்மங்களை

ஒருவன் செய்தால் ஆரோக்கியமாக இருக்கலாம். தனிமனிதனின் ஆரோக்கியம் சமூகத்தின் ஆரோக்கியமாக இருப்பதால் நித்ய கர்மங்கள் முக்கிய பங்கு வகிக்கிறது.

**நைமித்திக கர்மம்** – ஒரு குறிப்பிட்ட பலனை அடைவதற்காகச் செய்யப்படும் செயல்கள் நைமித்திக கர்மங்களாகும். வியாதியை அகற்றுவதற்காக எடுத்துக் கொள்ளப்படும் ரஸாயனங்கள் , குழந்தை பிறந்தபிறகு செய்யப்படும் ஜாத கர்மங்கள், உடலை சுத்தி செய்வதற்காக செய்யப்படும் பஞ்சகர்மங்கள் போன்றவற்றை நைமித்திக கர்மங்கள் எனலாம்.

**காம்ய கர்மம்** – இக லோகத்திலும், பரலோகத்திலும் ஏற்படும் இச்சைகளை பூர்த்தி செய்வதற்காகச் செய்யப்படும் செயல்களுக்கு காம்ய கர்மங்கள் என்று பெயர். குழந்தையில்லாத ஒருவரால் செய்யப்படும் புத்ரகாமேஷ்டி யக்ஞும் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். உடல் ஆரோக்கியத்தை பெற ஒருவர் செய்யும் காயகல்ப சிகிச்சையையும், குடிப்ரவேசிக ரஸாயனத்தையும் காம்ய கர்மமாகக் குறிப்பிடலாம்.

**பிராயசித்த கர்மம்** – தாம் செய்கின்ற தீய செயல்களிலிருந்து விடுதலை யடைவதற்குச் செய்யப்படும் நற்செயல்களுக்கு பிரயாசித்த கர்மம் என்று பெயர். கோவில்களுக்குச் செல்வது, பாதயாத்திரை செல்வது, அன்னதானம் செய்வது போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். சிகிச்சைக்கு பிராயச்சித்தம் என்று பெயருண்டு. சித்தம் எனும் மனதை சுத்தி செய்வதால் இதற்குப் பிராயச்சித்தம் என்று பெயர்.

நியாய தரிசனத்தில் காணப்படும் கர்மத்தின் பிரிவுகள்:

1. **உத்க்ஷேபணம்** – ஒரு பொருளை மேலே தூக்குவதற்காகச் செய்யப்படும் செயல்கள் உத்க்ஷேபணம் எனப்படும்.

2. **அபக்ஷேபணம்** – ஒரு பொருளை கீழே இறக்குவதற்காக செய்யப்படும் செயல்கள் அபக்ஷேபணம் எனப்படும்.

3. **ஆகுஞ்சனம்** – ஒரு பொருளை சுருங்கச் செய்வதற்குச் செய்யப்படும் செயல்கள் ஆகுஞ்சனம் எனப்படும்.

**4. பிரஸாரணம்** – ஒரு பொருளை விரிவடையச் செய்வதற்குச் செய்யப்படும் செயல்கள் பிரஸாரணம் எனப்படும்.

**5. கமனம்** – எல்லாவித அசைவுகளும், நடக்கும் செயல்களும் கமனம் எனப்படும்.

## ஆயுர்வேதத்தில் கர்மத்தின் பங்கு

பிஷக், திரவ்யம், உபஸ்தா (செவிலியர்), ரோகி என்ற நால்வரும் சேர்ந்து நோயை மாற்றி தாதுவை சமநிலைப்படுத்த செய்யப்படும் செயல்கள் அனைத்துமே கர்மங்கள் எனப்படும். கர்மம் என்றால் சிகிச்சை என்று அறிகிறோம். ஆயுர்வேதத்தில் முன் வினைகளுக்கும் கர்மம் என்ற பெயருண்டு. சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானத்தில் கதீதாபுருஷீயத்தில் முன்வினைகளால் வரும் பலன்களை கர்மம் என்று குறிப்பிடுகிறார். இதற்கு தைவீ என்றும் உபதா என்றும் பெயர். இந்திரியோபக்ரமத்தில் தைவம், புருஷாகாரம் என்ற இரண்டு கருத்துக்களைக் குறிப்பிடுகிறார். தைவம் என்றால் முன்வினை செயல்கள் என்றும் புருஷாகாரம் என்றால் இப்பிறப்பில் நாம் செய்கின்ற நற்செயல்கள் என்றும் பொருள். ஐந்து விதமான சோதனக் கிரியைகளை பஞ்சகர்மம் என்று ஆயுர்வேதம் குறிப்பிடுகிறது. நியாயம் குறிப்பிடும் உத்க்ஷேபணம், அபக்ஷேபணம், ஆகுஞ்சனம், பிரஸாரணம், கமனம் போன்ற செயல்கள் வியான வாயுவின் செயல்களாகக் குறிப்பிடப்படுகின்றன. சரகர் கர்மத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது 'கர்த்தவ்யஸ் க்ரியா' கர்மஸ்ய என்று குறிப்பிடுகிறார். எதனால் ஒரு செயல் பூர்த்தியடைகிறதோ அச்செயலைக் கர்மம் என்று குறிப்பிடுகிறார். ஆயுர்வேதத்தில் காணப்படும் ஸத்விருத்தங்கள் என்னும் ஒழுக்க நியமங்கள் கர்மச் செயல்களாகக் கருதப்படுகின்றன. உபசாரங்களும் அபத்யங்களும் கர்மமாகவே கருதப்படுகின்றன. ஸுச்ருதர் ஔஷதி கர்மம் என்ற ஒரு செயலைக் குறிப்பிடுகிறார். இதல்லாமல் பைஷஜ்ய கர்மம், பஞ்சகர்மம், சோதனா கர்மம் என பலவித பிரிவுகள் ஆயுர்வேதத்தில் காணப்படுகின்றன. ஆயுர்வேதத்தில் கூறப்படும் அனைத்து சிகிச்சைகளையும் கர்மத்திற்குள் உட்படுத்திக் கூறலாம்.

# 11. ஸாமான்யம்

**ஸா**மான்யம் என்றால் பொதுத் தன்மை என்று பொருள். பொருள்களில் காணப்படும் சில பொதுவான குணங்களுக்கு ஸாமான்யம் என்று பெயர். எல்லா மனிதர்களுக்கும் பொதுவாக சில குணங்கள் இருக்கும். அதை மனிதர்களின் ஸாமான்ய குணம் என்று குறிப்பிடலாம். ஸாமான்யம் எனும் குணத்திற்கு கீழ்கண்ட வடிவங்கள் புத்தகங்களில் காணக்கிடைக்கின்றன. ஸாமான்யம் நித்யமானது என்றும், அழியாதது என்றும் குறிப்பிடுகிறார்கள். ஒரு பானையிலே மறைந்து காணப்படுகின்ற கடத்வம் என்ற குணம் அழிக்க இயலாதது என்றும் குறிப்பிடுகிறார்கள். ஸாமான்யம் ஒருமை மிக்கது. திசை, காலங்கள் போன்றவற்றிற்கு ஸாமான்யம் போன்ற குணங்கள் கிடையாது. திரவ்யம், குணம், மற்றும் கர்மத்தை ஸாமான்யம் சார்ந்திருக்கிறது. மற்ற பதார்த்தங்களில் இல்லை.

## ஆயுர்வேதத்தில் ஸாமான்யத்தின் பங்கு

ஸாமான்யம் என்ற பொதுப்பண்பு ஆயுர்வேத சிகிச்சையில் முக்கிய பங்கு வகிக்கிறது. சரகர் ஸூத்ர ஸ்தானத்தில்

'ஸர்வதா ஸர்வபாவனாம் ஸாமான்யம் விருத்தி காரணம்'

என்று குறிப்பிடுகிறார். பொதுவான குணங்களை உடைய செயல்கள், மருந்துகள் மற்றும் உணவுப்பொருட்கள் சிகிச்சையில் பயன்படுத்தப்படும் பொழுது அவை வாத பித்தத்தைக் கூட்டும் என்று குறிப்பிடுகிறார். ஒரு குளிர்ச்சியான சுற்றுச் சூழலினால் சீதம்

என்ற குணமுடைய வாதம் அதிகரிக்கும். உஷ்ணமான உணவால் உஷ்ணத்தன்மையுடைய பித்தம் அதிகரிக்கும். வறட்சியான உணவுகளினால் ரூக்ஷம் எனும் வறட்சித் தன்மை அதிகரிக்கப்பட்டு வாயு அதிகரிக்கும். இதனால் மலபந்தம் ஏற்படும். மதுர ரஸத்தை உண்பதால் கபம் அதிகரிக்கும் என்பவற்றை அவர் குறிப்பிடுகிறார். இவற்றை திரவிய ஸாமான்யம், குண ஸாமான்யம், கர்ம ஸாமான்யம் என்று குறிப்பிடுகிறார்

- **திரவ்ய ஸாமான்யம்** (திரவ்யத்தில் பொதுத் தன்மை)

ஒரு பொருளைப் போல் காணப்படும் மற்றொரு பொருள் திரவிய ஸாமான்யம் எனப்படும். உடலில் மாம்ஸம் க்ஷீணமடைந்த ஒருவருக்கு மாம்ஸ ரஸங்களைக் கொடுக்கிறோம். மாம்ஸத்திற்கு மாமிஸம் கொடுக்கிறோம். இதற்கு திரவிய ஸாமான்யம் என்று பெயர். ஆண்மையை அதிகரிப்பதற்கான சிகிச்சையில் வெள்ளாட்டின் அண்டத்தையும், முதலையின் விந்துவையும் சிகிச்சைக்காகப் பயன்படுத்துகிறார்கள். விந்து நஷ்டம் உள்ளவர்களுக்கு இது திரவ்ய ஸாமான்ய சிகிச்சையாகப் பயன்படுத்தப் படுகிறது.

- **குண ஸாமான்யம்** (குணத்தில் பொதுத்தன்மை)

சுக்கிரத்தை அதிகரிப்பதற்காக சுக்கிரத்தின் தன்மையுடைய பால் போன்றவற்றை நாம் கொடுக்கிறோம். ரக்தத்தை அதிகரிப்பதற்காக லோஹபஸ்பம் போன்றவற்றை கொடுக்கிறோம். இவை குண ஸாமான்யம் எனப்படும்.

- **கர்ம ஸாமான்யம்** (செயலில் பொதுத்தன்மை)

'ஸங்கல்போ விருஷ்யானாம்' – மனஉறுதியே ஆண்மையை அதிகரிப்பதில் சிறந்தது என்று சரகர் குறிப்பிடுகிறார். வாயுவானது அசையும் தன்மையுடையது. ஓடுவது, துள்ளுவது போன்றவை வாயுவை அதிகரிக்கின்றன. இவற்றை கர்ம ஸாமான்யம் என்கிறோம்.

# 12. விசேஷம்

விசேஷம் என்னும் பதார்த்தம் ஸாமான்யத்திற்கு எதிரானது. இரண்டு திரவியங்களுக்கு உள்ள ஒற்றுமையை எவ்வாறு ஸாமான்யம் பறைசாற்றுகிறதோ அதேபோல் விசேஷம் என்னும் குணம் இரண்டு திரவியங்களுக்கு உள்ள வேற்றுமையைப் பறைசாற்றுகிறது. ஸாமான்யம் பல பொருள்களுக்கிடையே இணைப்புத்தன்மையை ஏற்படுத்துகிறது. ஆனால் விசேஷம் என்னும் தன்மை அவற்றை வேறுபடுத்துகிறது.

ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளை அல்லது ஒரு பதார்த்தத்திலிருந்து மற்றொரு பதார்த்தத்தை பிரித்தறிவதற்கு விசேஷம் என்னும் குணம் உதவுகிறது. உலகிலுள்ள எல்லா பொருட்களும் ஒற்றுமையுடனும், வேற்றுமையுடனும் காணப்படுகின்றன. ஒரே குணமுடைய பொருட்களில் சில ஒற்றுமையும், சில வேற்றுமையும் காணப்படுகின்றன. இரண்டு மனிதர்களுக்கிடையே பல ஒற்றுமையும், வேற்றுமையும் காணப்படுகிறது. பள்ளிக்கூடத்தில் படிக்கின்ற மாணவர்களை வாருங்கள் என்று சொன்னால் எல்லா மாணவர்களும் வருகிறார்கள். இது ஸாமான்யமாகும். கண்ணாடி அணிந்த மாணவர்கள் மட்டும் வரவேண்டும் என்று சொன்னால் கண்ணாடி அணிந்தவர்கள் மட்டும் வருகிறார்கள் இது விசேஷ குணமாகும். அப்பொழுது கண்ணாடி அணிவது என்பது மாணவர்களுக்கிடையே ஒரு வேற்றுமையை எடுத்துக் காட்டுகிறது. இந்த விசேஷமானது நித்ய பதார்த்தங்களைச் சார்ந்து, நித்யமாக இருக்கிறது. ஸங்க்யம் என்னும் எண்ணற்றதாக கண்ணுக்குப் புலப்படாததாக, அனுமானங்களின் படி உணர்ந்து கொள்ளும்

படியாக இருக்கிறது. ஸாமான்யம் பொதுத் தன்மையைக் குறிக்கிறது. ஸாமான்யம் ஒன்றுதான், விசேஷம் பலவாகும். ஸாமான்யம் பல பொருட்களில் உள்ளது. விசேஷம் ஒரு பொருளில் ஒருத்தன்மையாக உள்ளது. ஆயுர்வேதத்தில் விசேஷத்தைக் குறித்து நாம் பார்ப்போம்.

- **திரவ்ய விசேஷம்**

ஒருவர் உடல் பருத்து ஸ்தூல நோயினால் அவதிப்படுகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவருக்கு கபமும், மேதஸ் தாதுவும் உடலில் அதிகரித்துக் காணப்படுகிறது. இப்போது மேதஸ் தாதுவிற்கு எதிராக உள்ள வறட்சியான உத்வர்த்தனம் போன்றவை மேதா தாதுவைக் குறைக்கிறது. இது நாம் மேதஸ் தாதுவிற்கு செய்யும் விசேஷ சிகிச்சை யாகும். இங்கு நாம் மேதஸ் தாதுவிற்கு எதிரிடையான குணங்களை விசேஷமாகப் பயன்படுத்துகிறோம். மாம்ஸ தாதுவிற்கும் அஸ்தி தாது விற்குமிடையே குணங்கள் வேறுபடுகின்றன. அதிகமான மாமிஸம் உடையவர்களுக்கும் சங்கம், 'முக்தி' குக்குலு போன்ற பொருட்களை நாம் கொடுக்கிறோம். இவை மாமிஸத்திற்கு எதிரான பொருட்களாக உள்ளன.

- **குண விசேஷம்**

குண விசேஷம் ஆயுர்வேதத்தில் மிக முக்கியமாகக் கருதப்படுகிறது. லகு என்ற குணத்திற்கு எதிராக குருவும், சீதத்திற்கு எதிராக உஷ்ணமும், ரூக்ஷத்திற்கு ஸ்நிக்தமும் மாற்றி மாற்றி கொடுக்கிறோம். வாதமானது லகுவாகவும், சீதமாகவும், ரூக்ஷமாகவும் இருக்கிறது. அதனால் தைலத்தை நாம் வாதத்திற்கு பயன்படுத்தும் பொழுது வாதத்திற்கு எதிரிடையான குணம் தைலத்திற்கு இருப்பதால் வாதத்தை தணிக்கிறது. தைலம் குருவாக வும், உஷ்ணமாகவும், ஸ்நிக்தமாகவும் இருக்கிறது. இது வாதத்தின் எதிரிடையான குணமாகும்.

- **கர்ம விசேஷம்**

கபம் ஸ்திரம் என்னும் குணமுடையதாக இருக்கிறது. ஓடுவது, சாடுவது போன்றவை அசையும் குணமுடையதாக இருக்கின்றன. கப நோய்களுக்கு உடற்பயிற்சி முக்கிய சிகிச்சையாகக் கருதப்படுகிறது.

ஆயுர்வேதத்தின் அனைத்து சிகிச்சைகளும் ஸாமான்யம், விசேஷம் இவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளன. ஸாமான்யம் வாத பித்த கபங்களை அதிகரிக்கிறது. வாத பித்த கபங்களுக்கு ஒத்த குணமுடைய செயலாலும், உணவாலும், மருந்தாலும் வாத பித்த கபங்கள் அதிகரிக்கிறது. இதனை ஸாமான்யம் விருத்தி காரணம் என்று கூறுகிறோம். வாத பித்த கபங்களுக்கு எதிரிடையாக உள்ள மருந்தாலும், செயலாலும், உணவாலும் வாத பித்த கபங்கள் குறைகிறது. இதையே விசேஷம் க்ஷய காரணம் என்று குறிப்பிடுகிறோம்.

# 13. ஸமவாயம்

ஸமவாயி என்ற சொல்லுக்கு ஒன்றியிருப்பது அல்லது பிரிக்க முடியாதது என்று பொருள்.

'ஸமவாயி து அப்ருதக் பாவ:'

ஒரு பொருளிலிருந்து பிரிக்க முடியாத குணத்தையோ அல்லது தன்மையையோ ஸமவாயி என்று குறிப்பிடுகிறோம். இதை நித்ய ஸம்பந்தம் அல்லது மாறா உறவு என்றும் குறிப் பிடலாம். ஒரு மனிதனிடமிருந்து அவன் உணர்வைப் பிரிக்க முடியாது.

ஒரு குணவானிடமிருந்து அவனுடைய குணத்தைப் பிரிக்க முடியாது. ஒரு செயலைச் செய்வபனிடமிருந்து செயலைப் பிரிக்க முடியாது. ஒரு நகையிலிருந்து தங்கத்தைப் பிரிக்க முடியாது. பிரிக்க முயற்சித்தால் நாம் நகையை இழக்க வேண்டியிருக்கும். இதனை நாம் அவயவான் அவயவி என்று குறிப்பிடலாம். அக்னியிடமிருந்து சூட்டைப் பிரிக்க இயலாது. உஷ்ணம் இல்லாவிட்டால் அந்த பொருளை நாம் அக்னி என்றும் குறிப்பிட முடியாது. இதை குணம் குணி என்றும் குறிப்பிடலாம்.

அசைவது என்பது ஒரு செயல். அந்தச் செயலை செய்ய வைக்கும் கருவி வாயு. அசையும் செயல்களிலிருந்து வாயுவைப் பிரிக்கமுடியாது. செரிக்க வைக்கும் தன்மை சுக்குக்கு உண்டு. இதற்கு பாசன குணம் என்று பெயர். இந்தப் பாசன குணத்திலிருந்து சுக்கைப் பிரிக்க முடியாது. மலமிளக்கும தன்மை கடுக்காய்க்கு

உண்டு. கடுக்காயிலிருந்து இந்த மலமிளக்கும் தன்மையைப் பிரிக்க முடியாது. ஒரு திரவ்யத்திலிருந்து குணத்தையோ கர்மத்தையோ பிரித்து எடுக்க முடியாத நிலைமை காணப்படுமானால் அதற்கு ஸமவாயி என்று பொருள். மனிதனிடமிருந்து உணர்வுகளைப் பிரிக்க முடியாது. மனிதனிட மிருந்து மனிதத் தன்மையைப் பிரிக்க முடியாது. பஞ்சமஹாபூதங் களிலிருந்து அவற்றிற்கே உரிதான குணங்களைப் பிரிக்க முடியாது. இவற்றுக்கு ஸமவாயி என்று பெயர். இந்த உறவு நித்யமானது, அழிவற்றது, எப்பொழுதும் திரவ்யங்கள் தம்மை சார்ந்த குணங்களுடனேயே காணப் படுகின்றன.

## ஸமவாய லட்சணம்

நித்யம் என்றுமே நிலைத்திருப்பது, அழிவற்றது, ஒன்றானது, புலன்களுக்கு அப்பாற்பட்டது. அனுமானத்தினாலேயே உணரக்கூடியது. ஸம்யோகம் என்ற பதம் ஒரு பொருளையும் மற்றொரு பொருளையும் சேர்க்கும் தன்மைக்கு பயன்படுத்தும் பதம் ஆகும். அதை ஸமவாயம் என்ற பதத்துடன் குழப்பிக் கொள்ளக்கூடாது.

வைசேஷிகர்கள் கருதுவதுபோல் ஸமவாயம் என்ற பதார்த்தத்தை ஆயுர்வேத அறிஞர்களும் ஏற்றுக் கொள்கின்றனர். ஒரு திரவ்யத்திற்கும் அதனுடைய குணத்திற்கும் மாற்றமில்லாத ஸமவாய ஸம்பந்தம் என்னும் உறவு உள்ளது. அதனாலேயே நோயாளிகளுக்கு கொடுக்கும்போது அது மருத்துவ பலன்களை வெளிப்படுத்துகிறது. ஸ மவாய ஸம்பந்தம் இல்லா விட்டால் அது சிகிச்சை செய்ய இயலாத காரியம் ஆகும்.

# 14. அபாவம்

அபாவம் என்றால் இல்லாமை என்று பொருள். ஒரு பொருள் இல்லையெனில் அதை அபாவம் என்று கூறுவோம். இதை பாவமற்றது, வெளிப்பாடு அற்றது, தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாதது என்று பொருள் கூறலாம். நியாய தரிசன வாதிகள் அபாவத்தை ஏழாவது பதார்த்தமாகக் கூறுகின்றனர். வைசேஷிகர்கள் அபாவம் என்ற பதார்த்தம் போன்றவை இல்லை என்று குறிப் பிடுகின்றனர்.

இந்த அபாவம் நான்கு விதமாக தர்க்கம் போன்ற புத்தகங் களில் காணப்படுகிறது. அவை,

1. பிராக் அபாவம்,
2. பிரத்வம்ஸ அபாவம்,
3. அத்யந்த அபாவம்,
4. அன்யோன்ய அபாவம்

என்பனவாகும்.

**பிராக் அபாவம்**

ஒரு பொருள் சிருஷ்டி செய்யப்படுவதற்கு முன்பு அல்லது உற்பத்தியாவதற்கு முன்பு அப்பொருள் இல்லை என்று கூறுவதற்கு பிராக் அபாவம் என்று பெயர். ஒரு பொருள் உருவாவதற்கு முன்பு அந்த பொருள் இல்லை என்று நாம் கூறுகிறோம். இதற்கு என்ன அர்த்தம் என்றால் இந்த பொருள் விரைவில் உருப்பெற்று வரும் என்று நாம் சொல்லலாம். மண்பாண்டம் செய்வதற்கு முன்

மண்பாண்டம் இல்லை. மண்பாண்டம் செய்து அது உருப்பெற்ற பிறகு அங்கு அபாவம் இல்லை. ஒரு சில காரணங்களைக் கொண்டு பின்னால் நோய் வரும் வாய்ப்பு உள்ளது என்பதை நாம் இதன் மூலம் கூறலாம். கபத்தை விருத்தி செய்யும் வாழ்க்கை முறை உடைய ஒருவனுக்கு இப்பொழுது பிரமேஹம் இல்லாவிட்டாலும் பின்பு வரும் வாய்ப்புள்ளது என்பதை இது கூறுகிறது.

## பிரத்வம்ஸாபாவம்

துவம்ஸம் என்றால் அழிவு என்று பொருள். பானை உடைகிறது. அதன் பிறகு பானை என்பது இல்லை. ஒரு பொருள் அழிவடைந்த பிறகு அது இல்லை என்று நாம் கூறுகிறோம். ஒரு மனிதன் பிறப்பதற்கு முன் அவன் இல்லை என்பதை பிராக்பாவம் ஆகவும், இறந்தபிறகு அவன் இல்லை என்பதை பிரத்வம்ஸாபாவமாகவும் குறிப்பிடலாம். ஒரு நோயிலிருந்து விடுபட்ட நிலை பிரத்வம்ஸாபாவமாகும். ஒருவனுக்கு குஷ்டம் இருந்தது இப்பொழுது இல்லை என்பதை உதாரணமாகக் குறிப்பிடலாம்.

## அத்யந்த அபாவம்

ஆதி அந்தம் இல்லாத பாவம். இதை எவ்வாறு விளக்குவதென்றால் நெருப்பில் குளிர்ச்சியில்லை, பனிக்கட்டியில் சூடு இல்லை. பனிக் கட்டியில் ஒரு போதும் சூடு இருந்ததில்லை. இனிமேல் இருக்கபோவ தில்லை. எந்த ஒரு பொருளில் ஒரு குணமானது எப்பொழுதுமே இருந்ததில்லையோ அல்லது இனி இருக்கப்போவதில்லையோ, நேற்றோ, இன்றோ, நாளையோ இருக்கப்போவதில்லையோ அதற்கு அத்யந்தா பாவம் என்று பெயர். உதாரணமாக பிராஸ்ட்ரேட் நோய்கள் பெண்களுக்கு ஒருபொழுதும் வருவதில்லை என்று கூறலாம். ஏனெனில் பெண்களுக்கு அந்த உறுப்பு இல்லை.

## அன்யோன்ய அபாவம்

இது ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளை பிரித்தறிவதற்கு உதவுகிறது. பானையில் துணியில்லை. துணியில் பானையில்லை. இதில்

என்ன அர்த்தம் என்றால் துணி என்பது வேறு, பானை என்பது வேறு. ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளை வேறுபடுத்தி காட்டுவதற்கு இது உதவுகிறது. உதாரணமாக மூச்சு மூட்டு என்பது வேறு, குஷ்டம் என்பது வேறு போன்ற உதாரணங்களைக் குறிப்பிடலாம்.

### ஸமாயிகாபாவம்

இந்த நான்கு அபாவங்களையும் கூறிவிட்ட பிறகு ஸமாயிகாபாவம் என்று ஒன்றைக் குறிப்பிடுகிறார். ஒரு மேஜையில் நாம் ஒரு புத்தகத்தை வைத்திருந்தோம். யாராவது அதை எடுத்துக் கொண்டு போய்விட்டார். சற்று நேரத்திற்கு அது இல்லாமல் இருக்கிறது. மீண்டும் அதை வைத்து விட்டார். சற்று நேரத்திற்கு அது இல்லாமல் இருப்பதற்கு ஸமாயிகாபாவம் என்று பெயர். ஆயுர்வேதத்தில் சில நோய்கள் விட்டு விட்டு வருவதாகக் குறிப்பிடப்படுகிறது. இதற்கு லீனா அவஸ்தை என்று பெயர். இடைவெளி நேரங்களில் நோயாளி சாதாரணமாக இருப்பார். காக்காய் வலிப்பு, மூச்சு மூட்டு போன்ற அவஸ்தைகளில் இது காணப்படும்.

### ஸம்ஸர்காபாவம்

பிராக் அபாவம், பிரத்வம்ஸ அபாவம், அத்யந்த அபாவம் மூன்றுமே ஸம்ஸர்காபாவம் என்று குறிப்பிடப்படுவது உண்டு. நோய் என்பது இருக்கிறது. நோய்க்கு மருந்தும் இருக்கிறது. ஆயுர்வேதத்தில் இல்லாத தன்மை என்கிற அபாவத்திற்கு ஏதாவது தொடர்பு உண்டா என்ற கேள்வி எழுகிறது. அபாவம் என்ற பொருள் மாற்றுப் பொருள்களாக ஆயுர்வேதத்தில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஒரு மூலிகைக் கிடைக்காத பொழுது அவற்றின் அபாவ திரவ்யமாக மற்றொரு மூலிகையைப் பயன்படுத்து கிறோம். உதாரணமாக கஸ்தூரி கிடைக்கவில்லையெனில் தக்கோலத்தைப் பயன்படுத்துகிறோம். தக்கோலம் கிடைக்கவில்லையெனில் ஜாதிமுல்லையை பயன்படுத்துகிறோம். தேன் கிடைக்கவில்லையெனில் பழைய சர்க்கரையை பயன்படுத்துகிறோம். அதிவிடயம் இல்லையெனில் கோரைக்கிழங்கைப் பயன்படுத்துகிறோம்.

இதைப்போல ஒரு சில நோய்களில் ஒரு சில லட்சணங்கள் இருக்காது. அவ்வாறு அந்த லட்சணங்கள் இல்லாதபொழுது அந்த இல்லாத தன்மையை

வைத்தே நாம் இதுதான் அந்த நோய் என்று குறிப்பிடுகிறோம். உதாரண மாக ஒருவருக்கு கைகாலில் வலி இருக்கிறது. ஆனால் இருமல், சளி, தொண்டைவலி, அஜீரணம், காய்ச்சல், வயிற்றுப்போக்கு, நீர்க்கடுப்பு போன்ற ஆமத்தினுடைய லட்சணங்கள் இல்லை. இதனை அங்கமர்தம் என்ற சாதாரண தசை வலிதான் என்று குறிப்பிடுகிறோம். இவ்வாறு அபாவம் ஆயுர்வேதத்தில் பயன்படுகிறது.

# 1. பிரமாணங்கள்

பிரமாணம் என்ற சொல்லுக்கு ஆதாரம் அல்லது சாட்சி என்று பொருள். ஓர் உண்மையை நிலை நிறுத்துவதற்கு பிரமாணங்கள் அல்லது ஆதாரங்கள் தேவைப்படுகின்றன. எந்தவொரு சாஸ்திரத்தையும், தரிசனத்தையும் எடுத்துக் கொண்டாலும் தங்களுடைய கொள்கைகளையும் கோட்பாடுகளையும் நிலை நிறுத்துவதற்கு அவை பிரமாணங்களையே சார்ந்திருக்கின்றன.

'ப்ரயீயதே அநேந இதி பிரமாணம்'[1]

எதன் மூலம் நாம் அறிவைப் பெறுகிறோமோ அதற்கு பிரமாணம் என்று பொயர். *பிரமா* என்ற அறிவை எது தருகிறதோ அதற்கு பிரமாணம் ன்று பெயர்.

## பிரமா

உண்மையான அறிவுக்கு *பிரமா* என்று பெயர். அந்த அறிவுக்கு எது காரணமோ அதற்குப் பிரமாணம் என்று பெயர்.

பிரமா என்றால் மெய்யறிவு, உண்மையான அறிவு, ஒரு விஷயத்தை பூரணமாக விளக்குகின்ற அறிவு என்று பொருள். எந்தவொரு பொருளையும் அதனுடைய தன்மையால் மாறாமல் புரிந்து கொண்டு நாம் மெய்யறிவு பெறுகிறோமோ அதற்குப் *பிரமா* என்று பெயர். ஒரு பாம்பைப் பார்த்து இது ஒரு பாம்புதான் என்று புரிந்து கொள்ளுதல், கயிறைக் கயிறாகப் புரிந்து கொள்வது, பந்தைப் பந்தாகப் புரிந்து கொள்வது போன்ற உதாரணங்களைக் குறிப்பிடலாம்.

**கரணம்**

எச்செயலுக்கும் எது முக்கியமான காரணமாக இருக்கிறதோ அதைக் கரணம் என்று குறிப்பிடுவோம். ஒரு செயல்பாடு முழுமையடைவதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஆனால் எல்லாவற்றையுமே நாம் கரணம் என்று குறிப்பிட முடியாது. ஒரு செயலைச் செய்து முடிப்பதற்கு எது இல்லாமல் முடியாதோ அதையே நம் கரணம் என்று குறிப்பிட முடியும். ஒரு செயல் பூரணத்தன்மையடைவதற்கு முன்பு எது நிலைபெற்று இருக்கிறதோ, எதன் மூலம் அந்த செயல் செய்யப்பட்டு விடுகிறதோ அதையே நாம் கரணம் என்று குறிப்பிடுகிறோம். எனவே ஒரு உண்மை யான மெய்யறிவைப் பெறுவதற்கு மூன்று விஷயங்கள் தேவைப் படுகின்றன. அவை பிரமாதா, பிரமேயம், பிரமாணம் என்பனவாகும்.

1. **பிரமாதா:** பிரமாதா என்றால் அறிபவர் அல்லது விஷயத்தைப் புரிந்துகொள்பவர் என்று பொருள். எவனொருவன் மெய்யறிவை அல்லது மெய்ஞானத்தைப் பெறுகிறானோ அவன் *பிரமாதா* என்று அழைக்கப்படுவான். உயிரோட்டத்துடன் இருப்பவர்கள் அல்லது சேதனத்தன்மையுடையவர்களால் மட்டுமே மெய்யறிவைப் பெற முடியும். அறிப்பவன் இல்லாது அறிவைப் பெற முடியாது. ஆயுர் வேதங்களிலும், தரிசனங்களிலும் ஆத்மன் அல்லது புருஷனைப் பிரமாதா என்று குறிப்பிடுகிறார்கள். அறிவுக்குக் காரணமாக பொருள் இருந்தாலும் அறிபவன் இல்லாவிட்டால் அதனால் பயன் ஒன்றும் இல்லை.

2. **பிரமேயம்**: எந்தப் பொருளை நாம் அறிந்து கொள்ள முயற்சிக் கிறோமோ அந்தப் பொருளுக்குப் *பிரமேயம்* என்று பெயர். இவ்வுலகத் திலுள்ள வஸ்துக்கள் எல்லாமே பிரமேயங்கள்தாம். ஒரு குடத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டுமெனில் குடம் பிரமேயம். இதைப் போல் படமோ, புத்தகமோ, மருத்துவமோ என அறிந்து கொள்ள வேண்டிய எல்லாப் பொருட்களையும் பிரமேயம் என்று குறிப்பிடலாம்.

3. **பிரமாணம்:** ஒரு பொருளை அறிந்து கொள்வதற்கான காரணம் எதுவோ அதற்குப் *பிரமாணம்* என்று பெயர். பிரமேயம் என்ற பொருளைப் பற்றிய அறிவை எதன் மூலம் பெறுகிறோமோ அதற்குப் பிரமாணம் என்று பெயர். எனவே பிரமாணம் மிக மிக முக்கியமானதாகிறது.

பிரமாதா என்ற அறிபவன், பிரமேயம் என்ற அறியும் பொருள், பிரமாணம் என்ற அறியும் முறை ஆகிய மூன்றையும் நாம் பார்த்தோம். இவற்றை ஆங்கிலத்தில் observer, observed and the process of observation என்று குறிப்பிடலாம். வேதம் இதை ரிஷி, தேவதா மற்றும் சந்தஸ் என்று குறிப்பிடுகிறது. இந்த அறிவைப் பெறுவதற்கு ஞானேந்திரியங்கள் என்று சொல்லக்கூடிய கண், மூக்கு, நாக்கு, செவி, தோல் இன்றியமையாததாக இருக்கின்றன. இதை இந்திரியப் பிரத்யட்சம் என்று நாம் குறிப்பிடுவோம். மனதினால் நாம் சில விஷயங்களை உணர்கிறோம். சில விஷயங்களைப் புரிந்து கொள்வதற்கு அனுமானம், உபமானம், சப்தம் போன்ற பிரமாணங்களை ஆயுர்வேதமும், பாரம்பரிய இந்திய புத்தகங்களும் குறிப்பிடுகின்றன. இந்த பிரமாணம் மெய்யறிவிற்குக் காரணமாகிறது. மெய்யறிவைப் பெறுவதற்கு ஒரு வழிகாட்டியாகிறது. ஒரு சிறிய உதாரணம் மூலம் இதனை விளக்கலாம்.

நமக்கு முன் ஒரு பூனை இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். நாம் அதைப் பார்த்துவிட்டு இது பூனைதான் என்று உணர்கிறோம் என்றும் வைத்துக் கொள்வோம்.

- நாம் பிரமாதாவாகிறோம்.
- பூனை பிரமேயமாகிறது.
- பூனை இருக்கிறது என்று பார்த்து உணர்கிறோம். அது பிரமாண மாகிறது.
- பூனையைப் பற்றிய அறிவு பிரமாவாகிறது.
- அறிபவன் பிரமாதன் என்று அழைக்கப்படுகிறான்
- அறியும் பொருள் பிரமேயம் என்று அழைக்கப்படுகிறது.
- அறியும் முறை பிரமாணம் என்று அழைக்கப்படுகிறது.

### அப்ரமா

அப்ரமா என்ற சொல்லுக்குப் பொய்யறிவு அல்லது தவறான அறிவு என்று பொருள். இதை ஸம்சயம், பிராந்தி, தர்க்கம் என்று மூன்று விதமாகப் பிரிக்கலாம்.

**1. ஸம்சயம்**: இதுவோ, அதுவோ என்று ஏற்படுகின்ற குழப்பாமான நிலைக்கு அல்லது அறிவிற்கு ஸம்சயம் என்று பெயர். தூரத்திலே ஒரு பொருளைப் பார்க்கிறோம். அது மனிதனா அல்லது மண்ணால் செய்யப் பட்ட உருவமா என்று பிரித்தறிய நம்மால் இயலவில்லை. ஏனென்றால் அந்த உருவமும், இந்த பொம்மையும் பார்ப்பதற்கு ஒன்றுபோல் உள்ளது. இது ஒரு குழப்ப நிலையை ஏற்படுத்துகிறது. இதற்கு ஸம்சயம் என்று பொருள்.

இரண்டு பொருட்கள் ஒன்று போல இருந்தால் அவற்றை பிரித் தறிவதில் குழப்பம் ஏற்படலாம். இது பொதுத் தன்மையால் ஏற்படுவது. ஜ்வரம் என்கின்ற அவஸ்தையில் எந்த வகையான ஜ்வரம் என்று பிரித்தறிவதில் சந்தேகம் ஏற்படலாம். ஆத்மாவைப் பற்றிய அறிவில் ஆத்மா இருக்கிறதா இல்லையா என்பதைப் பல புத்தகங்களை வாசிக்கும் போது ஒரு குழப்ப நிலை ஏற்படலாம். புலன்களால் ஏற்படுகின்ற அறிவானது தவறான அறிவாக இருக்கலாம். வெயில் காலங்களில் கானல் நீர் ஒரு சந்தேக நிலையாகும். தொலை தூரத்தில் சாலையில் நீர் இருப்பதைப் பார்க்கிறோம். அருகில் சென்றால் அது கானல் நீர் என்பதை உணர்கிறோம். நாம் புரிந்து கொண்ட நிலைக்கும், உண்மையான நிலைக்கும் இடையில் சந்தேகமிருக்கலாம். இவ்வாறு சந்தேகங்கள் பலவிதமாக இருக்கின்றன. இதற்கு ஸம்சயம் என்று பெயர்.

**2. பிராந்தி (விபர்யம்)**: தவறான அறிவிற்கு விபர்யயம் என்று பெயர். ஸம்சயம் என்கின்ற சந்தேக நிலையில் ஒரு பொருளை அறிகிறோம். ஆனால் அது சரியான பொருளா என்று சந்தேகம் உள்ளது. ஆனால் விபர்யயத்தில் ஒரு பொருளை நாம் தவறான பொருளை சரியென்று நினைக்கிறோம். கயிறை பார்த்து பாம்பு என்று நினைத்து நாம் பயப் படுகிறோம். அதற்கு விபர்யயம் என்று பெயர். விபர்ய்யம் என்றால் விபரீதமான அறிவு என்று பொருள் கூறலாம். கானல் நீரைப் பார்த்து விட்டு அது தண்ணீர்தான் என்று ஒருவன் விவாதம் செய்வான் எனில் அந்த அறிவானது விபர்யய அறிவு என்று குறிப்பிடலாம். சந்தேக மிருந்தால் அதை நிவர்த்தி செய்து கொள்ளலாம். ஆனால் தவறான அறிவானது சில நேரங்களில் தடையாகிறது.

**3. தர்க்கம்**: நெருப்பு இல்லையெனில் புகையாது என்று கூறுவதுபோல் அயதார்த்தமான ஒரு விஷயத்தை தர்க்க ரீதியில் பதிலளித்து விளக்கிக் கூறுவது. ஒன்றை எடுத்துச் சொல்ல மற்றொன்றைத் தர்க்கமாக வைப்பது.

## பிரமாணங்களின் முக்கியத்துவம்

இந்த உலகத்தில் இரண்டு பொருட்களே உள்ளன. அவை ஸத், அஸத் என இருவகைப்படும். அவற்றை நாம் உணர்வதற்கு நான்கு பிரமாணங்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றன. அவை ஆப்தோபதேசம், பிரத்யட்சம், அனுமானம், யுக்தி என்பனவாகும். பிரமாணத்தின் முக்கியத்துவத்தை யும், ஆயுர்வேதத்தில் பிரமாணங்களின் தேவைகள் பற்றியும் இனிவரும் பகுதிகளில் காண்போம்.

நாம் பலவிதங்களில் அறிவைப் பெற இயலும். ஒரு பொருளைப் பற்றிய அறிவைப் பெறுவதற்கு பல வழிமுறைகள் இருக்கின்றன. பார்ப் பதாலோ, கேட்பதாலோ, உணர்வதாலோ, நுகர்வதாலோ, தொடுவதாலோ, படிப்பதாலோ, சிந்திப்பதாலோ, உவமானப் படுத்துவதாலோ நாம் அறிவைப் பெற முடியும். இவற்றையெல்லாம் பாகுப்படுத்தி ஆசிரியர்கள் பலவித மாகப் பிரித்துக் கூறியிருக்கிறார்கள்.

சரகர் நான்கு பிரமாணங்களை ஓரிடத்திலும், மூன்று பிரமாணங் களை மற்றொரு இடத்திலும் குறிப்பிடுகிறார். ஆப்தோபதேசம், பிரத்யட்சம், அனுமானம் என்று மூன்று பிரமாணங்களை, விமான ஸ்தானம் நான்காவது அத்தியாயம் ரோக விசேஷ விஞ்ஞானத்தில் ரோகங்களை கண்டுபிடிப் பதற்கு இவை உதவுகின்றன் என்று குறிப்பிடுகிறார். அனுமானத்திற் குள்ளேயே யுக்தியையும், உவமானத்தையும் சேர்த்துக் கூறியுள்ளார். மற்றொரு இடத்தில் நான்கையும் தனியாகக் கூறுகிறார். (ஸூத்ர ஸ்தானம் 11 அத்தியாயத்தில் நான்குவித பிரிவுகளைக் குறிப்பிடும்போது ஆப்தோபதேசம், பிரத்யட்சம், அனுமானம், யுக்தி என்று குறிப்பிடுகிறார்).

நியாய தரிசனத்தில் கூறியுள்ளபடி ஸுச்ருதர் நான்கு பிரமாணங் களைக் குறிப்பிடுகிறார். அவை பிரத்யட்சம், ஆகமம், அனுமானம், உபமானம் என்பதாகும். ஆகமம் என்பதற்கு ஆப்தோபதேசம் என்று பொருள். நியாய தரிசனத்தை உருவாக்கிய மகரிஷி அக்ஷபாத கௌதமர்

பிரமாணங்களைப் பிரத்யட்சம், அனுமானம், உபமானம், சப்தம் என்று நான்கு வகையாகப் பிரிக்கிறார். தரிசனங்களில் மொத்தம் எட்டுவிதமான பிரமாணங்கள் காணக்கிடைக்கின்றன. அவை பிரத்யட்சம், அனுமானம், உபமானம், சப்தம், அர்த்தாபத்தி, அனுபலப்தி, ஸம்பவம், ஐதீகம் என்பனவாகும்.

| எண் | தரிசனம் | பிரமாணங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | சார்வாகம் | பிரத்யட்சம் (ஒன்று) |
| 2 | வைசேஷிகம்<br>பௌத்தம்<br>ஜைனம் | பிரத்யட்சம், அனுமானம் (இரண்டு) |
| 3 | ஸாங்க்யம்<br>யோகம் | பிரத்யட்சம், அனுமானம், சப்தம் (மூன்று) |
| 4 | நியரயம் | பிரத்யட்சம், அனுமானம், சப்தம், உபமானம் (நான்கு) |
| 5 | மீமாம்ஸம் | பிரத்யட்சம், அனுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி (ஐந்து) |
| 6 | வேதாந்தம் | பிரத்யட்சம், அனுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி , அனுபலப்தி, ஆறு) |
| 7 | புராணங்கள் | பிரத்யட்சம், அனுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி, அனுபலபத்தி, ஐதீகம், (எட்டு) |
| 8 | தாந்த்ரிகம் | பிரத்யட்சம், அனுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி, அனுபலபத்தி, ஐதீகம் சேஷ்ட பிரமரணம் (ஒன்பது) |

சில பண்டிதர்கள் பரிசேஷ பிரமாணம் என்று மேலும் ஒரு பிரமாணத்தைக் குறிப்பிடுகின்றனர். (நான்கு பிரமாணங்களே முக்கியமாக ஆயுர்வேத புத்தகத்தில் உள்ளன. மற்ற பிரமாணங்களை இதனுள் உட்படுத்திவிடலாம்.)

1. அர்த்தாபத்தி மற்றும் சம்பவத்தை அனுமானத்திற்குள் சேர்த்து விடலாம்.

2. அனுபலப்தியை பிரத்யட்சம் அனுமானத்திற்குள் சேர்த்துவிடலாம்.

3. ஐதீகத்தை ஆப்தோபதேசத்திற்குள் சேர்த்துவிடலாம்.

ஸாங்கியம், யோகம் மற்றும் ஆயுர்வேதத்தில், பிரமாணங்கள் இவ்வாறே காணப்படுகிறது. நியாய தரிசனத்தில் கூறப்படுகின்ற பிரமாணங் களையே பொதுவாக பல மருத்துவப் புத்தகங்கள் பின்பற்றுகின்றன.

ஆயுர்வேதம் என்பது அன்றாட வாழ்வில் நோயைத் தடுப்பதற்கும் வந்த நோயைக் குணப்படுத்துவதற்கும் பயன்படும் ஒரு மருத்துவ முறையாகும். பிரமாணங்கள் நோயைப் பற்றி அறிவதற்கும், நோயைக் கண்டுபிடிப்பதற்கும், நோய்க்கான சிகிச்சையளிப்பதற்கும் பயன்படு கின்றன. பிரமாணங்கள் மூலமாகவே நோயைக் கண்டறிய முடிகிறது. நோயாளிகளைப் பரிசோதிக்க முடிகிறது. இவற்றைப் பற்றி பரீக்ஷா என்ற பகுதியில் விரிவாகப் பார்ப்போம்.

## பிரமாணத்தைப் பற்றி சரகரின் கருத்துக்கள்

அனுமானம், ஆப்தவாக்கியம், பிரத்யட்சம் ஆகிய முறைகளால் முதலில் எல்லா நோய்களையும் ஆராய்ந்து விட்டால் பின்பு சிகிச்சை செய்வதில் தவறு ஏற்படாது என்கிறார் சரகர். மூன்று முறைகளாலும் கண்டறிய வேண்டிய ஒரு நோயை ஒரு முறையால் கண்டறிவது தகாது என்றும் கூறுகிறார். நோயை ஆராய்வதற்கான மூன்று முறைகளில் சான்றோர் வாக்கு முக்கியத் தன்மை பெறுகிறது. அதற்கு அடுத்தபடியாக பிரத்யட்சமும், அனுமானமும் வருகின்றன. ஆப்தவாக்கியம் கிடைக்கா விடில் பிரத்யட்சம், அனுமானம் என்ற இரண்டு முறைகளைக் கொண்டு அறிவாளியான மருத்துவர் நோயை அறிந்து கொள்ள வேண்டும் என்கிறார். ஆகையால் நோயை அறிந்து கொள்ள பிரத்யட்சம், அனுமானம் என்ற இரண்டு முறைகளுடன் ஆப்த வாக்கியத்தையும் இணைத்து மூன்று முறைகளாக சரகர் கூறுவது குறிப்பிடத்தக்கது.

## 2. பிரத்யட்ச பிரமாணம்

பிரத்யட்சம் என்ற வார்த்தையில் இரண்டு பதங்கள் உள்ளன. பிரதி என்ற ஒரு பதம், அட்சம் என்று ஒரு பதம். பிரத்யட்சம் என்று சொன்னால் கண்ணின் முன்னால் நிற்பது என்று பொருள். கண்ணினால் பெறப்படும் அறிவுக்கு பிரத்யட்சம் என்று பெயர். பொதுவாக பிரத்யட்சம் என்ற வார்த்தை கண்ணினால் பெறப்படும் அறிவைக் குறித்தாலும் மற்ற புலன்களினால் பெறப்படும் அறிவையும் குறிக்கும். பிரத்யட்சத்தை *இந்திரிய அர்த்த ஸன்னிகர்ஷ ஜன்ய ஞானம் பிரத்யக்ஷம்* என்று குறிப்பிடுகிறது. புலன்களுக்கும், பொருட்களுக்கும் இடையே உண்டாகின்ற தொடர்பினால் கிடைக்கும் அறிவானது பிரத்யட்சம் என்று அறியப்படுகிறது என்பது இதன் பொருளாகும். இந்திரியங்கள் என்றால் புலன்கள், அர்த்தம் என்றால் பொருட்கள், ஸன்னிகர்ஷம் என்றால் தொடர்பு என்று பொருள் கூறலாம்.

### இந்திரியம்

இங்கு இந்திரியம் என்ற பதம் ஞானேந்திரியங்களைக் குறிக்கிறது. இந்த ஞானேந்திரியங்கள் அந்தர் இந்திரியங்கள் என்றும், பஹிர் இந்திரியங்கள் என்றும் இருவகைப்படுகிறது. மனதை அந்தர் இந்திரியம் (அகப்புலன்கள்) என்று நாம் குறிப்பிடலாம். இது உள் உணர்வைச் சார்ந்தது. பஹிர் இந்திரியங்கள் என்று சொன்னால் புறப்புலன்கள் என்று கூறலாம். இவை காது, தோல், கண், மூக்கு, நாக்கு என்பவையாகும்.

## அர்த்தம்

புலன்களின் தொடர்புக்கு காரணமாவதை அர்த்தம் என்று குறிப் பிடுகிறோம். கண்களினால் ஒளியைப் பார்க்கிறோம். ஒளி கண்களுக்கு அர்த்தமாகிறது. புலன்களையும் அர்த்தங்களையும் நாம் ஒரு அட்டவணை மூலம் பார்ப்போம்.

| புலன்கள் | பொருட்கள் |
|---|---|
| காது | சப்தம் என்னும் ஒலி |
| தோல் | ஸ்பர்சம் என்னும் தொடு உணர்வு |
| கண் | ரூபம் என்னும் உருவம் |
| நாக்கு | ரஸம் என்னும் சுவை |
| மூக்கு | கந்தம் என்னும் மணம் |

பிரத்யட்ச பிரமாணத்தில் அர்த்தம் (பொருள்) இன்றியமையயத தாகிறது.

## ஸன்னிகர்ஷம்

புலன்களுக்கும் பொருட்களுக்கும் இடையே உண்டாகின்ற தொடர்பை நாம் ஸன்னிகர்ஷம் என்று குறிப்பிடுகிறோம். இந்த ஸன்னிகர்ஷத்தை பிரத்யாஸத்தி என்றும் குறிப்பிடுவதுண்டு. புலன்களும் அர்த்தங்களும் இருந்தாலும் அவற்றிற்கிடையே ஸன்னிகர்ஷம் (தொடர்பு) இல்லாவிட்டால் அறிவைப் பெற இயலாது.

## பிரத்யட்ச லட்சணம்

இது புலன்களால் அறியப்படுகிறது. இது புலன்களுக்கும் பொருட் களுக்கும் இடையில் ஏற்படும் தொடர்பினால் உண்டாகும் அறிவாகும். உடனே கண்டறியக் கூடியது பிரத்யட்சத்தின் விசேஷ லட்சணமாகும். பிரத்யட்சமாக கண்ணால் பார்ப்பது மற்ற எல்லா அறிவை விட சிறந்த தாகும். இது சந்தேகத்திற்கு இடமில்லாத உத்தமமான அறிவாகும். பிரத்யட்ச பிரமாணம் உண்டு என்றால் வேறு எந்த பிரமாணமும் தேவை இல்லை.

## ஞான உற்பத்தி

ஆத்மாவுக்கு மனதுடன் தொடர்பு ஏற்பட்டு 'மனதுக்கு புலன்களுடன் தொடர்பு ஏற்பட்டு' புலன்களுக்கு பொருட்களுடன் தொடர்பு ஏற்பட்டு அதனால் அறிவானது உண்டாகிறது. இதை ஆத்மா, புத்தி, மனது, இந்திரியம், பொருள், அறிவு என்ற வரிசைக்கிரமமாக நாம் குறிப்பிடலாம். இவ்வாறே ஒரு பொருளைப் பார்க்கின்ற பொழுது நமக்கு அறிவு ஏற்படுகிறது.

## ஞானோத்பத்தி பிரகரணம்

### 1. சிரவணபிரத்யட்சம்

சிரவண இந்திரியம் என்னும் காது ஆகாச பூதத்தால் ஆனது. சப்தம் ஆகாசத்தின் விசேஷ குணமாகும். காதானது ஒலியைக் கேட்கிறது. இவ்வாறு காதினால் கேட்கின்ற ஒலியானது மனதைச் சென்றடைந்து ஆத்மாவைச் சென்றடைந்து அதன் மூல ஒலியை உணர முடிகிறது. இது மிகவும் நுண்ணியதாக நடைபெறுகிறது. இதற்கு சிரவணபிரத்யட்சம் என்று பெயர்.

### 2. துவச்ய பிரத்யட்சம்

தோலினால் உணரக் கூடிய அறிவிற்கு துவச்ய பிரத்யட்சம் என்று பெயர். தோலானது வாயு மஹாபூதத்தால் ஆனது. தொடு உணர்வு அதன் குணமாகும். மேலே கூறியதுபோலவே நாம் சீதம், உஷ்ணம் என்கின்ற தொடு உணர்வை அறிகிறோம். இதற்கு துவச்ய பிரத்யட்சம் என்று பெயர்.

### 3. சக்ஷுஷ்ய பிரத்யட்சம்

ரூபங்களையும், வர்ணங்களையும் நாம் கண்ணினால் காண்கிறோம். இது அக்னி மஹாபூதத்தால் ஆனது.

### 4. ரஸன பிரத்யட்சம்

நாக்கினால் அறியப்படும் உணர்வுக்கு ரஸன பிரத்யட்சம் என்று பெயர். நாக்குஜல மஹாபூதத்தால் ஆனது. ரஸமும் ஜல மஹாபூதத்தால் ஆனது. நாக்கானது சுவையை அறிகிறது. இதற்கு ரஸன பிரத்யட்சம் என்று பெயர்.

### 5. கிராணஜ பிரத்யட்சம்

மூக்கினால் அறியப்படும் உணர்வுக்கு கிராணஜ பிரத்யட்சம் என்று பெயர். இது பிருத்வி மஹாபூதத்தால் ஆனது. மணம் என்னும் தன்மை யைக் கொண்டது. இது சுகந்தம், துர்கந்தம் என இருவகைப்படும்.

### இந்திரிய ஸ்வரூபமும் லட்சணங்களும்

இந்திரன் என்ற வார்த்தையிலிருந்தே இந்திரியம் உருவானது. இந்திரன் என்றால் தலைமையானவர், மேலதிகாரி என்று பொருள். சுரோத்ரம் என்னும் காது, துவக் என்னும் தோல், ரஸனம் என்னும் நாக்கு, கிராணம் என்னும் மூக்கு, சக்ஷு என்னும் கண், வாக் என்னும் பேச்சுக் கருவி, ஹஸ்தம் என்னும் கைகள், உபஸ்தம் என்னும் இனப்பெருக்கக் குறி, பாயு என்னும் மலவாய், பாதம் என்னும் கால்கள், மனது என்னும் உள்ளம் என்பவை 11 இந்திரியங்களாகும்.

### இந்திரிய அதிஷ்டானம்

அதிஷ்டானம் என்றால் இடம் என்று பொருள். ஐந்து இந்திரியங் களும்,ஐந்து புலன்களையேச் சார்ந்துள்ளன. இவை இரண்டு கண்களிலும், இரண்டு காதுகளிலும், நாக்கிலும், மூக்கிலும், தோல் முழுவதிலும் காணப் படுகின்றன. இந்திரியங்களும், இந்திரிய அதிஷ்டானங்களும் ஒன்றல்ல.

இந்திரியம் என்றால் புலன்கள் என்றும், இந்திரிய அதிஷ்டானம் என்றால் புலன்களின் இருப்பிடம் என்றும் பொருள் கூறலாம். சக்ஷு இந்திரியம் கண்களின் மூலம் இயங்குகிறது. கிராணேந்திரியம் மூக்கின் மூலம் இயங்குகிறது. மூளையை நாம் இந்திரியம் என்று குறிப்பிடலாம். மூளையில் உள்ள கேட்கும் திறனை சிரவணேந்திரியம் என்றும், காதை சிரவணேந்திரிய அதிஷ்டானம் என்றும் கூறலாம். இதனால் தவறொன்றும் இல்லை. இந்திரியங்கள் ஐந்து ஞானேந்திரியங்கள் என்றும், ஐந்து கர்மேந்திரியங்கள் என்றும், மனது உபேந்திரியம் என்றும் 11 வகைப் படும். ஞானேந்திரியத்தின் குணங்களும், கர்மேந்திரியத்தின் குணங்களும் மனதுக்கு உண்டு. ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் மனதைச் சார்ந்திருக்கின்றன. இதனால் மனதுக்கு உபயேந்திரியம் என்றும் பெயருண்டு.

## இந்திரிய விஷயங்கள்

இந்திரிய விஷயங்களை அர்த்தங்கள் என்று கூறுவோம். புலன்களால் அறியப்படும் பொருட்களுக்கு இந்திரிய விஷயங்கள் என்று பெயர். இந்த ஐந்து ஞானேந்திரியங்களும் பஞ்சமஹாபூதங்களால் உருவானவை. ஐந்து மஹாபூதங்களுக்கும் ஐந்து விசேஷ குணங்கள் உண்டு. ஒவ்வொரு பூதங்களும் அதன் தனித்தனிக் குணங்களைப் பிரதிபலிக்கின்றன. சுரோத்ரமானது ஆகாச மஹாபூதத்தினால் ஆனது. சப்தம் என்னும் குணத்தை கிரகிக்கிறது. சுரோத்ரேந்திரியத்தின் இந்திரிய விஷயமாக அல்லது அர்த்தமாக நாம் ஒலியைக் குறிப்பிடலாம்.

| ஞானேந்திரியம் | பூதகடனம் | இந்திரிய விஷயம் |
|---|---|---|
| சுரோத்ரம் (காது) | ஆகாசம் | சப்தம் (ஒலி) |
| துவக் (தோல்) | வாயு | ஸ்பர்சம் (தொடு உணர்வு) |
| சக்ஷு (கண்) | அக்னி | ரூபம் (வர்ணம், உருவம்) |
| ரஸனம் (நாக்கு) | ஜலம் | ரஸம் (சுவை) |
| கிராணம் (மூக்கு) | பிருத்வீ | கந்தம் (மணம்) |

| கர்மேந்திரியம் | இந்திரிய விஷயம் |
|---|---|
| வாக் | பேச்சாற்றல் |
| ஹஸ்தம் (கை) | கையினால் செய்யப்படும் அனைத்து செயல்கள் |
| பாதம் | நடத்தல் |
| உபஸ்தம் (இன உறுப்பு) | இனப்பெருக்கம், மகிழ்ச்சி |
| பாயு (மலவாய்) | மலத்தை வெளியேற்றுதல் |

## இந்திரிய பௌதீகரணம்

இந்திரிய பூதகரணங்களைப் பற்றி கருத்து வேறுபாடுகள் உள்ளன. சில தத்துவ ஞானிகள் சரீரஜமாகக் குறிப்பிடுகின்றனர். சிலர் இந்திரியங் களை கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய வஸ்துக்களாகக் குறிப்பிடு கின்றனர். ஸாங்கிய தத்துவத்தின்படி பிரக்ருதி மற்றும் புருஷனின் சேர்க்கையால் மஹத் என்னும் புத்தி உருவாகிறது. மஹத்திலிருந்து அஹங்காரம் உருவாகிறது. இந்த அஹங்காரம் என்பது ஒரு பௌதீக அம்சமல்ல. எனவே இந்திரியங்களை பௌதீக அம்சங்களாகக் கூற முடியாது என ஸாங்கிய தரிசனவாதிகள் கூறுகின்றனர். ஆனால் நியாய, வைசேஷிக வேதாந்த தரிசனவாதிகள் இந்த கருத்திலிருந்து மாறுபடு கின்றனர். அவர்கள் இந்திரியங்கள், பஞ்ச மஹாபூதங்களிலிருந்து உருவாகின்றன: எனவே அவை பௌதீக அம்சங்களே என்று குறிப்பிடு கின்றனர்.

ஆயுர்வேதமும் இந்திரியங்களை பௌதீகம் என்றே கருதுகிறது. ஸுச்ருதர் சாரீர ஸ்தானத்தில் இந்திரியங்கள் பௌதீகமானது என்று விளக்குகிறார். ஐந்து புலன்களும், பஞ்சமஹாபூதத்திலிருந்து உருவா கின்றன. ஆனால் ஒவ்வொரு புலனிலும் ஒவ்வொரு மஹாபூதம் தனித் தன்மைபெற்று விளங்குகிறது. ஒவ்வொரு புலனிலும் தனித்தன்மை பெறும் மஹாபூதத்திற்கு இந்திரிய திரவ்யம் என்று பெயர். சுரோத்ரேந்திரியத்தில் ஆகாச மஹாபூதம் தனித்தன்மை பெற்று விளங்குகிறது. எனவே ஆகாச மஹாபூதம் சுரோத்ரேந்திரியத்தின் இந்திரிய திரவ்யமாக இருக்கிறது. இது மிக நுண்ணியதாக இருக்கிறது. புலன்களை காண இயலாமல் இருக்கிறது என்று சொன்னால் சிகிச்சை செய்ய இயலாது. எனவே ஆயுர்வேதத்தில் இந்திரியங்களை பௌதீகம் என்று கூறுவதில் எந்தத் தவறும் இல்லை.

### பஞ்ச பஞ்சகம்

ஐந்து ஐந்தாக உள்ள விஷயங்களை பஞ்ச பஞ்சகம் என்று குறிப் பிடுகிறோம்.

## இந்திரிய விருத்தி

ஒவ்வொரு இந்திரியத்திற்கும் ஒவ்வொரு விசேஷ குணம் இருக்கிறது என்று பார்த்தோம். ரூபம், ரஸம் என்று நாம் அவற்றைக் குறிப்பிட்டோம். அதைப்போல பேசுவது, கொடுப்பது, நடப்பது, மலங் கழிப்பது, இனப் பெருக்கம் செய்வது போன்றவை கர்மேந்திரியத்தின் செயல்களாகும். மனதின் தொடர்பு கொண்டே இந்திரியங்கள் தத்தம் செயல்களைச் செய்கின்றன. மனதானது நிர்விகல்பமான அறிவை ஸவிகல்பமாக மாற்றுகிறது. தெளிவற்ற அறிவானது தெளிவான அறிவாக மாறுவதற்கு மனம் ஒரு முக்கிய காரணமாக அமைகிறது.

### திரயோதச கரணங்கள்

ஸாங்க்ய காரிகையில் 13 கரணங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார்கள். உடலானது தத்தம் காரியங்களைச் செய்வதற்கு இவை உதவுகின்றன. அவை ஐந்து புலன்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மனம், புத்தி, அஹங் காரம் ஆகியவைகளாகும். இந்த 13 கரணங்களும் மீண்டும் பாஹ்ய கரணம், அந்தக் கரணம் என இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன.

**1. பாஹ்ய கரணங்கள்**

ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்து பாஹ்ய கரணம் எனப்படும்.

**2. அந்தக் கரண்ங்கள்**

மனம், புத்தி, அஹங்காரம் இவை அந்தக் கரணங்களாகும்.

அந்தக் கரணங்களின் செயல்கள்:

மனம் சிந்திப்பது, ஊகிப்பது போன்ற செயல்களைச் செய்கிறது. புத்தி எது கெட்டது, எது நல்லது என்று பிரித்தறியும் உணர்வைத் தருகிறது. அஹங்காரம் நான் செய்கிறேன் என்ற உணர்வைத் தருகிறது. தற்பொழுது நடைபெறுகின்ற செயல்களுக்கும் வெளி இந்திரியங்கள், வெளிப்புலன்கள் காரணமாகின்றன. ஆனால் அந்தக் கரணங்கள் நடந்தது, நடப்பது, நடக்கப்போவது என்ற மூன்று கால செயல்களுக்கும் காரணமாகின்றன.

## அந்தக் கரணங்களின் முக்கியத்துவம்

அந்தக் கரணங்கள் உள் உறுப்புகளாகும். இது நுண்ணியவையாகும். உள் உணர்வைப் புரிந்து கொள்வதற்கு அந்தக் கரணங்கள் அவசியமாகின்றன. அந்தக் கரணங்களே சரி, தவறு என்பதைப் பிரித்தறிகின்றன. அந்தக் கரண சுத்தியே ஆத்ம ஞானத்திற்கு அடிப்படையாகும்.

## அந்தக் கரண சதுஷ்டயம்

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவற்றை அந்தக் கரண சதுஷ்டயம் என்று கூறுவார்கள். சித்தம் என்பது எண்ண அலைகள். ஸ்ம்ருதி என்று சொல்லக்கூடிய நினைவாற்றல் சித்தத்தினுடைய ஒரு அம்சமாகும். ஸாங்க்யம் அல்லாத மற்ற தரிசனங்கள் எல்லாம் நான்கு அந்தக் கரணங்களை ஏற்றுக் கொள்கின்றன. ஸாங்க்ய தரிசனம் சித்தத்தை ஒரு அந்தக் கரண பகுதியாக கருதவில்லை. ஆயுர்வேதமும் சித்தத்தை நான்காவது அந்தக் கரணமாகக் கருதவில்லை. இதற்கு மேல் ஸ்ம்ருதியை (நினைவாற்றல்) ஒரு அந்தக் கரணமாகக் கருதுகிறது. இதனை சித்தத்தின் ஒரு செயல்பாடு என்றே கூறலாம். ஒரு பொருளைப் பற்றிய அறிவு வெளிப் புலன்களினால் நமக்கு உடனே கிடைக்கிறது. அவ்வாறு கிடைக்கின்ற அறிவானது மனதினால் மீண்டும் உணரப்படுகிறது. அஹங்காரத்தினால் நன்றாக முக்கியத்துவம் பெறப்படுகிறது, தெளிவான அறிவைப் புத்தி தருகிறது.

## பிரத்யட்ச பேதம்

பிரத்யட்சம் – நித்ய பிரத்யட்சம், அநித்ய பிரத்யட்சம் என இரு வகைப்படும். நித்ய பிரத்யட்சம் புறம்பானது. இது இறைத்தன்மை வாய்ந்தவர்களுக்கே கிடைக்கும். அநித்ய பிரத்யட்சம் ஸவிகல்பம், நிர்விகல்பம் என்று இருவகைப்படும். ஸவிகல்பம் மீண்டும் லௌகிகம், அலௌகிகம் என்று இருவகைப்படும். லௌகிகம் வெளிப்புலன் சார்ந்தது, உட்புலன் சார்ந்தது என இருவகைப்படும். வெளிப்புலன் சார்ந்தது கண்ணால் அறிவது, மூக்கினால் அறிவது போன்றவை, உட்புலன் சார்ந்தது (மனஸ், அலௌகிகம்), ஸாமான்யம், ஞான லட்சணம், யோகஜம் போன்றவையாகும்.




| இந்திரியம் | இந்திரிய திரவ்யம் | அதிஷ்டானம் |
|---|---|---|
| சக்ஷு (கண்) | தேஜஸ் (ஒளி) | அக்ஷி (கண்ணை) தாங்கியிருக்கும் பகுதி |
| சுரோத்ரம் (காது) | ஆகாசம் | கர்ணம் (செவிப் புலன்களை தாங்கியிருக்கும் பகுதி) |

| | | |
|---|---|---|
| கிராணம் (மூக்கு) | பிருத்வி (மண்) | நாஸா (மூக்கை தாங்கியிருக்கும் பகுதி) |
| ரஸனம் (நாக்கு) | ஜலம் (நீர்) | ஜிஹ்வா (சுவைப் புலனைத் தாங்கியிருக்கும் பகுதி) |
| ஸ்பர்சனம் (தோல்) | வாயு (காற்று) | துவக் (தொடு உணர்வை பிரதிபலிக்கும் பகுதி) |

| அர்த்தம் | புத்தி |
|---|---|
| ரூபம் (வர்ணம்) கண்ணால் பெறப்படும் | சக்ஷு புத்தி அறிவு |
| சப்தம் (ஒலி) | சுரோத்ர புத்தி (காதினால் பெறப்படும் அறிவு) |
| கந்தம் (மணம்) | கிராண புத்தி (மூக்கினால் பெறப்படும் அறிவு) |
| ரஸம் (சுவை)<br>ஸ்பர்சம் (தொடு | ரஸன புத்தி (நாக்கினால் பெறப்படும் அறிவு)<br>ஸ்பர்சன புத்தி |
| உணர்வு) | (தோலினால் பெறப்படும் அறிவு) |

## ஸவிகல்ப பிரத்யட்சம்

நாம் ஒரு பசுவை பார்க்கிறோம். இது சிவந்த பசு என்று சொல்கிறோம். இவ்வாறு ஒரு பொருளைப் பார்க்கும்பொழுது அதைப் பற்றிய தெளிவான அறிவைக் கூற முடிந்தால் அதற்கு ஸவிகல்ப பிரத்யட்சம் என்று பெயர்.

## நிர்விகல்ப பிரத்யட்சம்

வானத்தில் ஒரு பறவை பறப்பதைப் பார்க்கிறோம். ஆனால் அது என்ன பறவை என்று தெரியவில்லை. என்ன பறவை என்று உறுதியாகக் கூற முடியவில்லை. இதற்கு நிர்விகல்ப பிரத்யட்சம் என்று பெயர். ஆனால் அந்த பறவை அருகில் வரும்பொழுது அதைப் பற்றிய எல்லாக் குறிப்புகளும் நம்மால் கூற முடிகிறது. அப்பொழுது நமக்கு ஸவிகல்ப பிரத்யட்சம் கிடைக்கிறது. சிலர் நிர்விகல்ப பிரத்யட்சத்தை, பிரத்யட்சம் என்று கூற முடியாது என்று கூறுகிறார்கள்.

## லௌகிகம் மற்றும் அலௌகிக பிரத்யட்சம்

ஸவிகல்ப பிரத்யட்சத்தை லௌகிகம், அலௌகிகம் என்று பிரித்துப் பார்த்தோம். லௌகிகம், அலௌகிகத்தை விரிவாகப் பார்ப்பதற்கு முன் ஸன்னி கர்ஷம் என்றால் என்ன என்பதைப் பற்றிப் பார்ப்போம்.

## ஸன்னிகர்ஷ ஸ்வரூபமும் பேதமும்

ஸன்னி கர்ஷம் என்றால் தொடர்பு என்று பொருள். ஒரு புலனால் ஒரு பொருள் பார்க்கப்படும் பொழுது அதனிடையில் தொடர்பு ஏற்படுகிறது. ஸம்யோகம், ஸம்யுக்த ஸமவாயம், ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம், ஸமவாயம், ஸமவேத ஸமவாயம், விசேஷண விசேஷ்ய பாவம் என ஆறு வகைப்படும்.

### 1. ஸம்யோகம்

நாம் ஒரு பானையைப் பார்க்கிறோம். அப்பொழுது இது பானை என்ற அறிவு நமக்குக் கிடைக்கிறது. பானைக்கும் கண்ணுக்கும் இடையே ஒரு தொடர்பு ஏற்படுகிறது. இதற்கு ஸம்யோகம் என்று பெயர்.

## 2. ஸம்யுத்த ஸமவாயம்

நாம் பானையைப் பார்க்கிறோம். பானையின் வர்ணத்தையும் நாம் புரிந்து கொள்கிறோம். பானையின் வர்ணமானது பானையிலிருந்து பிரிக்க முடியாமல் இருக்கிறது. பானையைப் பார்க்கும் பொழுது பானை யிலிருந்து பிரிக்க முடியாத வர்ணத்தையும் சேர்த்துப் பார்க்கிறோம். இந்த தொடர்பிற்கு ஸம்யுக்த ஸமவாயம் என்று பெயர்.

## 3. ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம்

சிவந்த பானையைப் பார்க்கிறோம். பானையிலிருந்து இந்த சிவந்த வர்ணத்தைப் பிரிக்க முடியாது. இந்த சிவப்பு வர்ணத்தில் சிவப்பு நிறம் என்ற தன்மை ஒன்றிப் போய் உள்ளது. சிவப்பு நிறம் பொதுப் பண்பாக உள்ளது. இது அந்த திரவ்யத்துடன் ஒன்றிணைந்துள்ளது. இவ்வாறு திரவ்யத்துடன் ஒன்றிணைந்துள்ள பிரிக்க முடியாத ஒரு வஸ்துவுடன் நமது புலன்களுக்கு ஏற்படும் தொடர்பை ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம் என்று நாம் குறிப்பிடுகிறோம்.

## 4. ஸமவாயம்

காதுக்குள்ளே ஆகாச மஹாபூதம் உள்ளது. அந்த ஆகாச மஹா பூதத்திலிருந்து ஒலி பிரிக்க முடியாமல் உள்ளது. காதினால் கேட்கப்படும் ஒலியானது ஸமவாயமாக இருக்கிறது.

## 5. ஸமவேத ஸமவாயம்

ஒலியில் இருக்கின்ற ஒலித்தன்மை ஸமவாயம் எனப்படும். இது செவியுடன் தொடர்புடையது. ஒலியுடன் இருக்கின்ற ஒலித்தன்மையை உணர்வது ஸமவேத ஸமவாயம் எனப்படும்.

## 6. விசேஷண விசேஷ்ய பாவம்

இல்லாத ஒரு பொருளை உணர்வது விசேஷண விசேஷ்ய பாவமாகும். இங்கு பானை இல்லை என்று கூறுகிறோம். இல்லை என்ற அறிவு இங்கு நமக்குக் கிடைக்கிறது. இதுவும் ஒரு வகை பிரத்யட்சமே.

## இந்திரியார்த்த ஸன்னிகர்ஷத்தின் முக்கியத்துவம்

ஆயுர்வேதத்தில் ஸன்னிகர்ஷத்தை ஸம்யோகம் என்று குறிப்பிடுகிறார்கள். இந்திரியார்த்த ஸம்யோகம் ஆயுர்வேதத்தில் ஸாத்மியம், அஸாத்மியம் என இருவகைப்படுகிறது. நோய்களுக்கான காரணங்களை மூன்று விதமாக சரகர் கூறுகிறார். அவை அஸாத்ம்ய இந்திரியார்த்த ஸம்யோகம், பிரக்ஞாபராதம், பரிணாமம் என்பவையாகும். புலன்களுக்கும், பொருட்களுக்குமிடையே சமமான அளவில் தொடர்பு இருக்க வேண்டும். இந்த தொடர்பானது குறைந்ததாகவோ, கூடியதாகவோ, மாறுபட்டதாகவோ இருக்கக் கூடாது. உதாரணமாக கண்ணால் ஒரு பொருளை அல்லது தொலைக்காட்சியைப் பார்க்கிறோம். எவ்வளவு தூரத்திலிருந்து, எவ்வளவு நேரம், எப்படி அமர்ந்து பார்க்க வேண்டுமென்று இருக்கிறது. அதிகமாகப் பார்த்தாலோ, குறைந்த ஒளியில் பார்த்தாலோ கண்ணை வக்கிரமாக வைத்துக் கொண்டு, படுத்துக் கொண்டு பார்த்தாலோ அது அஸாத்மியமாகும்.

அஸாத்ம்ய இந்திரியார்த்த ஸம்யோகம் ஆயுர்வேதத்தில் மிக முக்கிய நிதானமாகக் கூறப்பட்டுள்ளது. புலன்களுக்கும், இந்திரியங்களுக்கும் ஏற்படுகின்ற தொடர்பை ஹீன யோகம், மித்யா யோகம், அதியோகம் என்று குறிப்பிடுகிறோம். ஹீன யோகம் என்றால் பொதுமான அளவு தொடர்பில்லாமையாகும். உதாரணமாக, மங்கிய ஒளியில் நாம் படித்தால் அது ஹீனயோகமாகும். சூரிய ஒளியைப் பார்த்துக் கொண்டு படிக்கிறோம் என வைத்துக் கொள்வோம் அது அதியோகமாகும். படுத்துக் கொண்டு படிப்பது, கவிழ்ந்து கொண்டு படிப்பது போன்றவை மித்யா யோகமாகும்.

## லௌகிக பிரத்யட்சம்

சாதாரணமாக நமது புலன்களால் பெறப்படும் அறிவு லௌகிக பிரத்யட்சம் எனப்படும். இதை அந்தர் இந்திரிய பிரத்யட்சம் என்றும், பஹிர் இந்திரிய பிரத்யட்சம் என்றும் இருவகையாகக் குறிப்பிடுவோம். அந்தர் இந்திரியப் பிரத்யட்சம் மனதினால் உணரக்கூடியது. பஹிர் இந்திரிய பிரத்யட்சம் என்பது ஐந்து வகைப்படும். அவை ஐம்புலன்களினால் ஏற்படக் கூடியதாகும்.

## அலௌகிகப் பிரத்யட்சம்

புலன்களின் அப்பாற்பட்ட அறிவினால் தவத்தினால் கிடைக்கப் பெற்ற அறிவிற்கு அலௌகிக் பிரத்யட்சம் என்று பெயர். இது ஸாமான்ய லட்சண பிரத்யட்சம், ஞான லட்சண பிரத்யட்சம், யோகஜ பிரத்யட்சம் என மூன்று வகைப்படும்.

### ஸாமான்ய லட்சண பிரத்யட்சம்

ஒரு தெரிந்த நபரைப் பார்த்த உடனேயே அவன் பெயர் ராமன் என்றும், அவனுடைய பிறப்பு மற்றும் கல்வியைப் பற்றி நாம் கூறுகிறோம். இவ்வாறு ஒரு பொருளைப் பார்க்கும் பொழுது அந்த பொருளைப் பற்றிய பூரணமான அறிவு நமக்குக் கிடைக்கிறது. இதற்கு ஸாமான்ய லட்சண பிரத்யட்சம் என்று பெயர்.

### ஞான லட்சண பிரத்யட்சம்

ஒரு புல்லை நாம் பார்க்கிறோம். அது மிருதுவாக இருக்கிறது என்பதை நாம் உணர்கிறோம். மிருதுத்வம் என்பது பொதுவாக தோலினால் உணரப்படுவது. கண்ணினால் உணரக்கூடியதில்லை. இங்கு தோலினால் உணரக்கூடிய ஒரு பண்பை கண் மூலமாகவே நாம் கண்டுபிடித்து விடுகிறோம். இது ஒருவகை ஞானமாகும். இவ்வாறு ஏற்படுகின்றன அறிவிற்கு ஞான லட்சண பிரத்யட்சம் என்று பெயர்.

### யோகஜ பிரத்யட்சம்

புலன்களால் பெறப்படும் அறிவு மிகச் சுருங்கியதாகும். கண்களால் மிக நுண்ணிய பொருட்களைக் காண முடியாது. மிக நுண்ணிய ஒலியைக் காதாலும் கேட்க முடியாது. சில யோகிகள் யோக சாதனையின் மூலம் புலன்களுக்கு அப்பாற்பட்ட சில விஷயங்களை கிரஹித்துக் கொள் கிறோர்கள். இது சாதனையாலும், ஒழுக்கத்தினாலும், முன்வினையாலும், அமானுஷ்ய சக்தியினாலும், ஸித்தியினாலும் கிடைக்கும் அறிவாகும். இதற்கு யோகஜ பிரத்யட்சம் என்று பெயர். யோகஜ பிரத்யட்சம் யுக்தஜம் யுஞ்சனம் என இரண்டு வகைப்படும்.

**யுக்தஜம்**: அமானுஷ்ய சக்தியினால் கிடைக்கும் ஸித்தியைக் கொண்டு எந்நேரத்திலும், எந்தவித பிரயத்னமுமில்லாமல் எக்காரியத்தையும் சாதிக்க முடியும் இதற்கு யுக்தஜம் என்று பெயர்.

**யுஞ்சனம்**: சில முயற்சிகளின் மூலம் சில விஷயங்களைப் புரிந்து கொள்வதற்கு யுஞ்சனம் என்று பெயர்.

கனவில் சிலருக்கு சில சமயம் சில அறிவு கிடைக்கிறது. இது அலௌகிக பிரத்யட்சமாகும்.

## பிரத்யாஸக்தி யோஜனம்

பிரத்யாஸக்தி என்றால் அருகே என்று பொருள்படும். புலன்களுக்கும் பொருட்களுக்கும் இடையே உள்ள தொடர்பு லௌகிக அவஸ்தையில் ஸன்னிகர்ஷம் என்று கூறப்படும். இதை பிரத்யாஸக்தி என்றும் கூறு வார்கள். இது இந்திரியங்களுக்கும் விஷயங்களுக்கும் உள்ள அருகாமை யைக் குறிப்பதாகும். பிரத்யாஸக்தி என்றால் புலன்களுக்கும் பொருட் களுக்கும் இடையே ஏற்படும் அசாதாரண தொடர்பு என்றும் கூறலாம். இந்தத் தொடர்பானது காலத்திற்கும், இடத்திற்கும் அப்பாற்பட்டது. இது ஸாமான்ய லட்சண பிரத்யாஸக்தி, ஞான லட்சண பிரத்யாஸக்தி, யோக பிரத்யாஸக்தி என்று மூன்று வகைப்படும்.

நெருப்பு சுடும் என்பதை நாம் அறிவோம். இதைத் தொடாமலேயே நம்மால் கூற முடியும். ஒரு சில நேரத்தில் நெருப்பைத் தொட்டு அதனால் சூடு என்பதை உணர்ந்து கொள்வோம். தொட்டு உணர்ந்து கொள்வதற்கு லௌகிக பிரத்யட்சம் என்று பெயர். தொடாமலே உணர்ந்து கொள்வதற்கு அலௌகிக பிரத்யட்சம் என்று பெயர். இந்த அலௌகிக பிரத்யட்சமே பிரத்யாஸக்தி எனப்படும்.

யோகிகள் எங்கோ இருக்கின்ற ஒரு நபரைப் பற்றி, எங்கோ நடக்கின்ற சம்பவத்தைப் பற்றி கண்ணை மூடிக்கொண்டு கூறுகிறார்கள். இதெல்லாம் பிரத்யாஸக்தியாகும்.

## வேதனா அதிஷ்டானம், ஹேது மற்றும் வேதனா நாச ஹேது

வேதனா என்றால் வலி என்று பொருள். நோய்களுக்கு வேதனை என்று ஒரு பெயருண்டு. இது உடலையும், மனதையும் சார்ந்தது. உட் காரணங்களாலோ, வெளிக்காரணங்களினாலோ வலி வரலாம். வலி யாருக்கு வருகிறது ? உடம்பிற்கே. ஞான காரணமானது இது. எந்த வேதனை

யையும் அனுபவிப்பதில்லை. சரகம் சாரீர ஸ்தானம் முதல் அத்தியாயத்தில் அத்மாவுக்கோ வேதனையில்லை என்று கூறுகிறார். உடம்பிற்கு வேதனை யுண்டு. முடிக்கு வேதனையில்லை. நகத்திற்கு வேதனையில்லை. மலத் துக்கும், மூத்திரத்துக்கும் வேதனையில்லை என்றும் அவர் குறிப்பிடு கிறார். உடல் நோய்கள் வாத பித்த கபத்தினாலும், மன நோய்கள் ரஜோ தமோ குணங்களினாலும் உருவாகின்றன.

யுக்திவிபாச்ரய சிகிச்சை மூலம் உடலின் துன்பங்களை மாற்ற முடியும். ஸத்வாவஜய சிகிச்சை மூலம் மனதுக்கு வேண்டாதவற்றை ஒதுக்கி நல்லவற்றைக் கொடுத்து மனதை வலிமைப்படுத்த முடியும். உடம்பும் மனமும் வேதனா அதிஷ்டானமாகும்.

**இந்திரிய பிராய காரிதம்** (புலன்கள் தனக்கு விதிக்கப்பட்டதை செய்தல்)

ஐந்து புலன்களும் பஞ்சமஹாபூதத்தால் ஏற்படுத்தப்பட்டவை. எனவே ஐந்து புலன்களாலும், ஐந்து மஹாபூதங்களின் விஷயங்களை உணரப்பட வேண்டும். மஹாபூதங்களின் பரஸ்பர அனுப்ரவேசத்தினால் காதானது ஒலியை மட்டும் கேட்கிறது. தோலானது தொடு உணர்வை மட்டும் அறிகிறது. மற்றவற்றை அறிய முடிவதில்லை . ஒவ்வொரு புலன் களும் தனக்கு விதிக்கப்பட்டவையே செய்கின்றன. இவ்வாறு தனக்கு விதிக்கப்பட்ட செயல்களைமட்டும் செய்வதற்கு இந்திரிய பிராப்ய காரிதம் என்று பெயர்.

**பிரத்யட்சம் – நவீன கண்ணோட்டம்**

நவீன யுகத்தில் எல்லாமே பிரத்யக்ஷமாகவே நடக்கின்றன. கண்ணால் கண்டறியாத எந்த ஒரு விஷயத்தையும் நவீன மருத்துவர்கள் நம்புவதில்லை. வானத்தில் நிகழும் மாற்றங்களை தொலைநோக்கி மூலம் பார்க்கிறார்கள்.தொலைபேசி மூலம் ஒருவருடைய குரலைக் கேட்க முடிகிறது. மைக்ரோஸ்கோப் மூலம் நுண்ணிய விஷயங்களை கண்டறி கிறார்கள். ஸ்டெதஸ்கோப்பின் மூலம் இதயத் துடிப்பின் ஓசையைக் கேட்கிறார்கள். எம்.ஆர்.ஐ. ஸ்கேன், சி.டி. ஸ்கேன் போன்றவற்றின் மூலம் உடம்பின் உறுப்புகளை நேராகப் பார்த்து சிகிச்சை அளிக்கிறார்கள். நவீன மருத்துவம் முழுக்க முழுக்க பிரத்யட்ச பிரமாணத்தை நம்பியிருக்கிறது.

இன்றைய ஆயுர்வேத மருத்துவர்கள் பிரத்யட்சம், அனுமானம், உபமானம் போன்றவற்றை புத்தகத்தில் மட்டுமே படிக்கிறார்கள். இன்று பல ஆயுர்வேத மருத்துவருக்கும் தவ வலிமையினால் நோயினைக் கண்டுபிடிக்கும் ஆற்றலோ, மெய்யுணர்வோ, நாடிபிடித்து நோயைக் கண்டறியும் ஆற்றலோ இல்லை என்பது வருந்தத்தக்க சத்தியமாகும்.

### மற்ற பிரமாணங்களின் தேவை

பிரத்யட்ச பிரமாணம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. நாத்திகர்களும் இதை ஏற்றுக் கொள்கிறார்கள். பிரத்யட்சத்தினால் ஏற்படும் அறிவானது சந்தேகத்திற்கு இடமற்றது. வேறு எந்த பிரமாணமும் தேவையில்லை என்று கூறுபவர்களும் உண்டு. எனவே பிரத்யட்சத்தினால் ஏற்படும் அறிவிற்கு ஒரு எல்லை உண்டு. புலன்களுக்கு அப்பாற்பட்ட அறிவை பிரத்யட்சத்தினால் உணர முடிவதில்லை. இங்கு அனுமானம், சப்தம், யுக்தி போன்ற மற்ற பிரமாணங்கள் தேவைப்படுகின்றன. சில சமயங்களில் சில காரணங்கள் இந்திரியங்கள் மற்றும் புலன்களுக்கு இடையே உள்ள ஸன்னிகர்ஷம் என்றத் தொடர்பைத் தடுக்கின்றன. இதனால் அறிவு தடைபெறுகிறது. அவையாவன:

### 1. அதிஸன்னிகர்ஷம்

புலன்களுக்கும், இந்திரியங்களுக்கும் உள்ள தொடர்பானது மிக மிக நெருங்கியிருந்தாலும் சரியான அறிவு புலப்படாது. கண்ணைப் பொறுத்த வரை இதை நாம் காணலாம். கண்ணில் நாம் மையிட்டுக் கொள்கிறோம். அந்த மையை கண்ணால் காண முடிவதில்லை.

### 2. அதிவிப்ரகர்ஷம்

புலன்களுக்கும், பொருட்களுக்கும் இடையே நீண்ட இடைவெளி இருந்தாலும் நாம் கண்டு பிடிக்க முடியாது. வானத்தில் தொலைதூரத்தில் பறந்துபோகின்ற ஒரு சிறிய பறவையை நாம் எந்த பறவை என்று சரியாகக் கூற முடியாது. .

### 3. ஆவரணம்

புலன்களுக்கும் பொருட்களுக்கும் இடையே ஒரு தடை இருந்தாலும் நாம் பார்க்க முடியாது. சுவருக்கு பின்னால் என்ன இருக்கிறது என்று நாம் பார்க்க முடியாது.

### 4. இந்திரிய தௌர்பல்யம்

புலன்கள் பழுதடைந்துவிட்டாலோ, நோயினால் பாதிக்கப்பட்டாலோ நாம் கேட்க முடியாது. ஜலதோஷத்தினால் பாதிக்கப்படும் ஒருவனுக்கு மணத்தை உணர முடியாது. செவிடனுக்கு ஒலியைக் கேட்க முடியாது.

### 5. மனோ அனவஸ்தா

புலன்களுக்கும் பொருட்களுக்கும் இடையே தொடர்பு இருந்தாலும், மனதிற்கு தொடர்பு இல்லாவிட்டால், மனது குழம்பிப்போய் இருந்தால், மனநோயினால் பாதிக்கப்பட்டிருந்தால் சரியான அறிவை நம்மால் பெற இயலாது. வகுப்பறையில் மாணவன் பாடத்தைக் கவனிப்பதுபோல் இருந்தாலும் அவன் மனம் வேறு எங்கோ சுற்றிக் கொண்டிருக்கும். மனோ அவஸ்தாவிற்கு இது மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

### 6. ஸமான விகாரம்

ஒரு பொருள் மற்றொரு பொருளுடன் சேர்ந்து இருக்கும் பொழுது புலன்களால் பார்த்தால் அந்த பொருளைப் பற்றிய முழு அறிவு கிடைப் பதில்லை. தானியங்களும் கோதுமைகளும் கலந்து இருந்தால் என்ன இருக்கிறது என்பது நமக்குத் தெரிவதில்லை.

### 7. ஸமான அபிபாவம்

ஒரு பொருள் மற்றொரு பொருளினால் மறைக்கப்பட்டால் அதைப் பற்றிய அறிவு நமக்குக் கிடைப்பதில்லை. பகலிலும் நட்சத்திரங்கள் உள்ளன. ஆனால் சூரிய ஒளியினால் மறைக்கப்படுகிறது. எனவே பகலில் நட்சத்திரங்களைக் காண முடிவதில்லை.

### 8. அதி சூட்சுமத்வம்

மிக நுண்ண்ியமான அணுக்கள், பாக்டீரியாக்கள் போன்றவற்றை நாம் வெறும் கண்களால் காண முடிவதில்லை.

### பிரத்யட்ச பிரமாணமும் ஆயுர்வேதமும்

ஒரு மனிதனுடைய பிரக்ருதி (உடல்மனத் தன்மை), ஆக்ருதி (உடல் வெளி அமைப்பு) போன்றவற்றைக் கண்டறிவதற்கு பிரத்யட்சம் என்ற

பிரமாணம் உதவுகிறது. ரஸனேந்திரியம் அல்லாமல் மற்ற எல்லா இந்திரியங்களையும் ஒரு மருத்துவன் தமது மருத்துவத்தில் பயன்படுத்து கிறான். குடலில் உண்டாகின்ற சப்தம், இருதயத்தில் உண்டாகின்ற சப்தம், மூட்டுகளில் உண்டாகின்ற சப்தம் போன்றவற்றை காதினால் கேட்டு அறிகிறான். ஒரு மனிதனுடைய உருவம், மூக்கின் அமைப்பு, மூக்கில் சதை வளர்தல், தொண்டையில் சதை வளர்தல், பற்களின் அமைப்பு, உடலில் கட்டிகள் உள்ளதா போன்றவற்றை அவன் கண்ணால் பார்த்து அறிகிறான். தோலின் நிறம் எவ்வாறு உள்ளது, பாண்டு நோயினால் அவதிப்படுகிறானா, வயிற்றில் நீர் உள்ளதா போன்றவற்றையும் அவன் கண்களால் கண்டறிகிறான். ஒரு புண் இருந்தால் அதில் வாடை வருகிறதா என்பதை மூக்கினால் நுகர்ந்து அறிகிறான். உடம்பில் சூடு உள்ளதா, குளிர்ச்சித் தன்மை உள்ளதா என்பதைத் தொடு உணர்வின் மூலம் அறிகிறான். மருத்துவனானவன் தமது நாக்கை வைத்துக் கொண்டு எதையும் பரிசோதனை செய்ய முடியாது. நோயாளியின் நாக்கைக் காட்டச்சொல்லி தனது கண் மூலம் பரிசோதனை செய்கிறான். மருத்துவன் நோயாளியிடம் பல கேள்விகளைக் கேட்கலாம். ஒருவனுடைய சுவையைப் பற்றி கேட்கலாம். இரக்தபித்தத்தினால் ஒருவன் வாந்தி எடுத்தால் அந்த இரத்தத்தை நாய்க்குக் கொடுத்து பரிசோதனை செய்து பார்க்கலாம். நாயானது சுத்தமான இரத்தத்தை நக்கும். அசுத்தமான இரத்தத்தை விட்டுவிடும். இவ்வாறு ஐம்புலன்களின் வாயிலாகவும் நேர்காணல் என்னும் பிரத்யட்சத்தின் வாயிலாகவும் நாம் அறிவைப் பெறுகிறோம்.

### 1. கண்ணால் அறிந்து கொள்ளக்கூடியவை

ஒரு மருத்துவரானவர் கண்ணால் பல நோய்களைக் கண்டறிகிறார். உதாரணமாக தலையில் ஏற்படுகின்ற வழுக்கை, சிரங்கு, மாறுகண், வளைந்திருக்கும் மூக்கு, நாக்கில் ஏற்படுகின்ற புண், தசைகளின் அழிவு, பக்கவாதம், முகத்தில் ஏற்படும் கோணல் (முகவாதம்), நகச்சுற்று, வயிற்றில் கட்டியிருக்கும் உதரம் என்னும் நோய், கலகண்டம் என்ற தொண்டை வீக்கம் போன்றவற்றை நாம் கண்ணால் பார்த்த உடனேயே இந்த நோய்தான் என்று கூறிவிடுகிறோம். இது பிரத்யட்ச பிரமாணத் தினால் நமக்குக் கிடைக்கும் பலன்களாகும். நோயாளியின் உருவம், நிறம், உடல், தோற்றம் போன்றவற்றைக் கண்களால் அறிந்து கொள்கிறோம்.

## 2. காதினால் அறிந்து கொள்ளக் கூடியவை

நோயாளியிடமிருந்து நாம் கேட்கும் நோயின் வரலாற்றை முதலில் நாம் காதுகளாலேயே அறிகிறோம். குடலில் ஏற்படும் ஓசை, பூட்டுக்கள் மற்றும் விரலில் உண்டாகும் ஒலி, சொடுக்கு, குரலில் ஏற்படும் மாற்றம் மற்றும் ஸ்டெதஸ்கோப் போன்ற கருவிகள் மூலம் இருதயத்தில் கேட்கும் ஒலி போன்றவற்றை காதுகளால் அறிந்து கொள்கிறோம்.

## 3. நாக்கினால் அறிந்து கொள்ளக் கூடியவை

நோயாளியின் நாக்கில் உணரப்படும் சுவையை கேட்டு ஊகத்தினால் நோயின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டும். மருத்துவன் நோயாளியை நக்கிப் பார்க்க இயலாததால் நோயாளியினுடைய நாக்கின் சுவையைக் கேட்டுத் தெரிந்து கொள்வதே சிறந்தது.

நோயாளியின் உடலில் பேன் போன்றவை ஊர்வதால் சுவை மாறுபட்டிருக்கிறது, ஈக்கள் போன்றவை அரித்தால் உடல் இனிப்பாக மாறியிருக்கிறது என அறிந்து கொள்ளலாம். இரத்தபித்த நோயாளியின் உடலில் உள்ள இரத்தமானது சுத்த ரத்தமா, ரத்தபித்தத்தின் ரத்தமா என்பதைக் கண்டுகொள்ள அவனுடைய இரத்தத்தைச் சோற்றில் கலந்து நாய் அல்லது காக்கைக்குப் போட வேண்டும். சோற்றினை காக்கை அல்லது நாய் சாப்பிட்டால் சுத்த ரத்தம் என்றும் சாப்பிடவில்லையெனில் அசுத்த ரத்தம் என்றும் அறியும் முறை பண்டைய புத்தகங்களில் காணப்படுகிறது.

## 4. மூக்கினால் அறிந்து கொள்ளக்கூடியவை

நோயாளியின் உடலில் பரவியுள்ள மணம் இயற்கையானதா அல்லது மாறுபாடு உடையதா என்பதை மூக்கினால் அறிந்து கொள்ள வேண்டும்.

## 5. தொடு உணர்ச்சியால் அறிந்து கொள்ளக் கூடியவை

நோயாளியைத் தொட்டுப் பார்த்து அவனது உடல் சூடாக உள்ளதா, குளிர்ச்சியாக உள்ளதா என்பதையும், நாடி துடிப்பையும், வயிற்றில் வாயு உள்ளதா என்பதையும் தொடு உணர்ச்சியால் அறிகிறோம். காய்ச்சல் போன்றவற்றை அறிவதற்கு தொடு உணர்ச்சி இன்றியமையாததாக இருக்கிறது. வயிற்றில கட்டிகள் உள்ளதா என்று அறிவதற்கும் ஸ்பர்சனம் என்கின்ற தொடு உணர்ச்சி அவசியமாக இருக்கிறது.

## தற்காலத்தில் மருத்துவ உபகரணங்களைக் கொண்டு பிரத்யட்சத்தை அறிந்து கொள்ளும் முறை

ஸ்டெதஸ்கோப், டியூனிங்ஃபோர்க், ஃபிட்டோ ஸ்கோப் போன்ற உபகரணங்களின் மூலம் சப்தத்தைக் கேட்டுணர்ந்து அதன் மூலம் நோயாளிகளுக்கு உண்டாகும் சில நோய்க்குறிகளை அறியலாம்.

ஃபண்டோஸ்கோப், ஓட்டோஸ்கோப், ப்ரோக்டோஸ்கோப் (அர்சோ இயந்திரம்), போன்ற உபகரணங்களின் மூலம் பாதிக்கப்பட்ட உறுப்பு களைக் கண்டறிந்து அதன் மூலம் நோயைத் தீர்மானிக்க முடியும். வெப்ப மானியைக் கொண்டு உடலின் வெப்பநிலையை அறிந்து கொள்ளலாம்.

## 3. அனுமானப் பிரமாணம்

**அ**னு, மானம் என்னும் இரு சொற்களின் சேர்க்கையால் அனுமானம் எனும் சொல் உருவாக்கப்பட்டுள்ளது. **அனு** என்று சொன்னால் **பின்பு** என்று பொருள்படும். **மானம்** என்று சொன்னால் **அறிவு** என்று பொருள் கூடும். அனுமானம் என்று சொன்னால் அறிவானது பின்னால் பெறப்படுகிறது என்று பொருள். அதாவது பிரத்யட்சத்திற்கு பிறகு கிடைக்கும் அறிவிற்கு **அனுமானம்** என்று பொருள். இதை அனுமிதிகரணம் என்று நாம் கூறுகிறோம். 'அனுமிதிகரணம் அனுமானம்'.

**பராமர்சம்**

'பராமர்ச ஜன்ய ஞானம் அனுமிதி' என்று தர்க்க சங்கிரஹம் கூறுகிறது. பராமர்சம் என்று சொன்னால் ஆராய்தல் என்று பொருள். இவ்வாறு ஆராய்வதால் கிடைக்கும் அறிவிற்கு அனுமிதி என்று பொருள் கூறலாம். பராமர்சம் என்றால் என்ன என்பதைப் பற்றி நாம் பார்ப்போம். ஒரு மலை இருக்கிறது. மலையில் புகை வருகிறது. மலையில் புகை வருவதால் அங்கு நெருப்பு இருக்கிறது என்பதை நாம் அனுமானித்துக் கொள்கிறோம். இந்த அறிவிற்கு பராமர்சம் என்று பெயர். மலையில் நெருப்பு உள்ளது என்பதை அனுமிதி என்கிறோம். இதனால் நமக்கு ஒரு அறிவு நிலைபெற்று விளங்குகிறது.

**வியாப்தி**

பின்னர் நமது வாழ்க்கையில் எங்கெங்கெல்லாம் புகையைப் பார்க்கிறோமோ அங்கங்கெல்லாம் நெருப்பு இருப்பதாகப் புரிந்து கொள்கிறோம்.

'யத்ர யத்ர தூம:தத்ர தத்ர வஹ்னி:' என்று கூறுகிறோம். இதற்கு வியாப்தி என்று பெயர்.

## அன்வய வியாப்தி

அனுமானிக்கப்படும் பொருளுடன் காரணம் இணைந்து இருப்பது அன்வய வியாப்தி எனப்படும். எங்கெங்கு புகை இருக்கிறதோ அங்கங்கு நெருப்பு இருக்கிறது. இங்கு புகை காரணமாகிறது நெருப்பு அனுமானிக்கப் படும் பொருளாகிறது.

## வியதிரேக வியாப்தி

எங்கு புகை இல்லையோ அங்கு நெருப்பும் இல்லை. உதாரணமாக தண்ணீரில் புகை இல்லை.

சரக ஸம்ஹிதை விமான ஸ்தானம் நான்காவது அத்தியாயத்தில் சரகர் அனுமானத்தைப் பற்றி விளக்குகிறார். தர்க்கத்தினாலும், யுக்தி யினாலும் கிடைக்கும் அறிவிற்கு அனுமானம் என்று பெயர். ஒருவன் எவ்வாறு உணவை ஜீரணம் செய்கிறான் என்பதைப் பொறுத்து அவனுடைய ஜடராக்னி நிலமையை நாம் அனுமானித்துக் கொள்கிறோம் என்று அவர் உதாரணம் கூறுகிறார். ஒருவன் வேலை செய்யும் தன்மை யைப் பொறுத்து அவன் உடலின் பலத்தை நாம் அனுமானம் செய்து கொள்கிறோம்.. அனுமானம் பிரத்யட்சத்தை சார்ந்துள்ளது. பிரத்யட்சம் இல்லாவிட்டால் அனுமானம் இல்லை.

## அனுமானத்தின் வகைகள்

அனுமானம் ஸ்வார்த்த அனுமானம், பரார்த்த அனுமானம் என இருவகைப்படும். (தர்க்க சங்கிரஹம்)

## 1.ஸ்வார்த்த அனுமானம்

ஒருவன் மலையில் புகையைப் பார்க்கிறான். முன்பு அவன் புகையைப் பார்த்த அறிவு நினைவுக்கு வருகிறது. எங்கெங்கு புகையுள்ளதோ அங்கங்கு நெருப்பு இருக்கும் என்ற முடிவுக்கு அவன் வருகிறான். இது தனக்குத்தானே கிடைக்கும் அனுமானமாகும். இதற்கு ஸ்வார்த்த அனுமானம் என்று பெயர்.

## 2. பரார்த்த அனுமானம்

பிறருக்காக அனுமானம் செய்து கொள்வதற்கு பரார்த்த அனுமானம் என்று பெயர். இதற்கு ஐந்து அவயவங்கள் தேவைப்படுகின்றன. அறையில் நெருப்பு உள்ளது. புகையின் மூலம் அதை அறிந்து கொள்கிறோம். எங்கெங்கு புகையுள்ளதோ, அங்கங்கு நெருப்பும் உள்ளது. இந்த மலையிலும் புகை உள்ளது. எனவே இந்த மலையிலும் நெருப்பு உள்ளது என்று நாம் புரிய வைக்கிறோம். இதற்குப் பரார்த்த அனுமானம் என்று பெயர்.

சரகர் ஸூத்திர ஸ்தானம் 11வது அத்தியாயத்தில் அனுமானத்தின் வகைகள் பற்றி விளக்கிக் கூறுகிறார்.

## 1. அனாகத காலிக அனுமானம்

நடைமுறையில் இருக்கும் சில விஷயங்களைக் கொண்டு எதிர் காலத்தை அனுமானம் செய்து கொள்வது அனாகத காலிக அனுமானம் எனப்படும். உதாரணமாக ஒரு விதையைப் பார்த்து செடியின் வளர்ச்சியை அனுமானம் செய்து கொள்வது.

## 2. அதீத காலிக அனுமானம்

இப்பொழுது இருக்கின்ற ஒரு விஷயத்தை வைத்து பண்டைய காலத்தில் நடந்ததை அனுமானம் செய்து கொள்வது அதீத காலிக அனுமானம் எனப்படும். உதாரணமாக கர்ப்பமாக இருக்கின்ற ஒரு பெண்ணைப் பார்த்து கர்ப்பதானம் நடந்துள்ளது என்று புரிந்து கொள்வது.

## 3. வர்த்தமான காலிக அனுமானம்

ஒன்றைப் பார்த்து மற்றொன்றை புரிந்து கொள்வது வர்த்தமான காலிக அனுமானம் எனப்படும். உதாரணமாக புகையைப் பார்த்து நெருப்பு இருப்பதைப் புரிந்து கொள்வது. இரண்டுமே இருந்தாலும் புகையைப் பற்றிய அறிவானது நெருப்பு இருப்பதை நமக்கு உய்த்துணர வைக்கிறது.

## நியாய தரிசனங்களின்படி அனுமானத்தின் வகைகள்

கௌதம மஹரிஷி அனுமானத்தை பூர்வவத், சேஷவத், ஸாமான்யதோ திருஷ்டம் என்று மூன்றாகப் பிரிக்கிறார்.

### 1. பூர்வவத்

பூர்வம் என்றால் முன்பு என்று பொருள். பூர்வவத் என்றால் முன்பு நடந்தது என்று பொருள் கூறலாம். நியாய தத்துவமானது காரண காரிய தத்துவத்தைச் சார்ந்துள்ளது. காரண காரிய தத்துவத்தின்படி காரணமே முதலில் வருகிறது. காரியம் அதைச் சார்ந்தே வருகிறது. நாம் காரண காரிய ஸித்தாந்தங்களைக் கொண்டு சில அறிவைப் பெறுகிறோம். எப்பொழுது ஒரு காரணத்தைக் கண்டாலும் பின்பு உருவாக இருக்கின்ற காரியத்தை நாம் கண்டுபிடித்துக் கொள்கிறோம். மேகமூட்டத்தை நாம் பார்க்கிறோம். அதனால் மழை வரும் என்பதை அறிந்து கொள்கிறோம்.

அதிகமாக ஒருவன் உணவு உண்பதை நாம் பார்க்கிறோம். இவனுக்கு அஜீர்ணம் வரப்போகிறது என்பதை நாம் உணர்ந்து கொள்கிறோம். முன்பு நடந்த ஒரு செயலை வைத்து பின்பு நடக்க இருக்கின்ற ஒரு செயலை உணர்ந்து கொள்வதற்கு பூர்வவத் என்று பெயர்.

### 2. சேஷவத்

காரியத்தைக் கொண்டு அதற்கானக் காரணத்தை அனுமானம் செய்வதற்கு சேஷவத் என்று பெயர். ஸந்திவாதத்தினால் ஒருவன் அவதிப் படுவதைக் காணும் பொழுது அவனுக்கு வாதப்ரகோபம் ஏற்பட்டுள்ளது என்பதை நாம் அறிகிறோம். வாந்திபேதி ஏற்பட்டுள்ள ஒருவனை கண்டபோது வெளியிடங்களில் சாப்பிட்டுள்ளான் என்பதை நாம் அனுமானம் செய்து கொள்கிறோம். சேஷம் என்ற வார்த்தைக்கு விட்டுப் போனது, பாக்கியிருப்பது என்று பொருள் உண்டு. இதனை பரிசேஷ அனுமானம் என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.

### 3. ஸாமான்யதோ திருஷ்டம்

முதல் இரண்டு அனுமானங்களும் காரிய காரண ஸித்தாந்தங்களை அடிப்படையாகக் கொண்டது. அன்றாட வாழ்க்கையில் சில நிகழ்ச்சிகள்

தொடர்ந்து நடைபெறுவதை நாம் பார்க்கிறோம். இதற்கு ஸாமான்யதோ த்ருஷ்டம் என்று பெயர். பிறப்பு, இறப்பு என்பதைப் பார்க்கும் பொழுது ஆன்மா என்று ஒன்று உள்ளதையும், இறைவன் என்பவர் உள்ளார் என்று நாம் உணர்ந்து கொள்கிறோம். சூரியன் உதிப்பது, சூரியன் மறைவது போன்றவற்றை நாம் அன்றாடம் பார்த்து நேரத்தை ஊகித்துக் கொள்கிறோம்.

## சரகரின் அனுமானக் கொள்கையும், நியாய தரிசனத்தின் அனுமானக் கொள்கையும்

| சரக ஸம்ஹிதை | நியாய தரிசனம் |
|---|---|
| அனாஹத காலிகம் | பூர்வவத் |
| அதீத காலிகம் | சேஷவத் |
| வர்த்தமான காலிகம் | ஸாமான்யதோ திருஷ்டம் |

### பஞ்ச அவயவங்கள்

அனுமானம் மூலம் ஒரு விஷயத்தை புரிந்து கொள்வதற்கு ஐந்து அவயவயங்கள் தேவைப்படுகின்றன.

**1. பிரதிக்ஞா** (நிறுவப்பட வேண்டிய கூற்று (அ) உறுதிமொழி)

பிரதிக்ஞா என்றால் உறுதி செய்வது என்று பொருள். உதாரணமாக மலையில் நெருப்பு உள்ளது என்று உறுதி செய்வதற்கு பிரதிக்ஞா என்று பெயர். இதனை ஸங்கல்ப வார்த்தை என்றும் கூறலாம்.

**2. ஹேது** (அதற்கான காரணம்)

ஒரு காரியத்தை உறுதி செய்வதற்கு காரணமாக இருப்பது ஹேது எனப்படும் காரணமாகும். எடுத்துக்காட்டாக புகை இருப்பதை நாம் பார்க்கிறோம். இங்கு புகை ஹேதுவாகிறது.

**3. உதாஹரணம்** (எடுத்துக்காட்டுடன் கூடிய பொதுக்கூற்று)

ஒரு காரியத்தை விளக்குவதற்கு எடுத்துக்காட்டு தருவது உதாஹரண மாகும். எங்கெங்கு புகை இருக்கிறதோ அங்கெங்கு நெருப்பு இருக்கும் என்று எடுத்துக்காட்டு கூறுவது.

### 4. உபநயம் (பொதுக்கூற்றில் நமது கூற்றைப் பிரதியிடல்)

உதாரணத்தின் மூலம் கிடைத்த அறிவை நடைமுறையில் செயல் படுத்துவதற்கு உபநயம் என்று பெயர். இந்த மலையிலும் புகையுள்ளது என்று கூறுவது.

### 5. நிகமனம் (முடிவு)

உறுதியான முடிவிற்கு வருவது நிகமனம் எனப்படும். உதாரணமாக இந்த மலையில் புகையுள்ளது. எனவே இங்கு நெருப்பு உள்ளது என உறுதியான முடிவிற்கு வருவது நிகமனம் ஆகும்.

சில அறிஞர்கள் இந்த பஞ்ச அவயவங்கள் அனுமானத்திற்கு தேவையில்லை என்று கூறுகிறார்கள். பிரதிக்ஞா, ஹேது, வியாப்தி ஆகிய மூன்று அவயவங்கள் மட்டும் போதுமானது என்று கருதுகிறார்கள். பிரதிக்ஞைக்கும் நிகமனத்திற்கும் அதிக வித்தியாசம் இல்லை என்றும், உதாரணமும், உபநயமும் வியாப்தியின் கீழே வந்துவிடுகிறது என்றும் கூறுகிறார்கள்.

### லிங்க பராமர்சம்

லிங்கம் என்று சொன்னால் அடையாளம் என்று பொருள். இதை ஹேது அல்லது காரணம் என்றும் குறிப்பிடலாம்.

இந்த லிங்கம் கேவலன்வயி, கேவ வியதிரேகி, அன்வய வியதிரேகி என மூன்று வகைப்படும்.

### 1. கேவலான்வயி

பாவபதார்த்தங்களை விளக்குவதற்கு இது உதவுகிறது. இங்கு கட்டாயம் ஒரு ஹேது காணப்படும்.

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| பிரதிக்ஞா | – | ஒரு பொருளைப் பார்த்து இது பானை என்கிறோம். |
| ஹேது | – | பானையை நம்மால் அறிய முடிகிறது. |

| | | |
|---|---|---|
| உதாஹரணம் | – | நம்மால் அறியமுடிகின்ற பொருட்களுக் கெல்லாம் நம்மால் பெயர் கூற முடியும். |
| உபநயம் | – | இது பானை என்று அறிந்து கொள்கிறோம். |
| நிகமனம் | – | முன்பு பெற்ற அறிவினால் இது பானை என்று உறுதிபடக் கூறுகிறோம். |

ஒரு பொருளைக் குறிப்பிட்டு இதுதான் என்று அழைப்பதற்கு கேவலான்வயி என்று பெயர். பாவ பதார்த்தங்களுக்கு இது பொருந்தும். கண்ணால் காண முடியாத சில பொருட்களைப் பெயரிட்டு கூறமுடியாது. இதை தத்வார்த்தமான ஒரு அனுமானம் என்று குறிப்பிடலாம்.

## 2. கேவல வியதிரேகி

இங்கு எதிரிடையான ஹேதுக்கள் காணப்படும். காரணத்திற்கும் காரியத்திற்கும் தொடர்பிருக்காது. இல்லாத ஒன்றை வைத்து இருக்கின்ற ஒன்றை நிறுவுவதற்கு கேவல வியதிரேகி என்று பெயர். இது அபாவ பதார்த்தத்திற்கு மட்டுமே காணப்படும்.

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| பிரதிக்ஞா | – | நாம் இருக்கும் இடம் இமாலயப் பர்வத மாகும். |
| ஹேது | – | ஏனென்றால் நாம் மிக உயரமான இடத்தில் நின்று கொண்டிருக்கிறோம். |
| உதாரணம் | – | இது விந்திய மலையாக இருக்க முடியாது. ஏனெனில் இது அதிக உயரமாக இருக் கிறது. எனவே இது இமாலய மலையாகும் என்று உதாரணம் கூறுவது. |
| உபநயம் | – | இருக்கின்ற மலைகளிலே உயரமானது இதுதான். |
| நிகமனம் | – | எனவே இது இமய மலையாகும் என உறுதி செய்வது. |

இங்கு ஒரே ஒரு பொருளை நாம் உவமானமாகக் கூறுகிறோம்.

## 3. அன்வய வியதிரேகி

சரியானதாகவும், தவறானதாகவும், சேர்ந்தும் உள்ள லிங்கங்களை நாம் இங்கு காண்கிறோம். இந்த சரியான லிங்கமானது ஹேதுவுடன் இணைந்து காணப்படும். தவறான லிங்கமானது ஹேதுவுடன் சேர்ந்து காணப்படாது.

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| பிரதிக்ஞா | – | மலையில் நெருப்பு உள்ளது. |
| ஹேது | – | மலையில் புகை உள்ளது. |
| உதாரணம் | – | எங்கெங்கு புகை உள்ளதோ அங்கங்கு நெருப்பு உள்ளது. இது சரியான உதாரண மாகும். எங்கெங்கு நெருப்பில்லையோ, அங்கங்கு புகையில்லை. கடலில் நெருப் பில்லை. இது தவறான உதாஹரணமாகும். |
| உபநயம் | – | இந்த மலையில் புகை உள்ளது. |
| நிகமனம் | – | எனவே இந்த மலையில் நெருப்பு உள்ளது. |

இந்த அனுமானமே விவாதங்களுக்குப் பயன்படுகிறது.

## ஹேது

ஹேது என்பது குறிக்கோளை அடைவதற்கான வழிமுறையாகும். இதனை ஸாதனம் அல்லது காரணம் என்றும் கூறலாம். அடைய விரும்பும் குறிக்கோள்களுக்கு ஸாத்தியம் என்று பெயர். இதனை புருஷார்த்தம், காரியம் அல்லது லிங்கம் என்றும் கூறலாம்.

மலையில் புகையைப் பார்க்கிறோம். இதனை ஹேது என்று குறிப்பிடுகிறோம். புகையைப் பார்ப்பதால் அங்கு நெருப்பு இருப்பதை புரிந்து கொள்கிறோம். இங்கு காரணமும் காரியமும் சேர்ந்திருக்கிறது. சில நேரங்களில் நெருப்பும் புகையும் சேர்ந்து காணப்படுவதில்லை. இதற்கு வியாப்தி எனறு பெயர்.

ஹேதுவானது யதார்த்தம், அயதார்த்தம் என இருவகைப்படும்.

## ஹேத்வாபாஸம்

அயதார்த்த ஹேதுவை ஹேத்வாபாஸம் என்று குறிப்பிடுகிறோம். இது ஹேது என்றும் ஆபாஸம் என்றும் இரு வார்த்தைகளால் ஆனது. ஆபாஸம் என்றால் பொய் அல்லது இல்லாதது என்று பொருள். தவறான ஹேதுவிற்கு ஹேத்வாபாஸம் என்று பெயர். அனுமானம் ஹேதுவைச் சார்ந்திருக்கிறது. ஹேது சரியாக இருந்தாலே சரியான அறிவைப் பெற முடியும். ஹேது தவறானதாக இருந்தால் நமக்கு கிடைக்கின்ற அறிவும் தவறானதாகவே இருக்கும்.ஹேத்வாபாஸம் என்றால் தவறான அறிவு என்று பொருள். இதை மித்யாஞானம் என்று குறிப்பிடலாம். ஹேத்வா பாஸத்தை தோஷம் என்று குறிப்பிடலாம் அல்லது தவறான அனுமானம் என்றும் குறிப்பிடலாம்.

கௌதமர் ஐந்து ஹேத்வாபாஸங்களைக் குறிப்பிடுகிறார். ஸவ்ய பிசாரம், விருத்தம், ஸத்பிரதிபட்சம், அஸித்தம், பாதிதம் என்பனவாகும் அவை.

### 1. ஸவ்யபிசாரம்

ஒரு சரியான அறிவை அனுமானம் மூலம் பெறுவதற்கு காரணமும், காரியமும் இணைந்திருக்க வேண்டும். அவை தனிப்பட்டு இருக்கக் கூடாது. காரணமானது காரியத்துடன் தொடர்பில்லாமல் இருந்தால் அதற்கு ஸவ்யபிசாரம் என்று பெயர். உதாரணமாக நாம் ஒரு கல்லைப் பார்க்கிறோம். இது கடினமாக இருக்கிறது. அதனால் இது கல் என்று கூறுகிறோம். இங்கு கடினத்தன்மை என்பது ஹேதுவாகிறது. கடினத் தன்மை என்பது கல்லுக்கு மட்டும் உள்ளதல்ல. பல பொருட்களிலும் கடினத்தன்மை காணப்படும் அதனால் இது ஒரு வகை ஹேத்வா பாஸமாகும். இது ஸாதாரண ஸவ்யபிசாரம், அஸாதாரண ஸவ்யபிசாரம், அனுப ஸம்ஹாரி என மூன்று வகைப்படும்.

### ஸாதாரண ஸவ்யபிசாரம்

ஸாதாரண என்று சொன்னால் பொதுப்படையானது என்று பொருள் அல்லது பொதுவாகக் காணக்கூடியது என்றும் பொருள் கொள்ளலாம்.

இது பட்சங்களிலும், சுபட்சங்களிலும், விபட்சங்களிலும் காணப்படுகிறது. (ஒத்தப் பொருள்களிலும், ஒவ்வாத பொருள்களிலும் இதை பொதுவாக நாம் காணலாம்). மலையில் நெருப்பு இருக்கிறது என்ற ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நெருப்பைப் பார்க்கின்ற ஒரு பிரமேயத்தால் (காணும் அறிவினால்) நெருப்பு உள்ளது என்பதை நாம் அறிகிறோம். நெருப்பு இல்லாததை அறிந்திருக்கின்ற ஒருவனும், நெருப்பை பார்க்கின்ற பொழுது அங்கே நெருப்பு இருக்கின்றது என்று கூறமுடியும். எனவே நெருப்பு இருக்கின்றதை வைத்தும் நெருப்பு இருப்பதைக் கூற முடியும். நெருப்பு இல்லாத இடத்தைப் பார்த்த ஒருவனும் நெருப்பைப் பார்த்த பொழுது இங்கு நெருப்பு இருக்கின்றது எனக் கூறமுடியும். இவ்வாறு இது பட்சத்திற்கும், விபட்சத்திற்கும் அதாவது ஒத்த தன்மைக்கும் எதிர்மறைத் தன்மைக்கும் பொருத்தமாகக் காணப்படுகிறது.

## அஸாதாரண ஸவ்யபிசாரம்

இது பொதுப்படையான தன்மையற்றது. சுபட்சத்திலும், விபட்சத்திலும் காணப்படாதது. எடுத்துக்காட்டாக,

ஸப்தோ நித்ய: ஸப்தத்வாத் (தர்க்க சங்கிரஹம்)

ஒலியானது நித்தியமானது என்று குறிப்பிடுகிறோம். சப்த குணம் ஆகாசம் என்பது நாம் எல்லோரும் அறிந்ததே. சப்தவம் என்பது ஒலியிலேயே உள்ளது. இதனை மற்றதிலிருந்து எல்லாம் நாம் வேறுபடுத்துகிறோம். நித்தியத்திலிருந்தும் அநித்தியத்திலிருந்தும் நாம் வேறுபடுத்துகிறோம். இது அஸாதாரண ஸவ்யபிசாரம் ஆகும்.

## அனுப ஸம்ஹாரி

'ஸர்வம் அனித்யம் ப்ரமேயத்வாத்' (தர்க்க சங்கிரஹம்)

இங்கு உதாரணமே கூற இயலாது. ஒரு கருத்தை நிலை நிறுத்து வதற்கோ அல்லது அந்த கருத்தை எதிரிடையாகக் கூறுவதற்கோ உதாரணங் கள் இல்லை. சரக ஸம்ஹிதையில் ஸவ்யபிசாரம் விமான ஸ்தானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. வாதம் மார்கத்தில் சரகர் இதனைக் கூறுகிறார். ஒரு நோய்க்கு ஒரு மருந்து சரிதானா என்ற சந்தேகம் நமக்கு வருகிறது. இந்த வாக்கிய அமைப்புகளினால் நமக்கு சந்தேகம் அதிகரிக்கிறது. நாம்

அனுமானித்துப் பார்த்தாலும் தீர்மானமான ஒரு முடிவை எட்டுவதில்லை. இதற்கு அனுபவ ஸம்ஹாரி என்று பெயர்.

## 2. விருத்தம்

ஒருதவறான காரணமானது காரியங்களை சில சமயங்களில் ஏற் படுத்தலாம். காரியத்திற்கு விருத்தமான தன்மையை காரணம் ஏற்படுத்து மானால் அதற்கு விருத்த ஹேத்வாபாஸம் என்று பெயர்.

எடுத்துக்காட்டு: இவன் மனிதன், இவன் இறக்கவே மாட்டான். ஆனால் இது நடைமுறைக்கு ஒத்துவராது. மனிதனாகப் பிறந்தவன் இறந்தே ஆக வேண்டும். இவ்வாறு நடக்காத ஒன்றை நடக்கும் என்று கூறுவதற்கு விருத்த ஹேத்வாபாஸம் என்று பெயர்.

## 3. ஸத்ப்ரதிபட்சம் அல்லது பிரகரண கிரமம்

காரணத்திற்கு தொடர்பில்லாத காரியங்களைக் கூறுவது ஸத்பிரதி பட்சம் எனப்படும். உதாரணமாக,

நெருப்பில் நிறைய நீர் இருப்பதால் சுடுகிறது என்று கூறுவது. வைத்தியம் படித்த மாணவன் சட்டப்பயிற்சி செய்ய முடியும் என்று கூறுவது போல.

## 4. அஸித்தம் – ஸாத்தியா ஸமம்

அஸித்தம் என்றால் இல்லாதது என்று பொருள். இல்லாத ஒரு காரணத்தைக் கொண்டு ஒன்றை நிரூபிக்க முற்படுவோம் அல்லது ஒரு காரியத்தை ஏற்படுத்த முற்படுவோமானால் அதற்கு அஸித்தம் என்று பெயர். நிழலை ஒரு திரவ்யம் என்று நாம் கூறுகிறோம். நிழல் அசைகிறது என்று நாம் கூறுகிறோம். ஆனால் நிழல் அசைவதில்லை. நிழலுக்கு காரணமான ஒரு மனிதனே அசைகிறான். இதற்கு அஸித்தம் என்று பெயர். இது ஆச்ரய அஸித்தம், வியாபத்வ அஸித்தம் ஸ்வரூப அஸித்தம் என மூன்று வகைப்படும்.

### ஆச்ரயஅஸித்தம்

'அரவிந்தக ககனம் ஸுரபி:'

ஆகாயத் தாமரை மிகவும் மணமுள்ளது.இங்கு வானம் ஆச்ரய மாகும். ஆனால் வானத்தில் பூக்கள் முளைப்பது என்பது இயலாத

காரியம். இவ்வாறு இயலாத காரியத்தை எடுத்துச் சொல்வது ஆச்ரய அஸித்தம் எனப்படும்.

### ஸ்வரூப அஸித்தம்

'ஸப்தோ குண நித்ய ஸக்ஷு ஸத்வாத்' (தர்க்க சங்கிரஹம்)

ஒலியானது கண்களால் கண்டு அறியப்படுகிறது. இங்கு ஒலிக்கும் கண்ணிற்கும் சிறிது கூட தொடர்பு கிடையாது. இவ்வாறு காரணத்திற்கும், காரியத்திற்கும் தொடர்பில்லாத ஒன்றைக் கூறுவதற்கு ஸ்வரூப அஸித்தம் என்றுபெயர்.

### வியாபத்வ அஸித்தம்

பிறரை துன்புறுத்துவது பாவமாகும். இந்த கூற்று எல்லா சூழ்நிலை களிலும் சரியாக அமையாது. டெங்கு போன்ற நோய்களை உருவாக்கும் கொசுக்களை நாம் அழிக்கிறோம். இங்கு கொசுக்களை அழிப்பது பாவ மாகாது.

### 5. பாதிதம்

ஒரு காரணத்தினால் உருவாக்கப்படும் காரியமானது மற்றொரு பிரமாணத்தினால் நிராகரிக்கப்படுமானால் அதற்கு பாதிதம் என்று பெயர்.

உதாரணமாக, பனிக்கட்டி கனமாக இருப்பதினால் அது தண்ணீரில் மூழ்கும் என அனுமானம் செய்கிறோம். ஆனால் இதற்கு மாறாக நாம் கண்களால் பார்க்கும் பொழுது பனிக்கட்டி தண்ணீரில் மிதக்கிறது. இங்கு அனுமான பிரமாணத்தினால் உண்டாகும் கருத்து பிரத்யக்ஷ பிரமாணத் தினால் நிராகரிக்கப்படுகிறது.

யதார்த்த ஹேதுக்களை ஸத்ஹேது என்றும், அயதார்த்த ஹேதுக் களை அஹேது என்றும் கூறுவது மரபாகும்.

### ஸத்ஹேதுக்களின் குணங்கள்

ஒரு ஹேதுவின் நல்ல விஷயங்களையே இவை கூறுகின்றன. ஸாத்தியத்தின் மாறுபட்டக் கருத்துக்களை இவை கூறுவதில்லை. மற்ற பிரமாணங்கள் இதற்கு எதிர்மறையாக இல்லை.

இனி வியாப்தி என்றால் என்ன என்பதைப் பார்ப்போம்.

## வியாப்தி

ஒன்றுக்கொன்று தொடர்புடைய இரு பொருட்கள் சேர்ந்து இருக்கலாம் அல்லது தனிப்பட்டு இருக்கலாம். இதற்கு வியாப்தி என்று பெயர். எங்கெங்கு புகை உள்ளதோ அங்கங்கு நெருப்பு உள்ளது என்று நாம் பார்த்தோம். இந்த தொடர்புக்கு வியாப்தி என்று பெயர். இரண்டு தொடர்பு உள்ள பொருட்களை வியாப்யம் அல்லது வியாபகம் என்று கூறுகிறோம். நெருப்பானது வியாபகமாகம். புகை வியாப்யமாகும். வியாப்யம் இல்லாமல் வியாபகம் நிலைபெறும். ஆனால் வியாபகம் இல்லாமல் வியப்யம் நிலைபெறாது. உதாரணம் புகையில்லாமல் நெருப்பு இருக்கும். ஆனால் நெருப்பில்லாமல் புகை இருக்காது.

வியப்தி இரண்டு வகைப்படும். அவை ஸம வியாப்தி; விஷம வியாப்தி என்பனவாகும்.

## ஸம வ்யாப்தி

ஒத்த குணமுள்ள இருபொருட்களை தொடர்புபடுத்திக் கூறினால் அதற்கு ஸமவ்யாப்தி என்று பெயர். மனிதன் ஆறாவது அறிவு படைத்த வனாக இருக்கிறான். ஆறாவது அறிவு படைத்தவனே மனிதனாகிறான். இந்த வார்த்தையில் மனிதனுக்கும் ஆறாவது அறிவிற்கும் உள்ள தொடர்பு வலியுறுத்தப்படுகிறது. இவை சேர்ந்தே இருக்கும். இந்த பகுத்தறிவாகிய ஆறாவது அறிவு விலங்குகளுக்கு கிடையாது என்பதைக் கூறுகிறது.

## விஷம வியாப்தி

ஒரு பொருளுடன் மற்றொரு பொருளைத் தொடர்பு ஏற்படுத்தும் பொழுது அவற்றுக்கிடையில் ஒற்றுமை இருக்க வேண்டும் என்றில்லை. இதற்கு விஷம வியாப்தி என்று பெயர். எங்கெங்கு புகை உள்ளதோ அங்கு நெருப்பு உள்ளது. சில நேரங்களில் நெருப்பு மட்டும் இருக்கலாம். புகை இருக்காது. புகை நெருப்பில்லாமல் இருக்காது. ஆனால் நெருப்போ புகையில்லாமல் இருக்க முடியும்.

## திருஷ்டாந்தம்

திருஷ்டாந்தம் என்றால் உதாரணம் என்று பொருள். சில வாக்கியங் களை நாம் கூறும் பொழுது நல்ல உதாரணங்களைக் கூறி நாம் எடுத்துக்

கொண்ட கருத்தை நிலை நிறுத்துகிறோம். இது பாவாத்மகம், ஆபாவாத் மகம் என இருவகைப்படும்.

### 1. பாவாத்மகம்

இதில் காரியம், காரணம் இரண்டும் இணைந்தே காணப்படுகின்றன. மலையில் காணப்படும் நெருப்பும் புகையும் இதற்கு ஆதாரமாகக் கூறலாம்.

### 2. அபாவாத்மகம்

இங்குக் காரியமும், காரணமும் சேர்ந்திருப்பதில்லை. கடலில் புகை இல்லை. ஆதலால் கடலில் நெருப்பு இல்லை என்று கூறுவதைப் போலாகும்.

### தர்க்கம்

விவாதித்து கருத்துக்களை நிலை நிறுத்துவதற்கும், அறிந்து கொள் வதற்கும் தர்க்கம் என்று பெயர். நியாய தரிசனங்கள் தர்க்கத்தை சார்ந் திருக்கின்றன. சில இடங்களில் அப்ரமா என்றும் அயதார்த்த ஞானம் என்றும் தர்க்கம் குறிப்பிடப்படுகிறது. காரணங்களை விவாதித்து அறிவின் மூலம் ஒரு பொருள் இருக்கிறது என்று நிலைநாட்டுவதற்கு நாம் பயன்படுத்தப்படும் வழிமுறைகள் தர்க்கம் எனப்படும். ஒரு இடத்தில் நெருப்பு இல்லை. ஏனென்றால் அந்த இடத்தில் புகை இல்லை என்று உதாரணங்கள் கூறி தர்க்கிக்கலாம். காரியத்தை நிலை நிறுத்தவதற்காக நாம் காரணங்களின் உதவியை நாடுகிறோம். இங்கு ஹேதுக்கள் இல்லை. தர்க்கத்தில் இதை நாம் எதிர்மறையாகச் செய்கிறோம். இங்கு நாம் காரியத்தின் உதவியுடன் காரணத்தை நிலை நிறுத்துகிறோம். தாம் எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையை நிலை நிறுத்துவதற்கு ஒரு அறிஞர் இரண்டு வழி முறைகளைக் கையாள்கிறார்.

சரியான உதாரணங்களை அல்லது எடுத்துக்காட்டுகளைக் கூறி நாம் எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையை நிலைநாட்டுவது ஒன்றாகும் அல்லது எதிராளி கூறும் கருத்துக்களில் உள்ள பலஹீனமான கருத்துக்களைக் கூறி அதை அடித்து ஒதுக்குவதாகும். உதாரணமாக எங்கு புகையுள்ளதோ அங்கு நெருப்பு உள்ளது.இது ஒரு உண்மையான அனுமானமாகும். கட்டாயம் நெருப்பு இங்கு காணப்பட்டிருக்க வேண்டும் இல்லையென்றால்

ஏன் இங்கு புகை வருகிறது என்று கேட்பது தர்க்கமாகும். எதிராளியின் கொள்கைகளை தகர்த்தெறிவதற்கு அல்லது விமர்சித்துப் பேசுவதற்கு தர்க்கம் உதவுகிறது. ஆனால் உண்மைகளைப் பேசுவதற்கு இது பல சந்தர்ப்பங்களில் உதவுவதில்லை.

நியாய வைசேஷிகர்களின் கருத்துப்படி 6 தர்க்கங்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| வியாகதம் | – | தன்னுடைய கருத்துக்களுக்கே எதிர்மறையான கருத்துக்களைக் கூறுவது |
| பிரதிபந்தி கல்பனா | – | யார் எதைக் கூறினாலும் அதை மாற்றிக் கூறுவது. |
| கல்பனா லாகவம் | – | சரியான ஆதாரமில்லாமல் விஷயங்களை எடுத்துக் கூறுவது. |
| கல்பனா கௌரவம் | – | மிகைப்படுத்தி கற்பனைகளைக் கூறி விவாதிப்பது. |
| உத்ஸர்கம் | – | பொதுவான அறிவுகளையும், விதிகளையும் கொண்டு விவாதிப்பது. |
| அபவாதம் | – | இல்லாதவற்றையும் விட்டுப்போனதையும் தேவையற்றதையும் கூறுவது. |

## ஆயுர்வேதத்தில் அனுமானத்தின் பங்கு

ஆயுர்வேதத்தில் நோயின் காரணமாகிய நிதானத்தைக் கண்டறிவதற்கு அனுமானம் முக்கியமாக உதவுகிறது. அதைச் சார்ந்தே சிகிச்சை அமைகிறது. பல விஷயங்களும் புலன்களால் கண்டறிய முடியாது. ஆதலால் அனுமானத்தையே ஆயுர்வேத வைத்தியர்கள் சார்ந்திருக்கிறார்கள். ஒரு வைத்தியரால் ரஸனேந்திரிய பரீட்சையை (நாக்கினால்) செய்ய முடியாது. ஆதலால் அவர் அனுமானத்தையே நம்பியிருக்கிறார். ஒருவர் சிறுநீர் கழித்தால் அதில் எறும்புகள் மொய்க்குமானால் அவருக்கு மதுமேகம் உள்ளது என்பதை ஊகித்துக் கொள்கிறார். ஒரு மனிதனுடைய அக்னி பலத்தை அவன் சாப்பிடும் உணவை வைத்தும், செரிக்கும் தன்மையை வைத்தும் புரிந்து கொள்கிறார். ஒரு மனிதனுடைய பழக்க

வழக்கங்களைப் பொறுத்து அவனுடைய மன நிலைமையைப் புரிந்து கொள்கிறார். ஒரு மனிதனுடைய பழக்க வழக்கங்களைப் பொறுத்து அவனுடைய மன நிலைமையைப் புரிந்து கொள்கிறார். ஒரு மனிதனுடைய பயம், வீரியம், ஸ்வபாவம் போன்றவற்றைச் செயல்பாடுகளின் மூலம் புரிந்து கொள்கிறார். தவறு செய்யாத மனிதர்களையும், ஒழுக்கமான மனிதர்களையும் கண்டு நல்பிறப்பையும், நன்றாக வளர்த்த விதத்தையும் புரிந்து கொள்கிறார். அஷ்ட லட்சணங்களைக் கொண்டு நோயாளி இறக்கப் போகிறான் என்பதைப் புரிந்து கொள்கிறார். இவ்வாறு அனுமானங்கள் ஆயுர்வேதத்தில் பயன்படுத்தப்படுகின்றன. மேலும்

- ஒருவனுடைய ஜீரண சக்தியால் ஜடராக்னியின் வலிமையை அறிகிறோம்.
- உடற்பயிற்சியின் தகுதியைக் கொண்டு அவனுடைய பலத்தை அறிகிறோம்.
- ஓசை முதலியவற்றை சரியாகக் கேட்பதினால் காது போன்ற புலன் களின் திறமையை அறிகிறோம்.
- செயல்களை ஆராயும் தன்மையினால் மனோ நிலைமை போன்ற வற்றை அறிகிறோம்.
- பற்றுதலினால் ரஜோ குணத்தை அறிகிறோம்.
- அறியாமையினால் மோகத்தை அறிகிறோம்.
- கொடூரச் செயல்களைச் செய்யும் பொழுது கோபத்தை அறிகிறோம்.
- பெண்ணாசை போன்றவை அதிகம் காணப்பட்டால் ரஜோ குணம் மேலோங்கி இருப்பதாக அறிகிறோம்.
- புரிந்து கொள்ளும் தன்மை இல்லாததைக் கொண்டு மோகத்தை அறிகிறோம்.
- தீயச் செயல்களின் மூலம் கோபத்தை அறிகிறோம்.
- சோகமாக இருப்பதன் மூலம் எதையோ இழந்துவிட்டான் என்று அறிகிறோம்.
- சந்தோஷத்தை வெளிப்படுத்துவதன் மூலம் அவன் மகிழ்ச்சியாக இருப்ப்தை அறிகிறோம்.

- ஒருவன் ஆடினாலோ, பாடினாலோ, வாத்தியங்களை எடுத்து வாசித்தாலோ அவனுடைய மகிழ்ச்சியை அறிகிறோம்.
- நடுக்கத்தினால் பயத்தை அறிகிறோம்.
- ஒரு கடினமான சந்தர்ப்பத்தை நன்றாக கையாண்டால் அவனது மனவலிமையை அறிகிறோம்.
- கடினமான செயலை ஒருவன் முயற்சி செய்வான் எனில் அவன் முயற்சி செய்யும் திறனை அறிகிறோம்.
- தவறுகள் செய்யாமல் இருப்பதன் மூலம் அவனுடைய மனத் தெளிவை அறிகிறோம்.
- ஒருவருடைய புத்திசாலித்தனத்தையும், அவனுடைய செயல் பாட்டையும் கண்டு அவனுடைய சாஸ்திர பாடத்தை அறிகிறோம்.
- நம்மை கண்டவுடன் பழைய காலத்து சம்பவங்களை நினைவு கூறினால் அவனுடைய நினைவாற்றலை அறிகிறோம்.
- அடக்கமான நன்னடத்தை மூலம் அவனுடைய பணிவை அறிகிறோம்.
- ஏதாவது ஒரு உணவை விரும்பி சாப்பிட்டால் அது அவனுக்கு சாத்மியமான உணவு என்பதை அறிகிறோம்.
- ஏதாவது ஓர் உணவை அவன் வெறுத்தால் அது அவனுக்கு பிடிக்காத உணவு என்பதை அறிகிறோம்.

இவையல்லாமல் ஒரு நோயாளி வரும்பொழுது அந்த நோயாளி யின் வயது, நோயின் தன்மை, அவர் சாப்பிட்ட உணவு போன்றவற்றை வைத்து நோயின் தன்மையை நாம் அனுமானிக்கிறோம். வெளியில் சாப்பிட்ட ஒருவர் வாந்தி எடுத்தால் அஜீரணத்தினால் ஏற்பட்ட ஆம விஷம் என்று ஊகிக்கிறோம். ஒரு சில லட்சணங்களால் மரணக் குறிகளைக் கண்டறிகிறோம். ஒருவருடைய கனவுகளின் மூலம் ராஜயட்ச்மா போன்ற நோய்களை அறிகிறோம். இவ்வாறு மருத்துவனானவன் நுண்ணறிவு மூலம் எல்லா பிரமாணங்களையும் பயன்படுத்தி நோயை கண்டுபிடித்து அதில் சிகிச்சையளித்து வெற்றிபெற வேண்டும் என்று சரகர் கூறுகிறார்.

# 4. ஆப்தோபதேசம்

ஆப்த புருஷர்களின் மூலம் அறிவைப் பெறுவதற்கு ஆப்தோப தேசம் என்று பெயர். இதற்கு சப்த பிரமாணம் என்றும், ஆகம பிரமாணம் என்றும் பொருள் உண்டு. ஆப்தோபதேசம் என்ற வார்த்தையில் இரண்டு பதங்களை நாம் காண்கிறோம். ஆப்தன் மற்றும் உபதேசம் என்பன அவை. உபதேசம் என்றால் நல்லுரை கள் அல்லது அறிவுரைகள் என்று பொருள் கூறலாம். ஆப்தன் என்பதற்கு சான்றோன் என்று பொருள் கூறலாம். மெய்யறிவு பெற்றவர்கள், மெய்ஞான நிலையில் வாழ்பவர்கள் அல்லது சான்றோர்களை ஆப்தன் என்று கூறுவது மரபு.

## ஆப்த வாக்கியம் என்ற சான்றோர் வாக்கின் இலக்கணம்

ஆப்த வாக்கியம் என்பது சான்றோர்களின் வாக்கு. ஐயமற்ற வரும், நினைவாற்றல் பெற்றவரும், ஆராயும் திறமை உள்ள வரும், விருப்பு வெறுப்பு அற்றவரும், ஒரு பக்கம் சாராதவருமான பெரியவர்களால் எழுதப்பட்ட புத்தகங்களுக்கு ஆப்த வாக்கியம் என்று பெயர். இதற்கு சப்த பிரமாணம் என்றும் பெயருண்டு. சான்றோர்களின் வாக்குகளை ஆதாரமாகக் கொண்டே ஆயுர் வேத மருத்துவர்கள் நோயின் தன்மையினைப் புரிந்து கொள் கிறார்கள். சரக ஸம்ஹிதை, ஸுச்ருத ஸம்ஹிதை போன்ற புத்தகங் களெல்லாம் ஆப்த வாக்கியங்களாகக் கருதப்படுகின்றன. மதம் கொண்டவன், பைத்தியம் பிடித்தவன், ஒரு பக்கம் சேருகிறவன், பிடிவாதம் உள்ளவன், தூய்மையற்ற மனநிலை உள்ளவன் இவர்கள் நல்லவர்களாக இருந்தாலும் இவர்களுடைய சொல் அப்பிரமாண மானது அல்லது ஏற்கக் கூடாதது என சரகர் கூறுகிறார்.

## ஆப்த லட்சணங்கள்

ஆப்தர்களுக்கு உள்ள இலக்கணங்களை நாம் பார்ப்போம். ஆப்த குணம் கொண்ட சான்றோர்கள் ரஜோ குணம், தமோ குணம் அற்றவர் களாக இருக்க வேண்டும். தவ வலிமைப் பெற்றவர்களாக இருக்க வேண்டும். ஞானம் என்கின்ற மெய்யறிவு பெற்றவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் வெளிப்படுத்துகின்ற அறிவு உண்மையானதாக இருக்க வேண்டும். காலத்தால் அழிக்க முடியாததாக இருக்க வேண்டும். மாற்றுக் கருத்து இல்லாமல் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக, உண்மை வார்த்தைகளாக இருக்க வேண்டும். வார்த்தைகளில் தெளிவு இருக்க வேண்டும். சந்தேகத்திற்கு இடமில்லாமல் இருக்க வேண்டும். பொய்யில்லாமல் மெய் வார்த்தைகளாக இருக்க வேண்டும். இப்போப் பட்ட ஆப்தர்களை சான்றோர்கள் என்றும், சிஷ்டர்கள் என்றும், விபுத்தர்கள் என்றும் அழைப்பது மரபு. இத்தகைய சான்றோர்களிட மிருந்து பெறப்படும் அறிவிற்கு ஆப்தோபதேசம் அல்லது ஆப்த வாக்கியம் என்று பெயர்.

## ஆயுர்வேதத்தில் ஆப்தோபதேசத்தின் முக்கியத்துவம்

ஆப்த வாக்கியம் அன்றாட வாழ்வில் மிக முக்கியமானதாகிறது. குழந்தைகளுக்கு தாய் தகப்பனும், நல்லாசிரியர்களும் ஆப்தர்கள் ஆகிறார்கள். தாய் தகப்பன் கூறுகின்ற வார்த்தைகளை, நல்லாசிரியர்கள் கூறுகின்ற வார்த்தைகளை குழந்தைகள் உண்மையான வார்த்தைகளாக, அறிவு சார்ந்த வார்த்தைகளாகக் கருதுகின்றனர். அவற்றை குழந்தைகள் புரிந்து கொண்டு அதன்படி வாழ முற்படுகின்றனர். இந்த ஆசிரியர்களை ஆப்தர் என்று அழைப்பதில் தவறில்லை. வேதங்களில் கூறிய கருத்துக்கள், புராணங்களில் கூறிய கருத்துக்கள், உபநிடதங்களில் கூறிய கருத்துக்கள், தரிசனங்களில் கூறிய கருத்துக்கள் எல்லாம் மெய்யறிவு பெற்ற சான்றோர் களாலும், ரிஷிகளாலும் கூறப்பட்ட கருத்துக்களாக இருப்பதால் இவற்றை ஆப்தோபதேசம் என்று கூறலாம். வேத வாக்கியமே ஒரு ஆப்த உபதேசம், வேத வாக்கியமே பிரமாணம் என்று கூறுகின்ற கருத்தும் உண்டு.

மூன்று விதமான முறைகளில் மருத்துவம் படிக்கின்ற மாணவன் அறிவைப் பெறலாம் என்று சரகர் கூறுகிறார். அவ்வாறு அவர் கூறுகின்ற

மூன்று விதமான பிரமாணங்களில் ஆப்தோபதேசத்தை முதலில் கூறுகிறார். இதனால் ஆப்தோபதேசம் முதல் இடத்தைப் பெறுகிறது. குருவினுடைய வாக்கியத்தின் மூலமே ஆயுர்வேத மாணவன் பஞ்சபூத அறிவு, த்ரிதோஷ அறிவு, நோயைப் பற்றிய அறிவு, நோயைக் குணப்படுத்தும் முறைகள், மருத்துவ முறைகள், மூலிகைகள் பற்றிய அறிவு, மருந்து செய்முறைகள் போன்றவற்றை அறிகிறான். பின்பு நோயாளிக்கு தான் சிகிச்சை செய்யும் போது அவற்றை பரிசோதித்துப் பார்க்கிறான். நோயை அவன் பிரத்யட்சம் கொண்டும், அனுமானம் கொண்டும் கண்டறிகிறான்.

நோயாளியானவன் மருத்துவனை உண்மையானவனாக கருதி எதையும் மறைக்காமல் எல்லாக் கருத்துக்களையும் ஒளிவு மறைவின்றி மருத்துவனிடம் கூறுகிறான். மருத்துவனுக்கு நோயாளி ஆப்தனாகவும், நோயாளிக்கு மருத்துவன் ஆப்தனாகவும் விளங்குகிறார்கள்.

எப்படி பலவிதமான இரத்தினங்களைப் பற்றி அறிவிருந்தால் நாம் ஒவ்வொரு இரத்தினங்களையும் கண்டறிய முடியுமோ அதைப் போல ஆயுர்வேதத்தைப் பற்றி நன்கு அறிந்திருந்தாலே பலவிதமான நோய்களைக் கண்டறிந்து சிகிச்சை செய்ய முடியும் என்கிறார் சக்ரபாணி.

### ஆப்தவாக்கியத்தால் அறியக் கூடியவை

ஒவ்வொரு நோயிலும் தோஷங்கள் எவ்வாறு சீற்றமடைகின்றன, உடலின் நிலை எவ்வாறு உள்ளது, இந்த நோய் ஏற்பட காரணம் யாது, இந்த நோயின் இலக்கணம் எப்படிப்பட்டது, நோய் உண்டாகும் தேசம் எப்படிப்பட்டது, இந்த நோயின் அறிகுறி என்ன, பூர்வ ரூபங்கள் என்ன, நோயின் வளர்ச்சி, நடுநிலை, நோயின் விருத்தி, க்ஷயம் போன்றவைகள் எவ்வாறு இருக்கும் , எத்தகைய தூஷியங்களால் இந்த நோய் ஏற்படுகிறது போன்றவற்றை மருத்துவர் ஆப்த வாக்கியத்தின் மூலமே தெரிந்து கொள்கிறார். இதற்கு நன்றாக சாஸ்தி பாடம். வேண்டும். முதலில் ஆயுர்வேதக் கல்வியில் நாம் படிக்கும் **பிரஹத்ரயி (சரக ஸம்ஹிதை, ஸுச்ருத ஸம்ஹிதை, அஷ்டாங்க ஸங்கிரஹம்), லகுத்ரயி (சாரங்கதர ஸம்ஹிதை, மாதவ நிதானம், பாவப்ரகாசம்)** கண்டறிவதால் இதை எழுதிய சான்றோர்களின் வாக்கியங்கள் ஆப்த வாக்கியங்களாக மதிக்கப்படுகின்றன.

நோயைத் தீர்க்க எவ்வித சிகிச்சை செய்ய வேண்டும் என்ற கேள்வி அடுத்து எழுகிறது. இந்த சிகிச்சை செய்யலாமா? செய்யக் கூடாதா? என்ற கேள்வியும் எழுகிறது. இதற்கான அடிப்படை அறிவும் புத்தகங்களையே சார்ந்திருக்கின்றன. எனவே ஆப்த வாக்கியம் என்ற சப்த பிரமாணம் ஆயுர்வேதத்தில் நோய் கண்டறிதலிலும், சிகிச்சையளிப்பதிலும் முக்கிய பங்கு வகிக்கிறது. நோயாளி கூறும் நோய் பற்றிய குறிப்புகளும் ஆப்த வாக்கியங்களே.

## ஆகமப் பிரமாணம்

வேதங்களை ஆகமம் என்று கூறுகிறோம். ஆகமம் என்றால் இறை வனிடமிருந்து வந்தது என்று பொருள். வேதங்களையும், சாஸ்திரங்களை யும் ஆப்த வாக்கியங்கள் என்கிறோம். வேதத்தை எழுதிய ரிஷிகளை ஆப்த புருஷர்கள் என்று கூறுகிறோம். ஆப்த புருஷர்கள் கூறிய வாக்கியம் மெய்யானது என்றும் கருதுகிறோம்.

## நிகண்டு பிரமாணம்

நிகண்டு என்ற சொல்லுக்கு அகராதி என்று பொருள் கூறலாம். ஆயுர்வேதத்தில் பலவித நிகண்டுகள் உள்ளன அவையெல்லாம் பலவித திரவ்யங்களைப் பற்றியும் அவற்றின் குணங்களைப் பற்றியும் அவற்றுக் கும் தோஷத்திற்குமுள்ள தொடர்பு பற்றியம் கூறுகின்றன. இந்த நிகண்டு களை எல்லாம் கூட ஆப்தோபதேசம் என்று கூறலாம்.

## ஐதீக பிரமாணம்

மக்களின் நம்பிக்கையும், ஐதீகம் என்று கூறுகின்றவையும் கூட ஆப்தோபதேசம் ஆகின்றன. இராமாயணம், மஹாபாரதம், உபநிடதம், கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் போன்ற விஷயங்களை ஐதீகப் பிரமாணங்களாக இந்திய நாட்டு மக்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

## சப்தப் பிரமாணம்

மெய்யறிவு பெற்ற சான்றோர்களின் வாக்கியத்திற்கு சப்த பிரமாணம் என்று பெயர். (இதை ஆப்த வாக்கிய சப்தம் என்று கூறுவார்கள்.) சப்தம் என்றால் ஒலி என்று பொருள். நல்வார்த்தைகள், அர்த்தம் புதைந்த

வார்த்தைகள் மெய்யறிவைத் தருகின்ற வார்த்தைகள் என்றே சப்தத்திற்கு இந்த இடத்தில் நாம் பொருள் கூற வேண்டும். சப்தம் என்றால் வெறும் ஒலி என்று மொழிபெயர்க்கக் கூடாது.

பானை என்று சொன்னால் அது இவ்வாறு இருக்கும் என்று நாம் உணாந்து கொள்கிறோம். எனவே பானை என்ற சொல்லிற்கு ஒரு பொருளைத் தரும் ஆற்றல் உள்ளது. இது இறைவனின் விருப்பமாக உள்ளது என்று தர்க்க சங்கிரஹம் கூறுகிறது. ஓம் என்னும் மந்திரம் ஆன்மீகத்தில் முக்கிய ஒலியாக கருதப்படுகிறது. உபநிடதங்கள் இதையே பிரம்மமாக வர்ணிக்கின்றன.

'ஓம் இதி ஏகாக்ஷரம் பிரம்ம' (உபநிடதம்)

### சப்த லட்சணங்கள் மற்றும் வகைகள்

இந்த சப்தத்தை வைதிகம், லௌகிகம் என இருவிதமாகப் பிரிக்கலாம். வைதிகம் என்று சொல்வது இறை சார்ந்தது. மந்திரங்கள், பாடல்கள் ஸ்தோத்திரங்கள் போன்றவையாகும். லௌகிகம் என்று சொல்லுவது அன்றாட வாழ்வில் நாம் பயன்படுத்தும் பேச்சுச் சொற்களாகும். சரகர் சப்தத்தை நான்காகப் பிரிக்கிறார். அவையாவன. திருஷ்டார்த்தம், அதிருஷ்டார்த்தம், சத்யம் மற்றும் அனாதம் என்பனவாகும்.

- **திருஷ்டார்த்தம்**: ஏதாவது ஒரு சொல்லானது அல்லது ஒலியானது காணக்கூடிய பொருளைக் குறிப்பிட்டு சொல்லப்படுமானால் அதற்கு திருஷ்டார்த்தம் என்று பெயர். எடுத்துக்காட்டு : மரத்தைப் பார்த்து ஆலமரம் என்று கூறுவது, வாதத்தை மூட்டுவாதம் என்பது போன்றவற்றைக் கூறலாம்.

- **அதிருஷ்டார்த்தம்**: காணமுடியாத வஸ்துவை விளக்கிக் கூறும் சொற்களுக்கு அதிர்ஷ்டார்த்தம் என்று பெயர். எடுத்துக்காட்டு : மறுபிறப்பு, இறந்தபின் ஏற்படும் வாழ்க்கை, சொர்க்கம், இரண்ய லோகம், நரகம் போன்ற குறிப்புகள்

- **சத்யம்**: உண்மையை விளக்கும் சொற்கள். எடுத்துக்காட்டு : இந்த நோய் குணமாகும், இந்த நோய் குணமாகாது போன்ற சொற்கள்.

- **அன்ரிதம்**: பொய்யான விஷயங்களைக் குறிப்பிடும் சொற்கள். எடுத்துக்காட்டு பாம்பு விஷம் மனிதனை கொல்லாது என்று நாம் கூறினால் அது எவ்வளவு பொய்யானதோ அதைப் போன்றது.

## சப்தார்த்த போதகவ்ருத்தி

பொருள்களை வெளிப்படுத்தும் சொற்களுக்கு மூன்றுவித குணங்கள் குறிப்பிடப்படுகின்றன. அவையாவன: அபிஹிதம், லட்சணம், வியஞ்சனம்

- **அபிஹிதம்**: நேரடியான பொருள்களை விளக்கும் சொற்றொடர் களுக்கு அபிஹிதம் என்று பெயர். கடுக்காய் சாப்பிட்டால் மலமிளகும் என்று கூறினால் அது அபிஹிதம் ஆகும்.
- **லட்சணம்**: நேரடியாக இல்லாமல் குறிப்பால் உய்த்துணர வைப்பதற்கு லட்சணம் என்று பெயர். உதாரணமாக ஒரு கிராமம் வறுமையால் வாடுகிறது என்று கூறுகிறோம். உண்மையில் கிராமம் வாடவில்லை. கிராமத்தில் உள்ள மக்கள் வறுமையில் வாடுகிறார்கள் என்று கூறலாம்.
- **வியஞ்சனம்**: நேரடியாகவும் சொல்லாமல், சந்தர்ப்பத்திலும் சொல்லாமல் குறிப்பால் உணர்த்தும் சொற்கள் வியஞ்சனம் எனப்படும். உதாரணமாக பத்துமணிக்கு ஒரு மாணவன் பள்ளிக்கு வரவேண்டும். அவன் 12 மணிக்கு வந்தால், ஆசிரியர் மணி இப்பொழுதுதான் 10 ஆயிற்றா என்று கேட்பது வியஞ்சனமாகும்.

ஆயுர்வேதத்தில் பல புத்தகங்களில் நேரடியாகக் கருத்துக்களைக் கூறாமல் மேற்கூறிய தத்துவங்களில் சொற்றொடர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

## விருத்தி வர்ணனம் – சப்தார்த்த போதக வர்ணனம்

ஒவ்வொரு வார்த்தைக்கும் பல அர்த்தங்கள் உள்ளன. சில வார்த்தை களுக்கு குறிப்பிட்ட அர்த்தங்களே உள்ளன. சில சந்தர்ப்பங்களில் நாம் பயன்படுத்தும் சொற்களும், பதங்களும் சரியான அர்த்தத்தை எடுத்துரைக் கின்றன. சில சந்தர்ப்பங்களில் அவ்வாறு நிகழ்வதில்லை. இதைத் தவிர்ப் பதற்கு சப்தார்த்த போதக விருத்தி பயன்படுகிறது. ஒரு சொல்லுக்கும்

அந்த சொல்லினால் விளக்கப்படும் பொருளுக்கும் உள்ள தொடர்பை எடுத்துரைப்பது விருத்தியாகும். இது நான்கு வகைப்படும். அவை

அபிதான விருத்தி
லட்சண விருத்தி
வியஞ்சன விருத்தி
தாத்பர்யாக்ய விருத்தி

என்பனவாகும்.

**1. அபிதான விருத்தி**: ஒரு சொல்லுக்கு நேரடியாக பொருள் கூறப்படுமானால் அதற்கு அபிதான விருத்தி என்று பெயர். இராமன் பள்ளிக்குச் சென்றான். கிருஷ்ணன் பள்ளியில் படிக்கிறான் என்று சொல்கிறோம். இது நேரடியாக மற்றும் இலகுவாக கருத்தை உணர வைக்கிறது. இதற்கு அபிதானம் என்று பெயர். இது ரூடம், யௌகிகம், யோகரூடம் என மூன்று வகைப்படும்.

**ரூடம்**: ஒரு வார்த்தையின் அர்த்தத்தை உணர்த்தும் சக்திக்கு ரூடம் என்று பெயர் அல்லது ஒரு வார்த்தையின் சக்திக்கு ரூடம் என்று பெயர். இவை பிரித்தால் பொருள் தராது. உதாரணம் – கடம், படம் என்பவை. பிரிக்காமல் இருக்கும் பொழுது அந்த வார்த்தையானது ஒரு சக்தியைத் தாங்கியிருக்கிறது. இதற்கு ரூடம் என்று பெயர்.

**யௌகிகம்**: பாசகன் என்ற ஒரு வார்த்தை இருக்கிறது. இதில் பசனம் என்னும் சமையலைச் செய்வதால் இவன் பாசகன் என்று அறியப்படுகிறான். இங்கே பிரித்தால் பொருள் கிடைக்கிறது. இதைத் தமிழில் பகு பதம், பகா பதம் என்று குறிப்பிடுவார்கள்.

**யோக ரூடம்**: பங்கஜம் என்று ஒரு வார்த்தையை எடுத்துக் கொள்வோம். சேற்றில் வளர்வதால் இதற்கு செந்தாமரை, சேற்றில் வளரும் செந்தாமரை என்று பொருள்.

இது பகலிலேயே மலரும் என்று பிரிக்காமல் பொருள் தருவதால் இது ரூடமாகிறது. கமலமானது இரவில் விரிவடையும். இது கமலமில்லை என்ற அர்த்தத்தை தருவதால் இது யோக ரூடமாகிறது.

**2. லட்சண விருத்தி**: வார்த்தைக்கும், வார்த்தையின் பொருளுக்கும் உள்ள தொடர்பை இது உணர்த்துகிறது. ஒரு சொல்லின் அர்த்தத்தை இது உணர்த்துகிறது.

கங்காயாம் கோஷகா என்ற வார்த்தையை எடுத்துக் கொள்வோம். கங்கைக் கரையில் ஒரு ஆஸிரமம் உள்ளது. கங்கை என்று கூறும் பொழுது இது ஒரு நதியாகும் என்பதைப் புரிந்து கொள்வோம். ஆஸிரமம் என்று சொல்லும் பொழுது இது தண்ணீரில் இல்லை ஆனால் கரையில் உள்ளது என்பதை நாம் புரிந்து கொள்வோம். இவ்வாறு வார்த்தைக்கும் அதன் அர்த்தத்திற்கும் உள்ள தொடர்பை இது ஏற்படுத்துவதால் இதற்கு லட்சண விருத்தி என்று பெயர்.

**3. வியஞ்சன விருத்தி**: ஒரு வார்த்தையின் சக்தியால் உணர்த்தப் படும் அறிவுக்கு வியஞ்சன விருத்தி என்று பெயர். சொன்னால் கேட்காத ஒரு பையனிடம் தாயானவள் 'இங்கே வா உனக்கு சாப்பாடு தருகிறேன்' என்று சொல்லும் பொழுது சாப்பாடு என்ற வார்த்தையை அந்த பையன் அடி என்று புரிந்து பயப்படுகிறான். இவ்வாறு ஒன்றைச் சொல்லும் பொழுது மற்றொன்றை புரிந்து கொள்வதற்கு வியஞ்சன விருத்தி என்று பெயர்.

**4. தாத்பர்யாக்ய விருத்தி**: சில சொற்களுக்கு பல அர்த்தங்கள் காணப்படும். அந்த சொற்களை உச்சரிக்கும் பொழுது சரியான பொருளை புரிந்து கொள்ள முடியாது. இதற்கு தாத்பர்யாக்ய விருத்தி என்று பெயர். ஸந்தானம் என்ற வார்த்தை ஆயுர்வேதத்தில் பயன்படுத்தப்படுகிறது. அரிஷ்ட ஆஸவங்களைச் செய்வதற்கு ஸந்தானம் என்று பெயர். மருந்துச் சாறுகளை சர்க்கரை தேன் சேர்த்து பூமிக்கடியில் புதைத்து வைத்து குறிப்பிட்ட நாட்களுக்கு பின் எடுப்பார்கள். இது புளிப்புத் தன்மை பெறும். இதற்கு ஸந்தான கல்பனை என்று பெயர். சல்ய தந்திரத்தில் ஸந்தானம் என்று சொன்னால் உடைந்த எலும்புகளை ஒட்டுதல் என்று பொருள். அதைப் போல் சைந்தவம் என்ற வார்த்தைக்கு உப்பு என்றும் குதிரை என்றும் பொருள் உண்டு. சாப்பிடும் பொழுது ஒருவன் சைந்தவத்தைக் கொண்டு வா என்று சொன்னால் உப்பைத்தான் கேட்கிறான் என்று

அர்த்தம். சந்தர்ப்ப சூழ்நிலைக்கு ஏற்ப பொருட்களை புரிந்து கொள்வதற்கு தாத்பரியம் என்று பெயர்.

**வாக்கியம்**

பல சொற்களின் சேர்க்கையே வாக்கியமாகும். ஒரு வாக்கியம் உருவாவதற்கு நான்கு ஹேதுக்கள் தேவை. அவை,

ஆகாங்க்ஷா
ஸன்னிதி
யோக்யதை
தாத்பரியம்

என்பனவாகும்.

**1. ஆகாங்க்ஷா**

ஆகாங்க்ஷா என்றால் சரியான சொற்களின் சேர்க்கையால் வாக்கியங்களை உருவாக்கி பொருளை நன்றாக விளக்குவது என்று பொருள்.

ஒரு சொற்றொடரில் காணப்படும் பல சொற்களின் இணக்கமே ஒரு சொற்றொடரை பூரணமானதாக ஆக்குகிறது. ஒரு சொல்லுக்கும் மற்றொரு சொல்லுக்கும் சம்பந்தம் இருந்தால்தான் அந்த வாக்கியம் அர்த்தத்தைத் தருகிறது. ஒரு வார்த்தைக்கு முன்னோ பின்னோ சரியான வார்த்தை அமைந்தாலே நாம் எதைச் சொல்ல விரும்புகிறோமோ அந்த கருத்து எடுத்துரைக்கப்படுகிறது. இல்லாவிட்டால் அந்த வாக்கியமானது அர்த்தமற்றதாக அல்லது தவறான அர்த்தத்தை வெளிப்படுத்தும்படியாக அமைகிறது.

ஒரு வாக்கியத்தில் சில சொற்கள் இல்லையெனில் சரியான அர்த்தத்தை வெளிப்படுத்த முடியாது. உதாரணமாக ஒரு மண்குடத்தைக் கொண்டு வா என்ற வாக்கியத்தை எடுத்துக் கொள்வோம். இதில் மண்குடம் என்ற வார்த்தையும் கொண்டு வா என்ற வார்த்தையும் சேரும்பொழுதே ஒரு கருத்து வெளிப்படுத்தப்படுகிறது. கொண்டு வா என்று சொன்னால் நாம் எதைப் புரிந்து கொள்வோம்? மண்குடத்தைக்

கொண்டு வா என்று சொல்லும் பொழுது கொண்டு வா என்ற வார்த்தைக்கு ஒரு அர்த்தம் உருவாகிறது. இதுவே ஆகாங்க்ஷா எனப்படும்.

## 2. யோக்யதை

ஒரு வாக்கியத்தில் உள்ள எந்த சொல்லானாலும் மற்றொரு சொல்லுடன் முரண்பாடு இல்லாததாக இருக்க வேண்டும். இதற்கு யோக்யதை என்று பெயர். அவன் தன் கண்களால் பார்க்கிறான் என்று கூறுகிறோம். இது ஒரு யோக்யதையான வாக்கியம். இதல்லாமல் தண்ணீர் விட்டு நெருப்பை வளர்த்தான் என்று கூறினால் இது முரண்பாடானது. இது யோக்யதை அற்றதாகும்.

## 3. ஸன்னிதி

சரியான இடைவெளி விட்டு ஒரு சொற்றொடரை உச்சரிப்பதற்கு ஸன்னிதி என்று பெயர். உதாரணமாக இங்கே ஒரு குதிரையைக் கொண்டு வா என்று கூறினால் நாம் அதைப் புரிந்து கொள்வோம். இங்கே என்று சொல்லிவிட்டு இடைவெளிவிட்டு குதிரையை என்று மீண்டும் இடை வெளிவிட்டு நாம் சொன்னால் அது பொருள் உணர்ந்ததாக ஆகாது.

## 4. தாத்பரியம்

சரியான கருத்தைப் புரிந்து கொள்வதற்கு தாத்பரியம் என்று பெயர். ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் இதோ ஒரு கழுதை போகிறது என்று நாம் கூறும் பொழுது நண்பரானவர் நம்மைத்தான் கூறுகிறாரோ என்று கருதி தவறாகப் புரிந்து கொள்ளலாம். இதனால் தாத்பரியம் கெட்டுப்போகிறது. எனவே சபையில் சொற்றொடர்களைப் பயன்படுத்தும் பொழுது இடமறிந்து பயன்படுத்த வேண்டும்.

## சப்தமும் சப்த உற்பத்தியும்

சப்தம் மூன்றுவிதங்களில் உருவாகிறது.

1. **ஸம்யோகம்**: இரு பொருள்களின் சேர்க்கையால் உருவாவது சப்தம். நாக்கிற்கும், உதடுக்கும் ஏற்படும் சம்பந்தத்தால் ஒலி உருவாகிறது.

2. **விவாதம்**: ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளை மாற்றும் பொழுது சப்தம் உருவாகிறது. ஒருவர் புல்லாங்குழல் வாசிக் கிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர் ஒரு குழலில் உள்ள ஒட்டை வழியாக ஊதுகிறார். விரல்களை வைத்து ஒட்டைகளை திறந்து மூடுகிறார் இதன்மூலமும் ஒலி உருவாகிறது.

3. **சப்தாந்தரம்** (எதிரொலி): ஒரு ஒலியிலிருந்து ஏற்படும் மற்றொரு ஒலியை சப்தாந்தரம் என்றுக் குறிப்பிடலாம். சப்தங்களை மேலும் வர்ணாத்மகம், துவன்யாத்மகம் என்றும் பிரிக்கலாம்.

அ) **வர்ணாத்மகம் என்ற சப்த உற்பத்தி**: ஒரு மனிதன் ஒரு சொற்றொடரை அல்லது தன் கருத்துக்களை வெளிப்படுத்த வேண்டுமெனில் அந்த எண்ணமானது ஆத்மாவில் உருவாக வேண்டும். இந்த ஆத்மாவானது பஞ்சபிராணன்களை செயல்பட வைக்கிறது. இந்த பிராணன் கண்டம் என்ற தொண்டையிலும், தாடையிலும் வேலை செய்கிறது. இது ஸ்வர யந்திரத்தில் தாக்கத்தை ஏற்படுத்தி உதான வாயுவின் தொடர்பினால் பலவிதமான ஒலிகளை ஏற்படுத்துகிறது.

ஆ) **துவன்யாத்மக சப்தம்**: பொருளில்லாத ஒலிகளுக்கு தவன் யாத்மகம் என்று பெயர்.

**சக்தி**: ஒவ்வொரு வார்த்தைக்கும், ஒரு பொருளைத் தெரிவிக்கும் சக்தி உள்ளது. பானை என்று சொன்னால் அதைப் புரிந்து கொள்பவன் இது இவ்வாறு இருக்கும் என்றும், இது மண்ணினால் செய்யப்பட்டது என்றும், இதில் நீர் போன்றவற்றைச் சேமித்து வைக்கலாம் என்றும் புரிந்து கொள்கிறான். இதே போல் பூனை என்பதும் ஒரு அர்த்தத்தை தெரிவிக் கிறது. ஒவ்வொரு வார்த்தையின் அர்த்தமும் ஈஸ்வரனின் இச்சை என்று கூறுகிறார் தர்க்க ஸங்க்ரகத்தை எழுதிய அன்னம் பட்டர். பானை என்பது காரியமாகிறது. மண் பானையை செய்பவன், செய்வதற்கான கருவி போன்றவை காரணமாகிறது. செய்யும் முறை வியாபாரமாகிறது. இதே போல் சப்தம் என்பது காரணமாகிறது. சப்தத்தினால் புரிந்து கொள்ளும் விஷயங்கள் காரியமாகிறது. அபிஹிதா, லட்சணம், வியஞ்சனம், போன்ற சப்தங்களின் பலவித இலக்கணங்கள் சப்தத்தின் வியாபாரமாகின்றன. இதை சக்தி என்றும், விருத்தி என்றும் நாம் குறிப்பிடுகிறோம்.

**சக்தி கிரஹம்**: ஒரு ஒலியில் ஆழ்ந்திருக்கும் சக்தியை உணர்ந்து கொள்ளும் முறைக்கு சக்தி கிரஹம் என்று பெயர். இதை வியாகரணம் என்ற இலக்கணங்களைச் சார்ந்தும், உவமானம் என்ற ஒப்புமையைச் சார்ந்தும், கோசம் என்ற அகராதியைச் சார்ந்தும், ஆப்த வாக்கியம் என்ற சான்றோர் வாக்குகளைச் சார்ந்தும் , விவகாரம் என்ற அன்றாட வாழ்வில் பயன்படுத்தப்படும் வார்த்தைகளின் சொற்றொடர்களைச் சார்ந்தும் நாம் புரிந்து கொள்கிறோம். இதற்கு சக்தி கிரஹம் என்று பெயர். இது எட்டு வகைப்படும்.

1. **வியாகரணம்**: என்னும் இலக்கணம் (ஒரு சொற்றொடரில் வினைச்சொல், பெயர்ச்சொல் போன்றவை முறையாகப் பயன்படுத்தியிருக்க வேண்டும்)

2. **உபமானம்**: ஒரு பொருளை விளக்குவதற்கு அதை மற்றொன்றுடன் ஒப்பிட்டுக் கூறுதல்

3. **கோசம்**: அகராதி (உதாரணமாக அமிர்தம் என்று சொன்னால் இறவாத நிலை என்று பொருள். ஆயுர்வேதத்தில் சீந்தில் கொடி என்று பொருள். நிஷா என்று ஆயுர்வேதத்தில் சொன்னால் அதற்கு மஞ்சள் என்று பொருள். பொது அர்த்தத்தில் இரவு என்று பொருள்.

4. **ஆப்தவாக்கியம்**: சரகர், ஸுச்ருதர் போன்ற சான்றோர்களின் வாக்கு. அதனால் நாம் ஏற்றுக் கொண்டு அன்றாட வாழ்வில் பயன்படுத்தக் கூடிய விஷயங்கள்

5. **விவகாரம்**: ஒருவர் செய்யும் வேலையைப் பொறுத்து அவர் பயன்படுத்தும் சொல்லின் அர்த்தத்தைப் புரிந்து கொள்வது. நகை செய்பவர், மருத்துவர் இவர்களுக்கென்று சில சொற்கள் இருக்கும். இதற்கு விவகாரம் என்று பெயர்.

6. **வாக்கிய சேக்ஷம்**: முழுமை பெறாத வாக்கியங்கள். சில வாக்கியங்களில் ஒரு சில சொற்களே காணப்படும். ஆனால் நாம் அதைப் படிக்கும் பொழுது சில பொருளே விளங்கும்.

7. **விவ்ருதி**: ஒரு சிறிய வார்த்தையைக் கூறினாலே அதன் முழுமை யான விஸ்தாரமான பொருளைப் புரிந்து கொள்வது. பசதி என்றால் சமைப்பது. இவ்வாறு கூறும் பொழுது ஒருவர் பலதரப்பட்ட உணவுகளைத் தயாரிக்கிறார்கள் என்பதை நாம் புரிந்து கொள் கிறோம்.

8. **ஸித்தி பத ஸான்னித்யம்**: நன்றாக அர்த்தம் தெரிந்த சொல்லுடன் வேறு ஒரு சொல் பயன்படுத்தப்படும் பொழுது அர்த்தம் அறியாத சொல்லையும் நாம் புரிந்து கொள்ளுதல்.

உதாரணமாக வடமொழியில் விகஸித பத்மே மதுகரிகா திருஷ்டதி என்று சொல்லும் பொழுது, ஒரு மலர்ந்த தாமரையில் ஒரு தேனீ அமர்ந் துள்ளது. இதில் மதுகரகா என்றால் தேனீ என்று பொருள். இந்த வார்த் தைக்கு பலருக்கும் அர்த்தம் தெரியாது. தாமரை என்றால் அர்த்தம் பலருக்கும் தெரியும். தாமரையுடன் இந்த வார்த்தைப் பயன்படுத்தப்படும் பொழுது இதன் பொருள் விளங்குகிறது. இதற்கு ஸித்திபத ஸான்னித்யம் என்று பெயர்.

**சக்தி கிராஹகன்**

சக்தி கிராஹத்தினால் பலனை அனுபவிப்பவன் சக்தி கிராஹகன் என்று அழைக்கப்படுகிறான். நாம் எல்லோரும சக்தி கிராஹகர்களே.

# 5. யுக்தி

யுக்தி என்ற சொல்லிற்கு யோசனை என்று பொருள். இதைப் பகுத்தறிவு என்றும் கூறலாம். எந்தவொரு செயலையும் நன்றாக யோசனை செய்து செய்வதற்கு யுக்தி என்று பெயர். யுக்திக்குப் புத்தி காரணமாகிறது. பலவிதக் காரணங்களின் சேர்க்கையை நாம் உணர்ந்து கொள்ளும் விதத்திற்கு யுக்தி என்று பெயர். யுக்தியினால் பெறப்படும் அறிவு கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்று நிலையிலும் பயன்படுகிறது. தர்மம், அர்த்தம், காமம் என்று சொல்கின்ற புருஷார்த்தங்களை அடைவதற்கு யுக்தி பயன்படுகிறது. உதாரணமாக நீர், பூமி, உழுதல், வித்து, சரியான காலம் இவற்றின் சேர்க்கையால் விவசாயி ஒருவனுக்கு நல்ல விளைச்சல் ஏற்படுகிறது. இது அனைத்தையும் சேர்த்து புரிந்து கொள்வதற்கு யுக்தி என்று பெயர். பஞ்சமஹாபூதங்களும் ஆத்மாவின் இணக்கத்தினாலேயே சிகிச்சா புருஷன் உருவாகிறான் என்று புரிந்து கொள்வதும் யுக்தியாகும். கற்கள் உராயும் பொழுது நெருப்பு ஏற்படும் என்று அறிவதும் யுக்தியாகும். வைத்தியன், மருந்து, ரோகி, உபஸ்தன் (செவிலியர்) எனும் சேர்க்கையாலே நல்ல சிகிச்சை நடைபெறும் என்பதும் யுக்தியாகும். ஒரு சில பொருட்களின் சேர்க்கையால் ஒரு சில விளைவுகள் உண்டாகின்றன என்பதைப் புரிந்து கொள்வதற்கு யுக்தி என்று பெயர். சரகர் யுக்தி பிரமாணத்தைப் பற்றி மிகவும் அற்புதமாகப் பேசுகிறார். வேறு எந்த ஒரு தரிசனங்களும் யுக்தியை ஒரு தனிபிரமாணமாகக் கூறுவதில்லை. சரகர் இதை தனிப்பிரமாணமாகவே கூறுகிறார். பின்னர் விமான

ஸ்தானத்தில் கூறும் பொழுது, யுக்தியை அனுமானத்தில் உட்படுத்தி கூறுகிறார். யுக்திக்கும், அனுமானத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆயுர்வேதத்தில் யுக்தி விபாச்ரய சிகிச்சை என்று ஒரு சிகிச்சை முறை உள்ளது. எந்தவொரு சிகிச்சையானது யுக்தியைச் சார்ந்திருக்கிறதோ அதற்கு யுக்தி விபாச்ரய சிகிச்சை என்று பெயர். புத்தகத்தில் உள்ள பல விஷயங்களை நாம் படித்திருந்தாலும் சமய சந்தர்ப்பத்திற்கு ஏற்ப இவற்றிற்கு இது பயன்படும், இது பயன்படாது என்பதை நமது பகுத்தறிவுடன் ஆராய்ந்து செய்கின்ற சிகிச்சை யுக்திவிபாச்ரய சிகிச்சையாகும். அஜீரணத்தில் வாந்தி செய்விப்பது. சிறு குழந்தைகளுக்கு உண்டாகும் பேதியை நிறுத்துவது, விஷத்திற்கு நாம் செய்கின்ற சிகிச்சைகள் போன்றவை புத்தகங்களிலிருந்து சில சமயம் மாறுபடும். ஆனால் புத்தி பூர்வமாக இருக்கும். இப்படிப் புத்தி பூர்வமாக சமய சந்தர்ப்பத்திற்கு ஏதுவாக சில சமயங்களில் நாம் சிகிச்சை செய்து வருகிறோம். இதற்கு யுக்தி விபாச்ரயம் என்று பெயர். இதுவே ஒரு முக்கியமான சிகிச்சை அம்சமாகும்.

சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானம் 11 வது அத்தியாயத்தில் யுக்தியைப் பற்றிக் கூறுவதை நாம் காணலாம்.

இதில் திஸ்ரைஷனீயம் என்ற மனிதனின் மூன்று வகை ஆசைகளாகிய உயிர் வாழ்தல், பொருள் ஈட்டுதல், வீடுபேறு போன்றவற்றை விளக்கிக் கூறுகிறார். இந்த அத்தியாயத்தில்தான் யுக்தியை ஒரு பிரமாணமாக கூறுகிறார். நீர், உழுதல், பருவம், விதை இவற்றின் சேர்க்கையால் நெல் போன்ற தானியங்கள் உண்டாகின்றன. அதேபோல் ஐம்பூதங்களுடன், ஆத்மாவின் சேர்க்கையால் கரு உருவாகிறது என்ற கருத்தை விளக்குகிறார். கடைதல், கடைவதற்கான கட்டை, கட்டையின் சுழற்சி இவற்றின் சேர்க்கையால் நெருப்பு உருவாகிறது. அதேபோல் வழியறிந்த மருத்துவன், மருந்து, பணியாளன், நோயாளி என்ற சிகிச்சையின் நான்கு பாகங்களினால் நோய் குணமாகிறது என்று கூறுகிறார். தெரிந்த பொருளின் காரிய காரணத் தன்மை மற்றும் தோற்றத்தைப் பற்றிய அறிவு ஏற்பட்டபின் பல காரணங்களின் சேர்க்கையினால் ஏற்படும் அறியாத பொருளின்

தோற்றத்தை அறிந்து கொள்ளும் அறிவு யுக்தி என்று கூறுகிறார். உதாரணமாக ஒரு பொருள் இருக்கிறது. அதைப் பற்றி நமக்கு நன்றாக தெரிகிறது. அதனுடைய காரணமும் தெரிகிறது. அதனால் காரியத்தை வைத்து காரணங்களை நாம் புரிந்து கொள்கிறோம். இதை யுக்தி என்று கூறுகிறார். இது இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்று காலங்களிலும் பயன்படுகிறது என்றும் இதனால் அறம் பொருள், இன்பம் என்ற மூன்றும் கிடைக்கிறது என்றும் கூறுகிறார்.

யுக்தி என்னும் அறிவானது ஒரு நிறைவு பெற்ற செயலையோ அல்லது செயலின் காரணத்தையோ விளக்க உதவுகிறது அல்லது காரணத்தைக் கொண்டு ஒரு காரியம் எவ்வாறு நிறைவு பெறும் என்பதை அறிய உதவுகிறது. யுக்தியை ஒரு பிரமாணமாக ஏற்றுக் கொள்ள முடியாது என்றும், பிரமாணத்திற்கு உதவும் ஒரு அம்சமாக ஏற்றுக் கொள்ளலாம் என்ற கருத்து பல இடங்களில் பிற புத்தகங்களில் காணப்படுகிறது. சரகரானவர் விமானம் 4வது அத்தியாயம் 5வது வரியில் பிரத்யக்ஷம், அனுமானம், ஆப்தோபதேசம் என மூன்று பிரமாணங்களைக் குறிப்பிடுகிறார். அங்கு யுக்தியைப் பற்றிக் குறிப்பிடப்படவில்லை. சரக ஸம்ஹிதை விமான ஸ்தானம் 8 வது அத்தியாயமாகிய ரோகபிஷஜ்ஜதீயம் எனும் அத்தியாயத்தில் நான்கு பிரமாணங்களில் உபமானத்தையும் சேர்த்துச் சொல்கிறார். நடக்கின்ற விஷயங்களை வைத்து எதிர்காலத்தைச் சொல்வதற்கு யுக்தி என்று சொல்கிறோம். ஆனால் அதையே அனுமானம் என்று கூறுபவர்களும் உண்டு. தத்வ சங்கிரஹத்தினை எழுதிய சாந்த ரக்ஷிதர் யுக்தியை ஏற்றுக் கொள்வதில் உள்ள கருத்து வேறுபாடுகளை தெரிவிக்கிறார்.

சரகர் யுக்தியை தனிப் பிரமாணமாகக் கொள்கிறார் என்பதில் கருத்து வேறுபாடு நிலவுகிறது. சாந்தரக்ஷிதர் இதை அனுமானத்தைக் கொண்டே உணரலாமே என்கிறார். ஒன்றிற்கொன்றுள்ள தொடர்பைப் பற்றியும், நிகழ்வைப் பற்றியும் அனுமானத்தினால் ஊகிக்கலாம் என்கிறார். பானையை வைத்து பானை செய்பவனை நினைப்பது, பல இசைக் கருவிகளைப் பார்க்கும் பொழுது அதிலிருந்து வரும் ஒலிகளை ஊகிப்பதெல்லாம் யுக்தியாகக் கருதினாலும் இவையெல்லாம்

அனுமானமே என்று குறிப்பிடுகிறார்.

ஆயுர்வேதம் மூன்று ஸூத்திரவடிவில் அமைந்துள்ளது. அவை ஹேது ஸூத்திரம், லிங்க ஸூத்திரம், ஔஷத ஸூத்திரம் என்று பெயர். இந்த ஸூத்திரங்கள் நோயுற்றவருக்கும், நோயற்றவருக்கும் பொருந்தும். நோயற்றவரை ஸ்வஸ்தன் என்று கூறுகிறோம். சரியான உணவு, பழக்க வழக்கங்கள் அவருக்கு ஹேதுவாகிறது. தோஷ தாதுக்களின் சமநிலைமை அவரது ஆரோக்கியத்திற்கு லிங்கமாகிறது. ரஸாயனம், இரண்டு மாதங்களுக்கிடையில் எடுக்கின்ற சோதனம் (சுத்தி சிகிச்சை) போன்றவை அவருக்கு ஔஷதமாகிறது. அதைப்போல் நோயினால் அவதிப்படும் ஒரு மனிதருக்கு தவறான உணவுப் பழக்கங்கள் ஹேதுவாகிறது(காரணம்). வாத பித்தக் கபங்களைச் சார்ந்து வரும் லட்சணங்கள் லிங்கமாகிறது. இதற்கு மருத்துவம் செய்யும் சிகிச்சைகள் ஔஷதமாகிறது. இவ்வாறு ஆயுர்வேதம் திரிஸூத்ர வடிவில் அமைந்துள்ளது. இதைத் தொடங்குகின்ற சரகர் ஆயுர்வேத நூலின் இலக்கணத்தைக் கூறிவிட்டு ஆயுளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். பின்பு மற்ற தரிசனங்களைப் போல் திரவ்யம், குணம், கர்மம் என்று தொடங்காமல் ஸாமான்யம், விசேஷம், என்ற இரண்டு பதார்த்தங்களைக் கொண்டே அந்த அத்தியாயத்தைத் தொடங்குகிறார். சிகிச்சைக்கு இவை முக்கிய பதார்த்தங்களாக இருப்பதால் திரவ்யம், குணம், கர்மம் என்று நியாயத்தைப் போல் தொடங்காமல் ஸாமான்யம், விசேஷத்தைச் சொல்லிவிட்டு திரவ்யம், குணம் சொல்கிறார் என்பதை புரிந்து கொள்ள வேண்டும். ஆயுர்வேதம் ஒரு ஒருங்கிணைந்த பூரணமான மருத்துவ முறை என்பதை முதல் அத்தியாயத்திலேயே சரகர் விளக்குகிறார். சிகிச்சைக்கு யுக்தியை பிரமாணமாக சரகர் ஏற்றுக் கொள்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

# 6. உபமானம்

உபமானம் என்றால் ஒப்பிடுதல் என்று பொருள். ஒரு பொருளை யும் மற்றொரு பொருளையும் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது கிடைக்கும் அறிவுக்கு உபமானம் என்று பெயர். கவயம் என்று ஒரு விலங்கு இருந்ததாக பழைய புத்தகங்களில் கூறுகிறார்கள். அது எவ்வாறு இருக்கும் என்று கேட்டால் கவா என்ற பசுவைப் போல இருக்கும் என்று கூறுகிறார்கள். பசு எல்லாருக்கும் தெரிந் திருக்கும், கவயா என்று சொன்னால் யாருக்கும் தெரியாது. இப்பொழுது கவயா என்று விளக்கிக் கூறுவதற்கு பசு பயன் படுகிறது. இதற்கு உபமானம் என்று பெயர். இங்கு கவயா பசுவை விளக்கிக் கூறுவதற்கு பயன்படுத்தப்படுவதால் இதற்கு உபமிதி என்று பெயர். ஆயுர்வேதத்தில் தண்டகம் என்று ஒரு வியாதி உள்ளது. அஜீரணத்தினால் பாதிக்கப்பட்ட நோயாளி தண்டம் போல (மரக்கட்டை போல) வீழ்ந்துவிடுவான் என்று இதற்கு பொருள். இது ஒருவகை உபமானமாகும். இரத்தத்தினாலும், வாதத்தினாலும் மூட்டில் ஏற்படுகின்ற ஒருவகை வாதம், நரியின் தலைபோல இருக்கும். இதை குரோஷ்டுக சீருஷம் (நரித்தலை வாதம்) என்று கூறுகிறார்கள். இது ஒரு உபமானம் ஆகும். மஞ்சள் காமாலையால் ப்ாதிக்கப்பட்ட ஒருவனுக்கு வயிற்றில் நீர் சேர்ந்து வயிறு பானை போன்று இருக்கும். இதனை கும்ப காமலா என்று பானையுடன் ஒப்பிடுகிறார்கள். க்ஷுத்ர குஷ்டங்களில் பல குஷ்டங்களும் கடுகு போல இருக்கும், வெண்மையாக இருக்கும், பயிறு போல இருக்கும் என்றெல்லாம் கூறுகிறார்கள். குஷ்டம் முழுக்க முழுக்க உபமானத்தையே சார்ந்திருக்கிறது. மானினுடைய

நாக்கைப் போல் இருக்கின்ற குஷ்டம், மண்பானையைப் போல் இருக்கின்ற குஷ்டம், தாமரைப் போன்று இருக்கின்ற குஷ்டம் என்றெல்லாம் உபமானமாகக் கூறுகிறார்கள். பிரமேகம் என்னும் சர்க்கரை நோயினால் வருகின்ற பலவித கட்டிகளும் உபமானத்தினுடனையே கூறப்படுகின்றன. தெரியாத ஒரு பொருளை தெரிந்த ஒரு பொருளுடன் ஒப்பிட்டுக் கூறுவது பண்டைய புத்தகங்களின் மரபாகும். ஸாங்கிய,யோக, வைசேஷிக போன்றவர்கள் உபமானத்தை தனியாக ஒரு பிரமாணமாகக் கருதுவதில்லை. இதை அனுமானத்திற்கு உட்படுத்தியே கருதுகிறார்கள். நியாய தரிசன வாதிகள் உபமானத்தை பிரத்யக்ஷத்திற்குக் கீழே உட்படுத்த முடியாது என்று கூறுகிறார்கள். பிரத்யக்ஷத்தின் மூலம் பூரணமான அறிவு கிடைப்பதில்லை என்பது அவர்களின் கருத்தாகும். உபமானத்தை அனுமானத்தின் கீழும் உட்படுத்த முடியாது என்று அவர்கள் கருதுகிறார்கள். இரண்டு பொருட்களுக்கிடையே ஒப்புமை தோற்றுவிக்கும் பொழுது அங்கு வியாப்தி இல்லை என்பது அவர்களின் கருத்தாகும். எனவே நியாய தரிசனவாதிகள் உபமானத்தை தனியான ஒரு கருத்தாகவே கருதுகிறார்கள். இரு பொருட்களை ஒப்பட்டுக் கூறும் பொழுது அதற்கு ஓரளவுக்கு ஒப்புமைக் காணப்பட வேண்டும். புலியைச் சிறுத்தை புலியுடன் ஒப்பிடலாம். காக்கையைக் குயிலுடன் ஒப்பிடலாம். ஆனால் பசுவை பன்றியுடன் ஒப்பிட முடியாது. அதனை ஒரு உபமானமாகக் கருதமுடியாது. பசுவை பசுவுடனும் ஒப்பிட முடியாது. உபமானம் ஸாதர்ம்ய உபமானம், வைதர்ம்ய உபமானம் என இரண்டு வகைப் படுகிறது.

### ஸாதர்ம்ய உபமானம்

ஸாதர்ம்யம் என்றால் கண்டிராத ஒரு பொருளை, கண்ட ஒரு பொருள் மூலம் உபமானப்படுத்திப் புரிய வைப்பது. கவயம் என்ற உதாரணத்தை இங்கு நாம் குறிப்பிடலாம்.

### வைதர்ம்ய உபமானம்

கண்ட ஒரு பொருளின் ஒற்றுமையைக் கூறி விளக்குவதற்கு வைதர்ம்ய உபமானம் என்று பெயர். தெரியாத ஒரு பொருளைப்பற்றிய

அறிவை தெரிந்த ஒரு பொருளின் வேறுபட்டக் குணங்களைக் கூறி புரிய வைப்பது வைதர்ம்ய உபமானம் ஆகும். ஒரு மனிதன் குதிரையைக் கண்டிருக்கிறான். ஆனால் வரிக்குதிரையைக் கண்டதில்லை. குதிரை யிலிருந்து வரிக்குதிரை எவ்வாறு வேறுபடுகிறது என்பதை நாம் விளக்கிச் சொல்கிறோம். அடுத்தமுறை நண்பனானவன் வரிக்குதிரையைப் பற்றிச் சொல்லும் பொழுது இரண்டிற்குமுள்ள வேற்றுமையைக் கண்டு வரிக் குதிரையைப் புரிந்து கொள்கிறான். இதற்கு வைதர்ம்ய உபமானம் என்று பெயர்.

**தர்ம மாத்ரோ உபமானம்**

ஒரு பொருளின் காணப்படும் விசேஷ தனித்தன்மையின் மூலம் அதனைப் புரிந்து கொள்வது. ஒருவன் ஒரு ஒட்டகத்தில் வருவான் எனில் அந்த ஒட்டகத்தின் கூன் மூலம் அதை எளிதாகப் புரிந்து கொள்வது. ஆயுர்வேதத்தில் தண்டகம் (உடல் உணர்வற்ற கட்டைபோல் ஆதல்) எனும் ரோகம், தனுஸ்தம்பம் என்னும் ரோகம் (உடல் வில் போல் வளைதல்), சிலீபதம் (யானைக்கால் நோய்) என்னும் ரோகம் போன்றவற்றை யெல்லாம் உபமானமாகவே கூறுகிறோம். துளசியை வனத் துளசியுடன் ஒப்பிட்டுக் கூறுகிறோம். ஆமலகியும் (நெல்லிக்காய்) பூமியாமலகியும் (கீழாநெல்லி) ஒப்பிட்டுக் கூறுகிறோம். மஞ்சளையும் மரமஞ்சளையும் ஒப்பிட்டுக் கூறுகிறோம். இவ்வாறு அனேக இடத்தில் ஆயுர்வேதத்தில் உபமானம் பயன்படுத்தப்படுகிறது.

# 7. அர்த்தாபத்தி

அர்த்தாபத்தி என்ற பதத்தில் இரண்டு பதங்கள் உள்ளன. அவை அர்த்தம், அபத்தி என்பனவாகும். அர்த்தாபத்தி என்பதை அர்த்தம் பிராப்தி என்றும் கூறுவதுண்டு. சரகர் ஒரு சில இடங்களில் அர்த்தம் பிராப்தி என்ற வார்த்தையை அர்த்தாபத்திக்கு பதில் பயன் படுத்துகிறார். (சரக ஸம்ஹிதை விமானம் 8 வது அத்தியாயம்)

ஒரு சந்தர்ப்பத்தில் நாம் ஒரு விஷயத்தைப் பற்றிச் சொல் கிறோம். ஆனால் சொல்லாத ஒரு விஷயத்தைப் பற்றிப் புரிந்து கொள்கிறோம். ஒரு வாக்கியமானது ஒரு கருத்தை விளக்குகிறது என்று வைத்துக் கொள்வோம். விளக்காத கருத்தை குறிப்பால் உணர்வதற்கு அர்த்தாபத்தி என்று பெயர். உதாரணமாக ஒரு நோயாளி வந்தால் இங்கு கிருதபானம் செய்யக் கூடாது என்று சொல்கிறோம் அப்படியென்றால் அவன் லங்கன சிகிச்சைக்கு தகுந்தவன் என்று தெரிந்து கொள்கிறோம்.

ஒருவனுக்கு இரண்டு குழந்தைகள் இருக்கின்றன. இதில் பெரிய குழந்தை நன்றாக படிக்கும் என்றால் இரண்டாவது குழந்தை அவ்வளவாகப் படிக்காது என்று அர்த்தம். பகலில் தூங்காதே என்று சொல்கிறோம். அப்படியென்றால் இரவில் தூங்கலாம் என்று அர்த்தம். இரவில் தயிர் சாப்பிடக் கூடாது என்று சொன்னால் பகலில் சாப்பிடலாம் என்று அர்த்தம். மீமாம்ஸர்களும் வேதாந்தி களும் அர்த்தாபத்தியை ஒரு பிரமாணமாகவே ஏற்றுக் கொள்கின்றனர்.

நியாய தரிசனவாதிகள் அர்த்தாபத்தியை அனுமானத்தின் கீழ்ப்பிரமாணமாக எடுத்துக் கொள்கின்றனர். நியாய தரிசன

வாதிகள் அனுமானத்திற்கு கீழும், பிரத்யட்சத்திற்கு கீழும் ஏற்றுக் கொள்கின்றனர்.

## அனுபலப்தி அல்லது அபாவ பிரமாணம் :

ஒரு பொருளைப் பற்றிய அறிவின்மையை இது குறிக்கும் அல்லது ஒரு பொருளின் இல்லாத தன்மையை இது குறிக்கும். இதற்கு அபாவ பிரமாணம் என்று பெயர். இது ஒருவகை பிரத்யட்சமே. இதனை தனியாகச் சொல்ல வேண்டியதில்லை. ஒரு சில நோய்களுக்கு சில லட்சணங்கள் காணப்படாது. இதனால் இந்த நோய் இல்லையென்று நம்மால் சொல்ல முடியும். இதற்கு அனுபலப்தி என்று பெயர்.

## ஸம்பவ பிரமாணம்

ஒரு வார்த்தையை நாம் சொன்னால் மற்ற வார்த்தைகளை முதலில் சொன்ன வார்த்தைகளை வைத்துப் புரிந்து கொள்ள முடியும். ஆயுர் வேதம் என்று சொன்னால் அஷ்ட அங்கம் உடையது என்றும், ஸ்வஸ்த்த விருத்தம் என்னும் கண்ணோட்டமுடையது என்றும் நாம் புரிந்து கொள்வோம். அதேபோல் திரிதோஷத்தைச் சொன்னால் இது வாதபித்த கபத்தை குறிக்கிறது என்று புரிந்து கொள்வோம். உடம்பு என்று சொன்னால் இது மனது, ஆத்மாவுடன் உடையது, இந்திரியங்கள் உடையது என்று புரிந்து கொள்வோம். இதற்கு ஸம்பவ பிரமாணம் என்று பெயர். புராணிகர்கள் ஸம்பவத்தை ஒரு தனி பிரமாணமாகக் கருது கிறார்கள். நியாயவாதிகள் அவ்வாறு கருதுவதில்லை.

## சேஷ்ட பிரமாணம்

கைகால்களை அசைப்பதன் மூலமும் முகச்சேட்டை மூலமும் கருத்தை உய்த்துணர வைப்பதற்கு சேஷ்ட பிரமாணம் என்று பெயர். நோயாளியின் கை அசைவுகளையும், கால் அசைவுகளையும், முகபாவத் தையும் வைத்தே ஆயுர்வேதத்தில் பல நோய்களை அறிய முடியும். மனோரோகங்களில் இது முக்கிய பங்கு வகிக்கிறது. சில அரிஷ்ட லட்சணங்களை (மரணத்தை உருவாக்குகின்ற லட்சணங்களை) கண்டு பிடிக்க உதவுகிறது. நியாய வாதிகள் இதை தனிப்பிரமாணமாகக்

கூறுவதில்லை. அனுமானத்தின் கீழே இதைக் கூறுகிறார்கள். இந்த அறிவானது பிரத்யட்சமாக நாம் பார்க்கிறோம். லிங்கத்துக்கும், லிங்கிக்கும் உள்ள உறவை அனுமானம் செய்து நாம் புரிந்து கொள்கிறோம்.

### பரிசேஷ பிரமாணம்

ஒரு சிலர் பரிசேஷத்தைத் தனிப்பிரமாணமாகக் கருதுகிறார்கள். வேறு சிலர் இதைப் பிரத்யக்ஷத்துடன் உட்படுத்தியே கூறுகிறார்கள். பல பொருட்களிலிருந்து ஒரு பொருளைத் தனியேப் பிரித்தெடுப்பதற்கு பரிசேஷ பிரமாணம் என்று பெயர். அரிசியிலிருந்து கல்லைப் பிரிப்பது பரிசேஷமாகும். ஆயுர்வேதம் இதை ஏற்றுக் கொள்ளவில்லை.

### இதிஹாஸ பிரமாணம்

சாந்தோக்ய பிரமாணம் இதிஹாஸத்தை ஒரு பிரமாணமாகக் கருதுகிறது. இது ஒரு சப்த பிரமாணமாகும். இதை முழுவதுமாக ஏற்றுக் கொள்ளவோ, நம்பவோ முடியாது. இதில் வரலாற்றுக் குறிப்புகள், அறிஞர்கள், ரிஷிகள் பற்றியக் குறிப்புகள் காணப்படும்.

# 8. காரிய காரண பாவங்கள்

பாரம்பரிய தரிசனங்கள் முழுவதும் காரண காரிய ஸித்தாந்தங்களை ஏற்றுக் கொண்டு அவற்றை விளக்கிக் கூறுகின்றன. இதனைப் புரிந்து கொள்வதற்கு காரணம் என்றால் என்ன என்பதும், காரியம் என்ன என்றால் என்பதையும் நாம் அறிய வேண்டும்.

**காரணம்**

ஒரு காரியம் உண்டாவதற்கு மூல வஸ்துவாக இருப்பது காரணம் ஆகும். ஒரு செயல் நிறைவு பெறுவதற்கு முன்பு எது நிலைத்திருக்கிறதோ அதற்கு காரணம் என்று பெயர். காரணத்துக்கு பூர்வபாவம், நித்யத்வம், அனன்யதா ஸித்தி என மூன்று லட்சணங்கள் கூறப்பட்டுள்ளன.

**1. பூர்வபாவம்**

பூர்வபாவம் என்றால் முதன் முதலில் உண்டாகிறது என்று அர்த்தம். உலகத்தில் பல விஷயங்கள் நடைபெறுகின்றன. இந்த விஷயங்களெல்லாம் தொடர்ச்சியாக இடைவெளியின்றி நடை பெறுகின்றன. எல்லா விஷயங்களிலும் இரண்டு பங்குகள் உண்டு. எது முதலில் நடைபெறுகிறதோ அதற்கு பூர்வ பாவம், பூர்வ விருத்தி என்று பெயர். எது முதலில் வெளியில் வருகிறதோ அதற்கு பூர்வ விருத்தி, அனுவர்த்தி, பர வர்த்தி என்று பெயர். பூர்வ விருத்தி என்பது காரணமாகும், அனுவர்த்தி என்பது காரியமாகும்.

செங்கல் காரணமாக இருக்கிறது. செங்கலால் கட்டப்பட்ட வீடு காரியமாகிறது. திரிதோஷங்கள் காரணமாக இருக்கின்றன.நோய்கள் காரியமாக இருக்கின்றன. நிதானம் காரணமாக இருக்கிறது. தோஷகோபம் காரியமாக இருக்கிறது. மண்பானைக்கு மண் காரணமாக இருக்கிறது. துணிக்கு நூல் காரணமாக இருக்கிறது.

### 2. நித்யத்வம்

எங்கெங்கு காரியம் காணப்படுகிறதோ அங்கு காரணமும் காணப் பட வேண்டும்.. எங்கெங்கு பானை உள்ளதோ அங்கு மண்ணும் காணப் பட வேண்டும்.

### 3. அனன்யதா ஸித்தி

எந்தவொரு காரணமில்லாமல் காரியம் நடைபெறுவதில்லையோ அதற்கு அனன்யத ஸித்தி என்று பெயர். இது இல்லாவிட்டால் காரியம் நடைபெறாது என்று அர்த்தம். ஒரு பானையைச் செய்வதற்கு பல பொருட்கள் தேவைப்படுகின்றன. பல காரணங்கள் இருக்கின்றன. ஒரு மனிதன் தேவையாக இருக்கிறான். சக்கரம் தேவையாக இருக்கிறது. மண் தேவையாக இருக்கிறது. இந்த மூன்றும் இல்லாவிட்டால் பானையைச் செய்ய முடியாது. இவ்வாறு இன்றியமையாத காரணங்களுக்கு அனன்யாதா ஸித்தி என்று பெயர்.

பகலைச் சார்ந்து இரவு வருகிறது. ஆனால் இரவுக்கு பகல் காரண மென்று கூறமுடியாது. காரணத்துக்கும், காரியத்துக்கும் ஒரு விதத்தில் பார்த்தால் வித்தியாசம் இல்லை. ஒரு சில இடங்களில் காரணமே காரிய மாக மாறி விடுகிறது அல்லது காரியமே காரணமாக மாறி விடுகிறது. வித்தினால் மரம் முளைக்கிறது. இங்கு வித்து காரணம், மரம் காரியம் ஆகும். மீண்டும் மரமானது வித்தைக் கொடுக்கிறது. இது ஒரு சுற்றுப் போல் சுழற்சியாக வருகிறது.

### காரண பேதங்கள்

ஸமவாயி காரணம், அஸமவாயி காரணம், நிமித்த காரணம் என காரணம் மூன்று வகைப்படும்.

## ஸமவாயி காரணம்

எந்த ஒரு பொருளிலிருந்து காரணத்தைப் பிரிக்க முடியாதோ அல்லது பிரிக்க முடியாத தொடர்பில் ஒன்றிப் போய் உள்ளதோ அதற்கு ஸமவாயி காரணம் என்று பெயர். மண், சக்கரம், பானை செய்பவன் இந்த மூன்றும் பானை செய்வதற்கான காரணமாகும். பானை உண்டான பிறகு பானை செய்பவனும், சக்கரமும் பானையிலிருந்து விடுபட்டுப் போகின்றன. ஆனால் மண்ணானது பானையிலிருந்து பிரிக்க முடியாத தன்மையில் இருக்கிறது. இதற்கு ஸமவாயி காரணம் என்று பெயர். நூலானது துணிக்கு ஸமவாயி காரணமாகிறது. கல்லானது ஒரு சிலைக்கு ஸமவாயி காரண மாகிறது. திரிதோஷமானது நோய்க்கு ஸமவாயி காரணமாக இருக்கிறது.

## அஸமவாயி காரணம்

இது ஸமவாயி காரணம் இல்லை. ஆனால் காரியம் நிறைவேறு வதற்கு முக்கியமான காரணமாக கருதப்படுகிறது. இதுவும் காரணத் திலிருந்தோ, காரியத்திலிருந்தோ பிரிக்க முடியாத தொடர்பாகக் காணப் படுகிறது. நாம் துணியினுடைய உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நூலானது துணிக்கு ஸமவாயி காரணமாகக் காணப்படுகிறது. துணிதான் இங்கு காரியம். நூல்களை ஒரு விதத்தில் சேர்த்துக் கோர்த்தாலே அது துணியாக மாறுகிறது. அந்த சேர்த்து கோர்க்கும் முறை துணி உருவா வதற்கு இன்றியமையாத காரணமாகிறது. இந்த நூல்களின் சேர்க்கை அஸமவாயி காரணம் எனப்படும். நோய்க்கு தோஷமும், தூஷ்யமும் காரணமாக இருந்தாலும், தோஷ தூஷ்ய சேர்க்கை அஸமவாயி காரணமாக ஆயுர்வேதத்தில் கருதப்படுகிறது.

## நிமித்த காரணம்

மேற்கூறிய இரண்டு காரணங்களுக்கும் அப்பாற்பட்ட காரணங் களை நிமித்த காரணம் என்கிறோம். ஸமவாயி காரணமோ, அஸமவாயி காரணமோ கொண்டு மட்டும் ஒரு காரியம் நிறைவு பெறுவதில்லை. இதற்கு ஒரு கர்த்தா இருக்க வேண்டும். அவரே நிமித்த காரணமாகும். பானைக்கு பானை செய்பவரும், சக்கரமும் நிமித்த காரணமாகின்றன. துணி நெய்பவர் துணிக்கு நிமித்த காரணமாகிறார். அதைப்போல் நோய்

உருவாவதற்கு நிதானம் என்னும் ஆஹார விஹார முறைகள் நிமித்த காரணமாகிறது. காரணத்தின் வெளிப்பாடே காரியமாகும்.

காரியமானது காரணமில்லாமல் வருவதில்லை. காரணமானது காரியத்திற்குள்ளேயே மூழ்கிப் போய் இருக்கிறது. இங்கு பல கேள்விகள் எழுகிறது. காரியம் எங்கிருந்தது? வருகிறது. காரியம் காரணத்திற் குள்ளேயே இருந்ததா? காரணமானது காரியமாக மாறுகிறதா. காரியம் வந்தபிறகு காரணத்தின் நிலை என்ன? இதற்கு நமது ஆசாரியர்கள் பலவித வாதங்களை வைத்துள்ளார்கள்.




## ஸத்காரிய வாதம்

ஸாங்கியர்களும், வேதாந்தர்களும் இந்த ஸத்காரிய வாதத்தையே நம்புகிறார்கள்.

ஒரு காரியம் உருபெற்று வருவதற்கு முன்பே அதன் காரணத்தில் நிலைபெற்றிருக்கும் காரியத்திற்கு ஸத்காரிய வாதம் என்று பெயர். காரணம் காரியத்தின் முழுக் குணத்தையும் கொண்டிருக்கும் என்கிறார்கள். இது கண்ணால் பார்க்க முடியாத வடிவத்திலிருக்கும். இது காரியமாக மாறும் பொழுது கண்ணுக்கு வெளிப்படும் என்று அவர்கள் கூறுகிறார்கள். பாலில் வெண்ணெய் உள்ளது. ஆனால் வெண்ணெய் தெரிவதில்லை.

பாலை தயிராக்கி, உறை ஊற்றி, மோராக மாற்றிக் கடையும் பொழுது வெண்ணெய் வருகிறது. ஆனால் வெண்ணெய் பாலில்தானே இருந்தது. இதற்கு ஸத்காரிய வாதம் என்று பெயர்.

ஒரு மாமரத்து வித்தில் அது நிலத்தில் விழுந்து மரமாக உருவாகும் சக்தி இருக்கிறது. அது மரமாக முளைத்த பிறகுதான் நாம் அதை மாமரம் என்று புரிந்து கொள்கிறோம். ஸத்காரிய வாதங்களை நிலைநிறுத்துவதற்கு ஸாங்கியர்கள் சில விதிமுறைகளைக் கூறுகிறார்கள்.

### அ) அஸத்காரணம்

அஸத்திலிருந்து ஸத் உருவாகாது. சூன்யத்திலிருந்து எதுவும் உருவாக்க முடியாது. இல்லாத ஒரு பொருளிலிருந்து இருக்கும் ஒரு பொருளை உருவாக்க முடியாது. இதற்கு அஸத் காரணம் என்று பெயர்.

### ஆ) உபாதான கிரஹணம்

ஒரு குறிப்பிட்ட செயலை நிறைவு செய்வதற்கு ஒரு குறிப்பிட்ட காரணம் வேண்டும் இதற்கு உபதானம் என்று பெயர். நமக்கு தயிர் உண்டாக்க வேண்டுமெனில் அதனை பாலிலிருந்துதான் உண்டாக்க வேண்டும். நமக்கு சிற்பம் உண்டாக்க வேண்டும் என்றால் அதனை கல்லில் இருந்துதான் உண்டாக்க வேண்டும். இதற்கு உபாதான கிரஹணங்கள் என்று பெயர்.

### இ) ஸர்வ அபாவ ஸம்பவம்

எல்லா காரணங்களும் காரியத்தில் போய் முடியாது. தண்ணியிலிருந்து நெய் உண்டாக்க முடியாது. இதற்கு ஸர்வா அபாவ ஸம்பவம்.

### ஈ) சக்தஸ்ய சக்ய காரணம்

ஒவ்வொரு காரணங்களும் ஒரு காரியத்தை உருவாக்குவதற்கான சக்தியைக் கொண்டுள்ளது. ஒரு காரியம் நிறைவு பெறுவதற்கு ஒரு சக்தி மிகுந்த காரியம் தேவை. பாலுக்கு வெண்ணையை உண்டாக்கும் சக்தி இருக்கிறது. எள்ளுக்கு எண்ணெயை உண்டாக்கும் சக்தியிருக்கிறது. இதற்கு ஸக்தஸ்ய சக்ய காரணம் என்று பெயர்.

### உ) காரண பாவம்

காரணமும், காரியமும் ஒன்றுக்கொன்று மாறுபட்டதல்ல. இது ஒரே பொருளின் இரண்டு வடிவங்களே. கண்ணால் காணாத நிலைக்கு காரணம் என்றும், கண்ணால் காணும் நிலைக்கு காரியம் என்றும் பெயர். சிலையை வடிப்பதற்கு முன்பு அதை கல் என்கிறோம். சிலையான பிறகு அதை சிற்பம் என்கிறோம். கல் என்று சொல்லும்பொழுது அது காரணமாகிறது. சிற்பம் என்று சொல்லும்பொழுது அது காரியமாகிறது. ஆனால் இரண்டுமே ஒரே பொருளில் இருந்து வந்ததுதான். ஸாங்கிய தத்துவத்தின்படி ஒரு பொருளை உருவாக்கவோ அழிக்கவோ முடியாது என்பதுதான்.

ஸத்காரிய வாதங்கள் பரிணாம வாதம், விவர்த்த வாதம் என்று இரண்டு வகைப்படும்.

### 1. பரிணாம வாதம்

பரிணாமம் என்றால் மாறுதல் என்று பொருள். இந்த தத்துவத்தின் படி ஒரு பரிணாமத்தின் பெயரில் காரணம் காரியமாக மாறுகிறது. உதாரணமாக பால் தயிராக மாறுகிறது. கடுகு, கடுகு எண்ணெயாக மாறுகிறது. இந்த பரிணாமம் இரு வகையில் நடைபெறுகிறது. அவை தர்ம பரிணாமம், லட்சண பரிணாமம் என்பனவாகும்.

### அ) தர்ம பரிணாமம்

காரணங்களின் குணங்களில் மாற்றம் ஏற்பட்டால் அதற்கு தர்ம பரிணாமம் என்று பொருள். ஆகார ரஸமானது, உடலில் ரஸ தாதுவாக மாறுகிறது. பின்பு ரக்தமாக மாறுகிறது. குணமும் மாறுபடுகிறது.

### ஆ) லட்சண பரிணாமம்

இங்கு பரிணாமத்தில் காரணத்தின் குணங்கள் அவ்வாறே உள்ளன. ஆனால் காரணத்தின் உருவம் மாறுபடுகிறது. உதாரணமாக, பாலானது வெண்ணெயாக மாறுகிறது. இரண்டிற்கும் குணம் ஒன்றுதான். ஆனால் உருவத்தில் வித்தியாசம் ஏற்பட்டுள்ளது. ஸாங்கிய தரிசனம் இதை ஏற்றுக் கொண்டுள்ளது.

## 2. விவர்த்த வாதம்

விவர்த்தம் என்ற சொல்லிற்கு பிரமம் என்று பொருள். ஒரு மாயத் தோற்றம் என்றும் குறிப்பிடலாம். நாம் பாம்பைக் கண்டால் அதனை கயிறு என்று நினைத்துக் கொள்கிறோம். இதற்கு பிரமம் என்று பெயர். தவறாகப் புரிந்து கொள்ளுதலே இதற்கு காரணமாகும். இந்த உலகமே ஒரு மாயையாகும். இது ஸத் என்கின்ற உண்மை கிடையாது. ஆனால் நாம் அதை ஸத் என்று நம்புகிறோம்.

'பிரம்மைவ ஸத் ஜகதிதம் து விவர்த்த ரூபம்'

என்று வேத வாக்கியம் கூறுகிறது. பிரம்மம் நித்தியமானது. பிரமமே ஸத்தானது. உலகம் நித்தியமானதல்ல. இதுவே விவர்த்த வாதம் எனப் படும். இதனை மித்யா வாதம் என்றும் குறிப்பிடுவார்கள். ஏனென்றால் பிரம்மமும் ஜகத்தும் ஒன்றுதான். ஆனால் இரண்டு வடிவங்களில் அவை விவரிக்கப்பட்டுள்ளன. ஆயுர்வேதம் இந்த வாதங்களை ஏற்றுக் கொள் வதில்லை. பிரம்மமே காரணமாகவும், ஸத்தாகவும் இருக்கிறது என்ற கண்ணோட்டம் ஆயுர்வேத புத்தகங்களில், குறிப்பாக சரகத்தில் காணக் கிடைக்கிறது.

### அஸத்காரிய வாதம்

இது ஸத்காரிய வாதத்திற்கு எதிர்மறையானது. இதன் கூற்றுப்படி ஒரு காரியம் ஒரு காரணத்தில் என்றும் இருந்ததில்லை. அது புதிதாகவே உருவாக்கப்படுகிறது. இதை ஆரம்ப வாதம் என்று கூறலாம். ஆரம்பம் என்றால் தொடக்கம் என்று பொருள். இந்த கூற்றின்படி ஒரு காரண மானது அல்லது ஒரு காரியமானது புதிதாக உருவாக்கப்படுகிறது. அதற்கு ஒரு தொடக்கம் உள்ளது. தொடக்கம் உள்ளதால் அது ஆரம்ப வாதம் என்றும், அஸத்காரிய வாதம் என்றும் கூறப்பட்டுள்ளது. நியாயம், வைசேஷிகம், புத்த தத்துவ ஞானிகள் ஸத்காரிய வாதத்தை எதிர்க் கிறார்கள். காரியமானது காரணத்திற்குள்ளேயே இருந்தால் கர்த்தா என்கின்ற நிமித்த காரணத்திற்குரிய தேவை என்ன என்பதைக் கேட்டு அஸத்காரிய வாதம் தேவை என்று கூறுகிறார்கள். மண்ணிலேயே பானை

இருக்குமானால் பானை செய்பவன் எதற்கு என்கின்ற கேள்வியை அவர்கள் கேட்கிறார்கள்.

காரியமானது காரணத்திலேயே இருந்தால் காரணம், காரியம் என்ற இரு பெயர்கள் எதற்கு என்றும் அவர்கள் கேட்கிறார்கள். பானை, களிமண் இரண்டும் வெவ்வேறாக இருப்பதால் ஒன்று என்று கூற முடியாது. காரணமும், காரியமும் ஒன்றாகவே இருக்குமானால் இரண்டும் ஒரே காரியத்திற்காக பயன்பட வேண்டும். தண்ணீர் எடுப்பதற்கு பானையை பயன்படுத்துகிறோம். களிமண்ணால் தண்ணீரையை எடுக்க முடியுமா? இதிலிருந்து காரணம் வேறு, காரியம் வேறு என்று உணர முடிகிறது அல்லவா? ஸாங்கியர்களோ மேற்கூறிய எல்லா கருத்தையும் எடுத்துக் கூறுகிறார்கள். நிமித்த காரணம் மிகவும் இன்றியமையாதது என்று அவர்கள் கூறுகிறார்கள்.

கண்ணால் காணமுடியாத ஒரு வஸ்துவை காணும்படியான ஒரு வஸ்துவாக மாற்றுவதற்கு நைமித்திக காரணம் தேவை என்று அவர்கள் கூறுகிறார்கள். காணக்கூடிய பொருள், காணமுடியாத பொருள் என்பதை நிலை நிறுத்துவதற்காகவே இரண்டு பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அதையே காரணம் என்றும், காரியம் என்றும், வியக்தம் என்றும், அவ்யக்தம் என்றும் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். காரணங்களின் உருவம் மாறும்பொழுது காரியம் வருகிறது. ஆனால் காரியமாக மாறிவிட்டபிறகு அதனுடைய தேவைகளும் பலன்களும் மாறிவிடுகின்றன. கண்ணுக்கு தெரியாத ஒரு வஸ்து கண்ணுக்கு தெரிகின்ற ஒரு வஸ்துவாக மாறுகின்ற பொழுது அங்கு ஒரு மாற்றம் அந்த பொருளில் ஏற்படுகிறது.

### பரமாணு வாதம்

வைசேஷிக தரிசனவாதிகள் இந்த வாதத்தை ஏற்றுக் கொள்கிறார்கள். இந்த தரிசனத்தின்படி பிருத்வி, அப், தேஜஸ், வாயு என்ற நான்கு மஹா பூதங்களின் அணுக்களாலேயே சிருஷ்டி ஏற்படுகிறது. இதில் அவர்கள் ஆகாசத்தை சேர்த்துக் கொள்வதில்லை. அணுக்கள் என்பது பஞ்ச மஹாபூதங்களின் நுண்ணிய அம்சமாகும். அணுக்கள் எண்ணற்றதாகும். அணுக்கள் உடைக்க இயலாததாகும். ஆனால் அணுக்கள் தூண்டப்பட்டு

இரண்டு அணுக்கள் சேரும்பொழுது இரு அணுவாகவும் மாறுகிறது. இதுவும் நுண்ணிய வடிவே. மூன்று அணுக்கள் சேர்ந்து மூன்று அணுவாக மாறுகிறது. இந்த நிலையில் வெளிப்பாடு தெரியத் தொடங்குகிறது. இவ்வாறு அணுக்கள் சேர்ந்து சேர்ந்து ஸ்தூல சரீரத்தை உருவாக்குகின்றன. பரமாணு வாதத்தின்படி சிருஷ்டிக்கு அணுக்களே காரணம். பிரளய காலத்தில் உலகம் அழிந்து அணுவடிவில் சேர்ந்துவிடும் என்று இவர்கள் நம்புகிறார்கள்.

## க்ஷணபங்குர வாதம்

இது புத்தமரபினரால் கூறப்பட்ட வாதமாகும். க்ஷணம் என்றால் ஒரு குறுகிய காலத்தைக் குறிக்கும். கண்ணிமைக்கும் நேரம் என்று கூட கூறலாம். பங்குரம் என்றால் அழிவு என்று பொருள். சிறிது நேரத்திற்கே இந்த உலகம் இருக்கிறது என்று அவர்கள் நம்புகிறார்கள். காரணமானது காரியமாக மாறிவிடுகிறது. பின்பு காரியமானது காரணமாக மாறிவிடு கிறது. இப்பொழுது இருக்கின்ற நாம் நமது நிலைமை ஒரு வினாடிக்கு முன்பு இருந்ததில்லை. உலகத்தில் இருக்கின்ற விஷயங்களெல்லாம் அந்தந்த நிமிடத்திலேயே நிகழ்கின்றன. அதற்குப்பிறகு அந்த எண்ணங் களும், விஷயங்களும் அழிந்து விடுகின்றன. இவ்வாறு க்ஷண நேரத்தில் அழிந்து விடுகின்ற விஷயங்களே எல்லாம் என்று கூறுவதால் இந்த வாதத்திற்கு க்ஷணபங்குர வாதம் என்று பெயர்.

## பாகஜ குணம்

பாகம் என்றால் உஷ்ணம் என்று பொருள். உஷ்ணத்துடன் தொடர்பு ஏற்பட்டு அதனால் ஏற்படும் குணங்களுக்கு பாகஜ குணம் என்று பெயர். பாகஜ குணங்கள் பிருத்வி மஹாபூதத்துடன் தொடர்புடையது. நான்கு விதமான பரமாணுக்கள் உள்ளன. அவை பார்த்திவம், ஜலீயம், தேஜஸம், வாயவம் என்பனவாகும். அவைகளுக்கென்று சில தனி விசேஷங்கள் உண்டு. இதல்லாமல் இதில் காணப்படும் அணுக்களானது உஷ்ணத்தின் ஸம்ஸர்கத்தால் சில புதிய குணங்களையும் பெற்றுக் கொள்கிறது. இந்த குணங்கள் காரிய திரவியத்தில் வெளிப்படுகின்றன. காரிய திரவியம் அழிந்தபிறகு இந்த குணங்களும் அழிந்து விடுகின்றன. இந்த குணங்

களுக்கு பாகஜ குணங்கள் என்று பெயர். பாகஜ குணங்களில் ஏற்படும் மாற்றங்களைப் பொறுத்தவரை ஆசாரியர்களிடத்தில் கருத்து வேறுபாடு கள் காணப்படுகின்றன. வைசேஷிகர்களும், நியாயிகர்களும் பீலுபாக வாதம், பிடரபாக வாதம் என்ற இரண்டு கருத்துக்களைக் கூறுகின்றனர்.

மண்ணால் செய்த ஒரு சட்டியானது நன்றாக சூடாக்கப்படும் பொழுது நிறம் போன்றவற்றில் மாற்றம் ஏற்படுகிறது. இதையே ஆதாரமாகக் கொண்டு அவர்கள் தங்கள் வாதங்களை விளக்குகிறார்கள். அதைப் போல் ஒரு மாங்காயைப் பழுக்க வைக்கும் பொழுது அந்த மாங்காயின் சுவை, மணம் போன்றவை மாறுபடுகின்றன. பச்சையாக இருக்கின்ற மாங்காய் மஞ்சளாகிறது. புளிப்புத் தன்மை இனிப்புத்தன்மை அடைகிறது, கனத்தன்மை மிருதுத் தன்மையடைகிறது. நறுமணத்தை மாம்பழம் பெறுகிறது.

## பீலுபாக வாதம்

வைசேஷிகர்கள் கூறும் வாதம் பீலுபாக வாதமாகும். பீலு என்றால் அணு என்று பொருள். இந்த வாதத்தின் கொள்கைப்படி பாகமானது அல்லது உஷ்ணத்தில் ஏற்படும் மாற்றமானது அணுக்கள் அளவில் நடைபெறும் என்பதாகும். மண்சட்டியைச் சூடாக்கும் இந்த அணுக்கள் கறுப்பு நிறத்தை அடைகின்றன. பின்பு சிவப்பு நிறத்தைப் பெறுகின்றன. இதற்கு உஷ்ணம் காரணமாகிறது. இந்த அணுக்கள் இணைந்து புதிய சிவந்த நிறத்தில் மண்பானையை உருவாக்குகின்றன. இவ்வாறு தன் தன்மையை இழந்து புதுத் தன்மையை உருவாக்குகிறது. இது நுணுக்க மான முறையில் நடைபெறுவதால் நம்மால் இதைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. வைசேஷிகர்களின் கருத்துப்படி இந்த மாற்றமானது உள்ளே நடைபெறுகிறது என்றும், வேதியியல் சம்பந்தமான மிகவும் நுட்பமான விஷயங்கள் இது என்றும் கூறுகிறார்கள்.

## பிடரபாக வாதம்

நியாய தரிசனவாதிகள் பிடரபாக வாதத்தைக் கூறுகிறார்கள். இது பீலுபாக வாதத்திற்கு மாறுபட்டது. இவர்கள் மண்பானையானது அணுக்களின் மாற்றங்களால் புதிய பானையாக மாறுகிறது என்பதை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் கீழ்க்கண்ட காரணங்களை அதற்கு

ஆதாரமாகக் கூறுகிறார்கள். மண்சட்டியானது உடைபடுவதற்கு முன்பும், பின்பும் ஒரே போலே இருக்கிறது என்கிறார்கள். ஒரு சட்டிக்கு மேலே நாம் வேறொரு சட்டியை வைத்தால் மேலே இருக்கின்ற சட்டியானது கீழே விழ வேண்டும். ஏனெனில் கீழே இருக்கின்ற சட்டியானது அணுவடிவில் கரைந்து போகிறது அல்லவா. ஆனால் அப்படி நடைபெற வில்லையே. எனவே பீலுபாக வாதம் தவறானது என்பது இவர்களின் கருத்தாகும். உஷ்ணத்தின் ஸம்ஸர்கத்தால் பானையானது அணுவடிவில் கரைந்து மீண்டும் உருப்பெற வேண்டும் என்பதில்லை. பானையிலேயே தண்ணீரை நாம் சூடாக்குகிறோம். தண்ணீருக்கும், நெருப்புக்கும் நேரடி தொடர்பில்லை. ஆனால் தண்ணீர் சூடானது அணுக்களுக்கு தொடர் பில்லாமலே நடக்கிறது. ஒவ்வொரு அணுவிலும் சூடு நடைபெறவில்லை. ஒவ்வொரு அணுவையும் உஷ்ணம் தாக்குவதில்லை. இது இயற்கையாக நடைபெறுகிறது என்பதாகும்.

## அனேகாந்த வாதம்

சமணர்கள் இந்த வாதத்தைக் கூறுகிறார்கள். ஒரே விஷயத்தைப் பல கண்ணோட்டத்தில் பார்க்கலாம் என்பது இதன் பொருளாகும். ஓரோரு கண்ணோட்டமும் சரி என்றே புலப்படும். ஆதலால் ஒரே கண்ணோட்டத்தில் எதையும் நிலை நிறுத்தக் கூடாது. அவ்வாறு நிலைபெற்றிருந்தால் புதிய எண்ணங்கள் தடைபடும். பல எண்ணங்களை எடுத்துக் கொள்வது சிறந்தது என்று இவர்கள் கருதுகிறார்கள். இதனால் புதிய சிந்தனை வலுப்பெறும். ஆயுர்வேதம் இதை ஏற்றுக் கொள்கிறது. ஸுச்ருதர் அனேகாந்த வாதத்தை விளக்குகிறார். சிருஷ்டியின்போது அனேகாந்த வாதங்கள் கூறப்பட்டுள்ளது. ரஸ உற்பத்தியிலும் அனேகாந்த வாதங்கள் கூறப்பட்டுள்ளது.

## ஸ்வபாவ உபரம வாதம்

ஸ்வபாவ உபரம வாதம் பௌத்தர்களின் க்ஷணபங்குர வாதத்தைச் சார்ந்து அமைந்துள்ளது. இது ஆயுர்வேதத்தில் தனித்தன்மை வாய்ந்த தாகும். ஆயுர்வேத சிகிச்சையிலும் இதற்கு முக்கிய பங்கு உண்டு. இந்த சொற்றொடர் ஸ்வபாவம் மற்றும் உபரமம் என்னும் பதங்களைக் கொண்டது.

ஸ்வபாவம் என்ற சொல்லிற்கு இயற்கையானது என்று பொருள் கூறலாம். உபரமம் என்ற வார்த்தை அழிவைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். காரணம் இல்லாமல் தானாக அழிவைத் தேடிக் கொள்வதற்கு ஸ்வபாவ உபரமம் என்று பெயர்.

தாதுக்களின் விருத்தியும், க்ஷயமும் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன. ஒத்த குணங்களுடைய பொருட்களால் தாதுக்கள் அதிகரிப் பதையும், விபரீத குணங்களுடய பொருட்களால் தாதுக்கள் குறைவதை யும் நாம் காண்கிறோம்.

ஒரு பாவ பதார்த்தம் உருவாவதற்கு ஹேது எனும் காரணம் உண்டு. ஆனால் அதன் அழிவுக்குக் காரணம் என்று ஒன்று கிடையாது. காரணமின்மையே அழிவுக்குக் காரணம் என்று கூறுபவர்களும் உண்டு. சிருஷ்டிக்குக் காரணம் உண்டு. அழிவுக்குக் காரணம் இல்லை. அழிவு தானாக நடக்கிறது. ஒரு விளக்கை எரிய வைப்பதற்கு திரி, எண்ணெய் போன்றவை தேவைப்படுகின்றன. ஆனால் அந்த விளக்கோ தானாக அணைகிறது.

இரும்பினால் கத்தியைச் செய்கிறோம். அதன்பிறகு கத்தி பல செயல்களுக்குப் பயன்படுகிறது. தாதுக்களின் சாதர்ம்யம் பல நேரங் களிலும் தாமாகவே ஏற்பட்டு விடுகிறது. நாம் சாப்பிடும் உணவினால் ரஸ தாது உற்பத்தியாகிறது. ஆனால் அழிவுக்கென்று ஒரு காரணம் இல்லை. அழிவு ஏற்பட வேண்டுமென்றால் அது தானாகவே ஏற்படும் என்பதை யும், உற்பத்திக்குக் கூறுவதுபோல் அதற்கு ஒரு காரணம் இல்லை என்பதையும் சரகர் வலியுறுத்திக் கூறுகிறார்.

சரக ஸம்ஹிதையில் ஸூத்திர ஸ்தானத்தில் சிகிச்சா பிரப்ருதீயம் என்னும் அத்தியாயத்தில் புனர்வஸூ ஆத்ரேயர் அழிவுக்கானக் காரணங் களைப் புரிந்து கொள்ள இயலாது என்றும், அது காலத்தின் லீலை என்றும் விவரித்துக் கூறுகிறார்.

உடலில் சிவப்பு அணுக்கள் 120 நாட்களில் அழிந்து விடுகின்றது என்று நவீன மருத்துவம் கூறுகிறது. இதனை ஸ்வபாவு உபரம வாதமாக எடுத்துக் கொள்ளலாம்.

## ஆயுர்வேதத்தில் காரண காரிய சம்பந்தம்

ஆயுர்வேதத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அனைத்தும் காரண காரிய சம்பந்தம் உடையவை. எல்லா நோய்களுக்கும் ஒரு காரணம் காணப்படும். காரணத்தை ஆயுர்வேதம் நிதானம் என்கிறது. அந்த நிதானமானது நோயின் முதற்குறியாகவும், அறிகுறியாகவும் மாறுகிறது. இவ்வாறு நோய் உருவாகும் முறைக்கு ஸம்ப்ராப்தி என்று பெயர். இதனால் நாம் செய்கின்ற சிகிச்சையும் காரணத்தைச் சார்ந்து இருக்கின்றது. இந்த சிகிச்சையை உபசயம் என்று சொல்கிறோம். நிதானத்தைக் காரணம் என்று எடுத்துக் கொண்டால் ரோகத்தைக் காரியம் என்று கூறலாம். நன்னடத்தை ஒரு காரணமாகிறது, அதனால் ஆரோக்கியமான உடல்நிலை காரியமாகிறது. தோஷ துஷ்டி காரணமாகிறது, அதனால் ரோகம் காரணமாகிறது. இதனால் நோய் உருவாவது காரியமாகிறது. ஸுச்ருதர் உலக சிருஷ்டிக்கு சில காரணங்களைக் கூறுகிறார். அவை ஸ்வபாவம், ஈஸ்வரன், காலன், யத்ருச்சயா, நியதி, பரிணாமம் போன்றவையாகும்.

- ஸ்வபாவம் – இயற்கையாக உருவாவது
- ஈஸ்வரன் – கடவுள்
- காலன் – காலச்சக்கரத்தின் சுழற்சி
- யத்ருச்சயா – தானாகவே உருவாவது
- நியதி – ஒரு சட்டதிட்டத்திற்கு உட்பட்டு உருவாவது
- பரிணாமம் – அணுக்களின் மாற்றங்கள்

இதில் பரிணாமம் உபாதான காரணமாகவும் மற்றவை நிமித்த காரணமாகவும் ஸுச்ருதர் கூறுகிறார். இவ்வாறு காரண காரிய ஸித்தாந்தம் ஆயுர்வேதத்தில் பங்கு வகிக்கிறது.

### சரகர் கூறும் வாதங்கள்

பண்டைக் காலத்தில் மருத்துவர்களிடையே வாதங்கள் நடந்தன. இதற்கு ஸதஸ் (சபை) என்று பெயர். வாத விவாதங்களை வழிவகுத்துக் கொள்ள 44 விஷயங்களை மருத்துவன் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

## வாதம்

நூலில் கூறிய விதிமுறைகளைப் பின்பற்றி தன் கருத்துக்களை நிலை நாட்டுவதற்காக எதிரிகளுடன் உரையாடுவது வாதம் எனப்படும், அது ஜல்பம், விதண்டா என இருவகைப்படும். ஜல்பம் என்பது ஆதாரத்துடன் பேசுவது. விதண்டா என்பது எதிரிடையாகப் பேசுவது. மறுபிறவி உண்டு என்றும், மறுபிறவி இல்லையென்றும் வாதம் நடைபெறுவதாக வைத்துக் கொள்வோம். இதை சாஸ்திர பிரமாணத்துடன் பேசுவது ஜல்பம் எனவும், சாஸ்திர பிரமாணமில்லாமல் பேசுவது விதண்டம் எனவும் கருதப்படும்.

அடுத்தது 2 முதல் 7 வரை, திரவ்யம், குணம், கர்மம், சாமான்யம், விசேஷம், ஸமவாயம். இவை முன்பே ஆரம்பப் பகுதிகளில் விளக்கப் பட்டுள்ளது.

## 8. பிரதிக்ஞா

எந்தச் செயலைச் செய்து முடிக்க வேண்டும் என்று உறுதிப்படுத்து கிறோமோ அதை வெளிப்படுத்தும் சொல் பிரதிக்ஞா எனப்படும். உதாரணமாக ஆத்மா அழிவற்றது என்ற சொல் பிரதிக்ஞாவாகும்.

## 9. ஸ்தாபனா

தன்னால் செய்யப்பட்ட சூளுரையை ஹேது, திருஷ்டாந்தம் (உபநயனம்) உபநயம், நிகமனம் இவற்றால் உறுதிப்படுத்துவதை ஸ்தாபனா என்கிறோம்.

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| பிரதிக்ஞை | – | ஆத்மா அழிவற்றது. |
| ஹேது | – | ஏனெனில் ஆத்மா யாராலும் செய்யப்படாதது |
| திருஷ்டாந்தம் | – | ஆகாயத்தைப்போல இது அழிவற்றது |
| நிகமனம் | – | எப்படி ஆகாயத்தைப் படைப்பவன் என்று ஒருவன் இல்லையோ அதைப்போல் புருஷனைப் படைப்பவனும் ஒருவன் இல்லன். ஆதலால் புருஷன் அழிவற்றவன் என்று தன்னுடைய உறுதிப் பாட்டை நான்கு நிலைகளில் ஸ்தாபனம் செய்வது. |

## 10. பிரதிஷ்டாபனா

எதிராளியின் கொள்கைக்கு எதிரிடையாக தன் கொள்கையை வெளிப்படுத்துவது பிரதிஷ்டாபனா எனப்படும். உதாரணமாக புருஷன் அழிவற்றவன் என்று முதலில் உறுதிப்படுத்துகிறான். அந்த உறுதிப்பாட்டுக்கு எதிரிடையாகக் கூறுவது புருஷன் அழிவுள்ளவன் என்பதாகும். அதற்கு காரணம் புலன்களால் பார்க்கப்படுவதால் ஏற்படும் அறிவை ஆதாரமாகக் கூறுவதாகும். மண்ணால் ஆக்கப்பட்ட பானை அழிவது கண்ணால் பார்க்கப்படுகிறது. அதுபோல் புருஷனும் அழிகிறான் என்று கூறுவது. இது புருஷனுக்குள் இருக்கும் ஆத்ம அறிவு இல்லாமல் வெறும் உடலைச் சார்ந்து பேசுவதாகும்.

## 11. ஹேது

அறிவுக்கு சாதனமான காரணத்தை ஹேது என்கிறோம். இந்த ஹேதுவானது பிரத்யக்ஷம், அனுமானம், ஐதீகம் என்ற ஆப்த வாக்கியம், உபமானம் இவற்றைச் சார்ந்துள்ளது.

## 12. திருஷ்டாந்தம்

அறிவாளிகளும், அறிவிலிகளும் ஒரே விதமாக அறிந்து கொள்ளும்படி கூறவேண்டியதை எதைக் காட்டி உறுதிப்படுத்துகிறோமோ அதுவே திருஷ்டாந்தம் எனப்படும். உதாரணமாக நெருப்பு சூடானது, நீர் திரவமானது, நிலம் அசைவற்றது, கதிரவன் ஒளி வீசுபவன் போன்றவற்றைக் கூறலாம். கதிரவன் ஒளி உலகம் முழுவதும் வீசுவதைப் போல சான்றோர்களின் சொல் உலகம் முழுவதும் பரவுகிறது.

## 13. உபநயம்

## 14. நிகமனம்

ஏற்கனவே அனுமானம் பகுதியில் இவற்றைப் பற்றி விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

## 15. உத்தரம்

காரணத்தில் உள்ள ஒரு பொதுவான குணத்தைக் கூறும்பொழுது அதற்கு எதரிடையான மற்றொரு பொதுவான குணத்தைக் கூறுதல்

அல்லது காரணத்தில் உள்ள எதிரிடையான குணத்தைக் கூறுதல் உத்தரம் எனப்படும். உதாரணமாக வாத நோய்க்கு காரணம் குளிர்ந்த காற்று, வாத நோயிலும் குளிர்ச்சி என்ற குணம் உண்டு. அதே குளிர்ச்சி என்ற குணம் காற்றிலும் உள்ளது என்று ஒருவன் கூறுவானானால் அவனுக்கு நாம் இவ்விதம் பதில் கூற வேண்டும். வாதநோய் தோன்றிய உடல் உறுப்பு களில் எரிச்சல், சூடு, அழுகுதல் போன்ற குணங்கள் உள்ளன. அவை குளிர்ச்சிக்கு எதிரானவை, அவை வாதநோய்க்கு காரணமான குளிர்ந்த காற்றில் இல்லை. ஆதலால் நோய்க்கும், நோய்க்கு காரணமானவற்றிலும் ஒரே குணம் இல்லை. இவ்வாறு எதிரான பதிலைக் கூறுவது. இது பல சந்தர்ப்பங்களில் பொருந்தாது.

## 16. ஸித்தாந்தம்

ஆராய்ச்சிக்குரிய விஷயங்களை ஆராய்ச்சியாளர்கள் மூலமாக பல தடவை ஆராய்ந்து காரணங்களைக் கொண்டு முடிவு செய்தல் ஸித்தாந்தம் எனப்படும். இதை ஏற்றுக் கொள்ளக் கூடிய தத்துவங்கள் என்று கூறலாம். இவை,

ஸர்வ தந்திர ஸித்தாந்தம்
பிரதி தந்திர ஸித்தாந்தம்
அதிகரண. ஸித்தாந்தம்
அப்யுகம ஸித்தாந்தம்

என நான்கு வகைப்படும்.

### ஸர்வ தந்திர ஸித்தாந்தம்

எல்லா நேரங்களிலும் ஒப்புக் கொள்ளக் கூடிய ஸித்தாந்தம் ஸர்வ தந்திர ஸித்தாந்தம் என்றழைக்கப்படுகிறது. உலகம் பஞ்சமஹாபூதங் களால் ஏற்படுத்தப்பட்டவை. இது ஒரு ஸர்வ தந்திர ஸித்தாந்தமாகும். அறுசுவைகளே உள்ளன. இது ஸர்வ தந்திர ஸித்தாந்தம் ஆகும். பஞ்ச பூதங்களே உள்ளன. மூன்று தோஷங்களே உள்ளன. மூன்று மலங்களே உள்ளன. ஏழு தாதுக்களே உள்ளன. இவையெல்லாம் ஸர்வ தந்திர ஸித்தாந்தமாகும்.

## பிரதி தந்திர ஸித்தாந்தம்

ஒவ்வொரு நூலிலும் தனித்தனியான புகழ்பெற்ற ஸித்தாந்தங்கள் பிரதி தந்திர ஸித்தாந்தங்கள் எனப்படும். அந்தந்த ஸித்தாந்தங்கள் அந்த நூலாசிரியரையே சார்ந்தது.

உதாரணமாக தாமார்கவ தந்திரந்தில் இனிப்பு, புளிப்பு, உப்பு, கசப்பு, எரிப்பு, க்ஷாரம், உவர்ப்பு, அவ்யக்தம் என எட்டு வகை சுவைகளைக் கூறுகிறார். சரகர் க்ஷாரம், அவ்யக்தம் நீங்கலாக ஆறுவகை சுவைகளைக் கூறுகிறார். சரக ஸம்ஹிதையில் ஞானேந்திரியங்கள் ஐந்து என்று குறிப்பிடப்படுகின்றன. மற்ற நூல்களில் ஞானேந்திரியங்கள் மனதையும் சேர்த்து ஆறு என்று குறிப்பிடப்படுகின்றன. சரக ஸம்ஹிதையில் வாத பித்த கபம் என்னும் மூன்று தோஷங்களால் நோய் உண்டாகின்றன என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வேறு சில புத்தகங்களில் வாதம், பித்தம், கபம், ஜீவாணு, பூதம் இவற்றால் நோய் உண்டாக்கப்படுகிறது என்று கூறப்படு கின்றன. இதற்கு பிரதி தந்திர ஸித்தாந்தம் என்று பெயர்.

## அதிகரண ஸித்தாந்தம்

ஒரு நூலில் ஒரு பொருளைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அத்துடன் தொடர்புடைய மற்ற நூல்களில் உள்ள ஸித்தாந்தங்களைக் குறிப்பிடுவது அதிகரண ஸித்தாந்தமாகும்.

உதாரணமாக முக்தி பெற்றவர்கள் தீய பலன்களை அளிக்கக் கூடிய செயல்களைச் செய்வதில்லை. ஏனென்றால் அவர்கள் ஆசையற்றவர்கள். அவர்களுக்கு இம்மை, மறுமை பயனைப் பற்றி அறிந்து கொள்ளும் விருப்பமில்லை. ஆதலால் அவர்கள் பற்றற்றவர்கள். பற்றற்றவர்களாக இருப்பதால் முக்தியை அடைந்தவர்கள் என்று கூறுகிறோம். இதிலிருந்து பற்றுள்ளவர்களுக்கு கர்மம் ஏற்படும். கர்மாவிற்கும் பலனுண்டு போன்ற வற்றை நாம் அறிந்து கொள்கிறோம். மறுபிறப்பு போன்றவற்றையும் நாம் இதன் மூலம் அறிந்து கொள்கிறோம்.

## அப்யுகம ஸித்தாந்தம்.

மருத்துவர்கள் நூலில் கூறிய விஷயங்களைப் பற்றி விவாதம் செய்யும் பொழுது பிரஸித்தமானதும், ஆராயப்படாததும், சான்றோர்

களால் உபதேசிக்கப்படாததும், காரணமற்றதுமான விஷயங்களை ஒப்புக் கொள்வது அப்யுகம விஷயங்கள் எனப்படும்.

## 17. சப்தம்

சப்தம் என்பது எழுத்துக்களின் கூட்டாகும். அனு திருஷ்டார்தம், அதிர்ஷ்டார்தம், ஸத்யம், அன்ரிதம் என நான்கு வகைப்படும்.

- திருஷ்டார்தம் என்பது காதால் கேட்கக் கூடியதும், தெளிவானதுமான சப்தம் ஆகும்.
- அதிர்ஷ்டார்தம் என்பது புலன்களுக்குப் புலப்படாதது ஆகும். இறந்தபின் மறுபிறப்பு வருகிறது, மோக்ஷம் ஏற்படுகிறது. இது புலன்களால் அறிய முடிவதில்லை. சாஸ்திரத்தை நம்பி நாம் இதை அறிகிறோம். இது அதிர்ஷ்டார்தமாகும்.
- ஸத்யம் என்பது உண்மையான வார்த்தைகளைக் குறிப்பது. சில மருத்துவ உபதேசங்களைக் குறிப்பிடலாம்.
- அன்ரிதம் என்பது உண்மைக்கு புறம்பான விஷயங்களைக் குறிப்பதாகும்.

## 18. பிரத்யட்சம்

## 19. அனுமானம்

## 20. ஐதீகம்

என்ற ஆப்த வாக்கியம் போன்றவை முன்பு விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

## 21. உவமானம் (ஒப்பிடுதல்)

தடியைக் காண்பித்து தண்டகம் என்ற நோயையும், வில்லைக் காண்பித்து தனுஸ்தம்பம் என்ற நோயையும் குறிப்பிடுவது உவமானம் ஆகும். இதுவும் முன்பு விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 22. ஸம்சயம்

சந்தேகத்துக்குரிய இலக்கணங்களைக் கொண்டு விஷயங்களை முடிவு செய்யாமல் இருத்தல். உதாரணமாக ஒரு நோயாளி முழு ஆயுள்

வரை வாழ்வதற்கான இலக்கணங்களைப் பெற்றிருந்தும் அவன் இறந்து விடுகிறான். மற்றவன் பல நோய் லட்சணங்களைக் கொண்டிருந்தும் நீண்ட நாள் வாழ்கிறான். நன்கு சிகிச்சையளித்தாலும் ஒருவன் அழிகிறான். சிகிச்சை செய்யாத மனிதன் நீண்ட நாள் வாழ்கிறான். எனவே மனிதனுக்கு பிறப்பு, இறப்பு என்பது இதைச் சார்ந்ததல்ல என்ற ஐயம் வருகிறது. இதற்கு ஸம்சயம் என்று பெயர்.

## 23. பிரயோஜனம்

ஆயுளை வளர்த்துக் கொள்வதற்காகவும், நன்மை தருவதற்கும் உணவு முறைகள், நடைமுறை பழக்க வழக்கங்கள் இவற்றை நான் கடைபிடிப்பேன். ஆயுளுக்கு கெடுதல் செய்விக்கும் செயல்களை நான் செய்யமாட்டேன். இதனால் மரணம் ஏற்படும் என்று நினைத்துப் பார்ப்பது பிரயோஜனமாகும்.

## 24.ஸவ்யபிசாரம்

நிலையற்ற அறிவு ஸவ்யபிசாரம் எனப்படும். ஒரு மருந்து எங்கு பயன்படுகிறது, எங்கு பயன்படவில்லை என்று தெரியாமல் அதை பயன்படுத்துவது ஒரு நிலையற்ற அறிவாகும். இதுவும் முன்பு கூறப்பட்டுள்ளது

## 25. ஜிஜ்ஞாஸா

எதையுமே சோதித்துப் பார்த்தல் ஜிக்ஞாஸா எனப்படும். மருந்து களை நன்றாக விலங்குகளுக்குக் கொடுத்துப் பரிசோதித்தபின் மனிதர் களுக்குக் கொடுப்பது. இது ஒரு ஆராய்ச்சி முறையாகும்.

## 26. வியவாஸயம்

வியவாஸயம் என்றால் தீர்மானித்தல். இந்த நோய் வாதத்தினால் ஏற்பட்டது. அதற்கு ராஸ்னாதி கஷாயமே சிறந்தது என்று உறுதியளிப்பது.

## 27. அர்த்தாபத்தி

ஒரு விஷயத்தைக் கூறி மற்றொன்றைக் கூறாமல் விளக்குவது, உதாரணமாக இரவில் தயிர் சாப்பிடக் கூடாது என்று கூறுவது. இதனால் பகலில் தயிர் சாப்பிடலாம் என்று அர்த்தம். இதுவும் முன்பு விளக்கப் பட்டுள்ளது.

## 28. ஸம்பவம்

எது எங்கிருந்து தோன்றுகிறதோ அக்காரணம் ஸம்பவம் எனப் படும். ஐம்பெரும் பூதங்கள், ஆத்மா என்கிற ஆறு தாதுக்களால் கர்ப்பம் உண்டாவதை ஸம்பவம் என்று கூறலாம்.

## 29. அனுயோஜ்யம்

கூறப்படும் வாக்கியம் குற்றமுள்ளதாக இருந்தால் அதற்கு அனு யோஜ்யம் என்று பெயர். உதாரணமாக இந்நோய்க்கு ஸம்சோதனம் செய்ய வேண்டும் என்று கூறுகிறோம். இங்கு ஸம்சோதனம் என்றால் வாந்தியா, பேதியா என்று குறிப்பிடப்படவில்லை. இவ்வாக்கியத்தில் குற்றமிருப்பதால் இவ்வார்த்தை அனுயோஜ்யம் எனப்படும்.

## 30. அனனுயோஜ்யம்

அனுயோஜ்யத்திற்கு எதிரிடையானது அனனுயோஜ்யம். உதாரண மாக இந்த நோய் சிகிச்சைக்கு கட்டுப்படாது என்று தெளிவாகக் கூறுதல்.

## 31. அன்யோகம்

ஒரு சாஸ்திரத்தை நன்கு அறிந்த அறிவாளி அதே சாஸ்திரத்தை நன்கு அறிந்த அறிவாளியுடன் அவனைப் பரிசோதிப்பதற்காக சில கேள்விகளைக் கேட்பது. உதாரணமாக புருஷன் அழிவற்றவன் என்று கூறினால், அதற்கு காரணம் என்ன என்று கேட்பது.

## 32. பிரத்யனுயோகம்

அன்யோகத்திற்கு மாறுபாடானது பிரத்யனுயோகம் எனப்படும். உதாரணம் முன்கூறிய அன்யோகத்திற்கு மேலும் என்ன காரணம் என்று கேட்பது பிரத்ய்னுயோகமாகும்.

## 33. வாக்கிய தோஷம்

ஒரு பொருளை வெளிப்படுத்தும் வார்த்தைகளில் குறையோ, மிகுதியோ, வேறு பொருளைக் கொடுக்கக் கூடியதாகவோ, சம்பந்த மில்லாத பொருளைத் தரக்கூடியதாகவோ அல்லது எதிரிடையான பொருளைத் தரக்கூடியதாகவோ இருந்தால் அவ்வித தோஷங்களுடன் கூடிய வாக்கியத்தை வாக்கிய தோஷம் என்கிறோம். இந்தக் குறைவு

போன்ற தோஷங்கள் இல்லாவிடில் வாக்கியத்தின் இயற்கை அர்த்தம் குலையாது. இது ஐந்து வகைப்படும்.

**நியூனம்** – ஒரு வாக்கியத்தில் பிரதிக்ஞா, ஹேது, உதாகரணம், உபநயனம், நிகமனம் இவற்றில் ஏதாவது ஒன்றின் குறைவு காணப்பட்டால் அதற்கு நியூனம் என்று பெயர்.

**அதிகம்** – ஒரு காரணத்தினால் முடிக்க வேண்டிய விஷயத்திற்கு பல காரணங்களைச் சுட்டிக் காட்டுவது அதிகமாகும்.

ஆயுர்வேதத்தைப் பற்றி பேச வேண்டிய இடங்களில் பார்கஸ்பத்யம் (ஜோதிடத்தைப் பற்றி பிருஹஸ்பதியால் எழுதப்பட்ட பழமையான நூல்), ஜோதிடம் இவர்களுடைய சாஸ்திரத்தைப் பற்றி பேசுவதாகும். ஒரே தோஷத்தைப் பற்றி திருப்பித் திருப்பிக் கூறுவது வாக்கிய தோஷமாகும்.

ஒரே பொருளைத் தரும் பல பதங்களை மீண்டும் மீண்டும் பல சொற் றொடர்களில் பயன்படுத்துவதும் வாக்கிய தோஷமாகும்.

**அனர்த்தகம்** – அர்த்தமில்லாத சொற்றொடர்கள் அனர்த்தகம் எனப்படும். கசடதப என்று எழுதினால் அது எவ்வித பொருளையும் தராது. இது ஒரு வாக்கிய தோஷமாகும்.

**அபார்த்தகம்** – கருத்துள்ள சொற்களானாலும் ஒன்றுக்கொன்று சம்பந்த மில்லாமல் இணைக்கப்பட்டுள்ள வாக்கியம் அபார்த்தகம் எனப்படும். உருளை, மோர், ஆயுதம், சந்திரன் என்று ஒரு வாக்கியம் ஏற்பட்டால் அதனால் எந்தவித பலனும் இல்லை.

**விருத்தம்** – திருஷ்டார்தம், ஸித்தாந்தம், சமயம் இவற்றிற்கு எதிரிடை யானது விருத்தம் எனப்படும்.

### 34. வாக்கிய ப்ரசம்ஸா

எந்த வாக்யம் தோஷமற்று இருக்கிறதோ அதாவது நியூனம், அதிகம், அனார்த்தகம், விருத்தம் இவை இல்லாமலிருக்கிறதோ, பதத்தின் உண்மையான பொருளை விளக்குகிறதோ அந்த வாக்கியம் அநநு யோஜ்யம் என்று புகழப்படுகிறது. ஆகையால் இது வாக்கியப்ரசம்ஸா எனப்படும்.

## 35. சலம் (ஏமாற்றுதல்)

வாத சமயத்தில் ஒருவன் கூறிய வாக்கியத்திற்கு அவனை ஏமாற்று வதற்காகத் தவறான பொருளைக் கற்பித்துக் கூறுவது, அவன் கருத்திற்கு மாறானதைக் கூறுவது சலம் எனப்படும். அது வாக்சலம், ஸாமான்ய சலம் என இருவகைப்படும்.

ஒருவன் மற்றவனைப் பார்த்து இந்த மருத்துவன் நவதந்திரன் (புதிதாகக் கற்றவன்) என்று கூறுவான். அதற்கு மருத்துவன் நான் நவதந்திரன் அல்லன் (ஒன்பது வகையான நூல்களைக் கற்றவனல்லன்) ஏக தந்திரன் (ஒரே நூலை மட்டும் கற்றவன்) என்று கூறினான். முதல்வன் மருத்துவனைப் பார்த்து நான் உன்னை நவதந்தரன் எனக் கூறவில்லை. நவதந்திரன் (புதிதாகக் கற்றறிந்தவன்) என்றல்லவா கூறினேன் என்றான். நவம் என்ற சொல்லுக்கு ஒன்பது மற்றும் புதியது என்று இரு பொருள்கள் உண்டு. அதற்கு மருத்துவன். 'நான் புதிதாகப் படிக்கவில்லை'. பலதடவை படித்திருக்கிறேன் என்று கூறினான். இவ்வாறு கூறும் வாக்கியம் வாக்சலம் என்பதாகும்.

**ஸாமான்ய சலம்**

ஒரு மருத்துவன் நோயைத் தணிக்கக் கூடியது மருந்து எனக் கூறினான். அதைக் கேட்ட மற்றவன் 'ஸத்–ஸத்தைத் தணிக்கிறது என்று கூறுகிறாயா? ஸத்– என்றால் இருக்கும்பொருள் என்று அர்த்தம். நோயும் ஸத்துப் பொருள், மருந்தும் ஸத்துப் பொருள். ஆகையினால் ஒரு இருக்கும் பொருள் மற்றொரு இருக்கும் பொருளை அழிப்பதாக அல்லவா பொருள் படும். அப்படியானால் இருமல் ஸத் ஆகும். உடல் உருக்கி நோய் ஸத் ஆகும். ஸத் பொதுவாக இருப்பதால் இருமல் உடல் உருக்கி நோயைத் தணிக்கட்டுமே என்று உன் வாக்யத்தில் கருத்து' எனக் கூறினான். இது ஸாமான்யசலம் எனப்படும்.

## 36. அஹேது

அஹேது என்பது பிரகரணஸமம், ஸம்சயஸமம், வர்ண்யஸமம் என மூவகைப்படும்.

(அ) பிரகரணஸமம் என்னும் அஹேது

ஒருவன் உடலைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மா அழிவற்றது என்று சொன்னான். அதற்கு மற்றவன் 'எந்தக் காரணத்தினால் உடலிலிருந்து ஆத்மா வேறுபட்டது என்று கூறுகிறாயோ அதே காரணத்தினால் ஆத்மா அழிவுற்றது. இதனால் உடல் ஆத்மாவைக் காட்டிலும் வேறானதாக ஆக வேண்டும்' என்கிறான்.

இது இந்த இடத்தில் அஹேதுவாகும். ஏனென்றால் எது பக்ஷமாக ஆகிறதோ அதே ஹேதுவாக ஆக முடியாது. இங்கு ஆத்மா அழிவற்றது என்று கூறுவது பட்சம். அதை ஆத்மா உடலிலிருந்து வேறுபட்டது என்று ஹேதுவைக் கொண்டு சாதிப்பது அஹேதுவாகும்.

தன்னுடைய அழியாத் தன்மையைச் சாதிப்பதற்குத் தன்னையே காரணமாக ஒப்புக் கொள்வது தகாது.

### (ஆ) ஸம்சய ஸமம் என்னும் அஹேது

எது சந்தேகத்திற்குக் காரணமாக உள்ளதோ, அதே சந்தேகத்தைப் போக்கக் கூடியதெனக் கூறப்படுமானால் அது ஸம்சயஸமம் என்ற அஹேதுவாகும்.

எடுத்துக்காட்டு: இவன் ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவைக் கூறுகிறான். அதனால் இவன் மருத்துவனா அல்லனா என்ற சந்தேகம் ஏற்படுகிறது என்று ஒருவன் சொல்லுகிறான்.

அதற்கு மற்றவன், இவன் ஆயுர்வேதத்தின் ஒரு பகுதியைக் கூறு வதனாலேயே மருத்துவன்தான் என்கிறான்.

இங்கு ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவை அறிந்தவன் என்றதாலேயே சந்தேகம் ஏற்பட்டது. அந்த ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவை அறிந்தவன் என்ற சந்தேகத்தை விலக்குகிறது. ஆகையால் இதை ஸம்ஸயம் அஹேதுகம் என்கிறோம்.

இங்கு சந்தேகத்திற்கான காரணத்தில் ஒரு சிறப்பும் கூறப்பட வில்லை. இது அஹேது. எது சந்தேகத்திற்குக் காரணமாக ஆகிறதோ அது சந்தேகத்தைப் போக்க காரணமாக ஆகாது.

### (இ) வர்ணயஸம என்னும் அஹேது

எந்தக் காரணம் வர்ணிக்கத் தகுந்த சிறப்புடன் இல்லையோ அதை வர்ணயஸம அஹேது என்கிறோம்.

உதாரணமாக ஒருவன் "அறிவு தொடுவதற்கு முடியாததால் சப்தத்தைப் போல அழிவுற்றது" என்கிறான். இங்கு சப்தம் வர்ணிக்கத் தகுந்தது. அறிவும் சப்தமும் வர்ணிக்கத் தகுந்தவை. அதனால் ஒன்றுக்கொன்று ஸமமானவை. ஆகையால் இந்தக் காரணம் வர்ணயஸம அஹேதுவாகும்.

## 37. அதீத காலம்

முதலில் சொல்ல வேண்டியது பின்பு காலம் கடந்து சொல்லப் படுமானால் அதை காலாதீதம் (காலம் கடந்தது) என்கிறோம். இந்த காலாதீதம் தோஷத்துடன் கூடியிருப்பதால் ஏற்கத்தக்கதன்று.

வாக்குவாதத்தில் தடுக்க வேண்டிய இடத்தில் வந்ததைத் தடுக்காமல் பிறகு அவன் மற்றொரு வாதத்தை எடுத்துக் கொண்டு சாஸ்திர விசாரம் செய்கிறான் என்பதை அறிந்து அல்லது தடுக்க வேண்டும் என்று அவனை முன் சொன்ன வாரத்தையைக் கொண்டு தடுப்பது காலம் கடந்து விட்ட படியால் திறமையற்றதாக ஆகிறது.

## 38. உபாலம்பம்

காரணத்தில் குற்றத்தை எடுத்துக் காட்டி கூறுவது உபாலம்பம் எனப் படுகிறது. இதை ஹேத்வாபாஸா என்றும் கூறுவர். இது அஹேது என்ற இடத்தில் விளக்கப்பட்டுள்ளது.

## 39. பரிஹாரம்

எதிராளியின் குற்றமுள்ள வாக்கியத்தை மறுப்பதன் மூலம் உண்மையை நிலை நாட்டுவது பரிஹாரம் எனப்படும். ஆத்மா என்பது உடலில் இருக்கும்பொழுத ஜீவனுக்குள்ள இன்பம், துன்பம், விருப்பம், வெறுப்பு, தர்மம், அதர்மம் இவை எப்பொழுதும் காணப்படுகின்றன. ஆதலால் உடலே ஆத்மா என்பது எதிராளியின் வாதம்.

அந்த ஆத்மா உடலிலிருந்து வெளிக்கிளம்பியவுடன் ஜீவனுக்குள்ள இலக்கணங்கள் காணப்படாததால் ஆத்மா என்பது உடலைக் காட்டிலும் வேறானது. அது அழிவுற்றது என்பது அதன் மறுப்பு. இது பரிஹாரமாகும்.

## 40. பிரதிக்ஞாஹானி

முன்னால் உறுதி செய்யப்பட்டு தோல்வியடைந்தபின் கைவிடப்படுவது அல்லது முன்னால் உறுதி செய்யப்பட்டு தீர்மானிக்க முடியாதது பிரதிக் ஞாஹானி எனப்படும்.

உதாரணம்: முன்னால் உறுதி செய்யப்பட்டது புருஷன் அழிவற்றவன் என்பதாகும். அந்த வாதம் தோல்வியடைந்ததும் புருஷன் அழிவற்றவன் என்று ஒப்புக் கொள்வது பிரதிக்ஞாஹானி.

## 41. அப்யநுக்ஞா

தனக்கு விருப்பமுள்ள, விருப்பமில்லாத எதிராளியின் வாக்யங்களை ஏற்றுக் கொள்வது அப்யநுக்ஞா எனப்படும்.

## 42. ஹேத்வந்தரம்

ஒரு விஷயத்தைத் தீர்மானிப்பதற்காக எந்த ஹேதுவைச் (காரணத்தைச்) சொல்ல வேண்டுமோ அதற்குப் பதிலாக தகாத வேறு ஒரு ஹேதுவைக் கூறுவது ஹேத்வந்தரம் எனப்படும்.

## 43. அர்த்தாந்தரம்

ஒரு கருத்தைக் கூற வேண்டிய இடத்தில் வேறு ஒரு கருத்தைக் கூறுவது அர்த்தாந்தரமாகும். உதாரணமாக காய்ச்சலுக்கு இலக்கணம் கூற வேண்டிய இடத்தில் நீரழிவுக்கான இலக்கணம் கூறுதல் அர்த்தாந்தரமாகும்.

## 44. நிக்ரஹஸ்தானம்

தோல்வியை ஒப்புக் கொள்ளுதல் நிக்ரஹஸ்தானம் எனப்படும். அது மூவகைப்படும். ஒன்று, அறிவாளிகளின் சபையில் மும்முறை கூறிய போதிலும் வாக்கியத்தின் பொருளை அறிந்து கொள்ளாதிருத்தல். இரண்டு, குற்றமில்லாத வாக்கியத்தைக் குற்றமாகக் கருதுதல். மூன்று, பிரதிக்ஞாஹானி. அப்யனுக்ஞஷா, காலாதீத வசனம், அஹேது, நியூனம், அதிகம், வியர்த்தம், அனர்த்தகம், புனருக்தம், விருத்தம், ஹேத்வந்தரம், அர்த்தாந்தரம் இவையும் (நிக்ரஹஸ்தானம்) தோல்விக்குக் காரணங்களாகும். பிரதிக்ஞாஹானி முதல் அர்த்தாந்தரம் வரை விளக்கம் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு வாதம் புரிவதற்குத் தேவையான பதங்களின் விளக்கம் நூலில் கொடுக்கப்பட்டுள்ளது.

## 9. சிருஷ்டி – உற்பத்தி நிரூபணம்

ஆயுர்வேதத்தின் சிருஷ்டி–கிரம நிரூபணம், ஸாங்க்ய மற்றும் வைசேக்ஷிக தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டது.

தத்துவம் என்ற சொல் சிருஷ்டியின் படைப்புகளாகக் காரணிகளை குறிக்கப் பயன்படுகிறது.

ஸாங்க்ய தரிசனத்தின்படி, சிருஷ்டிக்குக் காரணங்கள் இரண்டு. அவை, பிரக்ருதி, புருஷன் என்பனவாகும்.

ஸுச்ருதரும் சிருஷ்டிக்குக் காரணங்களாக மேற்கண்ட இரண்டு காரணிகளைக் குறிப்பிடுகிறார். இவை இரண்டு உட்பட மொத்தம் 25 காரணிகள். இதை பஞ்ச விம்சதி தத்துவங்கள் – என்கிறது ஸாங்கிய தரிசனம்.

**சிருஷ்டி உற்பத்தி** (பிரபஞ்சத்தின் சிருஷ்டி)

பிரக்ருதி அல்லது புருஷன் தனியாக சிருஷ்டியை மேற் கொள்ள முடியாது. பிரக்ருதி, புருஷனுடன் இணையும்போது பிரக்ருதி தூண்டப்படுகிறது. அப்போது பிரக்ருதியும் புருஷனும் இணைகின்றன. இந்த இணைப்பு சிருஷ்டிக்கு அவசியமாகிறது. பிரக்ருதி தனது உறுதியான நிலையை இழந்து பல்வேறு மாறுதல் களுக்கு உட்படுகிறது. இந்த மாறுதல்கள் சிருஷ்டியில் முடிகிறது. சிருஷ்டி கீழ்க்கண்ட வரிசையில் நிகழ்கிறது. அவ்யக்தம் அல்லது பிரக்ருதி ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் குணத்தைச் சார்ந்து

மஹத்தை (புத்தியை) சிருஷ்டிக்கிறது. மஹத்துக்கும் மேற்சொன்ன மூன்று குணங்கள் உண்டு.

மஹத், அஹங்காரத்தை சிருஷ்டிக்கிறது. இதுவும் மேற்படி மூன்று குணங்களைக் கொண்டிருக்கிறது.

அஹங்காரம் மூன்று வகைப்படும். அவை,

ஸாத்வீக அஹங்காரம் (வைகாரிகம்)
ராஜஸிக அஹங்காரம் (தேஜஸம்)
தாமஸிக அஹங்காரம் (பூதாதி)

என்பனவாகும்.

ஸாத்விக அஹங்காரம், ராஜஸிக அஹங்காரத்துடன் இணைந்து பதினொரு இந்திரியங்கள் உருவாக செய்கிறது. அவை:

ஐந்து ஞானேந்திரியங்கள்
ஐந்து கர்மேந்திரியங்கள் மற்றும்
மனஸ் (மனது)

தாமஸிக அஹங்காரம், ராஜஸிக அஹங்காரத்தின் உதவியுடன் ஐந்து தன்மாத்திரைகள் உருவாக வசதி செய்கிறது. அவை.

சப்தம், ஸ்பர்ஸம், ரூபம், ரஸம், கந்தம் (பூதங்களை உருவாக்கும் நுண் அம்ஸங்கள்).

இந்த ஐந்து தன்மாத்திரைகளும் ஐந்து வைசேஷிக குணங்களைக் கொண்டிருக்கின்றன.

ஐந்து தன்மாத்திரைகளிலிருந்து ஐந்து மஹாபூதங்கள் வெளிப் படுகின்றன.

(இந்த 25 தத்துவங்களும் சிருஷ்டி வெளிப்பாட்டுக்குத் தேவைப் படுகின்றன).




## பிரக்ருதி

ப்ர என்றால் முதல் அல்லது முன்னால். பிரக்ருதி என்றால் வேறு எந்த கார்ய திரவியங்களுக்கும் முன்பே இருப்பது என்று பொருள்.

## பிரக்ருதியின் வேறு பெயர்கள்

- பிரதானம் – சிருஷ்டியின் முக்கிய காரணி.
- அவித்யா – எந்த அறிவும் இல்லாதது.
- மாயா – பல்வேறு சிருஷ்டிக்குக் காரணி
- சக்தி – வலிமைக்கு அடிப்படை
- அவ்யக்தம் – சிருஷ்டி முழுவதும் இதற்குள் பீஜாரூபமாக மறைந்துள்ளது (வெளிப்பாடு இல்லாதது)

## பிரக்ருதியின் லட்சணங்கள்

1. ஸர்வபூதானாம் காரணம் – பிரபஞ்சத்தில் முக்கிய காரணியாக பிரக்ருதி விளங்குகிறது (அனைத்து உற்பத்திக்கும் உயிர்களுக்கும் காரணம்).

2. அகாரணம் – அதன் சிருஷ்டிக்கு வேறு காரணிகள் (காரணங்கள்) இல்லை.
3. ஸத்வ ரஜஸ் தமோ லட்சணம் – இதற்கு மூன்று குணங்கள் உள்ளன. அவை ஸத்வ, ரஜஸ் மற்றும் தமஸ் ஆகும்.

- அஷ்டரூபம் – இதற்கு எட்டு ரூபங்கள் உண்டு.
- அகிலம் அஸ்ய ஜகத: ஹேது:முழு பிரபஞ்சத்தின் **படைப்புக்கும் காரணி.**
- . ததேகம் பஹூனாம் க்ஷேத்ரஞ்ஞானாம் அதிஷ்டானாம்: நிறைய புருஷர்கள் (ஜீவன்கள்) உறையும் கோவில்.

## மஹத் தத்துவம்

பிரக்ருதியின் முதல் விகாரம் இது. இதுதான் புத்தி. புத்தியே சரி, தவறு என இரண்டையும் பிரித்தறிகிறது. எந்த செயலையும் முடிவெடுப்பது இதுதான்.

மூன்று குணங்களையும் இது கொண்டிருந்தாலும், 'ஸத்வ குணம் தான் இதில் முக்கியமாகக் காணப்படுகிறது. தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம் ஆகியவை இதன் இயற்கையான குணங்கள் ஆகும்.

மஹத்தில் சில சமயங்களில் ஸத்வ குணத்துக்குப் பதிலாக தமோகுணம் முக்கியமாகக் காணப்படும். அப்போது மேற்கண்ட ஸாத்விக குணங்களுக்குப் பதிலாக வேறுபட்ட குணங்களான அதர்மம், அஞ்ஞானம், அசக்தி, அனைஸ்வர்யம் ஆகியவை இடம்பெற்றிருக்கும்.

## அஹங்காரம்

'நான்', 'எனக்கு' என்ற கர்வத்தை அளிப்பது அஹங்காரம் ஆகும். உலகின் மற்றவர்களை விட தான்தான் உயர்ந்தவன் என்ற உணர்வை அஹங்காரமே ஏற்படுத்துகிறது. முக்கியத்துவம் பெற்றுள்ள குணத்தை அனுசரித்து அஹங்காரம் மூன்று வகைப்படும்.

1. ஸாத்வீம்
2. ராஜஸிகம்
3. தாமஸிகம்.

## இந்திரியங்கள்

ராஜஸிக அஹங்காரத்துடன் இணைந்து ஸாத்விக அஹங்காரம் பதினொரு இந்திரியங்களை (உறுப்புக்களை) பிறப்பிக்கிறது. ஜீவாத்மா அல்லது புருஷன் அறிவு பெறுவதில் இந்த உறுப்புகள் உதவுகின்றன. இந்திரியங்களை பௌதிகம் என்றோ பஞ்சமஹா பூதங்களிலிருந்து உருவானவை என்றோ ஸாங்கிய தரிசனம் கருதவில்லை. ஆயுர்வேதமும் நியாய தரிசனமும் அவை மஹாபூதங்களிலிருந்து உருவானவை என்று கருதுகின்றன.

## பஞ்ச தன்மாத்திரைகள்

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து தன்மாத்திரை கள், ஐந்து மஹாபூதங்களின் சூட்சுமம் (நுண்வடிவம்) ஆகும். யோகி களால் மட்டுமே இதை அறிய முடியும்.

## பஞ்சமஹாபூதங்கள்

ஆகாயம், வாயு, அக்னி, ஜலம், பிருத்வி என்ற ஐந்து மஹாபூதங் களும் ஐந்து தன்மாத்திரைகளிலிருந்து தோன்றியவை. தன்மாத்திரை களின் ஸ்தூல உருவங்களே மஹாபூதங்கள் ஆகும்.

## தத்வ வர்கீகரணம்

காரணிகளை நான்கு பிரிவுகளாக ஸாங்கிய தரிசனம் பிரிக்கிறது. அவை

பிரக்ருதி

விக்ருதி

பிரக்ருதி–விக்ருதி

ந பிரக்ருதி–ந விக்ருதி,

பிரக்ருதி – வேறு ஒரு காரியத்தின் சிருஷ்டி காரணியாக இருப்பது இது. ஆனால் இதன் சிருஷ்டிக்கு எந்த காரணியும் இல்லை. அப்படிப் பட்ட ஒரே ஒரு சிருஷ்டிகாரணிதான் 'பிரக்ருதி'.

**விக்ருதி** – இது காரணிகளால் பிறப்பது. ஆனால் இவை வேறு காரணிகள் சிருஷ்டிக்கப்படுவதற்குக் காரணிகளாக அமையாது. இவை வெறும் காரிய வடிவங்களே. வேறொரு காரியத்துக்கு காரணமாவ தில்லை. இந்த விக்ருதியில் 16 வகைப்படும். அவை,

ஐந்து மஹாபூதங்கள், பதினொரு இந்திரியங்கள் (ஐந்து ஞானேந் திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மனம்) ஆகும்.

**பிரக்ருதி–விக்ருதி** – இந்த காரணிகள் வேறு சில காரியங்களின் காரணிகளாகும். இதில் ஏழு வகை உள்ளன. அவை, மஹத், அஹங் காரம், ஐந்து தன்மாத்திரைகள் என்பனவாகும்.

**ந பிரக்ருதி–ந விக்ருதி** – இந்த காரணி எந்த காரியத்துக்கும் காரணம் அல்ல. இவ்வாறு காரணமோ காரியமோ அல்லாத காரணம் ஒன்றே ஒன்றுதான் – புருஷன்

| தத்துவங்கள் (25) | | | |
|---|---|---|---|
| பிரக்ருதி (காரணம் மட்டும்) | விக்ருதி (காரியம் மட்டும்) | பிரக்ருதி விக்ருதி (காரணம் மற்றும் காரியம்) | நபிரக்ருதி–ந விக்ருதி (காரணமோ காரியமோ இல்லாதது) |
| (1 காரணம்) | (16 காரணிகள்) | (7 காரணிகள்) | (1 காரணி) |

**ஆயுர்வேதம் ஏற்றுக் கொண்ட சிருஷ்டி – கிரமம்**

ஸாங்கிய தரிசனம் விளக்கிய சிருஷ்டி கிரமத்தையே ஆயுர்வேதம் பின்பற்றுகிறது. இந்திரியம் பற்றி வெவ்வேறு கருத்துக்கள் உள்ளன. ஸாங்கிய தரிசனத்தின்படி இந்திரியங்கள் பௌதீக ஸ்தூல பொருட்கள் அல்ல. ஆனால் ஆயுர்வேதம் அவ்வாறு கருதுகிறது.

## இந்திரிய வர்ணனை

ஆயுர்வேதம் நோயாளிகளுக்கு சிகிச்சையளிக்கும் யதார்த்த விஞ்ஞானமாகும். புலன்கள் பௌதிக பதார்த்தமாக இருப்பதால்தான் நோயாளிகளுக்கு காரணமாகவும், நோய்களுக்கு சிகிச்சையளிப்பதற்கு ஒரு பரீக்ஷா முறையாகவும் விளங்குகிறது. சரீரம் சம்பந்தமான விஷயங் களாக புலன்கள் இருப்பதால் இது பஞ்சமஹாபூதங்களிலிருந்து உற்பத்தி யாவதாக ஆயுர்வேதம் கருதுகிறது. இந்திரியங்கள் பௌதிக விஷயமாக இருப்பதால் அஹங்காரத்திலிருந்து உற்பத்தியாகாது என்றும் ஆயுர்வேதம் கருதுகிறது. அதைக் கீழ்கண்ட முறையிலிருந்து பார்ப்போம்.

அவயக்தம்+ புருஷன்



மஹத்+ அஹங்ஹராம்



பஞ்சதன்மாத்திரைகள் → பஞ்சமஹாபூதம்



11 இந்திரியங்கள்

ஸுச்ருதர் ஸாங்கிய தரிசனத்தைக் கடைபிடித்தார். 25 தத்துவங்களை யும் ஏற்றுக் கொண்டார். சரகர் இதில் சிறிது மாறுபடுகிறார். சரகரின் கருத்தை நாம் பார்ப்போம். சரகர் 24 தத்துவங்களைப் பற்றி கூறுகிறார். புத்தி, அவ்யக்தம், அஹங்காரம், மற்றும் ஐந்து தன்மாத்திரைகள். இவற்றை அஷ்ட பிரக்ருதி என்று கூறுகிறார். ஷோடச விகாரங்கள் என்று 16 விகாரங்களைக் கூறுகிறார். ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரி யங்கள், மனது மற்றும் ஐந்து மஹாபூதங்கள், ஷோடச விகாரங்கள் எனப் படும். இவையே சிருஷ்டிக்குக் காரணமாகின்றன என்கிறார் சரகர். சிருஷ்டி ஏற்படுகின்ற சமயத்தில் எல்லா தத்துவங்களும் ஒன்றக்கொன்று இணைந்து தம்மை வெளிப்படுத்திக் கொள்கின்றன. உலகம் அழிகின்ற பிரளய காலத்தில் இவையெல்லாம் தன்னிலையிலிருந்து விடுபட்டு அழிந்து உருவமற்ற அவ்யக்த நிலைக்குத் திரும்புகின்றன. இந்த வியக்த நிலையும், அவ்யக்த நிலையும் மாறி மாறி வருகிறது என்கிறார் சரகர். பொதுவாக

சரகருக்கும், ஸுச்ருதருக்கும் பிரக்ருதி புருஷனில் வேறுபாடு உள்ளது. ஆனால் சிருஷ்டியில் அவ்வளவாக இல்லை.

சரகர் அவ்யக்தத்தை புருஷன் என்று குறிப்பிடுகிறார். சரகரின் கருத்துப்படி புருஷனுக்கு உட்பட்டதே பிரக்ருதியாகும். புருஷனையும், பிரக்ருதியையும் அவர் பிரிக்கவில்லை. சரகர் இரண்டுவித புருஷர்களைக் கூறுகிறார். அவை நித்யபுருஷன், அநித்ய புருஷன் என்பதாகும். நித்ய புருஷன் அவ்யக்த புருஷன் என்றும், அநித்ய புருஷன் ராசி புருஷன் என்றும் கூறுகிறார். 24 தத்துவங்களைச் சேர்ந்தவன் ராசி புருஷன் என்று சரகர் கதீதாபுருஷீயத்தில் திறம்பட கூறுகிறார். இந்த ராசி புருஷன் அஸாத்ம்ய இந்தியார்த்த ஸம்யோகம் (புலன்களுக்கும் பொருட்களுக்கும் ஏற்படும் பொருந்தா தொடர்பு), பிரக்ஞாபராதம் (அறிவின் தடுமாற்றம்), பரிணாமம் (காலம்) போன்றவற்றால் தூண்டப்பட்டு நோய்க்கு உட்படு கிறான். இந்த ராசி புருஷனையே சிகித்ஸா புருஷன் என்று சொல்கிறோம் என்று கதீதா புருஷ்யம் அத்தியாயத்தில் கூறுகிறார்.

சரகர் இரண்டு விதமான பிரக்ருதிகளைக் கூறுகிறார். அவை மூலப்பிரக்ருதி மற்றும் பூதப்பிரக்ருதி ஆகும். மூலப்பிரக்ருதி சிருஷ்டிக்குக் காரணமாகும். பூதப்பிரக்ருதி உடல் மனத்தன்மைக்குக் காரணமாகிறது. (அவ்யக்தத்தை மூலப்பிரக்ருதி என்கிறோம்). அவ்யக்தம், மஹத், அஹங் காரம், பஞ்ச தன்மாத்திரைகள் இவைகளை பூதப்பிரக்ருதி என்று குறிப்பிடுகிறோம். இவை ஒவ்வொரு மனிதரிலும் காணப்படுகின்றன. க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்பது இவற்றின் பிரிவாகும். மேலே கூறப்பட்ட பிரக்ருதிகள் அதாவது அவ்யக்தம், மஹத், அஹங்காரம், பஞ்ச தன்மாத்திரைகள் இணைந்தும், 16 விகாரங்கள் (பஞ்ச ஞானேந்திரியங்கள், பஞ்ச கர்மேந்திரியங்கள், பஞ்ச பூதங்கள், மனம்) இணைந்தது க்ஷேத்ரம் என்று கூறுகிறார். உடலே க்ஷேத்ரம் ஆகிறது. உடலில் உறையும் ஆத்மா என்கின்ற ஜீவன் அல்லது புருஷன் க்ஷேத்ரக்ஞன் ஆகிறான். இந்த க்ஷேத்ரக்ஞனை அவ்யக்தன் என்று குறிப்பிடுகிறார். உடலான கோவில் க்ஷேத்ரம் என்று அழைக்கப்படுகிறது. கரு வாழ்வதால் கர்ப்பப்பையை கருவறை என்கிறோம். ஆதலால் கோவிலில் இறைவன் குடிகொண்டிருக்கும் இடத்தைக் கருவறை என்கிறோம்.

**வியக்தம்** (தன்னை வெளிப்படுத்தும் நிலை), **அவ்யக்தம்** (தன்னை வெளிப்படுத்தா நிலை)

24 அல்லது 25 தத்துவங்களில் சில வியக்தமாகவும், வேறுசில அவயக்தமாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. புலன்களால் கண்டறிய முடியாத தத்துவங்கள் அவ்யக்தமாக கருதப்படுகின்றன. புலன்களால் கண்டறியப் படும் தத்துவங்கள் வியக்தமாகக் கருதப்படுகின்றன. இவற்றைப் பற்றி நாம் விரிவாக பார்ப்போம்.

## வியக்த தத்துவங்களின் இலக்கணம்

வியக்த தத்துவங்கள் காரணங்களின் வெளிப்பாடாகும். இது நித்திய பொருள் அல்ல. மாறாக அழியும் தன்மையுடையது. உருவாக்கப்பட்டது, எங்கும் வியாபித்திருப்பதல்ல. செயல்கள் மூலம் அறியப்படுவது. பல பொருட்களில் காணப்படுவது, தனித்தியங்கும் தன்மையற்றது, இயக்கப் படுவது. பிரக்ருதி (புருஷன்) அல்லாத 23 தத்துவங்கள் வியக்த தத்துவங் களாகும்.

## அவ்யக்த தத்துவத்தின் இலக்கணம்

காரணமில்லாததது. சிருஷ்டிக்குக் காரணமாகிறது. நித்ய வஸ்துவானது, அழிவற்றது, அழிக்கப்படமுடியாதது, எங்கும் வியாபித் திருப்பது, எச்செயலுக்கும் காரணமில்லாமல் இருப்பது, எந்த செயலுடனும் தொடர் பில்லாதது. தன்னிச்சையானது, தனித்தன்மையுடன் இயங்கும் தன்மை யுடையது, பிரக்ருதியும் புருஷனும் அவ்யக்தமாகும்.



| வியக்தம் | அவ்யக்தம் |
|---|---|
| அஹேதுவத் – காரணமில்லாதது. | ஸஹேதுவத் – காரணமுடையது |
| நித்யம் – நிலைத்திருப்பது | அநித்யம் – நிலையற்றது |
| வியாபி – எங்கும் பரவியுள்ளது | அவ்யாபி – பரவாதது |
| நிஷ்கிரியா – செயலற்றது | ஸக்ரியா – செயலுடையது |
| ஏகம் – ஒன்றானது | அனேகம் –எண்ணற்றது |
| அலிங்கம் அல்லது லிங்க ரஹிதம் – லட்சணங்கள் உடையது. | லிங்கம் – லட்சணங்கள் இல்லாதது |
| நிர் அவயவம் – உறுப்புகள் அற்றது | ஸஅவயவம் உறுப்புகள் உடையது. |
| ஸ்வதந்திரா – சுதந்திரமாக இயங்கும் தன்மையுடையது. | அஸ்வதந்திரா – தனித்தியங்கும் தன்மையுடையது. |

## பிரளயம் – அழிவு

உலகத்தில் காணப்படும் வியக்த தத்துவங்கள் அவ்யக்த தத்துவத்துடன் இணையும் தன்மைக்கு பிரளயம் என்று பெயர். இந்த உலகமானது அவ்யக்த தத்துவங்களால் சிருஷ்டிக்கப்பட்டு வியக்த தத்துவமாக உருவாகி நிலைபெற்று இருக்கிறது. பிரளய காலத்தில் வியக்த தத்துவங்கள் அழிந்து அவ்யக்த தத்துவத்துடன் இணைகிறது. இது உருவம் அருவத்துடன் இணையும் நிலையாகும். இதற்கு பிரளயம் என்று பெயர். சாதர்ம வைதர்ம்யம் என்பது புருஷனுக்கும் பிரக்ருதிக்கும் உள்ள ஒற்றுமையையும் வேற்றுமையையும் குறிக்கும். ஸுச்ருதர் புருஷனுக்கும், பிரக்ருதிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை சாரீர ஸ்தானம் 1–18ல் மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார். அவையாவன:

## பிரக்ருதியும் புருஷனுக்கும் உள்ள ஒற்றுமைகள்

- இரண்டும் தொடக்கமற்றது,
- இரண்டும் முடிவற்றது,
- இரண்டும் உருவமற்றது,
- இரண்டும் நித்யமானது
- இவை உருவாவதற்கு முன்பு எவையும் உருவாக்கப்படவில்லை
- எங்கும் வியாபித்திருப்பது

## பிரக்ருதிக்கும், புருஷனுக்கும் உள்ள வேறுபாடு

| பிரக்ருதி | புருஷன் |
|---|---|
| ஒன்றானது | எண்ணற்றது |
| செயலற்றது, சேதனமற்றது | செயல் வடிவானது, சேதனம் என்னும் குணமுடையது |
| மூன்று குணங்கள் உடையது | மூன்று குணங்கள் அற்றது |
| பீஜ தர்மினி (எப்படி ஒரு விதையில் ஒரு பெரிய | அதைப்போன்ற குணங்கள் புருஷனில் இல்லை. |
| மரத்தை உருவாக்கும் சக்தி இருக்கிறதோ அதைப்போல் உலகத்தை உருவாக்கும் சக்தி) பிரக்ருதியில் உள்ளது | அபீஜ தர்மினி |
| (பிரஸவ தர்மினி)பிரக்ருதி ஸ்தூல வஸ்துக்களுடன் சேர்த்து ஒரு சிருஷ்டியை உருவாக்கி நிலைபெறச் செய்து காக்கிறது | புருஷனுக்கு அவ்வித குணங்கள் இல்லை. அப்ரஸவதர்மினி |
| அமத்யஸ்த தர்மினி | மத்யஸ்த தர்மினி |
| அவிவேகி | விவேகி |

| | |
|---|---|
| (விஷயம்) சுகம் துக்கத்துடன் தொடர்புடையது | (அவிஷயம்) சுகம் துக்கத்துடன் தொடர்பில்லாதது |
| ஸாமான்யம் (பொதுத்தன்மையானது) | அஸாமான்யம் (பொதுத்தன்மையற்றது) |

## பிரக்ருதியும், புருஷனும் இணைவதற்கான காரணம்

பிரக்ருதியானது புருஷன் இணையும்பொழுதே சிருஷ்டியை ஏற்படுத்த முடியாது. புருஷன் பிரக்ருதியுடன் இணைந்தாலே மோக்ஷம் அல்லது விடுதலை என்னும் வீடுபேறு கிடைக்கிறது. இதற்கு புத்தி தத்துவம் இன்றியமையாததாகிறது. புத்தி தத்துவத்தின் மூலமே மெய்ஞான உணர்வு ஏற்படுகிறது. மாயை என்றால் என்ன என்பதை உணர்வதற்கும், ஆத்ம தத்துவத்தை உணர்வதற்கும் புத்தி தத்துவம் என்ற ஞானம் தேவைப்படுகிறது.

பிரக்ருதியும், புருஷனும் இணையும்பொழுதே புத்தி என்ற மஹத் தத்துவம் ஒரு அங்கீகாரத்தை பெறுகிறது. பிரக்ருதியும், புருஷனும் ஒன்றை ஒன்று சார்ந்தே இருக்கின்றன. ஸாங்கிய தத்துவம் அதற்கான ஒரு விளக்கத்தை அளிக்கிறது. ஒரு நொண்டியும், ஒரு குருடனும் காட்டுத் தீயில் சிக்கிக் கொண்டார்கள் என்று வைத்துக் கொள்வோம். குருடனால் தப்புவதற்கான வழியைப் பார்க்க முடியாது, நொண்டியாக தப்பித்து ஓட முடியாது. அந்த குருடன் நொண்டியைத் தாங்கிக் கொண்டால் அவன் வழிகாட்டுவதன் மூலம் குருடன் தீயிலிருந்து விடுபட்டு ஆபத்திலிருந்து நீங்கிவிடலாம். இதனால் இருவரும் ஆபத்திலிருந்து விடுபடலாம். இதைப்போல் பிரக்ருதியானது புருஷனைச் சார்ந்திருக்கிறது. புருஷன் பிரக்ருதியைச் சார்ந்திருக்கிறது.

## மூன்று குணங்கள் – திரிகுணங்கள்

பிரக்ருதிக்கு மூன்று குணங்கள் உள்ளன.

## ஸத்வ குணம்

இது பிரீதியைத் தருவது, பிரகாசத்தைத் தருவது, ஆன்மீக மெய்யறிவைத் தருவது, சத்திய பாவத்தை உடையது, அமைதியைத் தருவது, ஆனந்தத்தை

தருவது, இறைத் தன்மையைச் சார்ந்தது. நல்லதைச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் உடையது. அமைதியே வடிவானது. லகுவானது, ஒளி வடிவானது புத்தியை மேம்படுத்தக் கூடியது.

ஸத்வ குணமானது தோஷங்களிலிருந்து விடுபட்டது. இது புத்தியை யும், தேஜஸையும் தூண்டுவது. இது ஒரு விஷயத்தை சரியாக புரிந்து கொள்வதற்கும், அமைதியாகக் கையாள்வதற்கும் உதவுகிறது. உண்மை யான வடிவானது. ஸத்வ குணம் மேம்பட்டால் ஒருவனுக்கு அமைதியும், ஆனந்தமும் வாழ்வில் பிடித்தமும் ஏற்படும். மாசற்றது.

## ரஜோ குணம்

எல்லாவற்றிலும் கோபம், தாபம், எரிச்சல், விரைவாக செயல்படும் தன்மை, உணர்ச்சி பூர்வமான விஷயங்களைச் செய்தல், தீராத ஆசை போன்றவற்றைத் தூண்டுவது.

செயல்களைத் தூண்டக்கூடியது. எல்லாப் பொருள்களின் அசைவுக்கும் காரணமானது. காற்றின் அசைவு, புலன்களின் அசைவு மற்றும் எண்ணங் களின் அசைவுக்குக் காரணமானது. வாயுவை சார்ந்திருக்கிறது. உலகத்தில் காணப்படுகின்ற கஷ்டங்கள், மனத் துயரங்கள் போன்றவை இதைச் சார்ந்தே வருகின்றன.

## தமோ குணம்

குருகுணமுடையது, கனமானது, செயல்களைக் கட்டுப்படுத்தும் தன்மையுடையது. செயல்களை தள்ளிப்போடும் தன்மையுடையது. சோக உணர்வைத் தருவது, எது சரி, எது தவறு என்ற அறிவை மறைப்பது, சோம்பல் வடிவானது, அஞ்ஞானத்திற்குக் காரணமானது.

அறியாமை என்னும் வடிவமானது. இருட்டு வடிவமானது, மெய் யறிவுக்குத் தடையானது. சோம்பல் என்னும் தன்மையுடையது, மந்த குணம் உடையது. சோகத்தை ஏற்படுத்துவது.

ஒரு விளக்கில் எண்ணெயும் திரியும் விளக்கினுடைய பாத்திரமும் சரியாக இருந்தால்தான் ஒளியைப் பெற முடியும். அதைப்போல இந்த மூன்று குணங்களும் ஒன்றுக்கொன்று இணைந்து செயல்பட்டால் மட்டுமே மனிதனின் அன்றாட செயல்பாடுகள் சரியாக அமையும்.

பிரக்ருதிக்கு இந்த மூன்று குணங்களும் உண்டு. இந்த மூன்று குணங்களும் சிருஷ்டியின் போது சம நிலையில் இருக்கின்றன. சிருஷ்டி உருவான பின்பு இவை சமநிலையிலிருந்து மாறுபடுகின்றன.

ஸத்வ குணமும் தமோ குணமும் செயலற்றிருக்கிறது. ரஜோ குணத்தினுடைய தூண்டுதலாலேயே ஸத்வ குணமும் தமோ குணமும் தங்களுடைய செயல்பாட்டைக் காட்டுகின்றன. இதற்குக் காரணம் வாயுவாகும். வாயுவிற்கு யோகவாஹி என்ற குணம் உண்டு. எந்த ஒரு வஸ்து ஒரு பொருளுடன் சேரும் பொழுது தனது தனித்தன்மையை இழந்து சேரும் பொருளின் குணத்தை மேலோங்க செய்கின்றதோ அதற்கு யோகவாஹி என்று பெயர்.

பகவத்கீதையில் ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்று பிரக்ருதியிலிருந்து உண்டான மூன்று குணங்களும் அழிவற்றதான ஜீவாத்மாவை இவ்வுடலுடன் கட்டுகிறது என்று ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகிறார். ஸத்வம் தூய்மையாகவும், ஒளி கொடுக்கக் கூடியதாகவும், விகாரமற்றதாகவும் இருக்கிறது. ரஜோ குணம் விருப்பு வடிவாகவும், பற்றை உண்டாக்குவதாகவும், ஜீவாத்மாவை கர்மங்களிலும் கர்மங்களின் பலன்களிலும் கட்டுகிறது என்கிறார். அஞ்ஞான வடிவான தமோ குணமானது இந்த ஜீவாத்மாவை வீணான செயல்களில் ஈடுபடச் செய்து சோம்பல், தூக்கம் இவற்றால் கெடுக்கிறது என்கிறார். ஸத்வ குணத்தினால் ஆத்ம சுகமும், ரஜோ குணத்தினால் செயல்களில் ஈடுபாடும். தமோ குணத்தினால் ஞானம் மறைந்து அதனால் ஏற்படும் கவனமின்மையும் உண்டாகும் என்கிறார். எப்பொழுது நமது உடலிலும் உள்ளத்திலும் சைதன்ய சக்தியான ஒளியும், விவேக ஞானமும் உண்டாகிறதோ அப்பொழுது ஸத்வ குணம் மேலோங்கி உள்ளது என்று அறிந்து கொள்ள வேண்டும். ரஜோ குணம் அதிகரிக்கும் பொழுது, பேராசை, உலக விஷயங்களில் நாட்டம், தன்னலப்பற்று, புலனின்பம் இவை அதிகம் காணப்படும். தமோ குணம் அதிகரிக்கும் பொழுது தூக்கம், சோம்பேறித்தனம், அறிவின்மை, பொறுப்பின்மை போன்றவை மேலோங்கி நிற்கும். ஸத்வ குணத்தைப் பெருக்கி மனிதன் வாழ வேண்டும். ஸத்வ குணத்தைப் பெருக்கி இறப்பவர்கள் மேலான நிலையை அடைகிறார்கள் என்றும், ரஜோ குண ஆதிக்கத்தில்

இறப்பவர்கள் பற்றுள்ள மனிதர்களாக மீண்டும் பிறக்கிறார்கள் என்றும், தமோ குணத்தில் இறப்பவர்கள் மூட யோனியில் பிறக்கிறார்கள் என்றும் குறிப்பிடுகிறார். ஸத்வம் ஞானத்தையும் வைராக்யத்தையும் தருகிறது. ரஜஸ் துயரத்தைத் தருகிறது. தமோ குணம் அறியாமையைத் தருகிறது என்கிறார். ஸத்வ குணத்தால் மெய்ஞானம் கிடைக்கப் பெறுகிறது. ரஜோ குணத்தால் பேராசை உருவாகிறது. தமோ குணத்தால் அறியாமை உருவாகிறது. மேலும் எவன் தன் ஆத்ம ஸ்வரூபத்தில் இடையறாது நிலைத்து நின்று இன்ப துன்பத்தை சமமாகக் கருதி, மண்ணையும் பொன்னையும் சமமாகக் கருதி, புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் சமமாகக் கருதி, நண்பனையும் பகைவனையும் சமமாகப் பார்த்து, தான் என்ற குணத்தை, விட்டொழிக்கின்றானோ அவன் முக்குணங்களையும் கடந்தவனாகிறான் என்று குறிப்பிடுகிறார்.

## உணவும் மனோ குணங்களும்

ரஸத்தன்மை மிக்கவை, நெய்ப்புத் தன்மை உடையது, காய்கறி போன்ற உணவுகள் ஸத்வ குணத்தை வலுப்படுத்துபவை. காரம், புளிப்பு, உப்பு, எரிப்புச் சுவையுள்ள உணவுகள் ரஜோ குணத்தை அதிகரிப்பவை. கெட்டுப்போனது, துர்நாற்றம் உடையது, தூய்மையற்றது போன்ற உணவுகள் தமோ குணத்தை அதிகரிப்பவை என்கிறார்.

இந்த மூன்று குணங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. இவை ஒன்றையொன்று சார்ந்தோ, தனிப்படையாகவோ ஒரு மனிதனிடம் தன் குணத்தை வெளிப்படுத்தலாம்.

## புனர் ஜென்மம்

உடல் அழியும் தன்மையுடையது, ஜீவாத்மா நித்யமானது. ஆனால் ஜீவாத்மா உடல் மூலம் நல்வினைகளையும், தீவினைகளையும் அனுபவிக் கிறது. அதனாலேயே ஜீவாத்மாவானது உடலில் தங்கி இருக்கிறது. இந்த ஜீவாத்மா உடல் அழிந்தபிறகு வேறொரு உடலை தேடிக்கொள்கிறது. இவ்வாறு மறு ஜென்மம் எடுப்பதற்கு புனர்ஜென்மம் அல்லது மறுபிறப்பு என்று பெயர். சரகர் சாரீரம் 2வது அத்தியாயத்தில் புனர் ஜென்மத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

ஆத்மாவானது நான்கு மஹாபூதங்களுடன் கூடி (ஆகாசம் தவிர) உடலைவிட்டுப் பிரிகிறது. பின்பு வேறு உடலைச் சென்றடைகிறது. இவ்வாறு ஒரு உடலிலிருந்து வேறு உடலுக்குச் செல்வது கர்ம பலனைச் சார்ந் திருக்கிறது. ஜீவாத்மாவின் கர்ம பல்னே இவற்றை நிர்ணயம் செய்கிறது. இது கண்ணால் காண இயலாதது. சூட்சும சரீரத்தில் நடைபெறுகிறது. ஒருவன் தன்னிலை உணர்ந்து மெய்யறிவு பெற்று மோட்ச நிலையை அடையும் வரை அவன் மறுபிறப்பினை அடைந்து கொண்டிருக்கின்றான். பக்குவப்பட்ட யோகிகளால் அந்த ஆத்மாவின் நிலையை அறிந்து கொள்ள முடியும்.

## புனர்ஜென்மம் அல்லது மறபிறப்புக்குப் பிரமாணங்கள்

நான்கு பிரமாணங்களின் உதவியுடன் அறிஞர்கள் புனர்ஜென்மத்தை நிரூபித்துள்ளார்கள். மறு பிறவிக் கொள்கையை நிரூபிப்பதற்காக சரகர் பின்வருமாறு கூறுகிறார்:

### 1. ஆப்தோபதேசம்

நம்புதற்கேற்ற ஞானிகள் தங்கள் அதீத சக்தியால் மறுபிறவியை கண்டிருக்கிறார்கள்.

### 2. பிரத்யட்சம்:

குழந்தைகள் தங்கள் பெற்றோரைப் போல் இருப்பதில்லை. ஒரே பெற்றோரின் குழந்தைகள் ஒன்றுபோலிருப்பதில்லை. உடலமைப்பு, நிறம் போன்றவற்றில் வித்தியாசங்கள் இருக்கும். எல்லோருக்கும் ஆயுள் ஒருபோலிருப்பதில்லை. எதையும் கற்காமலேயே பிஞ்சுக் குழந்தைகள் பால் குடிக்கவும், சிரிக்கவும், அழவும் அறிந்திருக்கின்றன. சிலர் உடல் ஆரோக்கியமாக இருக்கிறார்கள். சிலர் அவ்வாறில்லை. இக்காரணங்களைக் கொண்டு அவர் மறுபிறப்பு உண்டு என்று கூறுகிறார்.

### 3. அனுமானம்

கர்ம வினைகளுக்கு ஏற்ப ஒவ்வொருவரின் வாழ்க்கையும் அமைகிறது என அனுமானிப்பது. கர்ம வினைகளுக்கு ஏற்பவே ஒவ்வொருவரின் கிரகங்கள், ராசிகள் அமைகின்றன என அனுமானிப்பது.

## 4. யுக்தி

குறிப்பிட்ட விதையிலிருந்து குறிப்பிட்ட மரம்தான் முளைக்கும். அவ்விதமே முந்திய பிறவியின் பலன்களின்படியே ஜீவாத்மா ஓர் உடம்பில் நுழைகிறது.

ஒரு நல்ல செயலைச் செய்தால் நல்லது நடக்கின்றது என்பது மெய்யறிவாகும். ஒரு விதையை விதைத்தால் அந்த விதைக்கான செடி வளரும். அதேபோல் ஒரு ஜீவாத்மா கர்மவினைகளுக்கு ஏற்ப உடலை தாங்கிய பிறப்பை எடுக்கும். நியாய தரிசனமும் புனர் ஜென்மத்தை ஏற்றுக் கொள்கிறது. கர்ம பலனை அனுபவிக்க மறுபிறப்பு தேவை என்கிறது நியாய தரிசனம். இந்த பிறப்பில் எந்தப் பாவ செயலும் செய்யாத நாம் துன்பங்களை அனுபவிப்பதற்குக் காரணம் மறுபிறப்பே என்றும் நியாய தரிசனம் கூறுகிறது. மறுபிறப்பு இல்லாவிட்டால் இதற்கான காரணங் களைக் கூறமுடியாது என்றும் நியாய தரிசனம் கூறுகிறது.

புனர்ஜென்மத்தை நியாய தரிசனமும் ஏற்றுக் கொள்கிறது. அதன்படி இரண்டு கேள்விகளுக்கு புனர்ஜென்மம் ஒன்றே விடையாகிறது. தனது கர்மபலனை ஒருவன் எவ்வாறு அனுபவிக்கிறான்? இந்த ஜென்மத்தில் செய்யாத ஒரு பாவ கர்மத்தின் பலனை ஏன் இப்போது அனுபவிக் கிறான்? புனர்ஜென்மம் என்ற ஒன்று இல்லாவிட்டால் இந்த கேள்விக்கு விடை இராது.

### சரகரும் மறுபிறப்பும் (புனர் ஜென்மம்)

ஸூத்திர ஸ்தானம் 11வது அத்தியாயமாகிய திஸ்ரைஷணீயம் என்னும் அத்தியாயத்தில் சரகர் மறுபிறப்பைப் பற்றி விளக்குகிறார். பிராணேஷணா – நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற ஆசை, தனேஷணா – நிறைய பொருள் ஈட்டி நன்றாக வாழ வேண்டும் என்ற ஆசை, பரலோகேஷணா – இகவாழ்வில் நன்றாக அனுபவித்த பிறகு தன்னை அறிந்து இவ்வுலக வாழ்வை விட்டு வீடுபேற்றை அடையவேண்டும் என்ற ஆசை – இந்த மூன்று ஆசைகளும் எல்லா மனிதர்களுக்கும் உள்ளன என்று கூறுகிறார்.

மறுபிறப்பு உண்டு என்றும் சிலர் மறுபிறப்பு இல்லை என்றும் கருத்துக்கள் உள்ளன. கண்ணால் நாம் சில விஷயங்களேயே கண்டு கொள்ள முடிகிறது. அவை சிறிய அளவில் உள்ளன. காண இயலாமல் அதிர்ஷ்டமாக பல விஷயங்கள் உள்ளன. அவை வேதம், அனுவாதம், யூகம் போன்றவற்றைச் சார்ந்துள்ளன. எல்லா விஷயங்களையும் நேரடியாகக் கண்டு கொள்ளமுடியும் என்றால் அது முடியாது. புலன்களின் வலிவு குறைந்தால் பிரத்யட்சம் (நேரடிப்பார்வை) சரியாக நடைபெறாது. பிரத்யட்ச பிரமாணத்தை மட்டும் ஒப்புக் கொண்டால் சிந்தனை ஆராயும் தன்மையெல்லாம் போய் விடும். எனவே பிரத்யட்சம் தான் பிரமாணம் என்று கூறுவது சரியல்ல. வேதத்தில் மறுபிறப்பைப் பற்றிக் கூறுவதால் அதை ஏற்க வேண்டியுள்ளது. ஏனென்றால் வேதம் ஒரு சப்த பிரமாணமாகும்.

தாய் தந்தையரின் ஆத்மா குழந்தைகளிடத்தில் புகுகிறது என்று ஒப்புக் கொண்டால் அதனை இரண்டு விதமாகக் கூறலாம். தாய் தந்தையரின் ஆத்மா குழந்தைகளிடத்தில் செல்ல வேண்டுமென்றால் தாய் தந்தையருக்கு மரணம் ஏற்பட வேண்டும். அப்படி ஏற்படுவதில்லை. ஆத்மாவின் ஒருபகுதி தான் குழந்தைகளிடத்தில் செல்கிறது என்றால் அது சரியல்ல. ஆத்மாவிற்கு பகுதி கிடையாது. ஆத்மா நுட்பமானது. தாய் தந்தையரே பிறப்புக்குக் காரணம் என்றால் அழுக்கிலிருந்து, பூமியைப் பிளந்து கொண்டெல்லாம் உயிரினங்கள் வருகின்றன. இதனால் தாய் தந்தையர் தான் பிறப்புக்கு காரணம் என்பது சரியில்லை. எனவே முன் வினைக்கு உட்பட்டு ஆத்மாவின் தூண்டுதலால் தாய் தந்தையரின் உடலிலிருந்து சுக்ரம், சோணிதம் வெளிப்பட்டு கர்ப்பப்பை சென்று படைப்பைத் தொடங்குகிறது என்று கூற வேண்டும்.

முன்வினைக்கு ஏற்றபடியே படைப்பு உருவாகிறது. இதிலிருந்து சரகர் முன்பிறவியையும் மறுபிறப்பையும் ஒத்துக் கொள்வதாகத் தெரிகிறது. பிறப்புக்கு ஸ்வபாவம் காரணமல்ல. ஐந்து பூதங்களும் ஜடப் பொருட்களாகும். இந்த ஐந்து பூதங்களுடன் ஆன்மா சேரும் பொழுது உயிர் பெறுகிறது. இதற்கு சைதன்யம் என்று பெயர். இப்பொருள்களிலிருந்து ஆன்மா பிரிந்தால் அவை (ஜடப்பொருட்கள்) உயிரற்றப் பொருட்களா கின்றன. இந்த ஐம்பூதங்கள் உயிருள்ளதாகவோ, உயிரற்றதாகவோ

இருக்குமே தவிர உயிருள்ளது உயிரற்றதாகவோ, உயிரற்றது உயிருள்ள தாகவோ மாறாது. ஆதலால் பிறப்புக்கு இயற்கை காரணமில்லை முன் வினைதான் காரணமாகிறது. முன்வினைக்கு வசப்பட்டு ஆத்மா ஐம்பூதங் களுடன் சேரும் பொழுது அவை உருவமுள்ளதாக மாறி பிறப்பை அடைகின்றன. ஆத்மாவிற்கு பிறப்பு கிடையாது. பிறப்பால் தோற்று விக்கப்படாத வரும், பிறப்பற்றவருமான பரமாத்மாவே காரணம் என்று கூறினால் அதற்கு சரகர் சம்மதம் என்று கூறுகிறார்.

யத்ருச்ய வாதிகள் (நாஸ்திகர்கள்) எல்லாமே தற்செயலாக நடை பெறுகின்றன என்று கூறுகிறார்கள். அவர்களுடைய மதத்தில் சோதனை, பொருள், கர்த்தா, காரணம், தேவதை, ரிஷி, சித்தர்கள், கர்மாவின் பலன் என்றெல்லாம் கிடையாது. நாஸ்திகவாதிகளின் கொள்கையை பாவமான கொள்கை என்கிறார் சரகர். ஒரே தாய்தந்தையருக்குப் பிறந்த குழந்தை களில் நிறம், குரல், உருவம், அதிர்ஷ்டம் போன்றவை வேறுபாடு உள்ளது. ஒரே வீட்டில் பிறந்த இரு குழந்தைகளிடம் ஒருவன் அரசனாகவும், மற்றொருவன் பிச்சைக்காரனாகவும் ஆதல் போன்றவற்றைக் கொண்டே முற்பிறப்பை உணர வேண்டும் என்கிறார்.

ஸாமுத்திரிகா லட்சணங்கள், கையில் வரும் ரேகைகள், மச்சங்கள் இவற்றையெல்லாம் நாம் பிரத்யட்சமாகவே பார்க்கிறோம். இவை ஒரு மனிதனுக்கு மனிதன் வேறுபடுவதால் கர்மாவைச் சார்ந்த ஒரு மறுபிறப்பு உண்டு என்று நாம் பிரத்யட்சத்தால் அறியலாம்.

### அபுனர்பவம்

எல்லா கர்ம வினைகளும் அனுபவித்து தீர்ந்து முடிவுற்ற பிறகு ஜீவாத்மாவானது மறுபிறப்பு எடுப்பதில்லை, மேற்கொண்டு அது பிறப்பு எடுக்காத நிலையை அனுபவிக்கிறது. அதற்குத் துக்கத்திலிருந்து விடுதலை கிடைக்கிறது. இதையே மோட்சம் என்று கூறுகிறார்கள். மீமாம்ஸ தரிசனமும் இதையே மோட்சம் என்று கருதுகிறது. ஆனால் நியாய மற்றும் வைசேஷிக தரிசனங்களின்படி மோட்சம் என்பது சுகமும், துக்கமும் இல்லாத நிலை ஆகும். புத்தர்களும், ஜைனர்களும் ஆஸ்திக தரிசனங்கள் அனைத்தையும் ஏற்றுக் கொண்டார்கள். புத்தர்களும், ஜைனர்களும் நிர்வாண நிலையைப்

(மோட்சநிலை) பற்றிக் கூறுகிறார்கள். சரகர் சாரீர ஸ்தானத்தில் மோட்சத்தைப் பற்றி குறிப்புகள் எழுதியுள்ளார்.

### மோட்சம் பற்றி சரகரின் கருத்து

ரஜஸ், தமஸ் என்னும் குணங்களிலிருந்து நீங்கி வினைகளிலிருந்து விடுபடும் நிலையை சரகர் மோட்சம் என்கிறார். உடல், அறிவு, அஹங் காரம் முதலியவற்றின் தொடர்பில்லாமலும், மறுபடியும் பிறவி எடுக்கா மலும், ஆத்மா தன்னிலையிலேயே இருப்பதை மோட்சம் என்கிறார். இதற்கு நல்லவர்களை அண்டியிருத்தல், தீயவர்களுடமிருந்து ஒதுங்குதல், விரதமிருத்தல், உபவாசமிருத்தல், பலவிதமான ஒழுக்க நெறிகளை ஏற்றுக் கொள்ளுதல், தர்ம சாஸ்திரங்களை அறிதல், தனிமையில் ஈடுபாடு, தன்னை அறிவதற்கான முயற்சி, மனதை அதிக அளவில் கட்டுப்படுத்துதல், தீவினைகளைச் செய்யாதிருத்தல், இது என்னுடையது, இதை நான் செய்கிறேன் என்ற அஹங்கார நில்லையிலிருந்து விடுபடுதல், ஆத்மாவுக்கும், மறுபிறவி தொடருமோ என்ற அச்சமுறுதல், மனதையும், அறிவையும் ஆத்மாவின் வசமாக்குதல், பொருள்களின் உண்மைகளை ஆராய்தல், அவ்வாறு ஆராய்ந்து அறிந்நதை நினைவில் இருத்துதல் – இவை அனைத்தும் மோட்சத்திற்கு வழிவகுக்கும் வழிமுறைகளாக சரகர் கூறுகிறார்.

இவை முழுக்க முழுக்க ஞானயோக விஷயங்களாகவும், யோக விஷயங்களாகவும், கர்மயோக விஷயங்களாகவும் காணப்படுவதால் சரகத்தில் பூரண யோகநிலை காணப்படுகிறது என்று நாம் கூறலாம். நற்செயல்களைச் செய்தல், பற்றற்று செயல்களைச் செய்தல் கர்ம யோகமாகவும், தன்னை அறிய முற்படுதல் ஞான யோகமாகவும், செய்யும் சிகிச்சையை பூஜையாகச் செய்தல் கர்மயோகமாகவும் இங்கு கருதப்படுகிறது.

இதனுடன் ஆன்மீக பெரியவர்களுடைய நட்பு, ஆன்மீகப் பெரியவர் களின் உபதேசங்களின் வழி நடத்தல், தீயவர்களுடன் சேராதிருத்தல், பலி, ஹோமங்களைச் செய்தல், ஒழுக்கத்துடன் வாழ்தல், பிரம்மச்சரியத் தைக் கடைபிடித்தல், உபவாஸம் போன்றவற்றைச் செய்தல், சாஸ்திரங்

களை நன்றாகக் கற்றுத் தேர்தல், ஒரு பொருளில் ஈடுபாடு இல்லாமல் நிஷ்காமியமாக (பலனை எதிர்பார்க்காமல்) கர்மங்களைச் செய்தல், ஆசைகளை ஒழித்தல், மனதின் எண்ண அலைகளாகிய சித்த விருத்திகளை ஒதுக்குதல் ஆகியவை உதாரணமாகக் கூறப்படுகின்றன.

சரக ஸம்ஹிதை விமான ஸ்தானம் நான்காம் அத்தியாயமாகிய திரிவிதரோக விசேஷ விஞ்ஞானம் என்ற அத்தியாயத்தில் பிரமாணங்களைப் பற்றி மிக அற்புதமாக சரகர் குறிப்பிட்டுள்ளார். நோய்களைக் கண்டுபிடிப்பதற்கு ஆப்தோபதேசம், பிரத்யட்சம், அனுமானம் என்ற மூன்று முறைகளையும் முக்கியப்படுத்தி கூறியுள்ளார். யுக்தி என்ற பிரமாணத்தை அனுமானத்தின் கீழ் உட்படுத்தியுள்ளார். இந்த பிரமாணங்கள் நோய்களைக் கண்டுபிடிப்பதற்கும், விஷயங்களை ஆராய்வதற்கும் பயன்படும்.

சரக ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் ஏழாவது அத்தியாயத்தில் சரகர் உடல் உறுப்புகளைப் பற்றி நன்றாக அறிந்த ஒரு மருத்துவன் அறியாமையால் ஏற்படும் தடுமாற்றத்தை அடையமாட்டான். உலகில் பொதுவாக தோன்றும் மோகம், மயக்கம் மற்றும் துன்பங்களினால் அவன் பாதிக்கப் படுவதில்லை. அவன் குற்றமற்றவனாய் எதிலும் பற்றின்றி புலன்களை வென்று, அமைதி கொண்டு பிறப்பு அற்றவனாகிறான்.

சரகர் முக்தி அல்லது வீடுபேறு என்னும் மோக்ஷத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அதை விபாபம் (பாபம் இல்லாதது), விரஜம் (விருப்பு வெறுப்பு அற்றது), சாந்தம் (அமைதியானது), அட்சரம் (அழிவில்லாதது), அவ்யயம் (வேறு உருவம் பெறாதது), அமிர்தம் (மரணமற்றது), பிரம்மம் (எங்கும் வியாபித்திருப்பது), நிர்வாணம் (எல்லா துன்பங்களிலிருந்தும் விடுபட்டு அழிவற்ற இன்புருவானது) என பல பதங்களைப் பயன் படுத்துகிறார். சாந்தி என்ற வார்த்தையை, (அமைதியே) மோட்சத்தின் அடையாளமாகக் கூறுகிறார்.

அறிவுக்கு காரணமான அந்த சாந்தியை ரிஷிகள் அறிந்தார்கள். அதை அறிந்து கொண்டு மோகத்தையும், பற்றுதலையும் துறந்தார்கள் என்று சரகர் கூறுகிறார். பிரம்மத்தின் நிலையை உணர்ந்த ஜீவன் முக்தன்

எக்காலத்திலும், எந்நிலையிலும் உலகப் பொருட்கள் அனைத்தையும் கண்ணால் பார்த்துக்கொண்டு அத்தகைய தொடர்புடையதாக இருந் தாலும், அத்தகைய தூய மனத்துடையவனுக்கும் அப்பொருட்களுக்கும் உள்ள தொடர்பினால் இன்ப துன்பங்களோ உண்டாவதில்லை என்கிறார். கண்ணாடியானது ஒரு துணியினால் துடைக்கப்பட்டு தூய்மையாவது போல் ஸத்வம் என்னும் மனமானது நிவ்ருத்தி அதாவது பற்றைத் துறக்கும் வழியால் விருப்பு, வெறுப்புகளைத் துறந்து தூய்மை பெற்ற மனமாகிறது. அவ்வாறு தூய்மை பெற்ற மனம் சூரிய மண்டலம் போல சுத்தமாக ஒளி வீசுகிறது. அந்த சுத்தமான மனம் ஐம்புலன்களின் செயல்களிலிருந்து திருப்பப்பட்டு புலன்களின் செய்கை தடுக்கப்பட்டு ஆத்மாவிடமே நிலையாக நிறுத்தப்படுமானால் காற்று முதலியவை இல்லாத அறையில் திரையில் வைக்கப்பட்ட விளக்கு போல் அசையாமல் தூய ஒளியைப் பரப்புவது போல ஆத்மாவிலேயே நின்று ஒளிவீசும். தூய மனது உள்ள வனுக்கு உண்மையான அறிவு உண்டாகிறது. அந்த உண்மையறி வினாலேயே உலகிலுள்ள எல்லாப் பொருட்களின் உருவங்களையும் நன்கறிந்து விருப்பத்தை விட்டுயோகத்தை சாதித்து ஸாங்கியன் எனப் படும் உண்மை அறிவாளன் ஆகிறான். அந்த உண்மையறிவாலே அஹங் காரத்தை அருகில் விடாமல் காரணங்களை அணுகாமல் தொடர்பினையும் துறந்து எதன் மீதும் பொறுத்துக் கொள்ளாமல் நிலையானதும், அழி வற்றதும், மார்தவமுற்றதுமான பிரம்மத்தின் உருவான மோக்ஷத்தை அடைவான். கல்வி, ஸித்தி, மேதை, பிரக்ஞை, ஞானம் இவை அனைத் தையும் அத்தகைய உண்மை அறிவின் உருவாகவே இருக்கும். உலக மெங்கும் தான் பரவியிருப்பதாகவும், உலகமனைத்தும் தன்னுள்ளே பரவியிருப்பதாகவும் நினைத்து பரம் எனப்படும் ஆத்மாவையும், அபரம் எனப்படும் அஸத்தான ஆத்மாவைத் தவிர மற்ற விஷயங்களையும் கவனித்து அறிபவனுக்கு உண்மைக்கு மூலமான அறிவு ஏற்படும். அது என்றும் அழியாது.

## அனுமானத்தால் மறுபிறப்பை தீர்மானிப்பது

அனுமானிப்பதற்குப் பிரத்யட்சம் என்ற அறிவு தேவைப்படுகிறது. கண்ணால் பார்க்கின்ற அறிவை ஆதாரமாகக் கொண்டுதான் அனு

மானிக்கப்படுகிறது. கர்மம் இரண்டு வகைப்படும். அவை ஸாமான்ய கர்மம், அனுபந்த கர்மம், அன்றாட வாழ்வில் நாம் அனுபவிக்கும் தர்மம் ஸாமான்ய கர்மாவாகும். முன்பிறவியில் நாம் செய்த கர்மாவிற்கு அனுபந்த கர்மா அல்லது முன்வினை என்று பொருள். விகாரமான குழந்தைகள் பிறப்பது முன்வினையின் காரணமாகும். இதனை தைவீ என்றும் கூறுவார். விதையைப் பார்த்து பழத்தை அனுமானிப்பதைப் போல பிறப்பைப் பார்த்து பிறப்பின் முன்வினையையும் தீவினையையும் அனுமானிக்கலாம். சரகர் கர்மத்தை, முன்வினை என்று நம்புகிறார். இவ்வாறு பிறப்பை அடைந்த மனிதன் பிரம்மச்சரிய ஆஸ்ரமத்தில் வேதங்களை ஓதி கல்வியைக் கற்க வேண்டும் என்றும், இரண்டாவது ஆஸ்ரமத்தில் திருமணம் செய்து கொண்டு நன்மக்களைப் பெற வேண்டும் என்றும், தான தர்மங்களைச் செய்ய வேண்டும் என்றும், மூன்றாவது ஆஸ்ரமத்தில் தவம் செய்து வாழ்க்கையைக் கழிக்க வேண்டும் என்றும், நான்காவது கால கட்டத்தில் புலன்களை அடக்கி ஆத்ம பரிசோதனை செய்து ஸமாதியில் ஈடுபடவேண்டும் என்றும் கூறுகிறார்.

முன்வினையோ, தவறான செயலோ செய்யாத மனிதருக்கு எவ்வித துன்பமும் வராது என்று சரகர் நிதானம் 7வது அத்தியாயத்தில் 19 ஸ்லோகத்தில் கூறுகிறார். கடவுள், ராக்ஷசர்கள், பிசாசு, கந்தர்வன் எல்லாம் மனிதனை ஒன்றும் செய்யாது. அவன் நல்வினை உடையவனாக இருந்தால் இவற்றால் அவனுக்கு எந்த பாதிப்பும் இல்லை என்கிறார். மனிதனுடைய முன்வினையினாலேயே ஆகந்துகம் போன்ற உன்மாத நோய்கள் வருகின்றன என்கிறார். முன்வினைதான் மனிதனைத் தண்டிக் கிறது என்கிறார். மனிதனுடைய முன்வினையால் தூண்டப்பட்ட தேவதைகள் தான் அவனைத் துன்புறத்துகின்றன. இதற்கு மனிதனுடைய முன்வினையே காரணம். ‘ஆத்மானமேவ மன்யேதே கர்த்தாரம் ஸுக துக்கயோ:’ – இன்பத்திற்கும், துன்பத்திற்கும் மனிதன் தன்னையே கர்த்தாவாகக் கருத வேண்டும். ஆதலால் மனிதன் தனக்கு நன்மை பயப்பனவற்றையே செய்ய வேண்டும். தன் செயலே எல்லாவற்றையும் தீர்மானிக்கின்றன என்ற எண்ணத்தை எப்பொழுதும் கொள்ள வேண்டும் என்றும் சரகர் கூறுகிறார்.

தனிமையில் ஈடுபாடு, உலக விஷயங்களில் பற்றின்மை, தன்னை உணர வேண்டும் என்ற ஸதா முயற்சி, மனதைக் கட்டுப்படுத்தி ஏற்படும்

வாழ்க்கை, அறச் செயல்களில் ஈடுபாடு, தீய செயல்களைத் தவிர்த்தல், முன்வினைகளை அழிக்கும் செயல்களைச் செய்தல், பயந்து அஹங்காரத்தை அழித்தல், மீண்டும் மீண்டும் பிறப்பு வருமோ என்று நற்செயல்களைச் செய்தல், மனதையும், அறிவையும் ஆத்மாவின் வசமாக்குதல், பொருட்களின் உண்மையை ஆராய்தல், எது ஸத்து, எது அஸத்து என்று பிரித்தறிதல் இவை மோக்ஷத்திற்குக் காரணமாக சரகர் கூறுகிறார். இவை முழுக்க முழுக்க ஞானயோக விஷயங்களாகவும், யோக விஷயங்களாகவும், கர்மயோக விஷயங்களாகவும், காணப்படுவதால் சரகத்தில் பூரண யோக நிலை காணப்படுகிறது என்று நாம் கூறலாம்.

தான் ஆத்மா என்ற உண்மையை நினைவு கூறுதலே மோக்ஷத்திற்கு காரணம், இதுவே முக்தியடைவதற்கு வழி என்கிறார். நானல்ல, இது என்னைச் சேர்ந்ததல்ல என்ற எண்ணம் தோன்றிய பிறகு அவன் எல்லாவற்றையும் கடந்தவன் ஆகிறான் என்கிறார். மேற்கண்டவாறு எல்லாவற்றையும் துறந்து பிரம்ம நிலையை அடைந்தபின் பூதாத்மா என்பது காணப்படுவதில்லை. பூதங்கள் அனைத்தையும் துறந்து அவனுக்கு அடையாளம் என்ற ஒன்றும் இல்லை. அவனை எவ்வாறு கண்டு கொள்ள முடியும்? பிரம்ம ஞானிகள் தன் அறிவால் மட்டுமே அவனை கண்டு கொள்ள முடியும் என்று கூறி சரகர் முடிக்கிறார்.

### துன்பங்களுக்குக் காரணம்

இந்திரியங்களுக்கும், இந்திரியங்களின் அர்த்தங்களுக்கும் ஏற்படுகின்ற ஒவ்வாத தொடர்பு, காலம், அறிவைத் தவறாகப் பயன்படுத்துதல் இவையே துன்பத்திற்குக் காரணமாகின்றன. தைவம் என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்றவை முன்பகுதியைச் சேர்ந்த வினையாகும். முற்பிறவியில் செய்த வினை பெரிதாகினும், சிறிதாகினும் அதை அனுபவித்தே தீர வேண்டும் என்கிறார் சரகர். ஆகவே வினை நோய்களுக்கு மருந்தில்லை என்றும், வினை நோய்கள் அனுபவித்தபிறகு வினைகள் குறைந்து நோய்கள் தாமாகவே நீங்கும் என்றும் கூறுகிறார்.

உணர்வுகளின் இருப்பிடம் மனமும், புலன்களுக்கு கூடிய உடலுமாகும். தலைமுடி, ரோமங்கள், நகங்கள், மலம், சிறுநீர், ஒலி தவிர மற்ற

உறுப்புகள் யாவும் உணர்ச்சி உள்ளவையே. மனதின் செயலை தடுத்து நிறுத்தலாகிய யோக நிலையிலும், மோட்ச நில்லையிலும் இன்ப துன்ப உணர்வுகள் அனைத்தும் நீங்கும். குறிப்பாக யோக நிலையில் எல்லா உணர்வுகளும் முற்றிலும் நீங்கிவிடும். அந்த யோகமே மோட்சத்தைத் தோற்றுவிக்கும். ஆத்மா மற்றும் மனம், புலன்கள், புலப்பொருட்கள் இவற்றின் தொடர்பினால் இன்பம், துன்பம் உண்டாகின்றன. புலன்களின் செயல்களிலிருந்து திரும்பி மனம் ஆத்மாவிலே நிலையாக செயலற்று நின்றிருக்கும் போது இன்ப துன்பங்கள் நீங்கிவிடுகின்றன. மற்றும் ஆன்ம மனச் சேர்க்கையால் வசித்வம் என்னும் சிறப்பு உண்டாகின்றது. யோக நிலையை நன்கறிந்தவர்கள் இதையே யோகம் என்றும் விடுதலை யென்றும் கூறுவார்கள். சரகர் இங்கு மோட்சத்தைப் பற்றியும், நான் ஆத்மா என்று அறிவதைப்பற்றியும், மனதை ஆத்மா நிலை நிறுத்தி செய்யும் தியானத்தைப் பற்றியும் சூட்சுமமாகக் கூறுகிறார். இவற்றைச் சொல்லிவிட்டு சுத்த ஸத்வத்தினால் யோகிகளுக்கு அஷ்ட ஐஷ்வர்யங் களைப் பற்றியும் கூறுகிறார். கூடுவிட்டு கூடுபாய்தல், பிறர் மனதில் உள்ளதை அறிதல், தன் இஷ்டப்படி வேலைகளைச் செய்தல், கண்கள் காணாதவற்றை அறிதல், புலன்களுக்கு எட்டாத ஒலிகளைக் கேட்டல், முற்பிறவியில் நடந்ததை நினைவு கூர்தல், மனித இனத்திற்கு இல்லாத ஒலி ஒளியுடன் கூடியிருத்தல், தன் விருப்பப்படி உருவத்தை மாற்றிக் கொள்ளுதல், போன்ற அஷ்ட ஐஸ்வர்யங்களை யோகிகள் அடைவார்கள் என்றும் யோகத்தின் சித்திகளைப் பற்றியும் சரகர் குறிப்பிடுவது, யோகி களுக்கு இருந்த ஸித்த நிலையைச் சரகர் புரிந்து கொண்டிருக்கிறார் என்பதை உணர்த்துகிறது.

தான் ஆத்மா என்ற உண்மையை நினைவு கூர்தலே மோட்சத்திற்கு காரணம். அதுவே ஜீவன் முக்தியடைய வழி. இதனால் மறுபிறவி கிடையாது என்கிறார். நானல்ல, இது என்னைச் சேர்ந்ததல்ல என்ற எண்ணம் தோன்றியபிறகு அவன் எல்லாவற்றையும் கடந்தவன் ஆகிறான். மேற்கண்டவாறு எல்லாவற்றையும் துறந்து பிரம்ம நிலையை அடைந்த பின் பூதாத்மா என்பது காணப்படுவதில்லை. பூதங்கள் அனைத்தையும் துறந்தவனுக்கு அடையாளம் என்று ஒன்றும் இல்லை. அவனை எவ்வாறு

கண்டுகொள்ள முடியும், பிரம்ம ஞானிகள் அறிவால் மட்டுமே அந்த பரமாத்மாவைக் கண்டு கொள்ள முடியும் என்று கூறி சரகர் முடிக்கிறார். ரஜஸ், தமஸ் என்னும் குணங்களுடன் மனம் எப்பொழுதும் தொடர்பு கொண்டிருப்பதால் மெய்யறிவு ஏற்படும் வரை அவ்விரண்டும் மனதை விட்டு அகலாது. அக்குற்றங்களுடன் கூடிய மனதும், வலுவான நிலையும் ஆத்மா உடலை விட்டகன்று வேறு உடலைப் பெறுவதற்கு காரண மாகின்றன. ஒருவன் சிருஷ்டி ஏற்படும் பொழுது எந்த யோனியில் பிறத்தல் என்பது ஆயுட்காலமும், ஆன்ம அறிவும், பிராண அபான முதலிய உடல் காற்றுகளும், உருவம், குரல், நிறம் போன்றவையும் ஆத்மாவையே சார்ந்திருக்கின்றன.

ஸத்வம் எனப்படும் மனதிற்கு ஔபபாதகம் என்று பெயர். இது ஆத்மாவுடன் வேறு உடலைச் சேர்ப்பிப்பது என்று பொருள்படும். எது உடலைவிட்டு மாறுபட்டிருக்குமோ, எதன் விருப்பம் மாறுபட்டிருக்குமோ, எது இல்லாதபோது உடலை விட்டு உயிர் நீங்கிவிடுமோ, எது புலன் களுக்கு அதனதற்கு உரிய பொருள்களை அறியும் திறனை தோற்று விக்குமோ அதுவே அத்தகைய இலக்கணங்கள் அமையப்பெற்றதே மனம் எனப்படும். மனம் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் எனப்படும்.

இறுதிக் காலத்தில் ஸத்வ, ரஜஸ், தமஸில் மனத்துடன் எந்த குணம் அதிகரித்துக் காணப்படுமோ அதுவே அடுத்த பிறவியிலும் வரும்.

இவ்வாறு பிரவிருத்தியாகிய பற்றும், நிவர்த்தியாகிய மோட்ச வழியும் சரக ஸம்ஹிதையில் நன்றாக விளக்கப்படுகிறது. மோட்சத் திற்கான வழிமுறைகளை சரகர் கூறும்பொழுது உலக வாழ்க்கையின் நிலையறிந்து அதை வெறுத்தல், குருநாதனை அணுகுதல், ஸத்குருவின் உபதேசங்களைப் பின்பற்றுதல் அக்னிஹோத்ரங்களைச் செய்தல், தர்ம சிந்தனையுடன் நடத்தல், நல்லோரைப் பேணுதல், தீயோரிடமிருந்து ஒதுங்குதல், எல்லா உயிர்களுக்கும் நன்மை பயக்கும் செயல்களைச் செய்தல், பேச்சுக்களை அளந்து பேசுதல், பிற பெண்களை தாய்போல் கருதுதல், மன உறுதி கொள்ளுதல், பிறப் பெண்களுடன் நட்பு கோராமல் இருத்தல், பற்றுகளை விடுதல், ரகசிய உறுப்புகளை கோவணம் போன்ற

காஷாய துணிகளால் மறைத்தல், எளிமையான வாழ்க்கை வாழுதல், ஸன்னியாச ஆசிரமமாக இருந்தாலும் திருவோடை மட்டும் ஏந்துதல், பிச்சையில் கிடைப்பவற்றை சாப்பிடுதல், தினம் ஒரு நேரம் மட்டுமே புசித்தல், உலர்ந்த இலைச் சருகுகள், புற்கள் போன்றவற்றை படுக்கையாக்கி படுத்தல், தியானம் செய்து கொள்ளுதல், சோம்பல், தூக்கம், தாமதத்தைத் தவிர்த்தல், புலன்களின் மீது விருப்பு வெறுப்பை தவிர்த்தல். புலால் உணவுகளை தவிர்த்தல். நான் யார்என்று எப்பொழுதும் விசாரம் செய்தல், பாராட்டுதலையும், துதி செய்தலையும், நிந்தித்தலையும் ஒரேபோல் தாங்குதல். பசி, தாகம், அசதி, களைப்பு, குளிர்ச்சி, சூடு, காற்று, மழை, இன்பம் போன்ற இரட்டைகளை சகித்துக் கொள்ளுதல், ஏழ்மை, செருக்கு, வேகம், மதம், பேராசை, பொறாமை, அச்சம் போன்றவை ஏற்படும் பொழுது மனச்கிலேசம் அடையாமல் இருத்தல். உலகத்திற்கும், புருஷனுக்கும் உள்ள ஒற்றுமையை நினைத்துப் பார்த்தல், காலம் கடந்துவிடாமல் மெய்யறிவைப்பெற வேண்டும் என்று சதா நினைத்தல். மனதில் எப்பொழுதும் உற்சாக நிலையைக் கொண்டிருத்தல். புலன் களையும், மனதையும் ஆத்மாவில் நிலை நிறுத்துதல். ஆத்மா ஒன்றைத் தவிர மற்ற அனைத்தும் மாயை என்றும், அஸத் என்றும், துன்பத்திற்கு காரணம் என்றும் முடிவு செய்தல். அவற்றைத் துறத்தல் போன்றவற்றை மோட்சத்திற்கு காரணமாக சரகர் கூறுகிறார். இவையனைத்தும் யோக மார்க்கத்திலும், வேதாந்த மார்க்கத்திலும் கூறப்பட்டுள்ளவையாதலால் சரகரை ஒரு சிறந்த வேதாந்தி என்று குறிப்பிடலாம்.

# 10. தந்திரயுக்தி

'த்ராயதே சரீரம் அனேன இதி தந்த்ரம்'

தந்த்ரம் என்ற சொல்லுக்கு விஞ்ஞானம் என்று பொருள். யுக்தி என்ற சொல்லுக்கு சிந்தித்துப் பார்த்தல், யோசனை செய்தல், நுணுக்கமான சிந்தனையின் மூலப் பொருட்களை ஆராய்தல் என்று பொருள். எதன் காரணமாக நமது உடலானது போற்றிப் பாதுகாக்கப்படுகிறதோ அதற்கு தந்த்ரம் என்று பெயர்.

முற்காலங்களில் ஸம்ஹிதைகள் எழுதப்பட்ட பொழுது பல நுணுக்கமான பதங்களைப் பயன்படுத்தி அந்த படைப்புகளைப் படைத்தார்கள். அதற்கு பலவிதமான யுக்திகளைக் கையாண்டார் கள். அவை பல வகைப்படும். இதில் சில இலக்கண, இலக்கிய விதிமுறைகளும், யாப்பு விதிமுறைகளும் அடங்கும். தந்திரயுக்தி களை நன்றாகப் படித்த ஒருவருக்கு அந்த புத்தகத்தை நன்றாக புரிந்து கொள்ளும் அறிவு ஏற்படும். முற்காலத்தில் பாரத நாட்டில் இலக்கிய அறிவுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருந்தது. எந்த ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டாலும் அது எழுதப்பட்ட விதம், அதில் காணப்படும் இலக்கியச் சுவை, அதில் கையாளப் படும் மொழியின் தரம் போன்றவை அந்த புத்தகத்தின் தரத்தையும், அதை எழுதிய ஆசிரியரின் தரத்தையும், அறிவுத் திறனையும் உணர்த்துவதாக இருந்தன. எனவே எந்தவொரு புத்தகத்தை எழுதும் ஆசிரியரும் அதை எழுதுவதற்கான சட்ட திட்டத்தையும், வார்த்தைகள் மற்றும் சொற்றொடர்களை பயன்படுத்தும் விதங் களையும் எங்கே எந்த இலக்கண விதிகளைக் கையாள வேண்டும்

என்ற தன்மையையும், பகுதிகளை அமைப்பதிலும், இலக்கியச் சுவைபட கூறுவதிலும் மிகவும் கவனம் செலுத்தினார்கள் என்பதே உண்மை.

இதை சரக ஸம்ஹிதை, ஸுச்ருத ஸம்ஹிதை, அஷ்டாங்க ஸங்கிரஹம் போன்ற நூல்களில் காணலாம். இது ஆயுர்வேதத்துக்கு மட்டுமல்லாது பிற சாஸ்திரங்களுக்கும் பொருந்தும்.

## ஆயுர்வேத நூற்களில் தந்திரயுக்தி

தந்திரயுக்தி பல சாஸ்திரங்களில் காணப்படுவதைப் போல ஆயுர் வேதத்திலும் பயன்படுத்தப்பட்டது. சரக ஸம்ஹிதை விமான ஸ்தானம் 8 வது அத்தியாத்தில் சரகர் தந்திர குணங்களைப் பற்றிக் கூறுகிறார். ஸித்த ஸ்தானம் இறுதி அத்தியாயமாகிய 12ம் அத்தியாயத்தில் தந்திரயுக்தியைப் பற்றிக் கூறுகிறார். ஸுச்ருதர் தன்னுடைய ஸம்ஹிதையில் உத்தர தந்திரம் 65 வது அத்தியாயத்தில் தந்திர யுக்திகளைப் பற்றிக் கூறுகிறார். அருண தத்தர் அஷ்டாங்க ஹிருதயத்திற்கு உரை எழுதும் போது தந்திரயுக்தி களைப் பற்றியும், தந்திர தோஷங்களைப் பற்றியும் கூறுகிறார். நீல மேக பிஷக் என்பவர் தந்திர யுக்திகளைப் பற்றி தந்திரயுக்தி விசாரம் என்று விளக்கமாக எழுதியுள்ளார். இது அருண தத்தருடைய உரையைச் சார்ந்தே காணப்படுகிறது.

## தந்திரயுக்தியின் பலன்கள்

தந்திரயுக்தி பொதுவாக சுருக்கமாகவும், நுணுக்கமாகவும், விளக்க மாகவும், தனித்தனியாகவும் பல இடங்களில் கையாளப்பட்டுள்ளது. எப்படி சூரியனின் உதயத்தால் தாமரைகள் மலர்ந்து அவற்றின் எழிலையும், நறுமணத்தையும் பரவச் செய்கிறதோ அதுபோல இந்த யுக்திகள் நூலில் மறைந்துள்ள சிறப்பான விஷயங்களை அறிந்து கொள்ள உதவுகின்றன. வீட்டிலிருக்கும் விளக்கு வீட்டில் ஆங்காங்கே வைக்கப் பட்டிருக்கும் பொருட்களைக் காணச் செய்வது போல இந்த தந்திர யுக்திகள் நூலில் ஆங்காங்கே பொதிந்து கிடக்கின்ற கருத்துக்களை எழில்மிகும்படி புரிய வைக்கின்றன. இதுவே தந்திரயுக்தியின் பயனாகும். இதனால் ஏதேனும் ஒரு நூலை நன்கு கற்றறிந்தவன் மற்ற நூல்களையும் நன்றாக புரிந்து கொள்ளும் திறமை பெறுவான். சாஸ்திரங்களின் கருத்து

மற்றும் தந்திரயுக்திகளை அறியாத ஒரு மருத்துவன் ஒரு நூலை சரியாகப் படித்துப் புரிந்து கொள்ள முடியாத அறிவிலி ஆவான். அவன் அதிர்ஷ்டம் இல்லாதவன். மிக்க பாடுபட்டாலும் இம்மையிலும் மறுமையிலும் தந்திரயுக்தியில்லாமல் ஒரு பொருளின் அல்லது சாஸ்திரத்தின் உட் கருத்துக்களை அறிந்து கொள் முடியாது. அறிவில்லாத வீரன் கையில் ஆயுதம் கிடைத்தால் அது எப்படி அவனுக்கும் பிறருக்கும் தீங்கு விளைவிக்குமோ அதுபோல தந்திரயுக்தி அறியாதவன் கையில் ஒரு மருத்துவ புத்தகம் கிடைத்தால் அவன் தனக்கும் பிறருக்கும் தீங்கு விளைவிப்பான் என்று சரகர் கூறுகிறார். நன்கு ஆயுத பயிற்சி பெற்ற வீரன் கையில் ஆயுதம் கிடைத்தால் எவ்வாறு அவன் தன்னையும் பாதுகாத்து பிறரையும் பாதுகாப்பானோ அதேபோல் தந்திரயுக்தி அறிந்த மருத்துவன் நூலை நன்றாக கற்றறிந்து தான் பயன்பெறுவதுடன், மற்றவர்களுக்கும் சிகிச்சை அளிப்பான். குற்றமில்லாமல் ஒரு புத்தகத்தைப் படிக்க தந்திர யுக்தி மிகவும் அவசியம் என்று சரகர் கூறுகிறார்.

## தந்திரயுக்தியின் தேவை

1. ஸங்க்ஷேபதம் (குறைந்த பொருள் செறிந்த சொற்களைப் பயன் படுத்துவது) – இது பழைய இந்திய இலக்கியங்களில் காணப்படும் ஒரு முக்கியமான அம்சமாகும். ஒவ்வொரு சொல்லுக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் உண்டு. சில பொருள்கள் பரவலாக அனைவருக்கும் தெரிந்தது. சில பொருள்கள் மறைந்து இருக்கும். ஊன்றிப் படித்தால்தான் புரியும்.

2. ஸுபாக்ஷிதம் (நல்மொழிகளை நயம்பட கூறுதல்)–தமிழைப் போல் சமஸ்கிருதம் அற்புத சொல்வளம் கொண்ட ஒரு மொழியாகும். பழைய ஆசிரியர்கள் இதை நன்கு பயன்படுத்திக் கொண்டனர். எந்த வொரு விஷயத்தைப் பற்றியும் – விஞ்ஞான இலக்கியத்தை குறித்தும் கூட அழகாக சமஸ்கிருதத்தில் வெளிப்படுத்த முடியும்.

3. கூடார்த்தம் (மறைபொருள்) – சாதாரண மனிதர்களின் அறிவுக்கு எட்டாதபடி ரகசிய மொழியில் எழுதப்படுவது.

இது போன்ற பல காரணங்களால் பல ஆசிரியர்கள் தந்திரயுக்தியை வெவ்வேறு விதமாகப் பயன்படுத்தினர்.

## தந்திர யுக்தியின் மூன்று பகுதிகள்

- தந்திர குணங்கள் (ஆராய்ச்சியின் பயன்கள்)
- தந்திர தோஷங்கள் (குறைகள்)
- தந்திர யுக்திகள்

## தந்திர குணங்கள் (ஆராய்ச்சி பயன்கள்)

ஒரு புத்தகத்தைப் படிப்பதற்கு முன் அது படிப்பதற்கு தகுதியானதா என்று பார்க்க வேண்டும். சரகர் தமது விமான ஸ்தானத்தில் கீழ்க்கண்ட 18 தகுதிகள் (தந்திர குணங்கள்) கொண்ட நூல்களையே படிக்க வேண்டும் என்கிறார்.

1. **ஸுமஹத்தம்**, யசஸ்விதம், தீரபுருஷாஸேவிதம் – புகழ்பெற்ற, திறமையான, தைரியமிக்க ஆசிரியரால் எழுதப்பட்டிருக்க வேண்டும்.
2. **அர்த்த பஹுலம்** – நிறைய பொருட்கள் கொண்டதாக இருக்க வேண்டும்.
3. **ஆப்தஜன பூஜிதம்** – நிபுணர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டதாக இருக்க வேண்டும்.
4. **திரிவித சிஷ்ய புத்திஹிதம்** –அதிக அறிவுள்ள சாதாரண புத்தியுள்ள, மந்த புத்தியுள்ள அனைத்து மாணவர்களாலும் புரிந்து கொள்ளும்படி இருக்க வேண்டும்.
5. **அபகதம் புனருக்த தோஷம்** – முன்பு கூறப்பட்ட கருத்துக்களைத் திரும்பத் திரும்பக் கூறாத இருக்க வேண்டும்.
6. **ஆர்ஷம்** – நல்ல அனுபவ அறிவுள்ள ஒரு ரிஷியால் எழுதப் பட்டிருக்க வேண்டும்.
7. **ஸுப்ரநிதி ஸுத்ர பாஷ்ய ஸங்க்ரஹ கிரம** – நிறைந்த சூத்திரங்கள், விளக்கங்கள், சுருக்கங்கள் மற்றும் உரைகளைக் கொண்டதாக இருக்க வேண்டும்.
8. ஸ்வாதாரம் – தன்னிலை விளக்கம் கொண்டதாகவும், மற்ற புத்தகங்களை சாராததாகவும் இருக்க வேண்டும்.

9. **அனவ பதித சப்தம்** – மோசமான சொற்கள் இல்லாததாக இருக்க வேண்டும்.

10. **அகஷ்டம் சப்தம்** – கஷ்டமான சொற்கள் இல்லாததாக இருக்க வேண்டும்.

11. **புஷ்கலாபிதானம்** – ஒத்த பொருள் கொண்ட பல சொற்கள் இடம் பெற்றதாக இருக்க வேண்டும்.

12. **கிரமகதார்த்தம்** – பாரம்பரிய பின்னணி கொண்டதாக இருக்க வேண்டும்.

13. **அர்த்தத்வம் வினிச்சயம் பிரதானம்** – உண்மையான முக்கிய குறிக்கோள் இடம்பெற்றிருக்க வேண்டும்.

14. **ஸங்கதார்த்தம்** – விஷயத்திற்கு பொருத்தமானதாக இருக்க வேண்டும்.

15. **அஸங்குலம் பிரகரணம்** – விஷயங்களும், அத்தியாயங்களும் முறையாக அமைந்திருக்க வேண்டும்.

16. **அசூசப்ரபோதகம்** – விரைவில் புரிந்து கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும்.

17. **லட்சணாவம்** – நிறைய பொருள் விளக்கமும், தலைப்பும் கொண்டதாக இருக்க வேண்டும்.

18. **உதாஹரணாவம்** – நிறைய சிலேடைகள், எடுத்துக்காட்டுக்கள் கொண்டதாக இருக்க வேண்டும்.

## தந்திர தோஷங்கள்

நூலில் காணப்படும் குறைபாடுகளும், தவறுகளும் தந்திர தோஷங்கள் எனப்படும். இவை தவிர்க்கப்பட வேண்டியவையாகும். தவறானசொற் களைப் பயன்படுத்துவது, வாக்கிய அமைப்புப் பிழைகள், விஷயங்களை இடமாற்றி தருதல், அத்தியாயங்களை ஒழுங்கின்றி அமைத்தல் போன்றவை இவ்வகையைச் சாரும். சிறந்த ஆயுர்வேத நூற்களில் இந்தப் பிழைகள் காணப்படாது.

ஆசார்யர் சரகர், ஸுச்ருதர், வாக்படர் போன்றோர் தங்கள் ஸம்ஹிதைகளில் தந்திர தோஷத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை. அஷ்டாங்க ஹிருதயத்தின் உரையாசிரியரான அருண தத்தர் தந்திர தோஷங்களை வரிசைப்படுத்தி விவரிக்கிறார். அவர் 15 தோஷங்களைக் குறிப்பிடுகிறார்.

1. அபரிசிதம் சப்தம் – புழக்கத்திலில்லாத சொற்களைப் பயன்படுத்துதல்.
2. துஷ்பிரணீதம் – மோசமான முறையில் எழுதப்பட்ட நூல் துஷ்பிரணீதம் எனப்படும். சூத்திரங்கள், பாஷ்யங்கள் மற்றும் குறிப்பிட்ட கொள்கையின்றி எழுதப்பட்ட நூல்கள் துஷ்பிரணீதம் எனப்படும்.
3. அஸங்க தர்த்தம் – ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத சொற்கள், வாக்கியங்கள் இடம்பெற்றது.
4. அஸுகரோஹி – உச்சரிக்க சிரமமான சொற்களைப் பயன்படுத்துவது.
5. விருத்தம் –பொருத்தமற்ற சொற்களைப் பயன்படுத்துவது. இது மூன்று வகைப்படும்.

அ) திருஷ்டாந்த விருத்தம் – தவறான உவமை

உதாரணம் – ஆத்மா அழிவற்றது. ஏனெனில் அது மண்பானை போல செயற்கை பொருள் அல்ல. இந்த வாக்கியத்தில் பானை ஒரு செயற்கை பொருள் அல்ல என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் அது செயற்கை பொருள்.

ஆ) ஸித்தாந்த விருத்தம் – ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றுக்கு எதிராகக் கூறுவது.

உதாரணம்: சீத குணம் வாதத்தையும், உஷ்ண குணம் பித்தத்தையும் குறைக்கும் என்பது எதிர்மறையான கருத்து. தோஷங்களின் ஸமமான குணம், அந்த தோஷங்களை அதிகரிக்கின்றன என்பது ஆயுர்வேத ஸித்தாந்தம். எனவே இது ஸித்தாந்த விருத்தம்.

இ) சமய விருத்தம் –சாதாரண விதிகளையும், உபதேசங்களையும் பழக்கங்களையும் மீறுதல்.

உதாரணம் – சில பழக்க வழக்கங்கள் காலம் காலமாக கடைபிடிக்கப் பட்டு வருகின்றன. அவற்றுக்கு சரியான காரணம் இராது. வெள்ளிக் கிழமைகளில் ஒட்டடை அடிக்கக் கூடாது போன்றவை. இவை ஏதாவது நூலில் மீறப்பட்டிருந்தால் அது சமய விருத்தம் ஆகும்.

6. **அதிவிஸ்த்ரிதம்** – தேவையின்றி விவரித்தல். ஒரு நூலில் எல்லா விஷயங்களையும் அதிகமாக விவரித்துக் கொண்டிருந்தால் அதுவும் ஒரு குறையே. உதாரணம்: வாத தோஷம் அதிகரிப்பதன் காரணங்களை ஒரு நீள பட்டியல் போட்டுக் காண்பித்தல்.

7. **அதிஸம்க்ஷிப்தம்** – புரிந்து கொள்ள முடியாதபடி மிகச் ...க்க மாகத் தருதல். உதாரணம் ஆயுர்வேதம் ஸ்வஸ்த விருத் ... தீராதச் சிகிச்சை பற்றி கூறும் அறிவியல் என்று கூறுவ... சில விவரங்களைத் தந்தால்தான் இந்த வாக்கியத்தை சரிவர புரிந்து கொள்ள முடியும்.

8. **அப்ரயோஜனம்** – எந்த குறிப்பிட்ட நோக்கமோ பய...ா இன்றி இருப்பது. உதாரணம்: ஒரு நூல் எதற்காக எழுதப்பட ... என்று குறிப்பிட வேண்டும். பயன் இல்லாதாகவோ புதித... ...ிவு தருவதாக இல்லாவிட்டாலோ அந்த நூல் பயனற்றது.

9. **பின்ன கிரமம்** – ஒழுங்கின்றி அமைவது. பழக்கத்திற்கு ம... மாற்றி மாற்றி அமைக்கப்பட்டிருத்தல். உதாரணம்: திரிதோ... களின் தன்மை. அது அதிகரிப்பதற்கான காரணிகள் போன்ற வற்றைக் குறிப்பிடும் போது அவை வரிசை வாரியாக இருக்க வேண்டும். முதலில் வாதம், பின்னர் பித்தம், கடைசியில் கபம். இந்த வரிசை மாறினால் அது பின்ன கிரமம் ஆகும்.

10. **ஸந்திக்தம்** – குழப்பமான, நிச்சயமற்ற, விவாதத்திற்குரிய செய்திகள். தர்க்கபூர்வமான, சரியான விவாதத்தின் அடிப்படையில் அமைந் திருக்க வேண்டும். உதாரணம் : ஆத்மா உண்டா இல்லை என்பது தெளிவாகக் குறிப்பிட்டிருக்க வேண்டும்.

11. **புனருக்தம்** – கூறியதையே திரும்பக் கூறுதல்.

12. நிஷ்பிரமாணகம் – குறிப்பிட்ட அடிப்படையின்றி சில கருத்துக் களைக் கூறுதல் அல்லது மாறுபட்டக் கருத்துக்களைக் கூறுதல்.

13. அஸம்பதார்த்தம் – அரைகுறையாக காரணங்களைக் கூறுதல். சரியான முடிவின்றி இருத்தல்.

14. அபா(நா)ர்த்தகம் – தவறான பொருள் கூறுதல்.

15. வியாகதம் – முதலில் கூறப்பட்ட விஷயங்களுக்கு மாறான கருத்துக்கள் பின் பகுதியில் இடம் பெறுதல். இந்த விதமான குறை பாடுகள் ஏதுமின்றி இவற்றைத் தவிர்த்து ஓர் ஆராய்ச்சி நூல் எழுதப்பட வேண்டும்.

### தந்திர யுக்திகள்

முன்காலத்தில் அறிஞர்கள் தங்கள் நூல்களை எழுதும் போது பலவித இலக்கண முறைகளையும், நடையையும் பயன்படுத்தினர். தங்கள் நூல்கள் எளிதாகவும் இலக்கிய சுவைபட அமையவும் இவ்விதம் செய்தனர். அதே சமயம் பாமர மக்களுக்குப் புரியாதபடி உள்ளர்த்தத்தோடு எழுதினர். தந்திர யுக்தி பற்றித் தெரிந்தவர்கள் மட்டும்தான் நூலின் உண்மைப் பொருளை உணர்ந்து கொள்ள முடியும். தந்திரயுக்தி அர்த்த துர்கா என்றும் (அஷ்.சங்.உத்.50) நூலின் உண்மைப் பொருளைக் காத்து வரும் கோட்டை என்றும் அழைக்கப்படுகிறது (சரக ஸம்ஹிதை ஸித்தி ஸ்தானம் 12/46–12).

### தந்திரயுக்தியின் பயன்

நூலில் சுருக்கமாக குறிப்பிடப்பட்டுள்ள கருத்துக்களின் உண்மைப் பொருளை உண்ர்ந்து கொள்ளவும்,

ஒரு வார்த்தையின் பல்வேறு அர்த்தங்களைப் புரிந்து கொள்ளவும்,

ஒரு வார்த்தையின் உண்மை பொருளை வெளிப்படுத்தாமல் திறமையாக கையாளப்பட்ட விதத்தைப் புரிந்து கொள்ளவும்.

தந்திரயுக்தி பயன்படுகிறது. தந்திரயுக்தி இருவகைப்படும்.

**1. வாக்கிய யோஜனம்** – சொற்கள் மற்றும் வாக்கியங்கள் சரியான வகையில் அமைத்தல்.

**2. அர்த்த யோஜனம்** –வாக்கியங்களின் உண்மையான பொருளை உணர்த்திக் கொள்ளுதல்.

**தந்திரயுக்தி ஸங்க்யம்**

சரக ஸம்ஹிதை, 36 வகை தந்திரயுக்தியைக் குறிப்பிடுகின்றது. ஆனால் ஸுச்ருத ஸம்ஹிதை 32 மட்டும் குறிப்பிடுகின்றது. மேலும் பட்டார ஹரிச்சரந்தரர் 40 வகையான தந்திரயுக்தியை விவரிக்கிறார்.

1. அதிகரணம்
2. யோகம்
3. ஹேத்வர்த்தம்
4. பதார்த்தம்
5. பிரதேசம்
6. உத்தேசம்
7. நிர்தேசம்
8. வாக்யசேஷம்
9. பிரயோஜனம்
10. உபதேசம்
11. அபதேசம்
12. அதிதேசம்
13. அர்த்தாபத்தி
14. நிர்ணயம்
15. பிரசங்கம்
16. ஏகாந்தம்
17. நைகாந்தம்
18. அபவர்கம்
19. விபர்யயம்

20. பூர்வபட்சம்
21. விதானம்
22. அனுமதம்
23. வியாக்யானம்
24. ஸம்சயம்
25. அதீதவேக்ஷணம்
26. அநாகத வேக்ஷணம்
27. ஸ்வஸம்ஞும்
28. ஊஹ்யம்
29. ஸமுச்சயம்
30. நிதர்சனம்
31. நிர்வசனம்
32. ஸன்னியோகம்
33. விகல்பம்
34. பிரத்யுத ஸாரம்
35. உத்தாரம்
36. ஸம்பவம்

இந்த 36 தந்திரயுக்திகளில் ஸுச்ருதர் பிரயோஜனம், பிரத்யுதஸாரம், உத்தாரம், ஸம்பவம் ஆகியவற்றை பற்றிக் குறிப்பிடவில்லை.

பட்டார ஹரிச்சந்திரர் மேற்கூறிய 36 தந்திரயுக்தியுடன் பரிப்ரச்ன, வியாகரண, வியுக்ராண பிரதான, ஹேது போன்றவற்றை அதிகமாகக் கூறியுள்ளார்.

## தந்திரயுக்தி (சரக முறை)

1. அதிகரணம்

ஒரு புத்தகம் எழுதும் பொழுது ஆசிரியர் எதை முக்கிய மையக் கருத்தாக எழுதுகிறார் என்பதற்கு அதிகரணம் என்று பெயர். உதாரணமாக சரக ஸம்ஹிதையில், ஸூத்திர ஸ்தானத்தில் ஆயுர்வேதம் என்ற இந்த மருத்துவம் படைக்கப்படும் பொழுது அது நோயுற்றவருக்கும், நோயைத்

தடுப்பதற்கும் உதவுகிறது. அதற்கான வழிமுறைகளைக் கூறுகிறது என்ற கருத்தை மையக் கருத்தாகக் (அதிகரணமாக) கொண்டே இந்த புத்தகத்தைப் படைப்பதாகக் கூறுகிறார். அதிகரணம் என்ற சொல்லுக்கு மையக்கருத்து அல்லது சொல்ல விரும்பிய பொருள் என்று பொருள் கூறலாம். அதிகரணம் ஐந்து வகைப்படும். அவை:

1. தந்த்ராதிகரணம் அல்லது சாஸ்திராதிகரணம்
2. கிரந்தாதிகரணம்
3. அத்யாயாதிகரணம்
4. பிரகரணாதிகரணம்
5. வியாக்யாதிகரணம்

## தந்த்ராதிகரணம் அல்லது சாஸ்திராதிகரணம்

இது ஒரு சாஸ்திரத்தின் முக்கிய பொருளாகும். ஆயுர்வேதத்தில் ரோகம், ரோக நிவர்த்தி என்பது தந்த்ராதிகரணம் அல்லது சாஸ்திராதி கரணம் எனப்படும்.

## கிரந்தாதிகரணம்

ரோகத்தைப் பற்றியக் குறிப்புகள் ஆயுர்வேதத்தில் தந்த்ர அதிகரணமாக இருந்தாலும் சரக ஸம்ஹிதையில் சிகிச்சையே முக்கிய பங்கு வகிக்கிறது. இது கிரந்த அதிகரணம் எனப்படும்.

## அத்யாய அதிகரணம்

ஒரு அத்யாயத்தின் முக்கியத்துவம் அத்யாய அதிகரணம் எனப்படும். உதாரணம்: ரஸவிமானம் என்னும் அத்தியாயம்.

## பிரகரண அதிகரணம்

ரஸாயனம் என்ற காய கல்ப சிகிச்சையை ஒரு முழு பிரகரணமாக விவரிப்பது.

## வாக்ய அதிகரணம்

சில அர்த்தங்களை விளக்குவதற்காக சொல்லாண்மை பொருந்திய சொற்றொடர்களை விளக்குவது.

## 2. யோகம்

ஒரு வாக்கியத்தில் காணப்படும் மையக்கருத்தை எடுத்துரைக்க அதில் பயன்படுத்தப்படும் பலவிதமான சொற்களை ஒன்றிணைப்பது யோகம் ஆகும். உதாரணமாக, ஒரு கரு எவ்வாறு உருவாகிறது என்ற கேள்விக்கு பிரதிக்ஞா, ஹேது, உதாஹரணம், உபநயம், நிகமனம் போன்ற வற்றின் மூலம் விளக்கிக் கூறுவது. (சரக ஸம்ஹிதை சாரீரம் 3–10)

ஒரு வாக்கியத்திற்கு 5 அவயவங்கள் உண்டு. இவற்றின் சேர்க்கை யோகம் எனப்படும். இவை சேரும்பொழுதே ஒரு சொல் தொடர் பூரணமான விள்க்கத்தை அளிக்கும்.

- மலை எரிகிறது என்ற வாக்கியத்தை எடுத்துக் கொள்வோம். இது **பிரதிக்ஞை** ஆகும்.
- புகையைக் காணுவதால் மலை எரிகிறது என்பதை நாம் உணர் கிறோம். இதற்கு **ஹேது** என்று பெயர்.
- பின்பு எங்கெல்லாம் புகையைப் பார்க்கிறோமோ அங்கெல்லாம் நெருப்பு இருக்கிறது என்று கருதுகிறோம். சமையலறைக்கு செல்லும் பொழுதும் இந்த கருத்து நம் மனதிற்கு வருகிறது. இதற்கு **உதாஹரணம்** என்று பெயர்.
- எங்கெங்கு நெருப்பு இருக்கிறதோ அங்கங்கு நமக்கு இவ்வெண்ணம் ஏற்படுகிறது. இதற்கு **உபநயம்** என்று பெயர்.
- இவ்வறிவினால் ஏற்படும் தீர்மானத்திற்கு **நிகமனம்** என்று பெயர்.

இவ்வாறு மலை எரிகிறது என்ற சொற்றொடர் எத்துணை ஆழ்ந்த பொருளைத் தந்தது என்பதை உணர்கிறோம் அல்லவா? இவ்வாறு வாக்கியம் அமைவதற்கு **யோகம்** என்று பெயர்.

## 3. ஹேத்வர்த்தம்

ஒரு சந்தர்ப்பத்தில் பயன்படுத்தப்பட்ட ஒரே வாக்கியம் வேறு பொருளுடன் மற்றொரு சந்தர்ப்பத்தில் பயன்படுவது ஹேத்வர்த்தம் எனப்படும்.

உதாரணமாக, சரகம் ஸூத்திர ஸ்தானத்தில் 12/5 ஒத்த குணமுடைய பொருட்கள் தாதுக்களை அதிகரிக்கும் என்று ஒரு பதம் காணப்படுகிறது. இங்கு தாது என்ற சொல்லுக்கு தோஷம் என்று ஒரு பொருளும் கூறப் படுகிறது. ஆனால் பொதுவாக தாது என்ற சொல்லுக்கு திசுக்கள் என்றே பொருள். வாத தோஷத்தைக் குறிக்கின்ற இடத்தில் தோஷம் என்றே நாம் கூறுவோம், தாது என்று கூறுவதில்லை. ரஸம் என்று குறிப்பிடும்பொழுது தாது என்றே கூறுவோம், தோஷம் என்று குறிப்பிடுவதில்லை. ஆனால் ஒரு சில சந்தர்ப்பங்களில் அர்த்தம் மாறுபட்டு எடுக்க வேண்டியுள்ளது. இதற்கு ஹேத்வர்த்தம் (சந்தர்ப்பத்தை சார்ந்த பொருள்) என்று பொருள்.

## 4. பதார்த்தம்

அர்த்தத்தை வெளிப்படுத்தும் சொற்களுக்கு பதார்த்தம் என்று பெயர். திரவ்யம் என்று சொன்னால் அது பஞ்ச மஹாபூதங்களையும், ஆத்மாவையும் குறிக்கும். ஆயுஷோ வேதம் என்று சொன்னால் அது வாழ்க்கையைப் பற்றிய மெய்யறிவாகிய ஆயுர்வேதத்தைக் குறிக்கும். கடம் என்று சொன்னால் அது பானையைக் குறிக்கும். இவ்வாறு அர்த்தம் பொதிந்த சொற்களுக்கு பதார்த்தம் என்று பெயர். பதார்த்தம் என்ற சொல் அர்த்தமில்லா ஒலிகளுக்குப் பொருந்தாது.

ஸுச்ருத ஸம்ஹிதை முதல் அத்தியாயம் வேதோத்பத்தி என்று தொடங்கு கிறது. வேதம் என்ற சொல் நான்கு வேதங்களையே குறித்தாலும் இங்கு அது ஆயுர்வேதத்தையே குறிக்கிறது.

## 5. பிரதேசம் (இடம்)

பிரதேசம் என்று சொன்னால் இடத்திற்கு தகுந்த பொருள் என்று அர்த்தம். ஒரு பொருளுக்கோ அல்லது பல தத்துவத்துக்கோ பல கோணங் களில் விளக்கமோ, அர்த்தமோ காணப்படும். அவை எல்லாவற்றையும் விளக்க முடியாத சூழ்நிலை ஏற்படலாம். அப்போது அந்த சந்தர்ப்பத்தில் அந்த இடத்திற்கு எந்தப்பொருள் ஏதுவாக இருக்குமோ அதை மட்டும் எடுத்துக் கூறுவதற்கு பிரதேசம் என்று பெயர். மேலே நாம் படித்து வரும் விஷயங்கள் ஒரு புத்தகத்தை எவ்வாறு படித்து புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக எழுதப்பட்ட விஷயங்களாகும்.

சரக ஸம்ஹிதை ஸூத்திர ஸ்தானத்தில் 27/329 பலவித அனுபானங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது. குறிப்பாகச் சரகர் ஒன்றிரண்டு அனுபானங்களை பொதுத் தன்மையுடன் கூறுகிறார். ஒரு அனுபானம் என்று எடுத்துக் கொண்டால் அது பல நோய்களுக்கு, பல மருந்துகளுக்கு, பலவித சந்தர்ப்பத்தில் பயன்படும். ஆனால் முழுவதையும் கூறு இயலாத காரணத்தினால் ஒன்றிரண்டை மட்டும் குறிப்பிட்டுள்ளார். எடுத்துக்காட்டாக இளைத்தவனுக்கு மாம்ஸ ரஸமும், பாலும் பயன்படுத்த வேண்டும் என்று குறிப்பிடுகிறார். ஆனால் பாலும் மாம்ஸ ரஸமும் பல இடங்களில், பல சந்தர்ப்பங்களில் அனுபானமாகக் கொடுக்கப்படலாம். ஆனால் முழுவதையும் கூறுமுடியாத காரணத்தால் எது தேவையோ, எது முக்கியமானதோ அதை மட்டும் குறிப்பிடுகிறார். அது அந்த சந்தர்ப்பத்திற்கு பொருத்தமானதாக அமைவதால் அது பிரதேசம் என்று கூறப்படுகிறது.

### 6. உத்தேசம் (குறிக்கோள்)

ஒரு லட்சியத்தை வெளிப்படுத்தும்படியான வாக்கியத்திற்கு உத்தேசம் என்று பெயர். ஆயுர்வேதத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது ஹேது, லிங்கம், ஔஷத ஞானம் என்று குறிப்பிடுகிறார். நோய்க்கான காரணம் மற்றும் சிகிச்சை, ஆரோக்கியத்திற்கான காரணங்கள், மருந்துகள் இவற்றை பற்றிக் குறிப்பிடுவது ஆயுர்வேதத்தின் உத்தேசமாகும்.

சரக ஸம்ஹிதை முதல் அத்தியாயத்தில் 1/24 ஸாமான்யம், விசேஷம் போன்றவற்றை உத்தேசமாகச் சுருக்கிக் கூறுகிறார்.

### 7. நிர்தேசம் (விரிவுபடுத்திக் கூறுதல்)

மேலே கூறிய பொருட்களையே விவரப்படுத்திக் கூறுவது. ஹேது, லிங்கம், ஔஷத ஞானத்தையே சரக ஸம்ஹிதையில் ஆரம்பத்தில் சுருக்கமாக கூறி பின்பு ஸூத்திரம் 1ஆம் அத்தியாயம் 44ல் விரிவாகக் கூறுகிறார். இதற்கு நிர்தேசம் என்று பெயர்.

### 8. வாக்கிய சேஷம் (விடுபட்டச் சொற்களைப் புரிந்து கொள்ளுதல்)

சில நேரங்களில் ஒரு சில சொற்றொடர்களை சந்தர்ப்பத்திற்கு ஏற்ற வாறு சுருக்கியோ, சில பகுதிகளை தவிர்த்தோ கூறுவதுண்டு. இதனால் சில சொற்கள் விடுபட்டுப் போகும். இதற்கு வாக்கியசேஷம் என்று

பெயர். உதாரணமாக மருத்துவ சிகிச்சை கூறுகின்ற பல இடங்களிலும் ஜாங்கல ரஸம் என்ற ஒரு பதம் வருகின்றது. ஜாங்கல ரஸம் என்றால் ஜாங்கல தேசத்தில் (வறண்ட இடம்) வாழ்கின்ற பிராணிகளின் மாம்ஸ ரஸம் என்று பொருள். மாம்ஸம் என்ற வார்த்தை இங்கு கூறப்படவில்லை. மாம்ஸம் என்ற வார்த்தை உள் அர்த்தமாக உள்ளது. இதை அனுமானத் தின் மூலம் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

### 9. பிரயோஜனம் (பலன்)

எந்த ஒரு பலனுக்காக ஒரு புத்தகம் எழுதப்பட்டதோ அதற்கு பிரயோஜனம் என்று பெயர். சரக ஸம்ஹிதையானது வாத பித்த கபங்களை நிலைநிறுத்தி ஒருவனுக்கு ஆரோக்கியம் ஏற்பட வேண்டும் என்பதற்காக எழுதப்பட்டது. இதுவே சரக ஸம்ஹிதையின் பிரயோஜனமாகும்.

### 10. உபதேசம் (நல்ல அறிவுரைகள்)

ரிஷகளின் நல்ல அறிவுரைகள் நமது புத்தகத்தில் காணப்படுகின்றன. உதாரணமாக முதலில் ஸ்நேஹம் செய்ய வேண்டும். பின்னர் ஸ்வேதம் செய்ய வேண்டும் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். சில புத்தகத்தில் மருத்துவக் கருத்துக்கள் உபதேச வடிவில் காணப் படுகின்றன.

### 11. அபதேசம் (முக்கியத்தை உணர்தல்)

ஒரு வாக்கியத்தை அமைக்கும் பொழுது அந்த வாக்கியத்தை அமைப் பதற்கான காரணமும், உட்பொருளும் விளக்கப்படுகிறது. உதாரணமாக, வாயு, நீர், தேசம், காலம் இவற்றில் ஏற்படுகின்ற மாசுபாடுகளைப் பற்றிக் குறிப்பிடும்போது தேசத்திற்கும், காலத்திற்கும் ஏற்படும் மாசுபாடு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. ஏனென்றால் நீரில் வருகின்ற மாசுபாட்டில் ஓரளவு மாற்றத்தை ஏற்படுத்த முடியும். ஆனால் காலத்தில் ஏற்படுகின்ற மாசுபாட்டை நம்மால் ஒன்றும் செய்ய முடியாது.

### 12. அதிதேசம் (சமய சந்தர்ப்பத்திற்கு ஏற்ப பொருள் கூறுதல்)

வேறொரு இடத்தில் கூறியதை வலிந்து வரவழைத்தல். ஒரு சொற் றொடரானது ஒரு தெளிவற்ற அர்த்தத்தை கொடுப்பதாக இருக்கலாம்.

உதாரணமாக சரகம் ஸுத்ரம் 9/34ல் கூறும் பொழுது இங்கு கூறப்படாத சில விஷயங்கள் ஆரோக்கியத்திற்கு நல்லதாக இருந்தால் அதை இந்த நோயில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று கூறுகிறார். அதாவது ஒரு கருத்து ஒரு சந்தர்ப்பத்தில் கூறப்படாமல் இருந்தாலும் தேவைக்கேற்ப நாம் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அர்த்தம்.

**13. அர்த்தாபத்தி** (ஒன்றை கூறி மற்றொன்றை கூறாமல் உணர வைத்தல்)

அர்த்தாபத்தி தலைப்பில் முன்னர் விளக்கப்பட்டுள்ளது.

**14. நிர்ணயம்** (நிர்ணயித்தல்)

ஒரு செயலை நன்றாக ஆராய்ந்து ஒரு தீர்மானமான முடிவை எடுப்பதற்கு நிர்ணயம் என்று பெயர். எ.கா. பல லட்சணங்களைக் கொண்டு நோய் காணப்படும் பொழுது இது இந்தநோய்தான் என்று முடிவெடுப்பது.

**15. பிரஸங்கம்** (மீண்டும் கூறுதல்)

முன்பு கூறியவற்றை தகுந்த சந்தர்ப்பத்திற்கு ஏற்ப மீண்டும் விளக்கிக் கூறுவதற்கு பிரஸங்கம் என்று பெயர். உதாரணமாக புலன்களுக்கும் பொருட்களுக்கும் ஏற்படும் ஒவ்வா தொடர்பினால் நோய்கள் உண்டாகிறது என்று சரீர ஸ்தானத்தில் சரகர் கூறுகிறார். அபஸ்மாரம் போன்ற நோய்களில் அந்தக் காரணத்தை மீண்டும் விளக்கிக் கூறுகிறார்.

**16. ஏகாந்தம்** (தனி சிறப்புக் கருத்துக்கள்)

ஏகாந்தம் என்றால் தனிமையானது என்று பொருள். இது இடத்திற்கு இடம் மாறாது. இதனைத் திருத்த முடியாது. மலங்காரக்காய் வாந்தியை உண்டு பண்ணுகிறது. கடுக்காய் பேதியை உண்டு பண்ணுகிறது. எந்த சந்தர்ப்பத்திலும் இந்த கருத்துக்கள் மாறுபடாது.

**17. அநேகாந்தம்** (விட்டுக் கொடுக்கும் கருத்துக்கள்)

ஏகாந்தத்துக்கு எதிர்பதம் இது. இந்தக் கருத்துக்கள் உறுதியான்வை அல்ல. இடத்திற்கு இடம் மாறுபடுபவை. உதா: சிலர்'திரவ்யம்'முக்கியம் என்கிறார்கள். சிலர் வீர்யம் முக்கியம் என்கின்றனர். இதைப்போன்று பல சர்ச்சைகள் புத்தகங்களில் காணப்படுகின்றன. இதற்கு முடிவு இல்லை.

**18. அபவர்கம்** (விதிவிலக்கு)

பொது விதிகளில் இருந்து மாறுபட்டவை அபவர்கம் எனப்படும். உதாரணமாக ரக்த துஷ்டியில் ஸிராவேதம் எனப்படும் இரத்த நாளங்களைக் கீறும் சிகிச்சை அளிக்கலாம். ஆனால் 16 வயதுக்குட்பட்டவர்களும் 70 வயதுக்கு மேற்பட்டவர்களும் கொடுக்கக் கூடாது என்பது விதிவிலக்காகும்.

**19. விபர்யயம்** (விதிவிலக்குக்கு விதிவிலக்கு)

எதிர்எதிர் கருத்துக்களை வரவேற்றல். இருவித கருத்துக்களும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தால் இரண்டையுமே ஏற்றுக் கொள்ளுதல். துர்பல ரோகிகளுக்கு சிகிச்சை அளிக்கக் கூடாது என்ற கருத்தையும், பலவான்களுக்கு சிகிச்சை அளிக்கலாம் என்ற எதிர்மறைக் கருத்தையும் ஒரே நேரத்தில் ஏற்றுக் கொள்வது விபர்யயம் எனப்படும்.

**20. பூர்வபட்சம்** (எதிர் கேள்வி)

சில கருத்துக்களுக்கு தெரிவிக்கப்படும் மறுப்பு பூர்வபக்ஷம் எனப்படும். உதாரணமாக 'பகலில் தூங்கக்கூடாது' என்று மருத்துவப் புத்தகங்கள் கூறுகின்றன. இதற்கு 'ஏன்?' என்று எதிர் கேள்வி கேட்பது பூர்வபக்ஷமாகும்.

**21. விதானம்** (சரியான முறை)

சாஸ்திரங்களில் கூறியுள்ள விஷயங்களை சரியான முறையில் விளக்கப்படுத்தி முறைப்படிக் கூறுவதற்கு விதானம் என்று பெயர். உதா: சப்த தாதுக்களைப் பற்றிக் குறிப்பிடும் போது ரஸத்திலிருந்து தொடங்கி சுக்ரத்தில் முடிக்க வேண்டும்.

**22. அனுமதம்** (பிறருடைய கருத்துக்களை அனுசரித்து ஏற்றுக் கொள்ளுதல்)

சில கருத்துக்களைக் கூறும் பொழுது, பிறருடைய கருத்துக்களை அனுசரித்து ஏற்றுக் கொள்ளுதல் அனுமதம் எனப்படும். உதா: ஸுச்ருதர் சுவைகளின் பிரிவுகள் 6 என்று கூறுகிறார். அதே சமயம் அவருடைய காலத்தில் வாழ்ந்த மற்ற ஆசிரியர்கள் அவ்யக்தம் என்ற சுவையை

7வதாகக் கூறுகின்றனர். ஸுச்ருதர் மற்றவர்களுடைய கருத்தை ஏற்றுக் கொண்டாலும் தனது கருத்தாக சுவையானது 6 வகையே என்று விளக்கு கிறார். இவ்வாறு பிறருடைய கருத்தை அனுசரித்து ஏற்றுக் கொள்ளுதல் அனுமதம் எனப்படும்.

### 23. வியாக்யானம் (விளக்கம்)

ஒரு விஷயத்தை நன்கு புரிந்து கொள்ளத் தரப்படும் விரிவான விளக்க உரைக்கு வியாக்யானம் என்று பெயர். உதா: கருப்பையில் உள்ள குழந்தையின் வளர்ச்சி விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

### 24. ஸம்ஸயம் (சந்தேகம்)

முடிவுறாத கருத்துக்கள். இவற்றில் கருத்து வேற்றுமைகள் இருக்கும். முடிவான தெளிவான கருத்து இராது. அதைப் படிப்பவருக்கு சந்தேகம் இருந்து கொண்டேயிருக்கும். உதாரணமாக ஒரே தன்மையுடன் பல அறி குறிகளைக் கொண்டு ஜ்வரம் வரும் பொழுது அது எந்தக் காரணங் களினால் வருகிறது என்று சந்தேகப்படுவது.

### 25. அதீதாவேக்ஷணம்

தான் தற்போது படித்துக் கொண்டிருப்பதில் ஏற்பட்ட ஐயத்தைத் தீர்த்துக் கொள்ள ஏற்கனவே படித்த பகுதியை திரும்பவும் படிப்பது அதீதாவேக்ஷணம் எனப்படும். உதா: அஷ்டாங்க ஹிருதயம் சிகிச்சா ஸ்தானத்தில் (6வது அத்தியாயம்) "மஹாஸ்னேஹம் தயாரிக்கவும்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. படிப்பவர் ஆரம்ப அத்தியாயங்களைப் படித்தால்தான் மஹாஸ்னேஹம் எப்படி தயாரிப்பது என்பது தெரியும் (ஸூத்ர. அத். 16).

### 26. அநாகதாவேக்ஷணம்

அதீதவேக்ஷணத்தின் எதிர்பதம். தான் தற்போது படித்துக் கொண்டிருக் கும் அத்தியாயத்தில் ஏற்பட்ட ஐயத்தைத் தீர்த்துக் கொள்ள பின்னால் வரும் அத்தியாயங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்வது அநாகதாவே க்ஷணம் எனப்படும். உதா: விமான ஸ்தானத்தில் விபரங்கள் பின்னர் தரப்பட்டுள்ளது என்று சரகர் சொல்வது.

## 27. ஸ்வஸம்ஞா (தொழில் துறை கலைச் சொற்கள்)

'ஸ்வ' என்றால் தான் என்றும், 'ஸம்ஞ' என்றால் வெளிப்பாடு என்றும் பொருள்படும். ஒரு குறிப்பிட்ட துறைக்கு உரிய கலைச் சொற்கள் ஸவஸம்ஞா எனப்படும். உதா: ஜேந்தாகம், ஹோலாகம் என்பவை ஸ்வேத கர்மாவின் வகைகள். அவை ஆயுர்வேதத்திற்கு மட்டும் உரியது.

## 28. ஊஹ்யம் (ஊகித்தல்)

ஊஹ்யம் என்பது யூகித்தல் என்று பொருள்படும். சில கருத்துக் களைப் படிக்கும்போது அதன் பொருளை யூகித்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இது ஊஹ்ய தந்திர யுக்தி எனப்படும். உதா: 'இதில் குறிப்பிடாதவை மருந்து பட்டியலில் இடம் பெறும்' என்ற குறிப்பு உள்ளது. இதைப் படிக்கும் ஒருவர் வேறென்ன மருந்துகள் அந்த பட்டியலில் இருக்கும் என்று யூகிக்க வேண்டும்.

## 29. ஸமுச்சயம் (குவியல்)

ஒரே வகையான பொருட்களைப் பட்டியலிடுதல் ஸமுச்சயம் எனப் படும். உதா : சரக ஸம்ஹிதை, ஸூத்ர ஸ்தானத்தில் ஒரே குணமுள்ள மருந்துகள் ஒரே வகுப்பில் உட்படுத்தப்படவேண்டும் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. உதா: குழந்தைக்கான மருந்துகள், வாயு நிவாரணம் போன்றவை.

## 30. நிதர்சனம் (உவமை தருதல்)

ஒரு கருத்தை சுலபமாகப் புரிந்து கொள்வதற்காக உவமைகளுடன் தருவது நிதர்சனம் எனப்படும். உதா: சரியாக பயன்படுத்தத் தெரிந்த வருக்கு நெருப்பு, ஆயுதம் போன்றவை எவ்வளவு பயனுள்ளதாக இருக்கிறதோ அதுபோல மருந்தைச் சரியானபடி பயன்படுத்துவோருக்கு அது அமிர்தமாகும் என்று கூறுவது.

## 31. நிர்வசனம் (சொல் பொருள் விளக்கம்)

சொற்கள் அல்லது வாக்கியங்களில் உள்ள உச்சரிப்பு கொண்டு அதன் பொருளை அறிந்து கொள்ளுதல் நிர்வசனம் எனப்படும். உதா: 'ஆயுள்' என்றால் வாழ்க்கை. 'வேதம்' என்றால் அறிவு. ஆயுர்வேதம் என்றால் வாழ்வைப் பற்றிய அறிவியல் என்று புரிந்து கொள்ளுதல்.

## 32. ஸம்யோகம் / நியோகம் (வழிமுறைகள்)

அறிவிலும் அனுபவத்திலும் சிறந்த சான்றோர்களால் கூறப்படும் கருத்துக்கள் கட்டளைகள் போன்று அமைந்திருக்கும். இது ஸம்யோகம் (நியோகம்) எனப்படும். விஞ்ஞான அளவை நிர்ணயிக்க இவர்களுடைய கருத்துக்கள் உதவும். (உதா: ஸ்நேஹ பானத்திற்கு பிறகு ஒருவன் வென்னீரையே உபயோகிப்பது நல்லது போன்ற அனுபவ பூர்வமான கருத்துக்களைக் கூறலாம்.)

## 33. விகல்பம் (விருப்பம் போல் தேர்வு செய்தல்)

கட்டுப்பாடுகள் இன்றி அவரவர் விருப்பம் போல் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வசதிக்கு விகல்பம் என்று பெயர். உதா: ரஸோதனா அல்லது யவாகுவை நெய்யுடன் கொடுக்கலாம். மதுமேகத்தின் சிகிச்சைக்கு கருங்காலிக் கஷாயம் அல்லது அருகம்புல் கஷாயம் போன்றவற்றை உபயோகிக்கலாம் போன்ற கருத்துக்கள்.

## 34. பிரத்யுத்ஸாரம் (தர்க்கம் செய்தல்)

சில சந்தர்ப்பங்களில் ஒரு விஷயத்தைப் பற்றி சில ஆசிரியர்கள் மாறுபட்ட கருத்துக்களை எடுத்துரைப்பதுண்டு. அதற்கு பிரத்யுத்ஸாரம் என்று பெயர். உதாரணம் : நோய்களுக்குக் காரணம் ரஸ தாது என்று வாயோர்விதர் கூறுகிறார். ஆனால் நோய்க்கு காரணம் பஞ்சமஹாபூதம் மற்றும் ஆத்மாவே என்று ஹிரண்யாக்ஷர் கூறுகிறார்.

## 35. உத்தாரம் (மீண்டும் உறுதி செய்தல்)

நீண்ட விவாதங்களுக்கு, பிறகு திரும்பவும் உறுதி செய்யப்படுவது உத்தாரம் எனப்படும். உதா : கஷ்டங்களும் துயரங்களும் எந்த காரணி களால் ஏற்படுகின்றனவோ, அதே காரணிகள் தான் மகிழ்ச்சியையும் நல்ல ஆரோக்கியத்தையும் தருகின்றன என நீண்ட விவாதத்துக்குப் பின் முடிவு செய்யப்பட்டது.

## 36. ஸம்பவம் (சாத்தியம்)

ஒரு நோயானது எந்த இடத்தில் தோன்றும் அல்லது எந்த அமைப்பை பெற்றிருக்கும் என்பதை அந்த நோயிலிருந்து அறியப்படுவதற்கு

ஸம்பவம் என்று பெயர். உதாரணமாக பிப்லு, வ்யங்கா, நீலிகா போன்ற நோய்கள் முகத்தில்தான் தோன்றும் என்று கூறுவது ஸம்பவம் எனப்படும்.

## தொல்காப்பியத்தில் தந்திரயுக்தி

1. சொன்னதைத் தெளிவாக அறிதல்
2. அதிகாரங்களை முறையாக அமைத்தல்
3. இறுதியில் தொகுத்துக் கூறல்
4. வகைப்படுத்தி உண்மையை நிலைநாட்டல்
5. சொன்ன செய்தியைக் கொண்டு சொல்லாத செய்தியை இடர்பாடின்றி முடித்தல்
6. வராததைக் கூறும் போது ஏனைய வரும் என முடித்தல்
7. வந்ததைக் கொண்டு வராதனவற்றை உணர்தல்
8. முன்பு கூறியதைப் பின்பு சிறிது பிறழக் கூறுதல்
9. பொருந்தும் வண்ணம் கூறுதல்
10. ஒரு பக்கத்தே சொல்லுதல்
11. தன் கொள்கையை வெளிப்படுத்தல்
12. நூலில் வைத்துள்ள முறை பிறழாதிருத்தல்
13. பிறர் உடம்பட்டதைத் தானும் ஏற்றுக் கொள்ளுதல்
14. முற்கூறியதைப் பின்பு பாதுகாத்தல்
15. பின்வரும் விதியைப் போற்றுதல்
16. தெளிவுபடுத்துவோம் எனல்
17. கூறினோம் எனல்
18. தான் புதிதாகக் குறியிடுதல்
19. ஒரு சார்பு இன்மை
20. முன்னோர் முடிபைக் காட்டல்
21. அமைத்துக் கொள்க எனக் கூறல்
22. பல பொருள் இருந்தாலும் நல்ல பொருளைக் கொள்ளுதல்

23. தொகுத்தும் வகுத்தும் கொள்ளுதல்
24. எதிர்ப்புக் கூறுவோர் கருத்தை மறுத்துத் தன் கருத்தை உரைத்தல்
25. பிறர் கொள்கைகளையும் சான்றாகக் கூறல்
26. பெரியோர் கருத்தை ஏற்றுக் கொண்டு தான் அதையே கூறல்
27. கருத்து விளக்கத்திற்கு வேறு பொருள்களையும் இடையே கூறல்.
28. மாற்றுப் பொருளையும் உணர்தல்.
29. சொல்லின் குறையை நிறைவு செய்து கூறல்
30. தேவைக்குத் தகத் தன் கருத்தைத் தந்துஇணைத்து உரைத்தல்
31. நினைவு படுத்திக் கூறல்
32. கருத்தை உய்த்து உணரும்படி கூறல்

என முப்பத்திரண்டு உத்திகளுடன், இவை போன்ற பிற உத்திகளையும் சேர்த்துக் கொண்டு, சுருக்கமாக ஆனால் விளக்கமாகத் தெளிவு படுத்தி – மனத்தில் தெளிவாக எண்ணிப் பிழை நீக்கத்தைத் தெரிந்து கொண்டு. நூல்வகை முறையில் சேர்த்து, உணர்த்தல் வேண்டும் நூல் என அறிவுடையோர் கூறுவர்.

(தொல்காப்பியம் தெளிவுரை, முனைவர்.ச.வே. சுப்பிரமணியன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை)

## வியாக்யானம்

ஒரு நூலின் விளக்க உரை அல்லது அதன் பொருள் பற்றிய விரிவாக்கம் வியாக்யானம் எனப்படும். வியாக்யானம் அதே ஆசிரியராலோ அல்லது வேறு ஆசிரியராலோ எழுதப்பட்டிருக்கும். அல்லது தனிப் புத்தகமாக இது வெளியிடப்படும். ஒரு விஷயத்தை வாசகர் நன்கு புரிந்து கொள்ள இது பயன்படும். இதில் சொற்களுக்கும் வாக்கியங்களுக்கும் விரிவான பொருளும் விளக்கமும் இடம்பெறும். அத்துடன் விஷயத்தின் சாதக பாதகங்கள் விவரிக்கப்பட்டு முடிவு கூறப்படும். எல்லாக் கருத்துக் களையும், விமர்சனங்களையும் ஒரே இடத்தில் தந்து விமர்சித்து அவற்றை ஏற்றுக் கொள்ளவோ, நிராகரிக்கவோ செய்யப்படும். இது பற்றி அஷ்டாங்க

ஹிருதயத்திற்கு உரை எழுதிய அருணதத்தர் 15 விதமான விரிவுரைகளைத் தந்திருக்கிறார். அவற்றில் இப்போது 11 மட்டுமே கிடைத்திருக்கின்றன.

**1. பிண்ட வியாக்யம் – சுருக்கமான விளக்கம்.** ஒரு விஷயம் குறித்து விரிவாக ஒரு அத்தியாயம் எழுதலாம். அதையே சுருக்கமாக இரண்டு மூன்று ஸ்லோகங்களில் எழுதினால் அது பிண்ட வியாக்யம் எனப்படும். உதாரணமாக சரகத்தில் இந்திரிய ஸ்தானமாக 13 அத்தியாயத்தில் இடம்பெற்ற அரிஷ்ட லட்சணங்கள் அனைத்தும் சுருக்கப்பட்டு அஷ்டாங்க ஹிருதய சரீர ஸ்தானத்தில் இரண்டே அத்தியாயங்களில் தரப்பட்டுள்ளது.

**2. பத வியாக்யம்** – குழப்பமான வார்த்தைக் குவியலைப் புரிந்து எளிய சொற்களாகத் தருதல். உதாரணம் ஸ்லோகம் எண் 1. அத்தியாயம் 1, அஷ்டாங்க ஹிருதய ஸுத்திர ஸ்தானம் – *அதாதோ*, *ஆயுஷ்*, *காமியம்*, *அத்யாயம்*, *வ்யாக்யஸ்யாமஹ*, இதற்கு அருண தத்தர் ஆயுஷ், காமியம் என்று ஒவ்வொரு பதத்தையும் பிரித்து விளக்கியுள்ளார்.

**3. பதார்த்த வியாக்யம்** – பிரிக்கப்பட்ட சொற்களுக்கு விளக்கமளிப்பது பதார்த்த வியாக்யம் என்று பெயர். உதாரணமாக அத என்ற சொல்லுக்கு மங்களம் அல்லது அடுத்தது என்று பொருள். ஆயு என்றால் *வாழ்வு* என்றும், காமியம் என்றால் *விருப்பம்* என்று பொருள்படும். இப்படி ஒவ்வொரு சொற்களுக்கும் தனித்தனியே பதம் பிரித்து பொருள் தருவதற்குப் பதார்த்த வியாக்யம் என்று பெயர்.

**4. அதிகரண வியாக்யம்** – ஒரு குறிப்பிட்ட விஷயத்தை விரிவாகக் கூறுவதற்கு அதிகரண வியாக்யம் என்று பெயர். உதாரணமாக ஸுச்ருத ஸம்ஹிதை சாரீர ஸ்தானம் ஆறாம் அத்தியாயத்தில் *மர்மங்கள்* பற்றி மிக விரிவாகக் கூறுகிறார்.

**5. பிரகரண வியாக்யம்** – ஒரு கருத்து இன்னொரு இடத்தில் வருகிறது என குறிப்பிடுவது. இதற்கு முன்னர் குறிப்பிட்டது போல, அடுத்து அத்தியாயத்தில் சொல்லப்படுவது போல என்பது மாதிரி பொருள் தருவது ஆகும்.

**6. அர்த்த வியாக்யம்** – சொல்லப்படும் கருத்துக்களில் உள்ள பொதுவான, இயற்கையான, முக்கிய குறிப்புகளை மட்டும் தருதல் அர்த்த வியாக்யம் எனப்படும். உதாரணமாக *மாஷம்* (உளுந்து), *முத்கம்* (சிறு பயறு) ஆகிய இரண்டுக்கும் உள்ள குருத்வம், லகுத்வம் எனும் குணங் களையும் எடுத்துக் கூறுவது.

**7. கிருச்ர வியாக்யம்** – சுருக்கமான கருத்துக்களை விரிவாகக் கூறுதல் கிருச்ர வியாக்யம் எனப்படும். உதாரணம் – *பாதசதுஷ்டயம்* (மருத்துவன், மருந்து, செவிலியர், நோயாளி) என்று கூறிவிட்டு இதை வேறு ஒரு இடத்தில் விரிவாகக் கூறுவோம் என்று கூறுவது.

**8. பல வியாக்யம்** – விவாதத்திற்குரிய ஒரு விஷயத்தைப் பற்றி தமது கருத்தை பிறர் கருத்துக்களின் உதவியோடு கூறுதல் பல வியாக்யம் எனப்படும். உதாரணம் – அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் நிருக வஸ்தியைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது மற்ற ஆசிரியர்களின் கருத்துக்களை கூறி தம் கருத்துக்களையும் எடுத்துரைக்கிறார்.

**9. உசித வியாக்யம்** – சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு ஒரு சொல்லின் பொருளைக் குறிப்பிடுதல் உசித வியாக்யம் எனப்படும். ஒரு சொல்லுக்குப் பல பொருட்கள் இருந்தால், உசிதமான பொருளை இந்த வியாக்யாவின் உதவியுடன் புரிந்து கொள்ளலாம். உதாரணமாக தாது என்றால் பஞ்ச பூதங்ள் மற்றும் சப்த தாதுக்களையும் குறிக்கும். (அஷ். ஸ. சா. 3/65).

தாது என்ற வார்த்தை பயன்படுத்தப்படும் பிரகரணத்தைப் பொறுத்து பொருள் கொள்ள வேண்டும் (அஷ். ஹி. ஸூ 1/13)

**10. நியாய வியாக்யம்** – படிக்கும் போது ஏற்படும் சந்தேகத்தை பிற நூல்களுடன் ஒப்பிட்டு நிவர்த்தி செய்து கொள்ளுதல் நியாய வியாக்யம் எனப்படும். உதாரணம்: நீண்ட சிகிச்சைக்குப் பின்னும் நோய் குணமாக வில்லை. எனவே சிகிச்சையை நிறுத்தி விடலாம் என்று மருத்துவர்கள் நினைப்பதுண்டு. பின்பு இதனை புத்தகங்களுடன் ஒப்பிட்டு உண்மை யிலேயே அஸாத்தியம்தானா என்று உறுதி செய்வது.

**11. பிரயோஜன வியாக்யம்** – ஒரு அத்தியாயம் அல்லது நூலின் குறிப்பிட்ட நோக்கத்தை விவரித்தல். உதாரணம் ஆயுர்வேதத்தின் முக்கிய

நோக்கம் ஆரோக்கியத்துடன் இருப்பவனை ஆரோக்கியமாகவே வைத்திருப்பதும், நோயாளியின் நோயைக் குணப்படுத்துவதும் ஆகும்.

**12. அனுலோம வியாக்யம்** – மூல நூலின் அத்தியாயங்களை முதல் அத்தியாயத்தில் கூறிவிட்டு அதே வரிசையில் அத்தியாயங்கள் அமைந்தால் அது அனலோம வியாக்யம் எனப்படும்.

**13. பிரதிலோம வியாக்யம்** – உரை எழுதுபவர் அத்தியாயங்களின் வரிசையை மாற்றியிருந்தால் அது பிரதிலோம வியாக்யம் எனப்படும்.

**14. ஸுத்ர ஸம வியாக்யம்** – ஒவ்வொரு சூத்திரத்துக்கும் தனித்தனியாக உரை தரப்பட்டிருந்தால் அது ஸுத்ர ஸம வியாக்யம் எனப்படும்.

**15. ஸமஸ்த வியாக்யம்** – ஒரு புத்தகத்திற்கு மொத்தமாக விளக்க உரை எழுதியிருப்பது ஸமஸ்த வியாக்யம் எனப்படும்

(கடைசியாக குறிப்பிட்ட நான்கு வித வியாக்யானத்திற்கும் அருண தத்தரின் விரிவுரை தற்போது கிடைக்கவில்லை.)

# 11. கல்பனா

ஒரு சாஸ்திரத்தையோ அல்லது நூலையோ அல்லது தந்திரத் தையோ எழுதும் பொழுது கூறவந்த கருத்தை பல்வேறு வகையான இலக்கண நடையில் எடுத்துரைப்பது கல்பனா எனப்படும். கல்பனா விகல்பம் என்றும் அழைக்கப்படும். ஏழுவித கல்பனாக்கள் உள்ளன.

1. **பிரதானஸ்ய கல்பனா**: ஒரு பொருளுக்கு பல்வேறு குணங்கள் இருக்கும். அவற்றில் மிக முக்கியமான தன்மையை மட்டும் குறிப்பிடுவது பிரதானஸ்ய கல்பனா எனப்படும். உதாரணம் : நெய் அனேக தன்மைகள் கொண்டது. அதில் ஸ்னேஹ குணம் மிக முக்கியமானது எனக் கூறுவது பிரதானஸ்ய கல்பனை யாகும்.

2. **பிரதானேன கல்பனா** : ஒரு தொகுதியில் குறிப்பிட்ட ஒரு பொருளுக்கு முக்கியத்துவம் தருவது பிரதானேன கல்பனா ஆகும். உதாரணம் : பால் வகைகளில் பசும்பாலுக்கு மட்டும் முக்கியம் அளிப்பது.

3. **குண கல்பனா** : சில சொற்களுக்கு பொதுவான பொருளும் விசேஷமான பொருளும் காணப்படும். பொதுவான பொருளை ஒத்துக் கொள்வது குண கல்பனா ஆகும். உதாரணம் : குணம் என்று சொன்னால் பொதுவாக ஒரு மனிதனின் குணம் என்று புரிந்து கொள்வோம். ஆனால் நியாய வைசேஷிகங்களில் தன்மை என்று பொருள் கூறப்படும். இதில் பொதுவாக மனிதனின் குணம் என்று ஏற்றுக் கொள்வது குண கல்பனாவாகும்.

**4. லேச கல்பனா** : ஒரு புத்தகத்தில் சில விஷயங்கள் சரியாக குறிப்பிடப்பட்டிராது. அவற்றை மறைமுகமாகச் சுட்டிக் காட்டுவது லேச கல்பனா ஆகும். உதாரணம் : கால மிருத்யு மற்றும் அகால மிருத்யு இரண்டும் அஷ்டாங்க ஹிருதயத்தில் தனியாக இடம் பெறவில்லை. ஆனால் அரிஷ்ட லட்சணத்தில் இவற்றை மறைமுகமாகக் குறிப்பிடுகிறார்கள்.

**5. வித்யா கல்பனா** : ஒரு நூலை எழுதும் போது ஆசிரியர் வேறு பல நூல்களிலிருந்து தகவல்களை எடுத்துப் பயன்படுத்திக் கொள்வார். இந்தத் தகவல்கள் அவ்வளவு ஆதாரபூர்வமானதாகவோ, மருத்துவத் திற்கு தொடர்புடையதாகவோ இருக்க வேண்டியதில்லை. இவ்வாறு பிற நூல்களிலிருந்து தகவல்கள் அளிப்பது வித்யா கல்பனா எனப்படும். உதாரணம் : ஆயுர்வேதத்தில் தர்ம சாஸ்திரம், ஜோதிடம் போன்றவை இடம் பெற்றுள்ளன.

**6. பக்ஷய கல்பனா** : பக்ஷ்ய என்றால் உண்ணத் தகுந்தது அல்லது பயன்படுவது என்று பொருள். உதாரணம் : ஆயுர்வேதத்தை அமிர்தத் தோடு ஒப்பிடுவது பக்ஷ்ய கல்பனாவாகும்.

**7. ஆக்ஞா கல்பனா** : ஆக்ஞா என்றால் கட்டளை. சில கட்டளை களை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும். அதற்கான காரணங்கள் விளக்கப்பட்டிருக்காது. உதாரணமாக : புல், பூண்டுகளுக்குக் கூட தீமை செய்யக் கூடாது என்று கூறுவது. ஆனால் அதற்கான காரணம் அந்த சந்தர்ப்பத்தில் கூறப்பட்டிருக்காது.

ஆயுர்வேத புத்தகங்களில் பல கல்பனைகளும் காணப்படுகின்றன. ஒரு பொருளின் சிறப்புத் தன்மையை எடுத்துக் கொள்வது, பல பொருட் களின் முக்கியமான தன்மைகளை எடுத்துக் கூறுவது, பிற ஆசிரியர்களின் கருத்துக்களைக் கூறுவது போன்றவை எல்லா புத்தகங்களிலும் காணப் படுகிறது. இதுபோன்ற சம்பிரதாயங்கள் புத்தகம் எழுதும் ஆசிரியர் களுக்கு இருந்தன. அவர்கள் கல்பனா போன்ற விதிமுறைகளை கடை பிடித்து புத்தகங்களைத் தொகுத்தார்கள் என்பதும் இதிலிருந்து விளங்கும்.

# 12. ஆச்ரயங்கள்

ஒரு வாக்கியத்தின் அல்லது சொல்லின் வேறுபட்ட பொருளை அறிந்து கொள்வதற்கு ஆச்ரயம் பயன்படுகிறது. இது 20 வகைப் படும் என்று அருண தத்தரும், 21வகைப்படும் என்று தந்திர யுக்தியை எழுதிய சங்கர சர்மாவும் கூறுகின்றனர்.

1. **ஆதிலோபம்** : ஆரம்பத்தில் சில சொற்கள் விடுபடுதல் ஆதிலோபம் எனப்படும். உதாரணம் : ரஸத்தின் குணம் பிரும்ஹணம் என்று குறிப்பிடுகிறோம். இங்கு ரஸம் என் சொல் மாம்ஸ ரஸத்தைக் குறிக்கிறது. ஆனால் மாம்ஸ என்ற சொல் விடப்பட்டிருக்கிறது.

2. **மத்ய லோபம்** : மத்தியில் சொற்களை விட்டுவிடுதல் மத்ய லோபம் எனப்படும். உதாரணம் : திரவ – திரவிய– விஞ்ஞானிய என்பது ஒரு அத்தியாயத்தின் தலைப்பு. ஆனால் திரவ ஸ்வரூப திரவ்ய என்றிருக்க வேண்டும். நடுவிலுள்ள ஸ்வரூப என்ற வார்த்தை விடுபட்டிருக்கிறது.

3. **அந்திய லோபம்** : கடைசி சொல் விடுபடுவது அந்திய லோபம் எனப்படும். ஒருவன் நோயினால் இறந்தான் என்று கூறு கிறோம். அவன் மாரடைப்பால் இறந்திருக்கலாம். ஆனால் அவனுக்கு மாரடைப்பு வந்து இறந்தான் என்பது மறைந்துள்ளது.

4. **உபயபத லோபம்** : முதலிலும், இறுதியிலும் வார்த்தையை விடுவது. உதாரணமாக : தாகத்தினால் வரும் ஒருவன் நீர் என்று கூறுகிறான். தயவு செய்து என்றும், கொண்டு வா என்றும் நாம் கூறுவதில்லை இருந்தாலும் நாம் புரிந்து கொண்டு தண்ணீர் கொடுக்கிறோம். இதற்கு உபயபத லோபம் என்று பெயர்.

**அ) ஆதிமத்ய லோபம்** : ஒரு ஸூத்திரத்தின் தொடக்கத்தில் முதலிலோ, நடுவிலோ சொற்கள் விட்டுப் போயிருந்தால் அதற்கு ஆதிமத்ய லோபம் என்று பெயர். ஒருவர் சுவையைக் கூறும் பொழுது கடு, திக்த, கஷாயம் என்று கூறுகிறார். முதலில் உள்ள மதுரம், அம்லம், லவணம் போன்றவற்றைக் கூறவில்லை. இதனை ஆதிமத்ய லோபத்திற்கு உதாரணமாகக் கூறலாம்.

**ஆ) மத்யாந்த லோபம்** : நடுவிலும், இறுதியிலும் சொற்கள் விடு பட்டால் அதற்கு மத்யாந்த லோம் என்று பெயர். அறுசுவைகளைக் கூறும் முறையையே இதற்கும் உதாரணமாகக் கூறலாம்.

**இ) ஆத்யந்த லோபம்** : முதலிலும், இறுதியிலும் சொற்கள் விடு பட்டால் அதற்கு ஆத்யந்த லோம் என்று பெயர். அறுசுவைகளைக் கூறும் பொழுது அமல லவண கடு திக்தம் என்று கூறுவது. இதில் முதலில் உள்ள மதுரத்தையும், கடைசியில் உள்ள கஷாயத்தையும் விட்டுவிடுவதை உதாரணமாகக் கூறலாம்.

**5. ஆதிமத்யாந்த லோபம்** : மூன்று இடங்களில் வார்த்தைகளை விடுவதாகும். தொடக்கத்திலும், நடுவிலும், இறுதியிலும் வார்த்தைகள் விட்டுப் போதல் ஆதிமத்யாந்த லோபம் எனப்படும்.

**6. உபாதா லோபம்** : நிலை அல்லது நிபந்தனை இல்லாதிருப்பது உபாதாலோபம் எனப்படும். பழைய நூல்களில் இது பற்றிய விவரம் தரப்படவில்லை. அருண தத்தர் இதைப் பற்றிக் கூறவில்லை. ஆனால் பட்டார ஹரிச்சந்திரர் இதைப் பற்றிக் கூறியுள்ளார். இறுதிச் சொல்லின் முந்தைய சொல் உபாதம் என்று பெயர். அறுசுவையைக் கூறும் பொழுது கடைசி சுவைக்கு முந்தைய சுவையை கூறாமல் விட்டுப் போனால் அதற்கு உபாதா லோபம் என்று பெயர்.

**7. வர்ணோப ஜன்யம்** : ஒரு வாக்கியத்தில் விடுபட்ட சொல்லை வழங்குதல் வர்ணோப ஜன்யம் எனப்படும். உதாரணம்: 'வாதத் ஸ்பர்ச துவக் உச்வாஸ' என்று ஒரு பதம் உள்ளது இதில் 'பவந்தி' என்ற சொல் விடப்பட்டுள்ளது. இதனை நாம் சேர்த்துப் படித்துப் புரிந்து கொள்ள வேண்டும்.

**8. ரிஷிகிளிஷ்டம்** : ஆசிரியர் சில சொற்களைத் தவறாக உச்சரிப்பதால், மாணவர்கள் அதைக் கேட்டு தவறாகப் புரிந்து கொள்கின்றனர். உதாரணம் : 'மாஷம்' என்று சொன்னால் 'மேஷம்' என்று புரிந்து கொள்வது. மாஷம் என்று சொன்னால் உளுந்து என்று அர்த்தம். மேஷம் என்றால் ஆடு என்று பொருள்.

**9. தந்திர சீலா** : ஒவ்வொரு ஆசிரியருக்கும் தனித்தன்மை இருக்கும். சிலர் குறிப்பிட்ட சில விஷயத்துக்கு முக்கியத்துவம் தருவர். சிலர் அவற்றை சுருக்கி விடுவர். பிறர் கருத்துக்களுக்கு சிலர் முக்கியத்துவம் கொடுக்கும்போது வேறு சிலர் தங்கள் கருத்துக்களுக்கே முக்கியத்துவம் தருவர். இது தந்திர சீலா எனப்படும். இவ்வாறு தனிமனிதனுக்குக் காணப் படும் தனித்தன்மைக்கு தந்திர சீலம் என்று பெயர். உதாரணம் : சிலர் எலும்பைப் பற்றி சுருக்கமாக எழுதும் போது சிரஸைப் பற்றி விரிவாக எழுதுவார்கள்.

**10. தந்திரஸம்க்ஞா** : ஒரு சொல்லின் பொருளை குறிப்பிட்ட நிலை யிலேயே பயன்படுத்தல் தந்திர ஸமக்ஞா எனப்படும். உதாரணம்: கஷாயம் என்பதற்கு இரண்டு பொருள் உண்டு. ஒன்று க்வாதம் எனப் படும் தண்ணீருடன் காய்ச்சி தாயரிக்கப்படும் ஒரு மருந்து. மற்றொன்று துவர்ப்பு சுவை ஆகும். *நவ ஜ்வரத்தில்* கஷாயம் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இது க்வாதத்தைக் குறிக்கும்.

**11. பிராக்ருத** : சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு சொற்களுக்கு பொருள் கொள்ளுதல். உதாரணம் : யுத்தம் பற்றிய சந்தர்ப்பத்தில் *ஸைந்தவம்* என்ற சொல் குதிரையை குறிக்கும். மருத்துவத்தில் அது உப்பைக் குறிக்கும்.

**12. ஸமான தந்த்ர பிரத்யயம்** : சந்தேகமான விஷயங்களுக்கு சம்பந்தப்பட்ட வேறு நூற்களிலிருந்து மேற்கோள் காட்டி விளக்குதல். உதாரணம் சரக ஸம்ஹிதையிலிருந்து ஸுச்ருதர் மேற்கோள் காட்டினால் அது ஸமான தந்திர பிரத்யயம்.

**13. பரதந்திர பிரத்யயம்** : ஒரு குறிப்பிட்ட விஷயத்தை விளக்க வேறு துறைகளிலுள்ள நூற்களிலிருந்து மேற்கோள் காட்டுவது. உதாரணம் : ஆயுர்வேதத்தில் ஜோதிடம் பற்றிய குறிப்புகள் இடம்

பெறுகிறது. அதுபற்றி மேலும் விவரங்கள் தேவைப்படின் அந்த துறை சார்ந்த நூல்களைப் படிக்க வேண்டும்.

**14. ஹேது ஹேதுக தர்மம்** : ஒரு குறிப்பிட்ட விளைவுக்கு பல்வேறு காரணங்கள் கூறப்பட்டாலும் அதில் நியாயமான காரணத்தை மட்டும் ஏற்றுக் கொள்ளுதல். உதாரணம் : பித்தாதிஸாரம், ரக்த அதிஸாரத்தை ஏற்படுத்துகிறது. ரக்த அதிஸாரத்துக்கு முக்கிய காரணம் பித்தமாகும். எனவே அதை முக்கியப்படுத்தி எடுத்துக் கொள்வது.

**15. கார்ய காரண தர்மம்** : காரணமே விளைவு, காரியமே விளைவு என்று கருதுவது கார்ய கரண தர்மமாகும். உதாரணம் : நோய்களைத் தோஷங்கள் என்றும், தோஷங்களை நோய்கள் என்றும் கூறப்படுவது. தோஷங்கள் காரணங்கள், நோய்கள் – காரியங்கள்.

**16. ஆத்யந்த விபரியயம்** : மாணவர்களின் வசதிக்காக வரிசை அமைப்பை மாற்றி எழுதுவது ஆத்யந்த விபரியயம் எனப்படும். உதாரணம் : திரவ – திரவ்ய விஞ்ஞானம் என்ற அத்தியாயம் முதலிலேயே இடம் பெறுகிறது. ஆனால் அது *அன்ன ஸ்வரூபம்* என்ற அத்தியாயத் திற்கு பிறகு வந்திருக்க வேண்டும். மாணவர்களின் வசதிக்காக இவ்வாறு எழுதப்பட்டுள்ளது.

**17. சப்தன்யத்வம்** : ஒரு கருத்திற்கு பல அருஞ்சொற்பொருட் களைப் பயன்படுத்ததல். உதாரணம் : ரோகத்திற்கு வியாதி, ஜ்வரம் போன்ற பல மாற்றுச் சொற்கள் உள்ளன.

**18. பிரத்யய தர்மம்** : முக்கியமற்ற, போலியானவற்றுக்கு முக்கியத் துவம் கொடுத்து, எழுதப்படும் வாக்கியங்களில் உண்மைப் பொருள் களைப் பகுத்தறிவு மூலம் உணர்தல். உதாரணம்: உன்மாதத்துக்கு முக்கிய காரணம் *பிரக்ஞாபராதம்* ஆகும். ஆனால் மக்கள் பிசாசுகளின் தாக்குதல் என்று கருதுகின்றனர்.

**19. உபனயம்** (அண்மைக்குக் கொண்டு வருதல்): பொருந்தாதவை என்று தோன்றினாலும் சில விஷயங்களைக் கவனத்திற்கு கொண்டு வருதல் உபனயம் எனப்படும். உதாரணம் : விசூசிகா என்னும் வாந்தி

பேதிக்கான சிகிச்சை மாத்ராசிதீயம் என்னும் உணர்வைப் பற்றிக் கூறும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

**20. சம்பவம்** : பரவலான உபயோகத்தில் இருப்பது சம்பவம் எனப்படும். உதாரணம் – ஆயுர்வேதத்தின் எட்டு பிரிவுகளும் அனைத்து ஆயுர்வேத ஸம்ஹிதைகளிலும் ஸமமான முக்கியத்துவம் பெறுகின்றன.

**21. விபவம்** : சம்பவத்திற்கு நேர்மாறானது விபவமாகும். பரவலாக பயன்படாதது.

குறிப்பு : சில அறிஞர்கள் ஆச்ரயங்களின் எண்ணிக்கை இருபது என்கிறார்கள். உபாதி லோபத்தை அவர்கள் குறிப்பிடவில்லை.

மேற்கூறிய விஷயங்கள் பாட புத்தகங்களில் உள்ளன. ஆனால் நடை முறையில் மாணவர்களுக்கு இவ்வறிவினால் விசேஷ பயன் இல்லை. இது ஒரு இன்றியமையாத பாடம் என்று கூற முடியாது.

# 13. தாச்சில்யாக்கள்

**தா**ச்சில்யாக்கள் தந்திரயுக்தி போல் பழைய கால புத்தகங்களில் காணப்படும் மற்றொரு பிரயோகமாகும். 'தத்' என்றால் 'அது', 'சில்' என்றால் 'மாதிரி' என்று பொருள். தாச்சில்யா என்றால் அது போன்றது அல்லது அது மாதிரி ன்று பொருள்.

இவை திரவியம், குணம், கர்மம் போன்றவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளை விளக்குகின்றன. மொத்தம் 17 வகை தாச்சில் யாக்கள் உள்ளன. அவை,

1. **தாச்சில்யா** : இரண்டு பொருட்களிடையே ஒன்றோ அதற்கு அதிகமாகவோ குணங்கள் ஒரே மாதிரி இருந்தால் அது தச்சில்யா எனப்படும். உதாரணம் : தூங்குகின்ற மனிதன் ஒன்றையும் உணர்வதில்லை. உணர்ச்சியில்லை என்பது இருவருக்கும் பொதுவாக உள்ளது. இது ஒரு வகை தச்சில்யம்.

2. **அவயவம்** : கூறப்பட்டவையிலிருந்து கூறப்படாத வேறு கருத்துக்களைப் புரிந்து கொள்ளுதல் அவயவம் எனப்படும். உபவாசம் இருப்பதால் தோஷங்கள் சகஜ நிலைக்குத் திரும்பி ஒருவன் ஆரோக்கியம் அடைகிறான் என்ற கூற்றை எடுத்துக் கொள்வோம். இந்த கூற்றிற்கு உபவாசம் இருப்பதால் ஆம நிலையில் இருக்கின்ற தோஷங்கள் பாசனம் அடைந்து சகஜ நிலைக்குத் திரும்பி வருகின்றன என்றும் ஆம நிலையில் உபவாசம் பலன் தரும் என்றும், தோஷங்கள் பாகம் அடையவில்லைஎன்றால் நோய் குணம் அடைவதில்லை என்றும் நாம் புரிந்து கொள்கிறோம். இவ்வாறு உட்கருத்துக்கள் கொண்ட விஷயங்கள் பல ஆயுர்வேதத்தில் உள்ளன.

**3. விகாரம் :** ஒரு பொருள் சாதாரண நிலையில் இருக்கும் பொழுது மாறிவிட்ட நிலையிலும், அதே பெயரில் அழைக்கப்படுவது விகாரம் எனப்படும். உதாரணமாக : உருளைக் கிழங்கு பச்சையாக இருக்கும் பொழுதும், சமைத்தபின்பும் உருளைக் கிழங்கு என்றே அழைக்கப்படுகிறது.

**4. ஸாமீப்யம்** : பல பொருள்களின் தன்மையில் நெருக்கமோ, ஒற்றுமையோ இருப்பது ஸாமீப்யம் எனப்படும். உதாரணமாக : கிருதம், தைலம் இரண்டிற்கும் 'ஸ்நேஹ குணம்' என்ற தன்மை இருக்கிறது. இரண்டு பொருட்களில் உள்ள பொதுத் தன்மைக்கு ஸாமீப்யம் என்று பெயர்.

**5. பூயஸ்த்வம்** : ஒரு திரவ்யத்தின் விசேஷ தன்மைக்கு முக்கியத் துவம் கொடுத்தல் பூயஸ்த்வம் எனப்படும். உதாரணம் : லவணம் அனைத்து உணவு வகைக்கும் சுவையூட்டுகிறது. மற்ற ரஸங்கள் சுவை அளித்தாலும் ல்வண ரஸத்திற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது.

**6. பிரகாரம்** : ஒரு பொருளின் தன்மையிலும் அந்தப் பொருளை பயன்படுத்துவதிலும் உள்ள ஒற்றுமை பிரகாரம் எனப்படும். ஆமணக்குக் குச்சி மருந்துகளைத் தொண்டையில் தடவ பயன்படுகிறது. இதுபோல வேறு பல குச்சிகளும் மருந்துகள் தடவப் பயன்படும்.

**7. குணி–குண–விபவம்** : 'குணம்' திரவியமாகக் கருதப்படுகிறது. திரவியம் குணமாகவும் கருதப்படுகிறது. பார்த்திவ (கடின) தன்மை யுடைய பொருட்களை பார்த்திவாக்னி ஜீரணம் செய்கிறது. இங்கு பார்த்திவம் என்பது ஒரு திரவ்யமாக இருந்தாலும் அது அக்னியையேக் குறிக்கிறது.

**8. ஸம்சக்ததம்** : நெருங்கிய தொடர்புக்கு ஸம்சக்ததம் என்று பெயர். தேனானது கஷாய ஸ்கந்தத்திலும், மதுர ஸ்கந்தத்திலும் (வகைகள்) உட்படுத்தப்பட்டள்ளது. தேனிற்கு மதுர சுவை பிரதானமாக இருப்பதால் மதுரத்துடன் அதிகம் தொடர்புப்படுத்திக் கூறப்பட்டுள்ளது.

**9. தத்தர்மதம்** : ஒரே குணத்தையோ, ஒரே கர்மத்தையோ இரண்டு பொருட்கள் கொண்டிருத்தல் தத்தர்மதம் எனப்படும். உதாரணமாக மலங்காரைக்காயும், வேப்பம் பட்டையும் வாந்தி எடுக்கச் செய்யும் தன்மையுடையவை. இவற்றிற்கு தத் என்ற தன்மை உண்டு என்று உணர்தல்.

**10. ஸ்தானம்** : சரியாக இல்லாவிட்டாலும் ஒன்றுக்குப் பதிலாக இன்னொன்றைக் கூறுதல் ஸ்தானம் எனப்படும். பாத்திரத்தை அதிலுள்ள பொருளாகவும், பொருளைப் பாத்திரமாகவும் கூறுதல் ஸ்தானம் எனப் படும். எப்படிக் கூறினாலும் புரிந்துக் கொள்ள கூடியது ஸ்தானமாகும். உதாரணம் எண்ணெய் கொண்டு வா என்று கூறினால் எண்ணெய் உள்ள பாத்திரத்தைக் கொண்டு வருவது என்று பொருள் கொள்ள வேண்டும். ஜிஹ்வா (நாக்கு) சுவையை அறிகிறது என்று கூறப்படுகிறது. ஆனால் உண்மையில் சுவையை உணர்வது நாக்கு அல்ல மாறாக ரஸனேந்திரியம் என்று கூறினாலும். ஜிஹ்வா என்று கூறினாலும், ரஸனம் என்று கூறினாலும் ஒரே பொருளைப் புரிந்து கொள்கிறோம்.

**11. ததர்த்தியா** : ஒரு திரவியத்துக்கு குறிப்பிட்ட ஒரு செயல் இருக்கும். அந்தச் செயலை திரவியத்தக்கு வழங்குவதை ததர்த்தியா என்கிறோம். உதாரணம் மதனபலத்தின் செயல் வாந்தி ஏற்படுத்துவது. எனவே சர்தனா– வாந்தி உண்டாக்கி என்று மதனபலத்தைக் குறிப்பிடுவது ததர்த்தியாவாகும்.

**12. ஸாஹசர்யம்** : காரணத்தை விளைவாகவும், விளைவை காரணமாகவும் கூறுவது ஸாஹசர்யம் எனப்படுகிறது. காரணத்திற்கும், காரியத்திற்கும் உள்ள தொடர்பினால் ஸாஹசர்யம் ஏற்படுகிறது. உதாரணம் புகையைப் பார்த்தவுடன் அங்கே நெருப்பு இருக்கிறது என்று சொல்லலாம். ஏனெனில் புகையும், நெருப்பும் நெருங்கிய தொடர்புடையவை. நெருப்பினால் புகை வருகிறது. நெருப்பு – காரணம், புகை – காரியம் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

**13. கர்மம்** : செயலற்ற தன்மையை செயலாகக் கூறுவது கர்மம் எனப்படும். முனிகள் தியானத்தில் இருந்தார்கள் என்று கூறுவது. தியானம் என்பதே ஒரு செயலின் மையமாகும். அதையும் ஒரு செயலாகக் கூறு கிறோம் என்று காண்க.

**14. குண நிமித்தம்** : ஒரு பொருளை அதன் குணாதிசயங்களால் பெருமைப்படுத்துவது குண நிமித்தம் எனப்படும். உதாரணமாக பிரம்மச் சரியம் வலியுறுத்தப்படுகிறது. இது ஒரு தர்மமாகவும், மேன்மையடையும்

செயலாகவும் கருதப்படுகிறது. நாம் இங்கு பிரம்மச்சரியத்தையும் புகழ்கிறோம். ஆனால் மேற்கூறிய குணங்கள் பிரம்மச்சரியத்தை கடைப் பிடிப்பதால் கிடைக்கும் குணங்களாகும்.

15. **சேஷ்டா நிமித்ததா** : ஒரே தன்மை கொண்ட இரு பொருட் களை ஒப்பிடுதல். உதாரணம் : ஞானம் (அறிவு), தீபம் (விளக்கு) இரண்டுமே இருளை அகற்றுகின்றன.

16. **மூலஸம்க்ஞா** : பொதுவான பொருள் அல்லாமல் நுட்பமாக சில பொருட்களைப் பயன்படுத்துதல். ரூபம் என்ற வார்த்தை அழகைக் குறித்தாலும் ஆயுர்வேதத்தில் லட்சணத்தைக் குறிப்பதாகும்.

17. **தாத்ஸ்த்யம்** : ஒன்றோடொன்று தொடர்புடையதால் ஒன்றுக்குப் பதிலாக இன்னொன்றைக் கூறுதல் தாத்ஸ்த்யா எனப்படும். உதாரணம் ஒருவன் வயிறு வலிக்கிறது என்கிறான். உண்மையில் வலியை உணர் பவன் அவன்தான், வயிறு அல்ல. மனிதனும் வயிறும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதால் வயிறு என்பது மனிதனைக் குறிக்கிறது.

# ஆயுர்வேதத்தில் தாச்சில்யத்தின் பங்கு

பழைய காலத்தில் எழுதப்பட்ட ஆயுர்வேத புத்தகங்கள் அனைத்தும் வடமொழியில் மிக்க நுணுக்கத்துடனும், இலக்கிய நயத்துடனும், இலக்கணத்துடனும் குறிப்பாக உய்த்துணர வைத்தும் எழுதப் பட்டன. வடமொழியில் நன்கு புலமை மிக்க ஒருவனாலேயே பல புத்தகங்களில் கூறப்பட்டுள்ள நுட்பமான விஷயங்களை தவறில்லா மல் புரிந்து கொள்ள இயலும். மருத்துவ விஷயங்கள் ஒரு மூடனின்கையில் சிக்கி அவன் அதைத் தவறாக பயன்படுத்து வதைத் தவிர்ப்பதற்காகவே சில இலக்கண விதிமுறைகள் வகுக்கப் பட்டு பல விஷயங்களை மூடி மறைத்து உள் அர்த்தமாக கூறினார் கள். ஏனெனில் நமது கையில் கத்தி இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதைக் கொண்டு ஒருவனை குத்தி கொலை செய்யலாம் அல்லது பழத்தை நறுக்கியும் சாப்பிடலாம். இது பயன்படுத்துபவனின் தேவையும், மதி நுட்பத்தையும் பொறுத்து இருக்கிறது. சாஸ்திரமும் அவ்வாறானதே. அதற்காகவே தந்திர யுக்திகள், தாச்சில்யங்கள் போன்றவை ஏற்படுத்தப்பட்டன. இன்றும் ஸம்ஹிதைகளின் உரையை மொழிபெயர்ப்பு உதவியில்லாமல் புரிந்து கொள்ள வேண்டுமெனில் மேற்கூறிய விஷயங்களின் அறிவு இன்றியமையாததாகிறது. அப்பொழுதே எந்த சந்தர்ப்பத்தில் ரிஷிகள் எந்த அர்த்தத்தை பயன்படுத்தினார்கள் என்பதை உய்த் துணர முடியும். ஒரு மிகப்பெரிய வீட்டை ஒரு சிறு சாவியைக் கொண்டு திறப்பதை போல சாஸ்திரமாகிய பொக்கிஷத்தை தந்திரயுக்தி என்னும் சாவியைக் கொண்டு திறந்து ஒரு அறிஞனானவன் படித்து பண்புறுகிறான்.

# பயன்படுத்தப்பட்ட நூல்கள்


- சரக ஸம்ஹிதை
- ஸுச்ருத ஸம்ஹிதை
- அஷ்டாங்க ஸங்க்ரஹம்
- தர்க்க ஸங்க்ரஹம்
- ஸாங்க்யா காரிகா
- வைசேஷிக தரிசனம்
- 'ஆயுர்வேத பதார்த்த விஞ்ஞானம்' - வைத்யர் ராணாஜித்ராய் தேசாய்.
- 'வேதம் ஓர் அறிமுகம்' - இராமாயணம் ஸ்ரீனிவாஸ அய்யங்கார், ஸ்ரீ சுரபி ஜகத்குரு சதாப்தி பப்ளிகேஷன்ஸ், சென்னை.
- 'தர்க்க ஸங்க்ரஹம்' - மகாவித்துவான் ஸ்ரீ திரிசிரபுரம் மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை
- *Tarka Samgraha*, by Swami Virupakshananda, Sri Ramakrishna Math, Chennai
- *Padarthvijnan Made Easy*, Gayatri Devi, Chaukhamba Sanskrit Pratishthan, Delhi
- *An Introdction to Ayurveda Padartha Vijnana*, by Dr. M.N. Joshi, Roopa Publications, Dharwad

- *Basic Principles of Ayurveda Padartha Vijnana*, by Dr. Yogesh Chandra Mishra, chaukhambha Sanskrit Narasimhacharyulu, Chowkhambha Krishnadas Academy, Varanasi
- 'பதார்த்த விஞ்ஞானம்' - ஆச்சார்ய இராமகிருஷ்ண பாதக்.
- 'தந்திரயுக்தி விசாரம்' - நீலமேக விஷக்.
- 'இந்து மதமும் இந்திய தத்துவமும் - ஒரு கண்ணோட்டம்'– பேராசிரியர் டி. என். கணபதி, ரவி பப்ளிகேஷன்ஸ், சென்னை
- *The Six Systems of Hindu Philosophy - A Primer*, to Swami Harshananda, Ramakrishna Math, Bangalore.

## சமஸ்கிருத சொல் — பொருள் விளக்கம்

| | | |
|---|---|---|
| அமானுஷ்ய சக்தி | – | மனித சக்திக்கு அப்பாற்பட்டது |
| அசேதனம் | – | உணர்வற்றது |
| அனுஷ்ண சீத ஸ்பர்சம் | – | சூடும் இல்லாத, குளிர்ச்சியும் இல்லாத தன்மை |
| அவிவேகி | – | பிரித்தறியும் தன்மைய நிலை |
| அமத்ஸ்ய தர்மினி | – | ஸுக துக்கங்களில் பற்றற்றது |
| இந்திரியம் | – | புலன்கள் |
| இந்திரிய விஷயம் | – | புலன்களால் அறியப்படும் பொருள் |
| இந்திரிய திரவியம் | – | புலன்களால் அறியப்படும் விஷயம் |
| இந்திரிய அதிஷ்டானம் | – | புலன்களின் இருப்பிடம் |
| இந்திரிய அர்த்தம் | – | புலன்களால் பெறப்படும் அறிவு |
| இந்திரிய புத்தி | – | புலன்களால் பெறப்படும் புத்தி |
| இந்திரிய விருத்தி | – | புலன்களின் செயல் |
| கர்மேந்திரியம் | – | செயல்களைச் செய்ய உதவும் புலன்கள் |
| கர்த்தா | – | ஒரு செயலைச் செய்பவர் |
| கிருதபானம் | – | நெய் அருந்தும் சிகிச்சை முறை |
| குணபூயிஷ்டம் | – | குணம் அதிகமாக உள்ள |
| சங்கம் | – | அடைப்பு |
| சேதனம் | – | உணர்வுள்ளது |

| | | |
|---|---|---|
| சைதன்யம் | – | மெய்யுணர்வு |
| ஞானேந்திரியம் | – | ஞானத்தைப் பெற உதவும் புலன் |
| நைஸர்கிக குணங்கள் | – | பிறவிக் குணங்கள் |
| பட்சம் | – | சார்பு |
| பர்யாயம் | – | அருஞ்சொற்பதம் |
| பரமேஷ்டி மண்டலம் | – | வெட்டவெளி |
| பாவ பதார்த்தம் | – | புலப்படும் பொருள் |
| பார்த்திவ தன்மை | – | கடினத்தன்மை |
| மத்யஸ்த தர்மினி | – | ஸுக துக்கங்களில் பற்றுள்ளது |
| அபாவ பதார்த்தம் | – | புலப்படா பொருட்கள் |
| பூதகடனம் | – | பூதத்தின் கட்டமைப்பு |
| போகயதனம் | – | விருப்பங்களை அடையும் வழி |
| முக்தி | – | வீடுபேறு அடையும் நிலை |
| மூர்த்த திரவியம் | – | புலப்படும் பொருட்கள் |
| யுக்தி விபாச்ரய சிகிச்சை | – | நோய் மற்றும் நோயாளியின் தன்மையைப் பொறுத்து மருத்துவனின் அறிவுப்பூர்வ சிகிச்சை |
| ரஸோதனா | – | மாமிஸ ரஸங்கள் சேர்ந்த உணவு வகை |
| ரூடம் | – | ஆழ்ந்த தன்மை |
| லிங்கி | – | இலட்சணத்தை உடையது |
| லிங்கம் | – | இலட்சணம் |
| லீனா அவஸ்தை | – | மறைந்திருக்கும் நிலை |
| விபட்சம் | – | எதிரானது |
| வியாபித்திருத்தல் | – | பரவியிருத்தல் |

| | | |
|---|---|---|
| விவேகி | – | பிரித்தறியும் தன்மையுள்ளது. |
| ஸத்வாவஜய சிகிச்சை | – | நோயாளியின் மன உறுதியைக் கூட்டும் சிகிச்சைகள் |
| ஸ்ரோதஸ் | – | நாளங்கள் |
| ஸ்நேஹம் | – | நெய்ப்புத்தன்மையை உண்டாக்கும் சிகிச்சை முறை |
| ஸ்வேதம் | – | வியர்வையை உண்டாக்கும் சிகிச்சை முறை |
| ஸ்தூல சரீரம் | – | கண்ணுக்குப் புலப்படும் உடல் |
| க்ஷீணமடைதல் | – | பலகீனமடைதல் |

